# புதிய எருசலேம் செய்தி

## PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் - 37 ★ JANUARY - 1987

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்.... விழித்திருங்கள்...உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லா ருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 : 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY. INDIA.

# ஆசிரியர் உரை

இது கடைசி காலமாயிருக்கிறது. விழுந்து போன தாவீதின் கூடாரத்தை மறுபடியும் எடுப்பித்து அதில் பழுதாய் போனவைகளை மறுபடியும் சீர்படுத்தி அதைச் செவ்வையாக நிறுத்துவேன் என்று இவைகளையெல்லாம் செய்கிற கர்த்தர் சொல்லுகிறார் என்ற வேத வாக்கியத்தின்படி தேவன் தம்முடைய திருச்சபையை மறுபடியும் எடுப்பித்து சீர்ப்படுத்துகிற காலமிது. மனுஷருடைய அபிப்பிராயங்களையும் சுய விளக்கங்களையும் பின்பற்றி கிறிஸ்தவ மதம் வீழ்ச்சியடைந்து கொண்டு போகிற இக்காலத்தில் தேவன் பூரணமான சத்தியத்தையும், சமாதானத்தையும் அனுப்புகிறார். "ஒரு பொய்யை பலமுறை பிரசங்கித்தால் அது மெய்யாகி விடும்" என்ற உலக பழமொழியின் படியும், "பொய்யுடையோன் ஒருவன் சொல்வன்மையினால் மெய் போலுமே, மெய்போலுமே. மெய்யுடையோன் ஒருவன் சொல் வன்மை இன்மையினால் பொய் போலுமே பொய் போலுமே" என்ற உலக கவியின் படியும் இந்நாட்களில் இன்றைய கிறிஸ்தவ மதத்தில் அநேக உபதேசங்கள் காணப்படுகின்றன. ஆனபடியால் பூர்வ பாதை எவையென்று கேட்டு விசாரித்து அவைகளில் நடப்பதும் இறைவனுடைய பூரணமான தெளிவான சத்தியத்தை ஏற்றுக் கொள்வதும் விசுவாசிகளின் கடமை,

திருப்தியடைந்தவன் தேன் கூட்டையும் மிதிப்பான் என்ற வேத வாக்கின்படி திருப்தியடைந்திருப்பவர்களுக்கு தேவனே வெளிப்படுத்திச் சொன்னாலும் சுயதிருப்திக்காயும் மனுஷரைப் பிரியப்படுத்தவும் எண்ணி தேவனுடைய செய்தியை ஏற்றுக் கொள்ளார், அன்று கிறிஸ்து உலகத்தில் இருந்த நாட்களில் அவரை ஏற்றுக் கொண்டவர்கள் எத்தனை பேர்கள்? மிக சொற்பமானவர்களே, அவர்களிலும் மீதியாயிருந்து ஆதி திருச்சபையாய் கூடினவர்கள் கொஞ்ச பேர்களேயாகும், தேவனுடைய ஆறுதல் வரக் காத்திருந்த நீதியும் தேவ பக்தியுமுள்ள பரிசுத்தாவியைப்பெற்று அவரால் ஏவப்பட்ட சிமியோன்களும் இரவும் பகலும் உபவாசித்து தேவனை ஆராதித்துக் கொண்டிருந்த அன்னாள்கள் போன்றவர்களும், எலிசபெத் போன்றவர்களும்; வேதவாக்கியங்களையும், அடையாளங்களையும் கவனித்து நட்சத்திரங்களால் வழி நடத்தப்பட்ட சாஸ்திரிகளும் (மூன்று சாஸ்திரிகள் அல்ல) கிறிஸ்துவினால் அழைக்கப்பட்டு அவரைப் பற்றிக் கொண்டிருந்த பேதுரு, யாக்கோபு போன்ற அப்போஸ்தலர்களுமே கிறிஸ்துவைக் கண்டு கொண்டார்கள். அப்படிப் போல தேவபக்திக்கேதுவான சத்தியத்தை அறிகிற அறிவும் விசுவாசமும், நித்திய ஜீவனுக்கென்று தேவனால் தெரிந்து கொள்ளப் பட்டவர்களுக்கே உண்டாகும் (தீத்து 1 : 3).

ஆகையால் தேவஜனங்கள் வேத ஆதாரத்தோடு தேவன் அனுப்புகிற பூரணமான சத்தியத்திற்கும், சபைக்கும் செவி கொடுத்து பூரணமான இரட்சிப்பையும் சமாதானத்தையும் பெற்றுக் கொள்ளும்படி இந்த 1987-வது புத்தாண்டிலேயும் இறைவன் உங்களுக்கு அநுக்கிரகம் செய்யும்படி இயேசுவின் நாமத்தில் வேண்டிக் கொள்கிறோம்.

கிறிஸ்துவுக்குள்

Chief Pastor N. LAZAR

N. Lazar

# பாவ மன்னிப்பு

பாவம் கொடியது. வஞ்சனையுள்ளது. பாவம் செய்கிற ஆத்துமா சாகும். பாவம் இயற்கையானதல்ல அது மனித ஜாதிக்குள் புகுந்த தீய சக்தியாக இருக்கிறது. பாவம் பலவிதமான வேஷங்களைப் போடுகிறது. அதில் விசேஷமாய் பக்தி வேஷம் போட்டு அந்தரங்க பாவிகளாய் ஜீவிப்பவர்களே உலகில் அநேகர். பாவத்திலிருந்து விடுதலை பெற பாவ மன்னிப்பு பெற மனித ஆத்துமா வாஞ்சிக்கிறது. ஆனால் சூழ்நிலைகளினாலும், சந்தர்ப்பங்களினாலும் மனிதனுடைய உள்ளத்தில் இருக்கிற துர் ஆசையினாலும் மனிதன் தூண்டப்பட்டு பாவம் செய்கிறான்.

வயதான வயோதிபனாயிருக்கட்டும். காட்டிலே தனித்து வாசஞ்செய்கிற சந்நியாசியாயிருக்கட்டும் பாவ ஆசை அவனை விடுவதில்லை. சிலர் பாவம் என்றால் என்ன, பாவம் என்றால் எது என்று அறியாமல் தொட்டால் பாவம், சிலதை தின்றால் பாவம் என்று எண்ணியிருக்கின்றனர். பாவத்துக்குப் பிறப்பிடம் மனிதனுடைய இருதயமே: மனிதனுடைய ஆத்துமா (அல்லது மனம்) அவனுடைய சரீரத்தை ஆளுகிறது. அவனுடைய மனதில் என்ன நினைக்கிறானோ, எந்த சிந்தனைக்கு இடங் கொடுக்கிறானோ அதை நிறைவேற்ற அவனுடைய சரீரம் துடிக்கிறது (இயங்குகிறது).

மனிதன் உணர்ச்சிகளுக்குக் கட்டுப்பட்ட ஒரு ஜீவியாயிருக்கிறான். தன்னுடைய ஆசை நிறைவேறவில்லை என்றால் அவன் நிராசையடைந்து வாதிக்கப்படுகிறான்; மறுபடியும் பாவம் செய்ய பிரயாசப் படுகிறான். சிலர் ஆசையை அடக்குவதே முக்திக்கு வழி என்று சொல்வார்கள். அப்படிப் பார்த்தால் முக்தியடைய வேண்டும் என்ற விருப்பமே ஒரு ஆசைதான். துர் ஆசைகளைத்தான் அடக்க வேண்டுமேயொழிய; நல்லதும் நியாயமானதும், இறைவனுக்குப் பிரியமானதும் பிறருக்கு உயரிய நன்மையை கிடைக்கச் செய்யும் படியாக பிரயாசப் படுகிறதுமான நல் ஆசைகளையும், நியாயமான கடமைகளை நிறைவேற்றுவதுமான ஆசையும், முக்தியடைய ஆசைப் படுவதும் அவசியமே.

மனுஷனுக்குள்ளேயிருந்து புறப்படுகிறதே மனுஷனைத் தீட்டுப் படுத்தும். எப்படியெனில் மனுஷனுடைய இருதயத்திற்குள்ளிருந்து பொல்லாத சிந்தனைகளும், விபசாரங்களும், வேசித்தனங்களும், கொலைபாதகங்களும், களவுகளும், பொருளாசைகளும், துஷ்டத்தனங்களும், கபடும், காமவிகாரமும், வன்கண்ணும், தூஷணமும், பெருமையும், மதிகேடும் புறப்பட்டு வரும். பொல்லாங்கான இவைகளெல்லாம் உள்ளத்திலிருந்து புறப்பட்டு மனுஷனைத் தீட்டுப்படுத்தும் என்றார் இயேசு (மாற் 7: 21 - 23). பாவத்திலிருந்து, மாயத்திலிருந்து, வேஷபக்தியிலிருந்து, சுயநலத்திலிருந்து மனிதனை விடுதலையாக்க சுத்த முள்ளவனாக்க இறைவன் ஒருவராலே முடியும். பாவத்தை அழுக்குப் படிந்த பிள்ளையின் முகத்தைத் துடைத்து விடுகிறது போல தேவனால் மன்னித்து விட்டு விட முடியாது. பாவத்திற்குப் பிராயச்சித்தம் செய்யப்பட வேண்டும். நிவாரணம் செய்யப்பட வேண்டும். பாவத்திற்குப் பரிகாரம் பலி என்று சொல்லி தேவன் காண்பித்திருக்கிறார்.

மெய்யான பலியின் மூலமே பாவம் நிவர்த்தியாகும். அந்தப் பலியோ மனிதனுடைய பாவத்தை மன்னிக்கிறது மாத்திரமல்ல; மனிதனை பாவத்திலிருந்து விடுதலையாக்க வல்லமையுள்ளதாயும் இருக்க வேண்டும். மற்றபடி மனிதன் பாவத்திலிருந்து, மாயையிலிருந்து, சுய நலத்திலிருந்து விடுதலையாக முடியாது.

பாவம், பாவத்தின் சாபம் இவைகளிலிருந்து மனிதன் விடுதலையாகாதவரை மனிதன் பூரணப் பட முடியாது. அவனுக்கு மெய்யான சந்தோஷமும், மகிழ்ச்சியும், விடுதலையும், ஆரோக்கியமும், அமைதியும் கிட்டாது. இவ்விதமான மனிதனை விடுவிக்கவும், பாவமன்னிப்பு அருளவும், பாவத்திலிருந்து விடுதலையாக்கவும், பாவத்தினால்

சாத்தானுக்கு அடிமைப்பட்டிருக்கிற, இருளின் ஆதிக்கத்திலிருக்கிற மனிதனை இரட்சிக்கவும் இறைவனாகிய இயேசு கிறிஸ்து இப்பூலோகத்திற்கு வந்து, மனிதனுடைய பாவத்துக்காய் தன்னை பாவ நிவாரண பலியாக சிலுவையில் ஒப்புக் கொடுத்தார், மரித்தார். அடக்கம் பண்ணப்பட்டு மூன்றாம் நாள் உயிரோடெழுந்து பரலோகத்தில் தேவசந்நிதானத்தில் பிரவேசித்திருக்கிறார்.

அவர் அடைந்த மரணத்தினாலும், அடக்கம் பண்ணுதலினாலும், உயிர்த்தெழுதலினாலும் மனிதனுக்கு மீட்பு உண்டாகியிருக்கிறது. இரட்சிப்பு ஆயத்தமாக்கப்பட்டிருக்கிறது. இது எல்லோருக்கும் இலவசம். இது நிபந்தனையோடு கூடிய இரட்சிப்பு. இந்த இரட்சிப்பை, அல்லது பாவ மன்னிப்பை பெற்றுக் கொள்ள மனிதன் விசுவாசிப்பதும், விசுவாசத்தின் கிரியைகளை நடப்பிப்பதும் அவசியம்.

பாவ மன்னிப்புபெற, பாவத்திலிருந்து விடுதலையாக தேவனுடைய பரிசுத்த வேதாகமம் காண்பிக்கிற மார்க்கத்தைப் பற்றி இன்றைய கிறிஸ்தவ ஸ்தாபனங்கள் கொண்டிருக்கும் அபிப்பிராயங்களை விவாத மேடையில் சந்திப்போம்.

(தொடரும்)

---

...ஏனெனில் நான் அவர்களின் அநியாயங்களைக் கிருபையாய் மன்னித்து, அவர்கள் பாவங்களையும் அக்கிரமங்களையும், இனி நினையாமலிருப்பேன்..."

— எபி 8: 12

---

# கிறிஸ்தவர்களின் தப்பெண்ணங்கள்(மத் 22:29)

அவருடைய நாமத்தின் மேல் விசுவாசமுள்ளவர்களாய் அவரை ஏற்றுக் கொண்டவர்கள் எத்தனை பேர்களோ, அத்தனை பேர்களும் தேவனுடைய பிள்ளைகளாகும்படி அவர்களுக்கு அதிகாரம் கொடுத்தார் (யோவா 1 : 12).

தேவன் தம்முடைய ஒரே பேறான குமாரனை விசுவாசிக்கிறவன் எவனோ அவன் கெட்டுப் போகாமல் நித்திய ஜீவனை அடையும் படிக்கு, அவரைத் தந்தருளி இவ்வளவாய் உலகத்தில் அன்பு கூர்ந்தார் (யோவா 3 : 16)

கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசி; அப்பொழுது நீயும் உன் வீட்டாரும் இரட்சிக்கப்படுவீர்கள் (அப் 16 : 31).

கர்த்தராகிய இயேசுவை நீ உன் வாயினாலே அறிக்கையிட்டு, தேவன் அவரை மரித்தோரிலிருந்து எழுப்பினாரென்று உன் இருதயத்தில் விசுவாசித்தால் இரட்சிக்கப்படுவாய் (ரோம 10 : 9).

இதுபோன்ற வசனங்களை அநேக கிறிஸ்தவர்கள் தப்பாக விளங்கிக் கொண்டு நான் இயேசுவை விசுவாசிக்கிறேன். ஆகையால் இரட்சிக்கப்பட்டிருக்கிறேன். நானும் பரலோகம் போவேன் என்று நம்பிக் கொண்டிருக்கிறார்கள். உண்மையிலேயே இயேசுவை தொழுது கொள்வார்கள். காலையிலே கோயிலுக்குப் போவார்கள். மாலையிலே சினிமா கொட்டகைக்குப் போவார்கள் அல்லது T. Vயில் சினிமா பார்ப்பார்கள், எழுந்தவுடன் வேதம் படிப்பார்கள், மூடி வைத்துவிட்டு குமுதம் படிப்பார்கள் அல்லது காதல் காவியங்கள் படிப்பார்கள். ஏதாவது பத்திரிகைக்கு சாட்சி எழுதுவார்கள் அப்படியே காதல் கடிதங்களும் எழுதுவார்கள். கிறிஸ்துவுக்குள் யூதனென்றுமில்லை கிரேக்கனென்றுமில்லை என்று பிரசங்கங்கள் கேட்பார்கள் கூட்டம் முடிந்ததும், நம்ம ஜாதி பையன்கள் யார் என்பார்கள். மெழுகுவர்த்தி வாங்கி கொழுத்தி வைப்பார்கள். வெளியே வந்து சிகரெட் வாங்கி பற்ற வைப்பார்கள். கோவிலில் நற்கருணையில் ரசம் குடிப்பார்கள், கடையிலே போய்ச் சாராயம் குடிப்பார்கள். இப்படிப்பட்டவர்களும் கூட தாங்கள் இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிறோம், ஆகையால் பரலோக செல்வோம் என்று சொல்லிக் கொள்கிறார்கள்.

பேர் பெற்ற பிரசங்கிகள் பலரும் Simply believe Lord Jesus you will be saved (இயேசுவை விசுவாசி, நீ இரட்சிக்கப்படுவாய்) என்று பிரசங்கிக்கிறார்கள். கூட்டத்தின் முடிவிலே இரட்சிக்கப்பட்டவர்கள் எல்லாம் கையை உயர்த்துங்கள். முன்னாலே வாருங்கள் என்று அழைப்பு கொடுக்கிறார்கள். கையை உயர்த்தியது எத்தனைபேர் என்று கணக்கெடுக்கிறார்கள்....ஆகாகா, இன்றைய கூட்டத்திலே இன்னாருடைய பிரசங்கத்திலே இத்தனை நூறுபேர் இரட்சிக்கப்பட்டார்கள் என்று விளம்பரப் படுத்திக் கொள்வார்கள். இப்படி கைதூக்கியவர்களில் பலர் ஒவ்வொரு கூட்டத்திலும் கையை உயர்த்துபவர்கள் என்பது பிரசங்கிக்கு தெரியாது. வேத வாக்கியங்களில் சொல்லப்பட்ட விசுவாசம் எதைக் குறிக்கிறது? இரட்சிப்பு என்றால் என்ன? அதை அடையும் முறை என்ன? என்பதைப் பற்றிய அறிவில்லாமல் இப்படி பொய்யாய் பேசுகிறார்கள்.

**இயேசு கிறிஸ்துவை விசுவாசி என்பதன் கருத்து என்ன?**

நான் ஒருவனிடத்தில் ரூ 100 கடன் பட்டிருந்தேன். கடன்காரன் வந்து கடனை கேட்டு என்னை நெருக்கினான். என்னிடமோ பணமில்லை. என் நண்பனைத் தேடிப் போய் அவனை வருந்திக் கேட்டேன். என் மீது மன துருகி, நண்பா! நாளை காலை 10 மணிக்கு வா, உனக்கு தருகிறேன் என்றான். எனக்கு மிகுந்த மகிழ்ச்சி உண்டாயிற்று. நான் கடன் பட்டவனிடம் மிகவும் தெம்பாக வந்தேன். அவனிடம் என் நண்பனை நான் விசுவாசிக்கிறேன். அதாவது என் நண்பன் சொன்ன வார்த்தையை நான் விசுவாசிக்கிறேன். நாளை காலை 11 மணிக்கு உனக்கு பணத்தை தருகிறேன் என்றேன். அப்படிப் போல இயேசுவை விசுவாசி என்பதன் கருத்து, அவர் சொன்ன வார்த்தைகளை விசுவாசிப்பதேயாகும் (யோவா 5:46,47). விசுவாசிப்பது வேறே நடைமுறை அனுபவமாகிறது வேறே.

மனிதன் தேவனுக்கு விரோதமாக பாவம் செய்தபடியால், தேவனைவிட்டு பிரிந்தான் (ஆதி 3. 23, 24). தேவனை அறிகிற அறிவை இழந்தான் (பிலி 3 : 5). தேவனில்லாத அவனுடைய ஆத்துமா இருளடைந்தது. தேவனோடே உள்ள உறவு துண்டிக்கப்பட்டதால், ஜீவனாகிய தேவனை விட்டு பாவத்தினால் ஆத்துமாவில் செத்தான். தேவனில்லாமையால் சமாதானமின்றி இளைப்பாறுதலற்று, துக்கமாகிய பாரம் இருதயத்தை அழுத்த, பாரச் சுமையோடே தவிக்கிறான் மனிதன்.

இரக்கத்தில் ஐசுவரியமுள்ள தேவன், மனிதனை மன்னித்து, மறுபடியும் தன்னோடே சேர்த்து அவன் என்றென்றும் தன்னோடிருக்க தயவுள்ள சித்தங் கொண்டார். தம்முடைய சித்தத்தை நிறைவேற்றும்படி தேவன் மாம்சத்தில் வெளிப்பட்டார் (1 தீமோ 3 : 16). மாம்சத்தில் வெளிப்பட்ட தேவன் தமது ஜனங்களின் பாவங்களை நீக்கி அவர்களை இரட்சிக்கும்படி வந்ததினால் இயேசு என்று பெயரிடப்பட்டார் (மத் 1 : 21). இந்த இயேசுவை தேவனுடைய குமாரனென்று முழு இருதயத்தோடும் விசுவாசிக்க வேண்டும் (அப் 8:37). இவர் தேவனுடைய குமாரன் என்று ஏற்றுக் கொள்ளும் போது, இவர் தேவனிடத்திலிருந்து வந்தவர் என்று விசுவாசிக்கிறோம். இவர் தேவனிடத்திலிருந்து வந்தபடியால, பிதாவை கண்டவராகயிருக்கிறார் (யோவா 6:46). இவர் பிதாவால் அனுப்பப் பட்டிருக்கிறபடியால் பிதாவை அவர் அறிந்தவராயிருக்கிறார் (யோவா7:29) பிதாவை அறிந்த குமாரன் அவரை யாருக்கு வெளிப்படுத்தச் சித்தங் கொண்டாரோ அவர்கள் பிதாவை அறியலாம் (மத் 11:27).

தேவனை காண முடியவில்லையே, அறிய முடியவில்லையே என வருத்தப் பட்டு பாரம் சுமக்கிறவர்களே, நீங்கள் எல்லோரும் என்னிடத்தில் வாருங்கள், அவரை அறியும் அறிவை நான் கற்றுத் தருகிறேன். என்னுடைய கற்பனைகளை (நுகத்தை) ஏற்றுக் கொள்ளுங்கள். அப்பொழுது உங்கள் பாரம் நீங்கி தேவனை அறிவீர்கள். (மத் 11: 28, 29). என்னுடைய வசனங்கள் ஆவியாயும், ஜீவனாயும் இருக்கிறது. அந்த ஆவி உங்களை உயிர்ப்பிக்கும் (தேவனை உடையவர்களாக்கும்) இளைப்பாறுதலை உண்டாக்கும் (யோவா6:63). ஏனெனில் ஒன்றான மெய் தேவனையும், அவர் அனுப்பின இயேசு

கிறிஸ்துவையும் அறிவதே நித்திய ஜீவன் என்கிறார் இயேசுகிறிஸ்து (யோவா 17:3). இந்தயேசு கிறிஸ்துவை ஒருவன்விசுவாசிக்கிறன்என்றல், இவருடைய கற்பனைகளைக் கைக்கொண்டால் பிதாவை அறிந்து என்றென்றும், அவரோட வாசமாயிருக்கத் தக்க நித்திய ஜீவனை உடையவனுகி, நித்திய பரம இளைப்பாறுதலை அடையலாம் என்றே விசுவாசிக்கிறன் இந்த விசுவாசம் ஒருவனில் வந்தால் அவரிடத்தில் கற்றுக் கொள்ளும் படி சீஷனுகி விடுகிறன், அவரை விசுவாசிக்கிறவன், அவருடைய உபதேசத்தில் நிலை நின்றல் மெய்யாகவே சீஷனுய் இருப்பான். (யோவா 8:30, 31).

**இரட்சிப்பு என்றல் என்ன?**

இயேசு என்னை இரட்சித்தார் என்று ஒருவன் சொன்னல், அவன் பாவ மன்னிப்பைப் பெற்றிருக்கிறன் என்று அர்த்தம் (லூக்1:77)

இந்த பாவமன்னிப்பாகிய இரட்சிப்பை பெற்றுக் கொள்ள :

1. இயேசு கிறிஸ்துவின் மேல் விசுவாச முள்ளவனுக வேண்டும். (மாற் 16:16)

2. பாவங்களை விட்டு மனந்திரும்ப வேண்டும் (அப் 2:38).

3. தேவனல் அனுப்பப்பட்ட தேவ ஊழியக்காரரிடம் உணர்த்தப்பட்ட பாவங்களை அறிக்கை செய்ய வேண்டும் (மாற் 1:5).

4. பாவ மன்னிப்புக் கென்று (மாற் 1:4, அப் 2:38) பாவங்கள் போகக் கழுவப் படும் படியாக (அப்22: 16) ஞானஸ் நானம் பெற்றுக் கொள்ள வேண்டும் (மாற் 16:16)

அப்பொழுதே பாவ மன்னிப்பாகிய இரட்சிப்பை ஒரு மனிதன் வேத வாக்கியங்களின் அடிப்படையில் பெற்றுக் கொள்கிறன். இதையே சுருக்கமாய் "விசுவாச முள்ளவனுகி ஞானஸ் நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான் என்று பரி. மாற்கு கூறியுள்ளார் (மாற் 16:16). இப்படி பாவ மன்னிப்பைப் பெற்றவன் (இரட்சிக்கப் பட்டவன்) தேவனை அறிகிற அறிவை அனுதினமும் அடைந்து, முடிவு வரை நிலை நின்று இரட்சிப்பை நிறைவு படுத்துகிறன். இப் போது கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசி அப்பொழுது இரட்சிக்கப் படுவாய் என்ற வசனம் நிறைவேறுகிறது. ஒருவன் போதித்தால் தேவனுடைய வாக்கியங்களின் படி போதிக்கக்கடவன் (1பேது 4:11).

"எங்கள் சுவிசேஷம் ஒருவனுக்கு மறை பொருளாயிருந்தால் கெட்டுப் போகிறவர் களுக்கு மறை பொருளாயிருக்கும்."

---

'... கல்லாதவர்களும், உறுதியில்லாதவர்களும் மற்ற வேத வாக்கியங்களைப் புரட்டுகிறது போலத் தங்களுக்குக் கேடு வரத் தக்கதாக இவைகளையும் புரட்டுகிறார்கள்"

— II பேது 3:16

---

# ஆத்தும ஆதாயம்

நமது கர்த்தராகிய இயேசு கிறிஸ்து சிலுவையில் தொங்கிக் கொண்டிருக்கும் பொழுது தாகமாக இருக்கிறேன் என்றார் (என்கிறர்) [யோவா 19:28]. ஆனல் அந்த வேளையிலும் ஒருவராலும் கிறிஸ்துவின் தாகத்தை தீர்க்க முடியவில்லை. இது வரையிலும் ஒருவரும் அவரது தாகத்தை(ஆத்தும) தீர்க்கவில்லை. எப்பொழுது அவரது தாகம் தீருமோ, அப்பொழுது கர்த்தர் வருவார். [மத் 24:14].

கர்த்தருடைய (தாகமான்து) ஆத்தும தாகமானது இன்னும் தீர்க்கப்படவில்லை. மனுமக்கள் யாவரும் இரட்சிக்கப்படவும், ஒன்றன மெய் தெய்வத்தையும் அவர் அனுப்பிய குமாரனுகிய கிறிஸ்து இயேசுவையும் அறிந்து கொள்ள வேண்டும். பாவத்திலிருந்து மீட்பை பெற்று பரலோக இராஜ்யம் வந்து அடைய வேண்டும் என தேவன் வாஞ்சித்தார். ஆனல் இந்நாட்களில் கிறிஸ்து இயேசுவைக் குறித்து அறியாத

கேள்விப்படாத அநேக கோடிக் கணக்கான மக்கள் இருக்கின்றனர். ஏன் நமது அண்டை வீட்டாரும், நமது இன ஜன பெந்துக்களும் இருக்கின்றனர். இம் மக்களுக்கு கிறிஸ்து இயேசுவை அறிவிப்பது இரட்சிக்கப்பட்ட நமதுஒவ்வொருவருடைய கடமையாகும். இப்படி அறிவிப்பதில் மூலமாகத்தான் நாம் கிறிஸ்துவின் தாகத்தை தீர்க்கலாம். எனவே கிறிஸ்து இயேசுவின் தாகத்தை நம்மால் தான் தீர்க்கமுடியும். நம்மை தேவன் இக்கடைசி நாட்களில் இரட்சித்திருக்கின்றார் என்றால் நாம் அவரது தாகத்தைத் தீர்க்கும்படி தான். ஆனால் நாமோ கவலையற்றவர்களாக காணப்படுகிறோம்.

கிறிஸ்து இயேசுவை விசுவாசித்து, பாவமன்னிப்பு பெற்று, சமாதானம், சந்தோஷத்துடன் வாழ்கின்ற நாம் சுயநலவாதிகளாக கிறிஸ்துவைக் குறித்து கவலையற்றவர்களாக (ஆத்துமாக்களைக் குறித்து கவலையற்றவர்களாக) வாழ்கின்றோம்.

யான் பெற்ற இன்பம் பெறுக
இவ்வையகம்

என்ற வார்த்தையானது மெய்யாகவே இரட்சிக்கப்பட்ட ஒவ்வொரு ஆத்துமாவிற்கும் சொல்லப்பட்டதாகும். ஆனால் நாமோ நான் பெற்ற இன்பம் போதும் என இருந்து விடுகின்றோம். நாம் பெற்ற இன்பத்தை, இரட்சிப்பின் சந்தோஷத்தை யாவருக்கும் அறிவிக்க வேண்டியது நமது கடமையாகும். அப்படி நாம் செய்யத்தவறினால் அவர்களது இரத்தப்பழி நம் தலைமீது வரும் (சங் 49:7).

கோத்திரப் பிதாவாகிய யூதா சொல்லுகிறார். அவனுக்காக நான் உத்திரவாதம் பண்ணுவேன். அவனை என்னிடத்தில் கேளும் நான் அவனை உம்மிடத்தில் கொண்டு வந்து உமக்கு முன்பாக நிறுத்தாமற்போனால், எந்நாளும் அந்தக் குற்றம் என்மேல் இருப்பதாக (ஆதி 43:9). இந்தப் பிரகாரமாக நாம் ஒவ்வொருவரும் நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினிடத்தில் சொல்லக் கூடியவர்களாகக் காணப்பட வேண்டும்.

அப்போஸ்தலராகிய பரிசுத்த பவுல் அடியாரைக் கர்த்தரின் அன்பு நெருக்கி ஏவினபடியால் நான் எல்லோருக்கும் எல்லோரைப் போலானேன் என்று கூறி, கிறிஸ்துவைக் குறித்து எங்கும் அறிவித்தார். எதற்கும் அஞ்சாமல் எல்லாவற்றையும் சகித்தார் என்று வேதம் நமக்கு போதிக்கின்றது.

இங்கிலாந்து நாட்டைச் சார்ந்த ஹட்சன் டெய்லர் (1832-1905) என்பவர் சீன தேசத்து மக்கள் அழிகின்றதையும் அவர்கள் கிறிஸ்துவைக் குறித்து அறியாமல் தினம், தினம் ஆயிரமாயிரம் பேர் மாள்கின்றதையும் கேள்விப்பட்டார். தனது இளவயது முதற் கொண்டு சீன மக்களுக்கு கர்த்தரை காண்பிக்க வேண்டும் என்ற வாஞ்சை உண்டானது. அவர் பெற்ற ஆனந்த பாக்கியத்தை இரட்சிப்பின் சந்தோஷத்தை அறிவிக்க உள்ளம் துடித்தது. அதற்காக விண்ணப்பம் பண்ணினார். தேவன் ஜெபத்தைக் கேட்டார். வாஞ்சையை பூர்த்தி செய்தார்.

சீனா கடந்து வந்து ஊழியத்தை ஆரம்பித்தார். சீனாவின் சீதோஷ்ண நிலை (தட்பவெப்பம்) அவருக்கு ஒத்துக் கொள்ளவில்லை ஆனால் தனது சரீரத்தைக் குறித்துக் கவலைப்படாமல், அழிந்து கொண்டிருக்கின்ற ஆத்துமாக்களைக் குறித்து கவலைப்பட்டார். ஊழியத்தைத் தொடர்ந்து செய்தார். கிறிஸ்துவைக்குறித்து அறிவிப்பதே தமது நோக்கமாகக் கொண்டார். ஊழியத்தின் ஆரம்பத்தில் தனது முதல் மனைவியையும் குழந்தைகளையும் இழந்தார். ஆனாலும் மனம் தளரவில்லை. நோக்கத்தையே முன் வைத்து நடந்தார் வெற்றியும் கண்டார்

சீனா முழுவதும் சுவிசேஷத்தை பிரசங்கிக்க தேவனிடத்தில் மிஷனரிகளைத் தரும்படி விண்ணப்பம் பண்ணினார். தேவன் ஆயிரம் மிஷனரிகளைக் கொடுத்தார். பலவிதமான தடைகள் ஏற்பட்ட போதும், தளராமல் சீனாவில் ஆத்துமப்பணி தீவிரமடைந்தது. தொடர்ந்து கிறிஸ்துவைக் குறித்து அறிவித்து அங்கேதானே தனது ஜீவனை விட்டார் என சரித்திரம் சொல்லுகின்றது.

கடந்துபோன பரிசுத்தவான்கள் சீனாவில் ஊன்றிய சுவிசேஷ விதையானது

இந்நாட்களில் அதிக கனிகளை கொடுக்கின்றதாகப் பார்க்கின்றோம். கம்யூனிச நாடாகிய சீனாவில் சபைகள் வளருகின்றன.

சீனா தேசத்தில் புராட்டஸ்டண்டு கிறிஸ்தவர்களாக இருக்கும் ஒவ்வொருவருமே தங்களை ஊழியர்களாக கருதி நற்செய்தியைப் பிறருக்கு அறிவிக்கும் பொறுப்பை தங்கள் மீது ஏற்றுக் கொண்டுள்ளனர். தங்கள் வீடுகளுக்கு, வேத ஆராய்ச்சி வகுப்புகள், கிறிஸ்தவ ஆராதனைகள் போன்றவற்றிற்கு நண்பர்களை அழைத்துச் செல்லுகின்றனர் என்று சீனாதேசத்திற்குச் சென்று வந்த மேற்கு ஜெர்மனிய சபை தலைவர்களில் ஒருவரான வால்டர் அர்நால்ட் என்பவர் சொல்லுகின்றார். பல இடங்களில் ஞாயிறு ஆராதனைகளில் 3000 பேருக்கு மேல் கலந்து கொள்ளுகின்றனர். அநேக சபைகளில் ஒவ்வொருவாரமும் 100 பேராவது ஞானஸ்நானம் பெறுகின்றனர்.

தேவ ஜனங்களாகிய நமக்கும் ஆத்துமாக்களைக் குறித்ததானபாரம் வேண்டும், வாஞ்சை வேண்டும். உதாரணமாக நாம் ஆற்றின் கரையில் நிற்பதாக வைத்துக் கொள்வோம். நமது உடன் பிறந்த சகோதரனை ஆற்றின் வெள்ளம் அடித்து செல்லுகின்றது. நீந்தத் தெரிந்தோ அல்லது நீந்தத் தெரியாதவராக இருந்தாலும் அடித்து செல்லுகின்ற சகோதரனை நாம் பார்த்துக் கொண்டு சும்மா நிற்பதில்லையே. எப்படியாயினும் எனது சகோதரனைக் காப்பாற்றுவேன் என எண்ணி நாம் சென்று அவனைக் காப்பாற்றுவோம். அப்படியே கிறிஸ்துவைக் குறித்து அறியாமல் நரகத்தை நோக்கி ஓடிக்கொண்டிருக்கின்ற மக்களைக் குறித்து நமக்கு பாரம் உண்டாக வேண்டும். கர்த்தரிடத்தில் விண்ணப்பம் பண்ண வேண்டும். கர்த்தர் அறிகின்ற ஆத்துமாக்களை குறித்த பாரம் உண்டாகும். நாம் கிறிஸ்துவைக் குறித்து தீவிரமாக அறிவித்து நம்மால் முடிந்த வரையில் கொஞ்ச பேரையாவது நாம் அக்கினியினின்று மீட்டுக் கொள்ளலாம்.

இரட்சிப்பை பெற்ற தேவ ஜனங்களுக்கு சில வேளைகளில் சில வகையான எண்ணங்கள் மனதில் எழுவதுண்டு. நான் கல்லாதவனாக இருக்கிறேன், நான் ஏழையாக இருக்கின்றேன், பலவீனனாக இருக்கிறேன், நான் எளியவன், எல்லோரிலும் சிறியவன் என்று நினைப்பதுண்டு. நீங்கள் மனம் தளர்ந்து போக வேண்டாம். இல்லாததொன்றிலிருந்து ஒன்றை உருவாக்க வல்லவர்தான் கிறிஸ்து. அவருக்கு ஒன்றும் தெரியாதவர்கள்தான் தேவை. எல்லாம் தெரிந்தவர்கள் தேவனுக்குத் தேவை இல்லை. எல்லாக் கோத்திரத்திலும் சிறிய கோத்திரத்திலிருந்துதான் தேவன் சவுலைத் தெரிந்து கொண்டார். ஆடுகளை மேய்த்த தாவீதைத்தான் தேவன் இஸ்ரவேலின் பன்னிரண்டு கோத்திரத்தையும் ஆளுகின்ற இராஜாவாகத் தெரிந்து கொண்டார்.

மீன் பிடித்துக் கொண்டிருந்தவர்களைத்தான் மனிதர்களை பிடிக்கும் படியாக அழைத்தார். மனிதன் முகத்தைப் பார்க்கிறான், தேவனோ இருதயத்தைப் பார்க்கின்றார். உன்னுடைய வாஞ்சையைப் பார்க்கிறார். கர்த்தர் சொல்லுகிறார் பலவீனத்தில் எனது பலம் பூரணமாய் விளங்கும் (IIகொரி 12:9). கிறிஸ்துவைக் குறித்து, சத்தியத்தைக் குறித்து கவலையுள்ளவர்கள்தான் கர்த்தருக்காக எதாவது செய்ய முடியும். கர்த்தரின் தாகத்தை தீர்க்க முடியும்.

பக்தர் ஒருவர் பாடுகின்றார் :

**சிலுவை மீது தொங்கியே ஏக**
**என்னில் அன்பு கூர்ந்தார்**
**நேசரின் அன்பு எந்தன்**
**உள்ளத்தை நெருக்கி ஏவிடுதே.**

கிறிஸ்துவின் அன்பு நம்மை ஏவவில்லையோ? நாம் பெற்ற இரட்சிப்பை, பாவமன்னிப்பாகிய மீட்பை நாம் அறிக்கை செய்தால் போதும். கிறிஸ்துவின் நாமம் வல்லமையுள்ளது. அது கிரியை நடப்பிக்கும். கர்த்தரும் நம் மூலம் கிரியை நடப்பிப்பார். ஆத்துமாக்கள் தேவனிடமாய் வருவர். நமது வாயைத் திறப்போம். தண்ணீர்கள் மீது ஆகாரத்தைப் போடுவோம், மீன்கள் வருவது நிச்சயம்.

நமது பிதாவாகிய தேவன் நமக்காய் தம்முடைய ஒரே பேரான குமாரனைக் கொடுத்

தார் (யோவான் 3:16). நமக்காய் தமது ஜீவனைக் கொடுத்த கிறிஸ்துவுக்காய் நாம் என்ன செய்தோம்? இரட்சிப்பைப் பெற்ற பின்னர் நான் கர்த்தருக்காக என்ன செய்தேன் என கேள்வி கேட்டால் நான் ஒன்றுமே செய்யவில்லை என்ற பதில்தான் உண்டாகும். அது மட்டுமின்றி நாம் அனேக வேளைகளில் நாம் செய்த தவறுதல்கள், மீறுதல்கள் நிமித்தம் அவரை வருத்தப் படுத்தினோம். நமது தவறுதல்கள் மீறுதல்களால் அவரது தாகமானது அதிகரிக்கின்றது. ஆனால் குறைவில்லை. நாம் கிறிஸ்துவுக்காய் ஒன்றும் செய்யவில்லை என்றாலும், சாட்சிகளாய் ஜீவிப்போம். நாம் சாட்சிகளாக நிலைத்திருந்து ஜீவிப்பதி னிமித்தம் அனேகர் கர்த்தரிடம் வருவர்.

நாம் கிறிஸ்துவுக்காய் ஜீவித்து, ஆத்தும ஆதாயம் செய்து கிறிஸ்துவின் தாகத்தை தீர்ப்போம். அனேகருக்கு கிறிஸ்துவைக் குறித்து அறிவித்து, அனேகரை ஆதாயப் படுத்தலாம். இவ்வுலகத்தில் சதா காலங்களிலும் பிரகாசிக்கின்ற நட்சத்திரங்களாக நாம் ஜொலிக்க ஆத்தும ஆதாயம் செய்வோம் (தானி 12:3).

நமது கர்த்தரின் தாகத்தை அந்நாட்களில் இருந்த யூதர்களால் தீர்க்க முடியவில்லை. அந்தாகத்தைத் தீர்க்கும்படியான பொறுப்பு இக்கடைசி நாட்களில் தேவனின் சபை மக்களாகிய நமக்குக் கொடுக்கப் பட்டுள்ளது. ஆத்துமாக்கள் மீது வாஞ்சையாக இருந்து, ஜெபித்து, கர்த்தரின் தாகத்தை தீர்க்க முயற்சி செய்வோம். கர்த்தரின் தாகத்தைத் தீர்ப்போம். சதா காலங்களிலும் பிரகாசிப்போம்.

---

"ஞானவான்கள் ஆகாய மண்டலத்தின் ஒளியைப் போலவும், அநேகரை நீதிக்குட் படுத்துகிறவர்கள் நட்சத்திரங்களைப் போலவும் என்றென்றைக்குமுள்ள சதா காலங்களிலும் பிரகாசிப்பார்கள்" —தானி 12:3.

---

# மோட்ச வழி

## குரு-சிஷ்ய உரையாடல்

சிஷ்ய: குருவே ஆலயத்திற்குப் போய்தான் தேவனை தொழுது கொள்ள வேண்டுமா? மனதிலே கடவுளை நினைத்தால் போதாதா? அல்லது வீட்டிலே ஜெபம் பண்ணினால் போதாதா?

குரு: இறைவன் மனிதனுக்காக அவசியமானவைகள் எல்லாவற்றையும் தம்முடைய வேதாகமத்தில் எழுதியிருக்கிறார். வாரத்தில் ஆறு நாள் மனிதன் வேலை செய்து தன்னுடைய சரீரத் தேவைகளுக்காக உழைக்கும்படியாகவும் ஒரு நாள் அவன் ஓய்ந்திருந்து தன்னுடைய ஆத்மீகத்துக்காக அவன் பிரயாசப்பட வேண்டுமென்றும் அந்த நாளில் அந்த நாளை தேவனுக்கென்று ஆசரித்து தேவனுடைய சமூகத்தில் வந்து சமாதானத்தையும், ஆசீர்வாதத்தையும் பெற்றுக்கொள்ளும்படியாக தேவன், நியமித்திருக்கிறார். அந்த நாளில் தேவ சமூகத்தில் போய் தேவனை ஆராதித்து அவருடைய அருள் வாக்கைக் கேட்டு தன்னுடைய வாழ்க்கையை செவ்வைப்படுத்திக்கொள்ள வேண்டியது மனிதனுடைய கடமை, செவ்வைப்படுத்திக் கொள்வதும், இறைவனுக்குச் சேவை செய்வதும் மனிதன்மேல் விழுந்த கடமையாயிருக்கிறது.

சிஷ்ய:- வீட்டிலே இருந்துகொண்டு ஆவிக்குரிய புஸ்தகங்கள், பத்திரிக்கைகள் படித்து, ரேடியோ பிரசங்கம் கேட்டு தேவனைத் தொழுதுகொண்டால் போதாதா?

குரு: ஆம் இந்நாட்களில் அநேகர் அப்படித்தான் செய்து கொண்டிருக்கிறார்கள். அதற்கு வசதியாக ரேடியோ பிரசங்கிகளும் ரேடியோவிலே பிரசங்கம் பண்ணி,

ஆராதனையும் செய்து ஜெபமும் பண்ணி மக்களையும் ஜெபம்பண்ணச் சொல்லி மக்களை விக்கிரக ஆராதனைக்காரர்கள்போல் ஆக்கிவிட்டார்கள். அதே ரேடியோவிலிருந்து அடுத்தது சினிமா பாட்டும், காதல் கேளிக்கைகளும், அஞ்ஞான தேவர்களின் துதிபாடல்களும் கிளம்பும். சபை கூடி வந்து தேவனை ஆராதித்து அவர் தங்களுக்குச் செய்த நன்மைகளுக்காக தேவனை ஸ்தோத்தரித்து, சாட்சி கொடுத்து தேவனுடைய பந்தியை ஆசரித்து, அவர் தங்களுக்குச் செய்த நன்மைக்குத் தக்க காணிக்கையை செலுத்தி அவரைத் தொழுது கொள்ளுகிறதும், அவருடைய திருவசனத்தைக் கேட்பதும், ஆலோசனை பெறுவதும் அவசியம். சபை கூடிவருதலை சிலர் விட்டு விடுகிறதுபோல நீங்களும் விட்டுவிடாதிருங்கள் (எபி 10 : 25). பாவம் பெருகிப்போன இந்தக் காலத்தைப் பார்க்கும் பொழுது தினந்தோறும் சபைகூடி வந்து, திருவசனத்தை மனிதன் கேட்பதாயிருந்தாலும் அது நல்லது. அதனால் ரேடியோ கிறிஸ்தவனாக இராதே.

சீஷ: வீட்டிலே ஜெபம் பண்ணி தேவனை ஆராதித்தால் போதாதா?

குரு: தேவனுடைய சபையிலே கூடி ஆராதிக்கிற மக்கள் தனியேயும், வீட்டிலே குடும்பமாகவும் ஆராதிக்கலாம். இதில் தவறொன்றுமில்லை. ஒரு மனிதனுடைய ஆவிக்குரிய ஜீவியத்தில் நான்கு விதமாக அவன் தேவனை ஆராதிக்க வேண்டும். 1. சபையாய்க் கூடி வந்து தேவனைத் தொழுது கொள்ளவேண்டும். 2. தனி ஜெபம் பண்ணவேண்டும் 3. வீட்டிலே கூடி குடும்ப ஜெபம் செய்யவேண்டும். 4. தேவைப்படும்போதெல்லாம் இரண்டு மூன்று பேர்கள் சேர்ந்து கூடி, கூடி ஜெபிப்பதும் அவசியம். சபையிலேதான் தேவனால் நியமிக்கப்பட்ட அப்போஸ்தலர்கள், மேய்ப்பர்கள், தீர்க்கதரிசிகள், போதகர்கள், சுவிசேஷகர்கள் இருப்பார்கள். கர்த்தருடைய பந்தி ஆசரிக்கப்படும், கர்த்தருடைய கற்பனைகள், கட்டளைகள் நிறைவேற்றப்படும். தேவ ஆராதனை, தேவனுடைய ஊழியம் ஒழுங்கும் கிரமமுமாக நடைபெறும், ஆத்துமாக்களும் கூட்டிச்சேர்க்கப்பட்டு இரட்சிக்கப்படுவார்கள். தேவனுடைய சித்தமும் நிறைவேறும்.

ஆனபடியாலும் இன்னும்பல தெய்வீக செயல் நடைபெறவும், தேவனுடைய சித்தம் அவருடைய ஞானம் வெளிப்படவும், தேவன் தன்னை வெளிப்படுத்தவும், தம்முடைய சித்தத்தை, தீர்மானத்தை திட்டத்தை நிறைவேற்றி முடிக்கவும் சபை தேவை. தேவனுடைய ஆலயத்தில் போய் (சபை) தேவனை தொழுது கொள்ளுகிறதை முக்கியமாய் ஆசரிக்கவும், தவறாமல் ஒழுங்கும் கிரமமுமாக போய் தேவனை தொழுது கொள்ளவும் தம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவும் வழக்கமாய் ஆலயத்தில் பிரவேசித்து தேவனை தொழுது கொண்டு பணிவிடை செய்தார் (லூக் 4:16).

உமக்கு தேவாலயம் போகிற வழக்கம் உண்டா.
இதோ இயேசுவே முன்மாதிரி.

(தொடரும்)

"ஆதலால், அசைவில்லாத ராஜ்யத்தைப் பெறுகிறவர்களாகிய நாம் பயத்தோடும் பக்தியோடும் தேவனுக்குப் பிரியமாய் ஆராதனை செய்யும்படி கிருபையைப் பற்றிக் கொள்ளக்கடவோம்" எபி 12:28.

# வேத பாடம்

யாத் 3:1-10. மீதியான் தேசத்திற்கு ஓடிப்போன மோசேக்கு கர்த்தர் ஓரேப் பர்வதம் என்னும் மலை அடிவாரத்தில் அவர் ஆடு மேய்த்துக் கொண்டிருக்கும்பொழுது தேவன் தரிசனமானார். தரிசனமானவிதம் ஒரு முட்செடியிலிருந்து அக்கினி எழும்பிற்று. அந்த அக்கினி ஜுவாலையின் நடுவிலே நின்று தேவன் மோசேக்கு தரிசனமானார். ஒரு முட்செடி பற்றி எரிவதையும் ஆனால் அந்த முட்செடி வெந்து போகாமலிருக்கிறதையும் மோசே கண்டு அந்த அற்புதத்தைப் பார்க்க கிட்டே நெருங்கினார். அப்பொழுது அக்கினியின் நடுவிலிருந்து தேவன் மோசே! மோசே! என்று கூப்பிட்டார். மனிதன் இந்த முட்செடிபோல முள்ளுகள் நிறைந்தவனாய், பிறனை தன்னுடைய வார்த்தைகளினாலும், செய்கைகளினாலும் குத்தி வேதனைப்படுத்துகிறவனாய் இருக்கிறான். பட்டயக் குத்துக்கள் போல் பேசுகிறவர்கள் உண்டு (நீதி 12:18) அவன் செய்கையின் முடிவோ எட்டியைப்போல் கசக்கும் இருபுறமும் கருக்குள்ள பட்டயம்போல் இருக்கும் (நீதி 5:4) இவ்விதமான மனிதனிலிருந்து தேவ ஆவியாகிய அக்கினி பற்றி எரிந்து ஆட்கொள்ளும்போது அவனில் இருந்து தேவ சத்தம் தொனிக்கும். ஆனால் அவனோ எரிந்தழிந்து போவதில்லை. அவனிலே தேவபிரசன்னம் காணப்படும். மோசே முட்செடியில் பற்றியெரிகிற அக்கினியை பார்க்கக் கிட்டே நெருங்கினபோது அக்கினி நடுவிலிருந்து தேவன் மோசேயை நோக்கி உன் கால்களிலிருக்கிற பாதரட்சைகளைக் கழற்றிப்போடு. நீ நிற்கிற இடம் பரிசுத்த பூமி என்றார். மேலும் நான் ஆபிரகாமின் தேவனும், ஈசாக்கின் தேவனும், யாக்கோபின் தேவனுமாகிய உங்கள் பிதாக்களின் தேவன் என்று திருவுளம் பற்றினார். இந்நாட்களில் அநேகர் தேவ சமுகத்தை அலட்சியம் செய்கிற அசட்டைக்காரர்களாய் இருக்கிறார்கள். தேவன் மோசேக்கும் யோசுவாக்கும் தேவனை சந்திக்கிற இடம் பரிசுத்த பூமி என்றும் கால்களிலிருக்கிற பாதரட்சைகளைக் கழற்றிப்போடு என்றும் கட்டளையிட்டிருக்கிறார் (யாத் 3:5; யோசு 5:14, 15).

ஆனால் இந்நாட்களில் கிறிஸ்தவர்கள் என்று சொல்லிக் கொள்ளுகிற அநேகரும் ஆவியைப் பெற்றிருக்கிறோம் என்று சொல்லுகிற அநேகரும், தேவனை ஆராதிக்கிற ஸ்தலங்களிலும், பிரசங்கிக்கும்பொழுதும், ஜெபம்பண்ணும்பொழுதும், செருப்பு மாட்டிக் கொண்டும், பூட்ஸ் (Boots) மாட்டிக்கொண்டும் ஆராதிக்கின்றனர். இன்னும் சிலருக்கு முழங்கால்படியிட்டு ஜெபிக்கத் தெரியாது. தேவ சமுகத்திலே பெண்களைப்போல மண்டி போட்டுக்கொண்டும், தலையை கீழே வைத்து தலைகீழே நிற்கிறவர்கள் போலவும், நாலுகாலால் நிற்கிற பிராணிகள் போலவும், நொண்டி சப்பாணிகள் போல உட்கார்ந்து கொண்டும், இன்னும் சிலர் குத்தவைத்துக் கொண்டும் தேவனை தொழுது கொள்ளுகிறார்கள். இதெல்லாம் தேவசமுகத்தை அசட்டை செய்கிற அசட்டைக்காரர்களின் அருவருப்புகளாகும். வேதாகமத்தில் எல்லாவற்றிற்கும் மாதிரி உண்டு. கூடுமானவரை மாதிரியைப் பின்பற்றுங்கள். இறைவாக்குக்குச் செவி கொடுங்கள் முழங்கால் படியிட்டு ஜெபியுங்கள் (தானி 6:10; எபே 3:14, 15; எபி 12:25). தேவன் மோசேயை நோக்கி என் ஜனங்களின் உபத்திரவத்தை நான் கண்டேன், என் ஜனத்தை எகிப்திலிருந்து அழைத்து வரும்படி உன்னை பார்வோனிடத்தில் அனுப்புவேன் வா என்றார்.

யாத் 3:11—4:17:—அதற்கு மோசே பார்வோனிடத்தில் போகவும், இஸ்ரவேலரை எகிப்திலிருந்து அழைத்து வரவும் நான் எம்மாத்திரம் என்றார். கர்த்தர், உன்னோடுகூட நான் இருப்பேன் என்றார். மோசே இஸ்ரவேல் ஜனங்கள் என்வாக்குக்குச் செவிகொடுக்க மாட்டார்கள் என்றார். மோசே அற்புதங்களையும், அடையாளங்களையும் செய்து தேவன் தன்னை அனுப்பினதை நிரூபிக்கும்படியாக தேவன் அதிகாரம் கொடுத்தார். ஆனாலும் மோசே நான் வாக்குவல்லவன் அல்ல, நான் திக்குவாயும் மந்த நாவும் உள்ளவன்

என்றார். இவ்விதமாய், தன்னை தாழ்த்தக்கூடிய மனிதனே, தன்னுடைய தகுதியில்லாமையை உணருகிற மனிதனே தேவ ஊழியத்தை சரியாகச் செய்யமுடியும்.

தேவன் மோசேயை நோக்கி வாயை உண்டாக்கினவர் யார்? ஊமையனையும், செவிடனையும், பார்வையுள்ளவனையும் குருடனையும் உண்டாக்கினவர் யார்? கர்த்தராகிய நான் அல்லவா ஆதலால் நீ போ! நான் உன் வாயோடு இருந்து நீ பேசவேண்டியதை உனக்குப் போதிப்பேன் என்றார். கர்த்தர் நம் வாயில் இருக்கவேண்டும். சில ஊழியர்கள் இருக்கிறார்கள் அவர்கள் வாயில் எப்பொழுதும் பிசாசு இருக்கும், எடுத்ததெற்கெல்லாம் பிசாசு, பிசாசு, பிசாசு என்று சொல்லிக்கொண்டிருப்பார்கள். இவர்களைக் குறித்து நாம் எச்சரிக்கையாய் இருக்க வேண்டும்.

கர்த்தர் இவ்வளவு திடப்படுத்தியும் மோசே தேவனை நோக்கி நீர் அனுப்பச் சித்தமாயிருக்கிற யாரையாகிலும் அனுப்பும் என்றார். இது மோசேயினுடைய தவறான மறுமொழியாகும். இதினிமித்தம் தேவன் மோசேயின் மேல் கோபம் கொண்டு மோசேக்கு துணையாக ஆரோனை கொடுத்தார். தேவ ஊழியத்தை ஏற்றுக்கொள்ளாமல் தள்ளிவிடுகிற சிலருண்டு. தேவன் உன்னைக் குறித்து என்ன சித்தங்கொண்டிருக்கிறாரோ அதை தேவன் உன்னில் நிறைவேற்ற நீ உன்னை ஒப்புக்கொடு. தேவ ஊழியத்தை அசட்டியம் செய்து தள்ளிப்போடாதே. உனக்குச் சமாதானமிருக்காது. தேவன் உனக்குக் கட்டளையிடுகிறதை நிறைவேற்று.

தேவன் மோசேக்கு ஒரு கோலும் கொடுத்திருந்தார். அது தேவ வல்லமையினால் நிரப்பப்பட்டதாக, அதிகாரத்துக்கு அடையாளமாக மோசேயின் கையில் இருந்தது. அந்த கோலை மோசே தேவ சந்நிதானத்தில் ஒப்படைத்த பொழுதுதான் அது வல்லமையுடைய தேவனுடைய கோலாய் மாறிற்று (யாத். 4 : 2, 3)

(தொடரும்)

"பூமியின்மேல் அக்கினியைப் போடவந்தேன் அது இப்பொழுதே பற்றி எரிய வேண்டுமென்று விரும்புகிறேன்"
—லூக். 12 : 49.

மாதர் பகுதி

# குடும்பம்

குழந்தைகளோ, சிறுபிள்ளைகளோ உள்ள வீட்டில் குழந்தைகளை சிறுபிள்ளைகளிலிருந்தே நல்ல பழக்கவழக்கங்களில் வளர்க்க வேண்டும். பிள்ளைகள் தூங்குகிறதற்கு படுக்கையறை வசதியாக இருக்க வேண்டும். காற்றோட்டம் உள்ளதாக இருக்க வேண்டும். படுக்கை மிருதுவாய் இருக்க கவனித்துக் கொள்ள வேண்டும். ஏதாவது பொருட்கள் அழுத்தக்கூடியதாக இருந்தால் அதைக் கண்டுபிடித்து எடுத்து விட வேண்டும்.

குழந்தைகள் பிறந்தது முதற்கொண்டே அவைகளை தனியாக தூங்க பழக்குவிக்க வேண்டும். தாய்மார்கள் பிள்ளைகளை தங்களோடு சேர்த்து அணைத்துக்கொண்டு படுக்கக்கூடாது. அவ்விதம் செய்தால் பெரியவர்கள் விடுகிற அசுத்த காற்றை பிள்ளைகள் சுவாசித்து பிள்ளைகள் நோய்வாய்ப்பட ஏதுவாகும். பிள்ளைகளுக்குத் தாலாட்டுப் பாட்டு பாடுதல், தொட்டியில் போட்டு வேகமாக ஆட்டித் தூங்கவைத்தல் இப்படிப்பட்ட அநாவசியமான பழக்கங்களை

தவிர்க்க வேண்டும். இல்லையென்றால் அவ்விதமாய் பாடினாலொழிய பிள்ளைகள் தூங்க மாட்டோம் என்று அடம் பிடிக்கும். பிள்ளைகள் வளர்ந்து விளையாடுகிற பருவத்தில் அவைகளை விளையாட விட்டுவிட வேண்டும். உட்கார்ந்து விளையாடுகிறதைக் காட்டிலும் ஓடி, சாடி விளையாடுதல் பிள்ளைகளின் ஆரோக்கியத்திற்கு நல்லது. பிள்ளைகள் குதித்து விளையாடி மண்ணில் புரண்டு துணிகளை அசுத்தம் செய்கிறார்கள் என்று பிள்ளைகளை தடை செய்தல் கூடாது. மண்ணில் புரண்டு மண்ணைத் தோண்டி விளையாடுகிறார்கள் என்றும் விட்டுவிட வேண்டும். விளையாடட்டும். அது விளையாட்டுப் பருவம். விளையாடுவதற்கென்றே அவர்கள் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறார்கள். வஸ்திரங்களை அழுக்காக்கிக் கொண்டு வந்தால் துணிகளைக் களைந்து விட்டு குளிப்பாட்டியோ அல்லது கைகால் முகத்தைச் சுத்தம் பண்ணி விடுவதோ பெற்றோர்கள், பெரியோர்களுடைய கடமை.

பிள்ளைகள் ஓடி சாடி விளையாடுவதே அவர்களுடைய எலும்புகள், நரம்புகள் பலப்படுவதற்கும், புசித்த ஆகாரம் ஜீரணமாவதற்கும் தேவையாக இருக்கிறது. நல்ல தூக்கமும், நல்லுணவும் விளையாட்டும் பிள்ளைகளுக்குத் தேவை. சில பெற்றோர்கள் குழந்தைகள் அதிக நேரம் தூங்குகிறதென்றும் பிள்ளையின் தொண்டை வரண்டு போகும் என்று சொல்லி பிள்ளைகளை எழுப்பி விடுகிறார்கள். இது பெரிய தவறு. இதனால் பிள்ளைகளுடைய உடலில் சில பாதிப்புகள் உண்டாகும். ஆனால் பிள்ளைகள் விழித்த பின்பு படுக்கையில் அரண்டு புரண்டு கொண்டிருந்தால் அவர்களை உடனே எழுந்திருக்க பெற்றோர்கள் உற்சாகப்படுத்த வேண்டும்.

சாராயம் குடிப்பது எவ்வளவு கேடு விளைவிக்குமோ அவ்விதமாகவே படுக்கையில் அரண்டு புரண்டு கொண்டிருக்கிறதும் கேடு விளைவிக்கும் (இது எல்லாருக்கும்) பிள்ளைகள் தூங்கும்பொழுது தூங்கும் அறையில் அதிக வெளிச்சம் இருக்கக்கூடாது. வேண்டுமானால் மங்கலாக எரியும் ஒரு விளக்கை மறைவான ஒரு இடத்தில் வைப்பது நல்லது.

சிறு பிள்ளைகளுக்கு அதிகமாக கல்வியைத் திணிக்கக் கூடாது. காலையிலோ, மாலையிலோ ஒரு மணி நேரம் படித்துக் கொடுப்பது போதும். பிள்ளைகளுடைய மூளை அல்லது மனம் பதினைந்து நிமிஷங்களுக்கு மேல் எந்த ஒரு காரியத்திலும் கவனம் செலுத்தாது. வேறு விஷயத்திற்குத் தாவி விடும். அதை மனதில் வைத்து பிள்ளைகளுக்கு படித்துக் கொடுக்க வேண்டும். அளவுக்கதிகமாய் அவர்களுடைய மூளையில் திணிக்கக்கூடாது. பிள்ளைகளை எப்பொழுதும் தூக்கி வைத்துக் கொண்டு கொஞ்சுவதும், குழந்தைகள் விரும்பாத போது வலுக்கட்டாயமாகப் பிடித்து கட்டிப் பிடித்து முத்தம் கொடுப்பதும் தவிர்க்கப்பட வேண்டும். அப்படி செய்வதினால் பிள்ளைகளுடைய மனதிலே ஒரு தீய தத்துவத்தை நாம் புகுத்திவிடுகிறோம். அவன் வளரும் பொழுது தன்னுடைய விருப்பத்துக்கு இணங்காதவர்களை வலுக்கட்டாயமாகப் பிடித்து முத்தமிட வேண்டுமென்பதை நாம் பிள்ளைகளுடைய மனதிலே விதைத்து விடுகிறோம்.

5 வயதிற்குட்பட்ட சிறு பிள்ளைகளை நாம் ஏதாவது ஒரு வேலை சொல்லி அல்லது கூப்பிட்டால் அது அந்த வேலையை செய்யவில்லை நம்மிடம் வரவில்லை என்றும் நாம் அதிருப்திபடக்கூடாது. நாம் என்ன நினைக்கிறோம்: இந்த சின்ன வயதில் எவ்வளவு திமிரு: கீழ்படியவில்லை என்று சொல்லி கோபம் கொண்டு அடிக்க எண்ணுகிறோம். இது மகா தவறு. பிள்ளைகளுடைய மனவளர்ச்சியையும் நாம் கவனிக்க வேண்டும். நாம் இட்ட பணியை அது செய்யவில்லையென்றால் அதனுடைய அர்த்தம் அப்பா, நான் களைப்பாக இருக்கிறேன், பிறகு செய்கிறேன் என்று அர்த்தம். சிறிது நேரம் கழித்து அதே வேலையை நீங்கள் செய்யும்படி சொல்லுங்கள் அந்த பிள்ளை உடனே செய்யும்.

பிள்ளைகளை நன்றாக விளையாடவிடுவதும், அவர்கள் போக்கிலே விட்டு அவர்களுக்கு நல்லபழக்கங்களைப் பழக்குவிப்பதும், பிள்ளைகளை அன்பாய் நடத்துவதும் பெற்றோர்களுடைய, பெரியோர்களுடைய கடமையாகும். நீங்கள் நினைக்கிற பிரகாரம்

அது சிந்திக்க, நீங்கள் சுத்தமாயிருக்கிறதுபோல அது சுத்தமாயிருக்க, நீங்கள் அமைதியாயிருக்கிறதுபோல அது அமைதியாயிருக்க, நீங்கள் கவனமாய் இருப்பதுபோல அது கவனமாயிருக்க, நீங்கள் பேசுகிறதுபோல அது பேச நீங்கள் எதிர்பார்க்கக் கூடாது. அப்படி நீங்கள் எதிர்பார்த்தால் உங்கள் பிள்ளைகள் பெலவீனரும், எதற்கும் அஞ்சுகிறவர்களும், நோயுள்ளவர்களாயும், அறிவில் தேறுதவர்களாயும் ஆகிவிடுவார்கள். கள்ளங்கபடற்ற அவர்களுடைய மழலைச் சொல்லை விரும்பாதவர் யார்? பிள்ளைகள் ஆரோக்கியமாய் இருப்பதும், திடகாத்திரமாய் இருப்பதும், நல்லவர்களாய் இருப்பதும், சுறுசுறுப்பாய் இருப்பதையும் விரும்பாதவர்கள் யார்?

ஆனபடியினால் பிள்ளைகள் மேல் கவனமாயிருக்க வேண்டும். வேலைக்காரர்கள் வேலைக்காரிகளை நம்பி பிள்ளைகளை விட்டுவிடக் கூடாது. உங்கள் பிள்ளைகளுக்கு நீங்களே பொறுப்பாளி.

(தொடரும்)

---

"புத்தியைக் காக்கிறவன் நன்மையடைவான்" நீதி-19:8

---

# கர்த்தரைத் துதியுங்கள்

துதி (Praise) என்றும் புகழ்ச்சி என்று அர்த்தம். சகலமும் நம்முடைய தேவனாலே உண்டாயிருக்கிறது. உண்டாக்கப்பட்ட வஸ்துவாகிய மனிதன் பெற்றிருக்கும் யாவும் இறைவன் அருளிச் செய்ததே. ஆகையால் புகழப்படுவதற்கு தகுதி உள்ளவர் இறைவன் மாத்திரமே. நம்மைப்போல் சிருஷ்டிக்கப்பட்ட சாத்தானும் புகழ்ச்சியை விரும்பினபடியால் விழுந்து போனான். ஆகவே தான் மனிதர்களால் புகழப்படுகிறவனுக்கு ஐயோ என்றும், மற்றவர்கள் உங்களைப் புகழும் போது எச்சரிக்கையாயிருங்கள் என்று இயேசு சொன்னார்.

கர்த்தரைத் துதிப்பது நல்லது (சங்92:1). ஏனெனில் துதிகளின் மத்தியில் அவர் வாசம் செய்கிறார் சங்(22:3). பெருமை மனிதனை தேவனை விட்டுப் பிரிக்கிறது. துதி தேவனை மனிதனிடம் சேர்க்கிறது. துதியிலே கர்த்தர் பிரியப்படுகிறார். உதட்டினால் ஒரு மனிதனை புகழ்ந்து அவனை ஏமாற்றி விடலாம். ஆனால் உள்ளந்திரியங்களை ஆராய்ந்தறிகிற கர்த்தரை, உண்மையும், உத்தமுமான இருதயத்தோடே கர்த்தரை துதிக்க வேண்டும். துதிகளில் சிலவற்றை தியானிப்போம்.

**கர்த்தர் பெரியவர்:** ஆதியிலே தேவன் விலக்கின மரத்தின் கனியை புசித்தால் சாக நேரிடும் என்று தேவன் சொல்லியிருக்க சர்ப்பம் (சாத்தான்) வந்து, அதைப் புசித்தால் சாவதில்லை என்று ஏவாளிடம் சொன்னது. உனக்கெப்படி தெரியும், தேவன் அப்படியல்லவா சொல்லியிருக்கிறார், என்று ஏவாள் சொல்ல, தேவனை விட நான் விஷயம் தெரிந்தவன், தேவனை விட நான் பெரியவன் என சொல்லி ஏவாளை வஞ்சித்தான் அவளும் சாத்தானை பெரியவனாக எண்ணி ஏமாந்தாள். இது எப்படி இருக்கிறதென்றால், அப் பவுல் தேவனாலே சுவிசேஷத்தைப் பெற்று அதை அறிவித்து அநேகரை கிறிஸ்துவுக்குள் உட்படுத்தி இருக்க, சில கள்ளர்கள் போய் வேறு சுவிசேஷத்தை அறிவித்து, அவர்களை தங்கள் பக்கம் திருப்ப முயன்றார்கள். அதாவது பவுலுக்குச் சரியாய் காரியம் தெரியாது, எங்களுக்குத் தெரியும்; அவனை விட நாங்கள் பெரியவர்கள் என்று மக்களை இழுக்க முயன்றதால், பவுல்: சர்ப்பமானது தன்னுடைய தந்திரத்தினாலே ஏவாளை வஞ்சித்ததுபோல உங்கள் மனதும் கிறிஸ்துவைப் பற்றிய உண்மையினின்று விலகும்படி கெடுக்கப்படுமோ என்று பயப்படுகிறேன் (II கொரி 11: 3, 4). நாம் யார் பெரியவர் என்று மதிக்கிறோமோ அவருடைய உபதேசத்தைத் தானே ஏற்றுக் கொள்வோம். மனுக்குலம் சாத்தானை பெரியவனாக ஏற்றதால், தேவனை விட்டுப் பிரிந்தது. இப்போது மயக்கம் தெளிந்த நாம் சாத்தான் பெரியவன் அல்ல, கர்த்தரே பெரியவர் என்றுஉணர்வோடுதுதிக்க,துதிக்க

**துதித்தலுடனே அவர் சந்நிதானத்துக்குள் போகிறோம். கர்த்தர் பெரியவரும், மிகவும் துதிக்கப்படத் தக்கவருமாயிருக்கிறார்.**

எல்லாத் தேவர்களிலும் பயப்படத் தக்கவரும் அவரே (1 நாளா 16:25) ஆம். நம்முடைய தேவனாகிய கர்த்தரே பெரியவர். அவர் சர்வ வல்லமை உள்ளவர் (ஆதி 17:1, 28:3); அவரால் எல்லாம் கூடும், அவர் சொல்லஆகும் அவர் கட்டளையிட நிற்கும். அவரால் செய்யக் கூடாத அதிசயம் ஒன்றுமில்லை, அவர் ஒருவராய் அதிசயங்களைச் செய்கிறவர். கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுக்குள் ஜீவிக்காதவனுக்கு சாத்தானின் வல்லமை பெரியதாய் தெரியும். கிறிஸ்துவுக்குள் இருக்கிறவனுக்கு சாத்தான் பலவீனன் என்று தெரியும். ஞானத்தில் தேவனுக்கு நிகர் அவரே. அவருக்கு மிஞ்சின ஞானி ஒருவரும் இல்லை. அந்தந்தியுள்ளவைகளை ஆதி முதற்கொண்டும், இன்னும் செய்யப்படாதவைகளை பூர்வ கால முதற் கொண்டும் அறிவிக்கிறவர். ஏசா 46:10 அவருடைய புத்தி ஆராய்ந்து முடியாதது. அவருடைய ஞானமே ஞானம். பூமியும் அதன் நிறைவும் கர்த்தருடையது. சங் 24:1 கர்த்தர் பெரியவர், வல்லமையில் மகத்துவமானவர், ஞானத்தில் பெரியவர், ஐசுவரியத்தில் பெரியவர். அவரைத் துதியுங்கள். அவர் பெரியவர் என்பதை அறிந்து உணர்ந்து அவரைத் துதியுங்கள்.

**கர்த்தர் நல்லவர் :—** சுத்த இருதயத்தாராயிருந்து, கர்த்தரை ருசித்து பார்க்கிறவர்களுக்கு அவர் நல்லவரே. கள்ளப் போதகத்தால் கறை பட்டு ஏவாளிடம், அதோ அந்த மரத்தைப் பார், அது புசிப்புக்கு நல்லது, பார்க்க இன்பம் தரும், புத்தியை தெளிவிக்கும் இச்சிக்கப் படத்தக்கதாயிருக்கிறதே, இதைப் போய் தேவன், சாப்பிட்டால் செத்துப் போவீர்கள் என்று சொல்வதை நீங்களும் நம்பிக் கொண்டிருக்கிறீர்களே. நான் உனக்குச் சொல்லுகிறேன், அதைப் பறித்துச் சாப்பிடு. உன் கண்கள் திறக்கப்படும், நன்மை தீமை அறிந்து தேவர்களைப் போல் ஆகிவிடலாம். ஆகவே தான் தேவன் உங்களை ஏமாற்றி வைத்திருக்கிறார், என்று சொல்லி தேவன் நல்லவர் அல்ல என நம்ப வைத்தான் சாத்தான். ஏவாளும் சாத்தானை நல்லவன் என்றும் தேவனை பொய்யர் என்றும் நம்பினாள். இந்த வஞ்சக வலையிலிருந்து மீட்கப்பட்ட தேவ ஜனமே, கர்த்தர் நல்லவர் என்று துதியுங்கள். ஆம். கர்த்தர் நல்லவரே. அவர் அன்பாகவே இருக்கிறார். மிகுந்த இரக்கமுள்ளவர் கிருபை நிறைந்தவர். உருக்கமானவர். மன்னிக்கத் தயை பெருத்தவர். நீடிய பொறுமை உள்ள சாந்தமானவர். ஒரு போதும் மாறாதவர். ஆபத்தில் விடுவிக்கிறவர். சத்துவமில்லாதவனுக்கு சத்துவம் கொடுக்கிறவர். நம்முடைய தாழ்வில் நம்மை நினைக்கிறவர். மாமிசமான யாவுக்கும் ஆகாரம் கொடுக்கிறவர். துரோகிகளாகிய நாம் அவருடைய குமாரனுடைய சாயலுக்கு ஒப்பாக மாறி, குமாரனின் சகோதரர்களாய் தேவனுடைய சுதந்திரத்தில் பங்குதாரர்களாய் மாறும் படி நம்மை முன் குறித்த பெருந் நன்மை படைத்த கர்த்தர் நல்லவரே. அவர் நல்லவர் என்று துதியுங்கள். அது இன்பமாயிருக்கும். சங் 135:3.

**கர்த்தர் பரிசுத்தர் :**

இயேசுகிறிஸ்துவினுடைய இரத்தத்தால் சகல கோத்திரங்களிலும், பாஷைக்காரரிலும், ஜனங்களிலும் ஜாதிகளிலுமிருந்து தேவனுக்கென்று மீட்கப்பட்ட பரிசுத்த வான்வாசிகள் நான்கு ஜீவன்களும் (வெளி 5:9) சர்வ வல்லமையுள்ள தேவனாகிய கர்த்தர், பரிசுத்தர், பரிசுத்தர், பரிசுத்தர் என்று இரவும் பகலும் சொல்லிக் கொண்டிருந்தார்கள் (வெளி 4:8).

கர்த்தர் ஆதாமை நோக்கி, நான் விலக்கின கனியைப் புசித்தாயோ என்றார். பின் மாறி விழுந்து போன ஆதாம் தன்னுடைய பாவத்தை மூடி மறைத்து, நான் ஒன்றும் அதன் மேல் ஆசைபட்டு புசிக்கவில்லை, எனக்கு துணையாயிருக்க தேவரீர் கொடுத்தீரே அந்த பெண்தான் எனக்குக் கொடுத்தாள் என்றான். தான் செய்தது தவறென்று ஒப்புக்கொண்டு மன்னிப்புக் கேட்க மனமில்லாமல் ஏவாளை தனக்குத் தந்த தேவன் மேல் பழி போட்டான். ஏவாளைக் கேட்ட போது நீர் சர்ப்பத்தை உண்டாக்காதிருந்தால் நான் புசித்திருக்கமாட்டேன். சர்ப்பம் என்னைவஞ்சித்தது. நான் புசித்தேன் என்று

மறைமுகமாய்த் தேவன் மேல் குற்றம் சுமத்தினான். தேவன் அவர்களை துரத்தி விட்டார் (ஆதி : 3ம் அதி).

ஆலோசனை கேட்காமல் சுய இஷ்டமாய் நடந்து, அல்லது கொடுக்கப்பட்ட ஆலோசனையை மீறி, சிக்குண்டு பல வித கஷ்டங்களால் சோதிக்கப்படும் போது (யாக் 1.13-15) தெய்வத்தை குற்றப்படுத்துகிறார்கள். என் வாழ்க்கையில் இந்த கஷ்டத்தை ஏன் வர விட்டார் என்று அவரை ஒரு தப்பு செய்தவராக பழி போடுகிறார்கள். பாவ ஆதாமின் மக்கள். கர்த்தர் இது பற்றி ஒரு தரிசனம் காண்பித்தார். கிறிஸ்துவை புதிதாக ஏற்றுக் கொண்டவனுடைய அறையில் (Room) சென்று பார்த்தாலும் அசிங்கம். சுவரெல்லாம் மூட்டைப் பூச்சி நசுங்கிய இரத்தக் கறை, சகிக்க முடியாமல், அவன் வெளியே ஓடி வந்து, அசுத்தம், அசுத்தம், அசுத்தம் என்று சொல்லிக் கொண்டே ஓடுகிறான். அவனுக்கு பின்னால் ஒரு சத்தம் கேட்கிறது. இந்த அறையின் அசிங்கத்திற்கெல்லாம் காரணம் நீயே என்று. ஆம். நீ வசிக்கும் அறையை சுத்தமாய்ப் பராமரிக்காமல் அசிங்கமான பின் அடுத்த ஆள் மீது பழி போடுவதென்ன நியாயம்?

நாம் வசிக்கும் அறை நம்முடைய பொறுப்பில் இருக்கிறது. இதை சுத்தமாக வைத்துக் கொள்வது நம்முடைய பொறுப்பே. அதை சுத்தமாக பராமரிக்காமல் அதில் தூசிகள், குப்பைகள், கறைகள் படியும் படி கவனமில்லாமல் விட்டு விட்டால் அது நம்முடைய குறையே. இந்தக் குறையை உணராமல் அறை அசிங்கமானதிற்கு, சாக்கு போக்கு பல சொல்லி நம்முடைய குறையை ஒப்புக் கொள்ளாமலிருப்பது நியாயமில்லை.

ஆம் நீ வசிக்கும் அறையை சுத்தமாய் பராமரிக்காமல், அசிங்கமான பின் அடுத்த ஆள் மீது பழி போடுவதென்ன நியாயம்?

தன்னுடைய பாவத்தை அறிக்கை செய்து, தனக்கு கிடைத்த தண்டனை நியாயம் என ஒத்துக் கொண்டால் கர்த்தர் இரங்குகிறார் (லேவி 26:40;42). இப்படி மனந்திரும்பி பாவமன்னிப்பு பெற்றவர்களே கர்த்தரை துதியுங்கள். அவர் பரிசுத்தர். அவர் எவ்வளவேனும் பொய் புரையாத மாசற்றவர்.

"தேவனே நீர் பெரியவர். தேவனே நீர் வல்லவர். தேவனே நீர் பரிசுத்தர். தேவனே நீர் நல்லவர். கர்த்தரைத் துதியுங்கள்! அவரண்டை சேருங்கள். அதுவே நமக்கேற்றதும் இன்பமுமானது.

துதியுங்கள்! துதியுங்கள்!!

---

"துதித்தலே இன்பமும் ஏற்றதுமாயிருக்கிறது" சங் 114:7.

---

# சிறுவர் பகுதி

சமாதானபுரம் என்ற சிற்றூரில் உள்ள உயர்நிலைப் பள்ளியில் யோபு என்ற சிறுவன் படித்து வந்தான். அவனது கிறிஸ்தவ பெற்றோர்களுக்கு யோபு மூத்த குமாரன். அவனை மிகவும் செல்லமாக அவனது பெற்றோர்கள் வளர்த்து வந்தனர். அவனுக்கு அடுத்து அவனது தங்கை மார்த்தாள். யோபுவின் பெற்றோர்கள் தேவ பக்தியுள்ளவர்களாக காணப்பட்டனர். பெற்றோர்களும் குழந்தைகளை தேவ பக்தியில் வளர்த்து வந்தனர். அவர்களது நோக்கம் தமது குழந்தைகள் வேதாகமத்தில் வருகின்ற யோபு, மார்த்தாளைப்போல் தேவனுக்குப் பிரியமான பிள்ளைகளாக வளர வேண்டும் என்ற வாஞ்சையும் ஜெபமுமாக இருந்தது.

வேதாகமத்தில் வருகின்ற மார்த்தாளைப் போலவே மார்த்தாள் தனது சிறுவயது முதற் கொண்டு வீட்டில் அம்மாவிற்கு எல்லாக் காரியங்களிலும் பணிவிடை செய்து வந்தாள். அது மாத்திரம் அல்லாமல் தேவனுடைய ஆலயத்திலும் சென்று

ஞாயிற்றுக் கிழமை நாட்களில் ஆலயத்தைப் பெருக்கவும், துடைப்பதுமான சிறிய வேலைகளையும் செய்து வந்தாள். மார்த்தாளைப் பார்த்து அவளது பெற்றோர்கள் மிகவும் சந்தோசமடைந்தனர். தங்களது ஜெபத்தைக் கேட்டு, தேவன் வேதாகமத்திலுள்ள மார்த்தாளைப் போன்று பணிவிடை செய்து, வீட்டில் அம்மாவிற்கு மிகவும் துணையாகவும், ஆலயத்தில் பணிவிடை செய்து தேவனுக்கும் பிறருக்கும் பணிவிடை செய்து வந்த மார்த்தாளைப் பார்த்து பெற்றோர் பூரித்தனர்.

ஆனால் அதே வேளையில் யோபுவை நினைத்த மாத்திரத்தில் அவர்களுக்கு அழுகை தான் வந்தது. யோபு தன் வயதிற்கொத்த பிற மாணவர்களுடன் சேர்ந்து செய்கின்ற குறும்புகளைாம், ஒருவரையும் மதிக்காது தனது இஷ்டம் போல் நடந்து ஜீவிக்கின்றதைப் பார்த்து மிகவும் வருத்தமடைந்தனர். அவன் தனது பள்ளியில் ஒரு சகமாணவனை பலமாக அடித்ததினால் அவனுக்கு மிகவும் பலத்த காயம் ஏற்பட்டபடியால் அவனை பள்ளியிலிருந்து ஒரு வாரம் சஸ்பெண்ட் செய்து வைத்து விட்டனர். அவனது பெற்றோர் மிகவும் வருந்தினர். அவனுக்காக தொடர்ந்து ஜெபம் பண்ணி வந்தனர்.

ஞாயிறு பள்ளியை அசட்டை செய்து வந்த யோபுவிற்கு அந்த வாரத்தில் ஞாயிறு பள்ளியில் கலந்து கொள்ளுமாறு தங்கை மார்த்தாள் மிகவும் வருந்தி அழைத்தாள். தங்கை மார்த்தாளின் வற்புறுத்தலின் பேரில் யோபு மார்த்தாளுக்காக ஞாயிறு பள்ளி சென்றான். அந்த வாரத்தில் வேதாகமத்தில் வருகின்ற உத்தம பக்தனாகிய யோபுவைப் பற்றி ஞாயிறு பள்ளி ஆசிரியர் பேச ஆரம்பித்தார். பக்தனாகிய யோபு ஒரு பூதரனாயிருந்தும், மெய் தேவனாகிய கர்த்தரைப் பற்றி அறிந்து உத்தமமாக நடந்தார் எனவும், அவருடைய சொத்துக்கள், குழந்தைகள் யாவும் அழிந்து போன பின்பும், அவர் தெய்வத்தின் மீது உறுதியான நம்பிக்கையும், அவரை சேவிப்பதில் தவறவில்லை எனவும் சொன்னார். அது மாத்திரமின்றி அவர் எல்லாவற்றையும் இழந்தாலும், கர்த்தர் மீது தான் வைத்திருந்த நம்பிக்கையையும், பொறுமையையும் இழந்து போகவில்லை. பின்னும் ஆசிரியர் யோபு சொன்ன வார்த்தைகளை சொன்னார், முறையிடுகிற ஏழையையும், திக்கற்ற பிள்ளையையும், உதவியற்றவனையும் இரட்சித்தேன், நீதியைத் தரித்துக் கொண்டேன், அது என் உடுப்பாயிருந்தது என் நியாயம் எனக்குச் சால்வையும், பாகையுமாய் இருந்தது. நான் குருடனுக்கு கண்ணும், சப்பாணிக்கு காலுமாயிருந்தேன். துன்பப்பட்டவனைக் கண்டபோது நான் அழாமல் இருந்ததில்லை என்று பக்தனாகிய யோபு சொல்லுகிறார் என்று வேதம் நமக்குப் போதிக்கின்றது என ஆசிரியர் கூறினார். மேலும் ஆசிரியர் சொன்னதாவது:

சிலர் கிறிஸ்தவ வேதாகமத்தில் உள்ள பெயர்களை வைத்திருப்பர் ஆனாலும் அந்தப் பெயருக்கும் அந்தப் பெயரையுடைய அந்த ஆளுக்கும் எந்தவித தொடர்பும் இருக்காது என்றார். சிலர் வேதாகமத்தில் உள்ள பெயரையுடையவர்கள் அப்படியே நடப்பார்கள். உதாரணமாக நமது ஞாயிறு பள்ளியில் உள்ள மார்த்தாளைப் பாருங்கள். மார்த்தாள் என்ற பெயரையுடைய பெண் மணி வேதத்தில் இடம் பெற்றிருக்கிறார்கள். அந்த அம்மாள் இயேசுவுக்கு எப்பொழுதும் பணிவிடை செய்து வந்தார்கள் என பார்க்கிறோம். அது போன்று நமது மார்த்தாளும் கர்த்தருடைய ஆலயத்தில் எல்லா பணிவிடைகளையும் செய்கிறாள் மட்டுமில்லாது அம்மாவிற்கும் மிகவும் உதவியாக இருக்கின்றாள் என மார்த்தாளைக் குறித்து சாட்சியும் கொடுத்தார்.

அங்கு அமர்ந்திருந்த யோபுவிற்கு மனது மிகவும் கஷ்டமாக இருந்தது. அவன் மிகவும் வருத்தப்பட்டான். வீடு திரும்பி மிகவும் அமைதியாக தேவ சமுகத்தில் தனியே அமர்ந்து இருந்து அழுது ஜெபம் செய்தான். கர்த்தாவே என்னை பக்தனாகிய யோபுவைப் போல் மாற்றும், நான் யோபுவைப்போல் வாழ கிருபை செய்யும் என விண்ணப்பித்தான். அன்று முதல் திருந்தி வாழ ஆரம்பித்தான். அடுத்தநாள் முதற் கொண்டு பள்ளியும் சென்றான். தனது பழைய நண்பர்களுடன் சேராது தனிமையிலே இருந்தான். இப்பொழுது யார் எதைச் சொன்னாலும் அவன் அவர்களை

எதிர்ப்பதுமில்லை, யாரிடமும் சண்டை போடுவதுமில்லை. அவனைப் பார்த்து எல்லோரும் ஆச்சரியப்பட்டனர்.

நாட்கள் செல்ல செல்ல இந்த யோபு என்ற சிறுவன் வேதாகமத்தில் உள்ள யோபுவைப் போல மாறியதைக் கண்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டனர். ஞாயிறு பள்ளி ஆசிரியர் மிகவும் மகிழ்ச்சியடைந்தார். எல்லாவற்றிற்கும் மேலாக யோபுவின் பெற்றோரும், மார்த்தாளும் மகிழ்ந்தனர். தேவனுக்கு ஸ்தோத்திர பலியிட்டனர்.

தேவனுடைய பிள்ளைகளே நாமும் வேதத்தில் வருகின்ற நற்பெயர்களை உடையவர்களாக இருந்தால், அந்த நற்பெயருக்கு ஏற்ப நடந்து எல்லோரையும் சந்தோஷப் படுத்துவோமாக.

---

"அவன் பெயர் எப்படியோ அப்படியே அவனும் இருக்கிறான்....."

—1 சாமு 25 : 25.

---

திருநெல்வேலி ஜில்லா, நான்குநேரி தாலுகா, இராஜாக்கள்மங்கலம் என்ற ஊரின் அருகிலுள்ள புதிய எருசலேம் அநாதை ஆசிரமத்திற்கு உதவி செய்கிறவர்கள் தங்கள் உதவிகளை Chief Pastor N. Lazar, "New Jerusalem Church", 7 Triloksingh Chawl, Jerimeri, Sakinaka Post, Bombay - 400 072, India என்ற விலாசத்திற்கு அனுப்பும்படி கேட்டுக் கொள்ளுகிறோம்.

## பரிசுத்த விவாகம்

| மணமகன் | மணமகள் | மணநாள் | நடந்த இடம் |
|---|---|---|---|
| 1. Bro ஜான் திலகராஜ் | Sis. பாக்கியலீலா | 24-9-86 | வள்ளியூர் |
| 2. Bro. இருதயராஜ் | Sis. சப்பியா | 20-11-86 | தூத்துக்குடி |
| 3. Bro. சந்திரசேகர் | Sis. ஞானஜோதிபாய் | 26-11-86 | புன்னையடி |
| 4 Bro. மகேந்திரராஜ் | Sis. எஸ்தர் | 17-12-86 | சேலம் |

இந்த தம்பதிகளை கர்த்தர் ஆசீர்வதிக்கும்படி யாவரும் ஜெபிக்க வேண்டுகிறோம்.

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் - 38 ★ FEBRUARY 1987



"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ,
நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ,
எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்.
விழித்திருங்கள். ..உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லா
ருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள். "

மாற்கு 13 : 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY. INDIA.

# ஆசிரியர் உரை

இது கடைசிக்காலம், கடைசிக்காலத்தின் கடைசி நாட்களில் வந்திருக்கிறோம் என்று சொல்லலாம். இந்த யுகத்தின் முடிவு சமீபித்துக் கொண்டிருக்கிறது. கர்த்தருடைய வருகைக்கான ஆயத்தங்கள் வேகமாய் நடந்து கொண்டிருக்கின்றன. கர்த்தர் தம்முடைய ஆலயத்திற்கு (சபைக்கு) வருகிறார். தம்முடைய சபையின் மூலமாய் ஜனங்களை தனியாகவும், ஊழியர்களை தனியாகவும் அவர் புடமிட்டு, சுத்திகரித்து அவர்கள் கர்த்தருடையவர்களாயிருக்கும்படிக்கும், நீதியாய் தேவனுக்கு காணிக்கை செலுத்தும்படிக்கும் தூய்மையாக்குகிறார். அப்பொழுது பூர்வநாட்களிலும், முந்தின வருஷங்களிலும் இருந்ததுபோல யூதாவின் காணிக்கையும், எருசலேமின் காணிக்கையும் கர்த்தருக்குப் பிரியமாயிருக்கும். கர்த்தர் முன்மாரியையும், பின்மாரியையும் பொழியச்செய்து கோதுமை மணி முதிர்ச்சி அடைந்து அம்பாரத்தில் சேர்க்கப்படுவது போல் தம்முடைய ஜனங்களை, மணிகளை தம்முடைய களஞ்சியத்தில் சேர்க்கும் காலம் இது.

பாவ அறிக்கை (பாவ மன்னிப்பின் உபதேசம்) முடிவு காலத்திற்காய் முத்திரிக்கப்பட்டும், மறைக்கப்பட்டுமிருந்த உபதேசமாகும். இது ஒரு சத்தியம். சத்தியத்தையும் அறிவீர்கள், சத்தியம் உங்களை விடுதலையாக்கும் என்று கர்த்தராகிய இயேசு கிறிஸ்து திருவுளம் பற்றுகிறார். கிருபையினாலும் சத்தியத்தினாலும் பாவம் நிவிர்த்தியாகும். பாவ மன்னிப்பின் உபதேசம் ஒரு சத்தியம். கிருபையினால் மாத்திரமல்ல, சத்தியத்தையும் அறிவீர்கள் சத்தியம் உங்களை விடுதலையாக்கும். இந்த உபதேசத்தினால் அநேகர் சுத்தமும் வெண்மையுமாக்கப்பட்டு புடமிடப்பட்டவர்களாய் விளங்குவார்கள். துன்மார்க்கரோ துன்மார்க்கமாய் நடப்பார்கள். துன்மார்க்கரில் ஒருவனும் உணரான் ஞானவான்களோ உணர்ந்து கொள்வார்கள். நீதிமான்களோ அவைகளில் நடப்பார்கள். பாதகரோவென்றால் அவைகளில் இடறி விழுவார்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார்

ஆதிசபை விழுந்து போனபடியினால் மறுபடியும் சுவிசேஷத்தை தீர்க்கதரிசனமாக எருசலேம் தொடங்கி சகல தேசத்தாருக்கும் பிரசங்கிக்க தேவன் கட்டளையிட்டுள்ளார். யார் எதிர்த்தாலும் கர்த்தருடைய திட்டம் நிறைவேறியே தீரும். நான் உன்னைவிட்டு விலகுவதுமில்லை, நான் உன்னை கைவிடுவதுமில்லை என்று இருக்கிறேன் என்பவர் சொல்லுகிறார்.

எங்களுடைய ஐக்கியம் பிதாவோடும், அவருடைய குமாரனாகிய இயேசுகிறிஸ்துவோடும் இருக்கிறது. நீங்களும் எங்களோடே ஐக்கியமுள்ளவர்களாகும்படி இதை உங்களுக்கும் அறிவிக்கிறோம்.

கிறிஸ்துவுக்குள்,
Chief Pastor N. LAZAR.

# பாவ மன்னிப்பு

(தொடர்ச்சி)

மனிதன் முதலாவது தன்னை சிருஷ்டித்த சிருஷ்டிகரை அறிய வேண்டும். ஆனால் உலக ஞானமானது நீ உன்னை அறி என்று சொல்லுகிறது. தேவ ஞானமோ கர்த்தரை அறி. இறைவனை அறி என்று சொல்லுகிறது. இறைவனை அறிவதே ஞானத்தின் ஆரம்பம் என்று இறைவாக்கு இயம்புகிறது. மெய்யான இறைவனை அறிந்து அவருக்குப் பயப்படுகிறதினால் மாத்திரம் மனிதன் பாவத்தை விட்டு நீங்க முடியும். "கர்த்தருக்குப் பயந்து தீமையை விட்டு விலகு" (நீதி 3:7) என்றும், கர்த்தருக்குப் பயப்படுகிறதினால் மனுஷர் தீமையை (பாவத்தை) விட்டு விலகுவார்கள்" (நீதி 16:6) என்றும் கர்த்தரை (தேவனை) அறிவதே அறிவு என்றும் சத்தியம் சொல்லுகிறது.

உலகத்தில் ஒரே தேவன் உண்டு. கர்த்தராகிய (தேவன்) இயேசு கிறிஸ்துவே அவர். கண்டதை தெய்வம் என்று பொய் பேசி நடக்கிறவர்கள் தீ நரகில் விழுவார்கள் என்று சித்தர்கள் தங்கள் கவியில் சொல்லியிருக்கிறார்கள். ஒன்றை பலவாகவும், பலதை ஒன்றாகவும் எண்ணுகிறோம் என்று சிலர் சொல்லுகிறார்கள். எல்லாம் அவன் செயல் என்று சொல்லுகிறவர்களும் உண்டு. அப்படியானால் புண்ணியம் மாத்திரமல்ல; பாவமும் இறைவனே செய்கிறான் என்று அவர்கள் சொல்லுகிறார்கள். அப்படியானால் பாவம் பாவமல்ல; பாவம் புண்ணியம் என்பது கிடையாது, மோட்சம் நரகம் என்பது கிடையாது என்ற நிரீச்சுரவாதத்தில் (கடவுள் இல்லை என்னும் கொள்கை) போய் முடியும்.

இறைவன் உண்டு. மனிதன் உண்டு. பாவ புண்ணியம் உண்டு. மோட்சம், நரகம் உண்டு. இது ஒன்றும் மாயையல்ல. இறைவன் தம்மை வெளிப்படுத்தியிருக்கிறார். இறைவனைப் பற்றியும், சிருஷ்டிகளைப்பற்றியும் காலங்களைப்பற்றியும் மெய்யான அறிவை பரிசுத்த வேதாகமத்தின் மூலமாய் மாத்திரம் அறிந்து கொள்ளலாம். தேவனாகிய கர்த்தர் ஒருவரே என்று சத்திய வேதம் சொல்லுகின்றது (உபா 6:4). பிற மதங்கள் கடவுள் இல்லை என்றும், எல்லாம் கடவுள் என்றும் தாயும் கடவுள், தகப்பனும் கடவுள், பிள்ளையும் கடவுள், பேரப்பிள்ளையும் கடவுள் என்று சொல்லுகிறார்கள். மேலும் சில கடவுள்கள் எனக்கும் பூஜை செய், அவனுக்கும் பூஜை செய், அவளுக்கும் பூஜை செய் எனக்குள்ளதையும் போடு என்று சொல்கின்றன.

இவர்களுள் யாரும் தாங்கள் வானத்தையும் பூமியையும் படைத்த சர்வ வல்லமை உள்ள தேவன் என்று சொல்லவில்லை. அவர்களுக்குள்ளே போட்டியும், பொறாமையும், அடிதடியும் உண்டு. கீழ்ஜாதி, மேல்ஜாதி உண்டு. ஜனங்களில் மாத்திரமல்ல அந்தச் சாமிகளிலும் ஜாதி உண்டு.

ஜனங்கள் சாமியை கும்பிடுகிறோம் என்று தங்களுடைய பூஜைகளையும், பலிகளையும் பேய்களுக்கே செலுத்தி வருகிறார்கள். ஒரு நாள் அவர்கள் தாங்கள் கும்பிடுகிறது சாமி அல்ல ஆசாமி (சாத்தான்) என்று அறிந்து கொள்வார்கள்.

பொதுவாக இந்தியாவில், வட இந்தியாவில் உள்ள ஒரு குடும்பத்தையே ஜனங்கள் தெய்வமாக ஆராதித்து வருகிறார்கள். சிவனும் கிருஷ்ணனும், மச்சானும் மச்சினனும். பார்வதி சிவனுடைய மனைவி. அம்மன், காளி அவதாரமெல்லாம் அந்த அம்மாதான். கணபதி, முருகன், பைரவன் எல்லாம் சிவனுடைய பிள்ளைகள்தான். லட்சுமி விஷ்ணுவினுடைய (கிருஷ்ணன்) மனைவி. கிருஷ்ணனுக்கும் (விஷ்ணு) சிவனுக்கும் பிறந்ததுதான் ஐயப்பன் ஆகும். இப்படியே அநேக காரியங்களை சொல்லலாம். உதாரணமாக ஒரு குடும்ப அரசாட்சி இந்தியாவில் நடப்பதுபோல இந்த கதைகளெல்லாம். இவைகளெல்லாம் ஆரிய திராவிட போராட்டம் என்று ஒருவர் சொல்லுகிறார். வட இந்தியர் தென் இந்தியாவை ஆளுகை செய்கிறது போல, வட இந்தியாவில் உள்ள ஒரு ஆரிய குடும்பத்

தையே தென் இந்தியர்கள் சாமிகள் என்று கும்பிட்டு வருகின்றனர்.

வேதத்தின் நாயகராகிய தேவனே நானே தேவன் என்னையன்றி உனக்கு வேறே தேவர்கள் உண்டாயிருக்க வேண்டாம் என்று சொல்லுகிறார். எப்படியென்றால் சிறு பையன் ஒருவன் வழிகளில் போகிறவர்கள் வருகிறவர்கள் எல்லோரையும் அப்பா அப்பா என்று அழைக்கும் போது சொந்த தகப்பன் அவனை அதட்டி டேய் எல்லாரும் உன் தகப்பனல்ல; நான்தான் உன் தகப்பன் என்று சொல்வானல்லவா! அப்படியே இறைவனாகிய இயேசுவும், நானே உன் தேவன் என்று சொல்லுகிறார். ஒரே தேவன் உண்டு, அவர் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவே. அவரை அறிவதும், விசுவாசிப்பதும் பாவமன்னிப்புக்கு முதல் அடிப்படையும் மிகவும் அவசியமாயும் இருக்கிறது.

கிறிஸ்தவர்கள் என்று சொல்லிக் கொள்ளுகிற அநேகர் சிலை வணக்கம் உடையவர்களையும், அநேக ஆண்டவன்மார்களை உடையவர்களாகவும், மாதா வழிபாடு உடையவர்களையும், இயேசு கிறிஸ்துவினுடைய தெய்வீகத்தை மறுதலிக்கிறவர்களையும், இயேசு கிறிஸ்துவினுடைய மனுஷீகத்தை (குமாரத்துவத்தை) மறுதலிக்கிறவர்களையும் இருக்கிறார்கள். இப்படிப்பட்டவர்கள் இயேசு கிறிஸ்துவைப் பற்றி மெய்யான அறிவு அடைவதுவரை பாவமன்னிப்பை முழுவதுமாய் பெற்றுக்கொள்ள முடியாது.

''அன்றியும், நாம் சத்தியமுள்ளவரை அறிந்து கொள்வதற்குத் தேவனுடைய குமாரன் வந்து நமக்குப் புத்தியைத் தந்திருக்கிறாரென்றும் அறிவோம்; அவருடைய குமாரனாகிய இயேசு கிறிஸ்து என்னப்பட்ட சத்தியமுள்ளவருக்குள்ளும் இருக்கிறோம். இவரே (இயேசு கிறிஸ்து) மெய்யான தேவனும் நித்திய ஜீவனுமாயிருக்கிறார்" (1 யோவான் 5:20). ஆனபடியினால் மனிதன் பாவமன்னிப்பு பெற; பாவத்திலிருந்து விடுதலையடைய முதலாவது தேவனை (இயேசு கிறிஸ்து) அறிய வேண்டும், விசுவாசிக்க வேண்டும். விக்கிரகங்களை விட்டு மனந்திரும்பி ஆவியாயிருக்கிற இறைவனை தன் உள்ளத்தில் ஏற்றுக் கொண்டு அவருக்குக் கீழ்ப்படிந்து அவரை ஆராதிக்க, சேவிக்க வேண்டும். ''எங்கள் தேவனாகிய கர்த்தாவே, உம்மையல்லாமல் வேறே ஆண்டவன்மார் எங்களை ஆண்டார்கள். இனி உம்மை மாத்திரம் சார்ந்து உம்முடைய நாமத்தைப் பிரஸ்தாபப்படுத்துவோம்" (ஏசாயா 26:13) என்று அறிக்கை செய்ய வேண்டும்.

(தொடரும்)

---

''...என் மீறுதல்களைக் கர்த்தருக்கு அறிக்கையிடுவேன் என்றேன்; தேவரீர் என் பாவத்தின் தோஷத்தை மன்னித்தீர்"

—(சங் 32:5)

---

## கர்த்தரை நம்பி நன்மை செய் - சங்37:3

பணம், பணம், பணம் சம்பாதிக்க வேண்டும், எப்படியாவது சம்பாதிக்க வேண்டும், பணமிருந்தால்தான் நாலுபேர் மதிப்பார்கள். ஆகையால், ஐசுவரியத்தை சேர்த்து வயது காலத்தில் உதவும்படியாக, பிள்ளைகளின் நல்வாழ்வுக்காக குவித்து வைக்க வேண்டும் என்று மனிதர்கள் இரவு பகலாக பிரயாசப்படுகிறார்கள்.

இவைகள் நியாயமான காரியம் போல் தோன்றுகிறபடியால்; தேவனுடைய பிள்ளைகளும் இவைகளினால் இழுக்கப்படுகிறார்கள். எதிர்காலத்தை முன்னிட்டு பணத்தை தீவிரமாக சேமிக்க முற்படுகிறார்கள். எதிர்காலத்தைக் குறித்த கவலையினால் தங்களுடைய செல்வத்தை யாதொரு விதத்திலும் செலவு செய்யாமல் அதிகமாய் மிச்சப்படுத்துகிறார்கள்.

தேவனுடைய பிரமாணமோ :-

1. ஞான நன்மையை விதைக்கிறவனுக்கு சரீர நன்மை உண்டாக கொடுக்க வேண்டும் (I கொரி 9:11).

2. சுவிசேஷ ஊழியம் செய்கிறவனுக்கு அதினாலே பிழைப்புண்டாக ஏற்பாடு செய்ய வேண்டும் (I கொரி 9:14).

3. பரிசுத்தவான்களுடைய குறைவை நீக்க வேண்டும் (II கொரி 9:12).

4. தேவ ஆலயத்தில் ஆகாரம் உண்டாயிருக்க ஏற்பாடு செய்ய வேண்டும் (மல் 3:10).

5. கர்த்தருடைய ஆலயத்தைக் கட்ட வேண்டும் (ஆகாய் 1:2, 4).

6. நம்மிடத்தில் வருகிற ஊழியக்காரர்களுக்கு பிரயாணத்திற்கான ஏற்பாடுகள் செய்து கொடுக்க வேண்டும் (III யோவா 6, 7).

7. தரித்திரரை (ஏழை சபையாரை) நினைத்துக்கொள்ள வேண்டும் (கலா 2:10). அத்துடன் அவர்களுக்கு உதவி செய்ய வேண்டும் (யாக் 2:13—17). தேசத்தில் எளியவர்கள் இல்லாதிருப்பதில்லை ஆகையால் உன் தேசத்திலே (சபையிலே) சிறுமைப்பட்டவனும், எளியவனுமாகிய உன் சகோதரனுக்கு உன் கையை தாராளமாய்த் திறக்க வேண்டும் என்று நான் உனக்கு கட்டளையிடுகிறேன் (உபா 15:11).

8. அந்நியரை உபசரிக்க வேண்டும் (எபி 13:2).

9. திக்கற்ற பிள்ளைகளும், விதவைகளும் படுகிற உபத்திரத்தில் அவர்களை விசாரித்து உதவி செய்ய வேண்டும் (யாக் 1:27).

10. தானதர்மம் செய்ய வேண்டும் (எபி 13:16).

கர்த்தருடைய வேதத்தின்படி நடக்கிற உத்தம மார்க்கத்தார்களதான் பாக்கியவான்கள் (களைபடாதவர்கள்)—சங் 119:1. நீ தனியாக இந்த பிரமாணங்களை நிறைவேற்ற முடியாவிட்டால் சபையோடு சேர்ந்து செய்யலாமே.

இப்படிப்பட்ட பிரமாணங்களை நிறைவேற்ற மனதில்லாமல், தன் மனதை அடைத்துப் போட்டவர்கள்: கறைபட்டவர்கள், பழுது பட்டவர்கள், பூரணத்திற்குப் புறம்பானவர்கள் ஆவார்கள்.

இப்படியெல்லாம் என் பணத்தை செலவு செய்துவிட்டு நாளைக்கு என்ன செய்வேன் என்று நாளைய தினத்தைக் குறித்து இன்றைக்கே ஏன் கவலைப்படுகிறாய்?

கர்த்தரை நம்பி நன்மை செய். பிற்காலத்தை கர்த்தர் கவனித்துக் கொள்வார் என்று அவரை நம்பி இன்றைக்கு நன்மை செய். இந்தக் காலத்திலும், இனிவரும் காலத்திலும் நான் உன்னைவிட்டு விலகுவதில்லை, உன்னை கைவிடுவதில்லை என்று அவர் வாக்குத்தத்தம் கொடுத்திருக்கிறாரே (எபி 13:5). அவர் வாக்கை ஒருவன் நம்பாவிட்டால் அவரை பொய்யராக்குகிறான். அவர் வாக்கு மாறாதவர். எனவே தைரியம் கொண்டு அவரை நம்பி நன்மை செய்.

இன்றைக்கு செய்ய வேண்டிய நன்மையை இன்றைக்கே செய். உடனே செய். நாளை என்றால் இல்லை என்று அர்த்தம்

இப்படிப்பட்ட வார்த்தைகளையெல்லாம் பொருளாசைக்காரராகிய பரிசேயர், இயேசுவின் மூலம் கேட்டபோது அவரைப் பரியாசம் பண்ணினார்கள் (லூக் 16:14). அந்தப் பரிசேயக் கூட்டத்தோடே நீ சேராதே.

---

"...உற்சாகமாய் கொடுக்கிறவனிடத்தில் தேவன் பிரியமாயிருக்கிறார்"
—II கொரி 9:7.

---

# ஞானம்

உலகத்தில் ஞானத்தைக் குறித்துப் பலர் பலவிதமாக பேசிக் கொள்கிறார்கள். சிலர் தங்கள் கைகளால் உருவாக்கப்பட்ட வஸ்துக்களையே ஞானம் என்கின்றனர். சிலர் தங்கள் பிடிவாதங்களையே ஞானம் என்று சொல்கின்றனர்கள். சிலர் தங்களுடைய புதிய கண்டு பிடிப்புகளை ஞானம் என்று அறிவிக்கிறார்கள். ஆனால் இவைகள் மூலமாக சண்டையும், சச்சரவும் வேதனையும், நஷ்டங்களும், பயங்கரங்களும், தீமைகளும், சமாதானக் குறைவுமே உண்டாகின்றது. இவைகள் மூலமாக

மேலான நன்மைகளைப் பெற்றுக் கொள்ள முடியாவில்லை. இங்கே அஞ்ஞானம், விஞ்ஞானம், மெய்ஞானம் என்பவைகளைக் குறித்து ஆராய்ந்து மேலான நன்மைகளைத் தரக்கூடிய ஞானத்தைப் பற்றிக் கொள்ள இறைவன் அருள் புரிவாராக.

**அஞ்ஞானம்:** அஞ்ஞானம் ஒருமனிதனைப் பிடித்துக் கொண்டால் அவன் எந்தக் காரியத்தையும் நம்ப மாட்டான். எந்தக் காரியத்தை நிரூபித்துக் காண்பித்தாலும் ஒத்துக் கொள்ள மாட்டான். தான் பிடித்த முயலுக்கு மூன்று கால் என்று சாதிப்பான். இப்படிப்பட்டவர்கள் உலகில் பலர் உண்டு. இவர்கள் அறியாதிருக்கிற காரியத்தை இவர்களுக்கு அறிவித்தாலும் அதை உணராமல் தள்ளிப் போடுகின்றார்கள். எப்பொருள் யார் யார் வாய்க்கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு என்று குறள் சொல்கின்றது. ஆனால் அந்த மெய்ப் பொருளை அறிய உணர்வில்லாதவர்களாயிருக்கிறார்கள். இவர்களைக் குறித்து, இவர்கள் கண்களினால் காணாமலும், காதுகளினால் கேளாமலும் இருதயத்தினால் உணர்ந்து குணப்படாமலும் நான் அவர்களை ஆரோக்கியமாக்காமலும் இருக்கும் படிக்கு இந்த ஜனத்தின் இருதயம் கொழுத்திருக்கிறது. காதுகளினால் மந்தமாய்க் கேட்டுத் தங்கள் கண்களை மூடிக் கொண்டார்கள் என்று இந்த ஜனத்தினிடத்தில் போய்ச் சொல்லு"... (அப் 28:27) என்று இறைவனுடைய வார்த்தை சொல்லுகிறது. இவர்கள் கண்களினால் காணாமலும், காதுகளினால் மந்தமாய்க் கேட்டு, இருதயத்தில் உணர்ந்து குணப்படாதவர்களாய் இருக்கிறார்கள். பலர் கைகளினால் உண்டாக்கப்பட்ட வஸ்துவை ரதத்தில் வைத்து பட்டணங்கள் தோறும் கொண்டு வந்து இதுவே ஞானம் என்று சொல்லி, ஜனங்களை ஐக்கியப் படுத்த வந்திருக்கிறது என அறிவிக்கிறார்கள். ஆனால் இப்படி அறிவிக்கிற இவர்களிடத்தில் எந்தவித ஐக்கியத்தையும் காண முடியவில்லை. அப்படியிருக்க இவர்கள் சொல்லுகிற ஞான வஸ்துவால் எப்படி ஜனங்களை ஐக்கியப் படுத்த முடியும்? மார்கழி மாதம் வருகிற சர்வ (வைகுண்ட) ஏகாதேசியில் செத்தால் மோட்சம் கிடைக்கும் என்று சிலர் சொல்லுகின்றனர். இன்னும் சிலர் காசியில் செத்தால் மோட்சம் கிடைக்கும் என நம்புகின்றனர். ஆனால் முதுமொழி ஒன்று இவர்களைக் குறித்து, 'அஞ்ஞானம் பிடித்தவனுக்கு சொர்க்க வாசல் தூரம்' என்று சொல்லுகின்றது. இவர்கள் சொர்க்கத்தின் வாசலைக் கண்டடைவதில்லை என்று இந்தப் பழமொழி கூறுகின்றது. இப்படிப்பட்டவர்களுக்கு இறைவன் பிரதியுத்தரமாக சொல்கிறதாவது, பயப்படுகிறவர்களும், அவிசுவாசிகளும், அருவருப்பானவர்களும், கொலைபாதகரும், விபச்சாரக்காரரும், சூனியக்காரரும், விக்கிரகாராதனைக்காரரும், பொய்யர் அனைவரும் இரண்டாம் மரணமாகிய அக்கினியும், கந்தகமும் எரிகிற கடலிலே பங்கடைவார்கள் (வெளி 21:5). தீட்டுள்ளதும், அருவருப்பையும், பொய்யை நடப்பிக்கிறதுமாகிய ஒன்றும் அதில் பிரவேசிப்பதில்லை (வெளி 21:27). பாவமுள்ளவனும், பாவக்கிரியைகளை விட்டு ஓயாதவனும், இருளில் (நரகத்தில்) சேர்க்கக் கூடிய இரண்டு பாவங்களாகிய ஜென்ம பாவமும், கர்ம பாவமும் மன்னிக்கப்படாதவனும் மோட்சத்தில் பிரவேசிப்பதில்லை. அவன் நரகத்தில் பங்கடைவான் என்று சத்திய வேதத்தின் மூலமாக அறிவிக்கிறார். இன்னும் சிலர் ஆண் கழுதைக்கும், பெண் கழுதைக்கும் திருமணம் நடத்தி வைத்தால் மழை பெய்யாத இடங்களில் மழை பெய்யும் என நம்பிக்கை கொண்டு கழுதைகளுக்கு திருமணம் நடத்தி வைக்கிறார்கள். அப்படியானால் மழை பெய்யாத வறட்சியான இடங்களெல்லாம் பசுமைப் புரட்சியாகலாமே! கழுதையின் திருமண காரியத்திற்கு மழை கட்டுப் பட்டதா? சமுத்திரத்தின் தண்ணீரை நீர்த்துளியாக மாற்றி, பூமியின் விசாலங்களில் ஊற்றுகிறவர் இறைவன் என்பதை அறியாதிருக்கிறார்கள் (ஆமோ 9:6). சிலர் தங்களுடைய மகளிர்களின் தாலி பாக்கியம் அதாவது ஆயுசு நாட்கள் பூமியிலே நீடித்திருக்க வேண்டும் என்பதற்காக வேப்ப மரத்திற்கும், அரச மரத்திற்கும் திருமணம் செய்து வைக்கிறார்கள். இப்படிப்பட்டவர்களுக்கு நிலையென்று மரண நிலைகள் உண்டானால் அந்நிலையிலிருந்து இவர்களை விடுவிக்க வேப்பமரமும், அரசமரமும் தங்கள் நிலைகளை விட்டு அவைகள் பெயர்ந்து வந்து இவர்களை விடுவித்து இவர்களுக்கு ஆயுசு நாட்களைக் கூட்டித் தருமா?

அது எப்படி முடியும்? இவைகளுக்கு இறைவன் சொல்கிறதாவது, 'உன் தேவனாகிய கர்த்தர் உனக்கு கொடுக்கிற தேசத்திலே உன் நாட்கள் நீடித்திருப்பதற்கு, உன் தகப்பனையும், உன் தாயையும் கனம் பண்ணுவாயாக' (யாத் 20:12) என்று கூறுகிறார். தாயையும், தகப்பனையும், இறைவனையும் இறைவனால் உருவாக்கப்பட்ட சபையையும் கனம் பண்ணும் பொழுதே ஆயுசு நாட்கள் கூட்டப் படுவதாக கர்த்தருடைய வார்த்தை சொல்லுகிறது. அஞ்ஞானத்தையும், அஞ்ஞானத்தை நீக்கும் சத்திய வார்த்தையையும் பார்த்தோம். அடுத்து விஞ்ஞானத்தைக் கவனிப்போம்.

**விஞ்ஞானம் :** இறைவனுடைய சிருஷ்டிப்பை மனிதன் ஆராய்ச்சி செய்து ஆராய்ச்சியின் முடிவு நன்மையாகக் கண்டால் அதை தனக்குச் சாதகமாக்கிக் கொள்ள முயற்சி செய்கின்றான். பறவை பறக்கும் விதத்தைக் கண்டான், விமானத்தை உருவாக்கினான். எதிரொலியை ஆராய்ச்சி செய்து வானொலி படைத்தான். நீர் வீழ்ச்சியின் விசையைக் கொண்டு மின்சாரத்தை உருவாக்கினான். ஆனால் இவைகள் மூலமாக நஷ்டங்களும், உயிர்ச்சேதங்களும் சில வேளைகளில் உண்டாகி விடுகின்றது. மனிதனுக்கு வியாதி உண்டான போது, மருத்துவ துறையில் மருந்துகளை ஆராய்ச்சி செய்து வியாதியைப் போக்க முயற்சி செய்கிறான். ஆனால் அவனால் தீர்க்காத தீராத வியாதிகள் பல உண்டு. விவசாயத்துறையில் புதிய, புதிய கலப்பு வித்துக்களைக் கண்டு பிடிக்கின்றான். அதிக மகதூல் கிடைக்க முயற்சி செய்கிறான். அவனுக்கு விரோதமாக பூச்சிகள் உருவாகி பயிர்களை அழிக்க வருகின்றது. அந்தப் பூச்சிகளை ஒழிக்க, அழிக்க பூச்சிக் கொல்லி மருந்துகளை தயாரிக்கின்றான். இப்படியிருக்க அவனால் அழிக்க முடியாத பல பூச்சிகள் உருவாகி உள்ளது. வான மண்டலத்தை ஆராய்ச்சி செய்யும்படியாகவும், சிரகங்களில் தன்னுடைய வாசஸ்தலத்தை அமைக்கும் படியாகவும் கருதி பூமியிலிருந்து ராக்கெட்டுகளை அனுப்புகிறான். அவைகள் சில வேளைகளில் செயலற்று விடுகின்றது. அவனுக்கு விரோதமாகவும் திரும்பி விடுகின்றது. அவன் தன் ஆராய்ச்சியில் கலக்கமடைகின்றான். இப்படி இருப்பினும் இன்னும் புதிய, புதிய கண்டு பிடிப்புகளை காண வேண்டும், உருவாக்க வேண்டும் என்ற பேராவல் இருக்கின்றது. அவன் மனதை அவனால் திருப்தி படுத்த முடியவில்லை. சத்திய வேதமும் அப்படியே உரைக்கின்றது. "மனுஷன் படும் பிரயாசமெல்லாம் அவன் வாய்க்காகத் தானே: அவன் மனதுக்கோ திருப்தியில்லை (பிர 6:7). விஞ்ஞானத்தின் மூலம் படுகிற பிரயாசத்தின் மூலமாக அவன் மனதை சமாதானப் படுத்தவோ, சாந்தப் படுத்தவோ முடிவதில்லை. ஏன் இவ்வாறு உண்டாகிறது? இவ்வுலகத்தின் ஞானம் தேவனுக்கு முன்பாக பைத்தியமாயிருக்கிறது" (1 கொரி 3:19) என்று சத்திய வார்த்தை கூறுகின்றது. அஞ்ஞானிகளும் விஞ்ஞானிகளும் தேவனைச் சார்ந்தோ, மெய்த்தேவனோடு இணைந்தோ செயல்படாதபடி தங்கள் சுய விருப்பத்தின் படி செயல்படுகிற படியால், அஞ்ஞானிகளின் ஞானம் அஞ்ஞானமாகவும், விஞ்ஞானிகளின் ஞானம் திருப்தியின்மையாகவும் முடிகின்றது. அடுத்து மெய்ஞானத்தைப் பின் தொடருவோம்.

**மெய்ஞானம் :** "எல்லாரும் ஒரே ஞானப் பானத்தைக் குடித்தார்கள். எப்படியெனில், அவர்களோடே கூடச் சென்ற ஞானக் கன்மலையின் தண்ணீரைக் குடித்தார்கள். அந்தக் கன்மலை கிறிஸ்துவே" (1 கொரி 10:4). மெய்ஞானத்தின் சிகரம் கிறிஸ்துவே என்று சத்திய வேதம் அறிவிக்கின்றது. இவருடைய ஞானத்திற்கு ஒப்பாக ஞானம், வேறு யாரிடத்திலேயும், வேறு எந்த மார்க்கத்தினிடத்திலிருந்தும் உருவாகவில்லை. மெய்ஞானமாகிய கிறிஸ்துவை, ஒருவன் ஏற்றுக் கொள்ளும் போது, அவன் மெய்ஞானியாக மாற்றப் படுகின்றான். கிறிஸ்துவின் கற்பனைகளுக்கும், கட்டளைகளுக்கும், பிரமாணங்களுக்கும், நியமங்களுக்கும், மனப்பூர்வமாய் கீழ்ப்படிந்து வரும் பொழுது மெய்ஞானமாகிய கிறிஸ்துவை ஏற்றுக் கொள்ளும் பொழுது முதலாவது சமாதானம் உண்டாகின்றது. "சமாதானத்தை உங்களுக்கு வைத்துப் போகிறேன்; என்னுடைய சமா

சமாதானத்தையே உங்களுக்குக் கொடுக்கிறேன்; உலகம் கொடுக்கிற பிரகாரம் நான் உங்களுக்கு கொடுக்கிறதில்லை (யோவா 14:27) என்று இயேசு கிறிஸ்து திருவுளம் பற்றுகிறார். இந்த வார்த்தை உண்மையான வார்த்தை. இந்த வார்த்தையில் உயிரோட்டம் உண்டு. இவரைச் சொந்தமாக்கிக் கொண்டவர்களுடைய வாழ்க்கையில் இந்த வார்த்தை நிச்சயமாகவே கிரியை செய்கிறது. உலக சமாதானமோ நீர்க்குமிழிக்கு ஒப்பாகவும் வேதனைக்குரியதாகவும் உள்ளது. கிறிஸ்துவின் சமாதானமோ தெய்வீக சமாதானம். நிலைத்திருக்கிற தேவ சமாதானமாகும்.

மெய்ஞானமாகிய கிறிஸ்துவை சொந்தமாக்கிக் கொண்டால் அவருடைய சாயலாக மாற்றப்படும் சிலாக்கியம் உண்டாகிறது. "...ஆகிலும் அவர் வெளிப்படும்போது அவர் இருக்கிற வண்ணமாகவே நாம் அவரை தரிசிப்பதினால் அவருக்கு ஒப்பாயிருப்போமென்று அறிந்திருக்கிறோம்" (1யோவா 3:2) என்று சத்திய வசனம் அறிவிக்கிறது. இந்த நிலை பக்தி வளர்ச்சியில் தேறினவர்களுக்கே உண்டாகின்றது. பக்தியின் வேஷத்தை தரித்தவர்களுக்கு இந்த சிலாக்கியம் உண்டாவதில்லை. பலர் தாங்கள் பக்தியாய் இருக்கிறோம் என்பதைக் காண்பிக்கும் பொருட்டு, குறிப்பிட்ட நாட்களுக்கு மாத்திரம் சில குறிப்பிட்ட வஸ்திரங்களையும், சில குறிப்பிட்ட அணிகலன்களையும் அணிந்து, அந்நாட்களில் தங்கள் வார்த்தைகளையும், தங்களுடைய சில பாவங்களையும் விட்டு விலகி, சில நாமங்களை உச்சரித்து தங்களுடைய பக்தியை ஜனங்களுக்குக் காண்பிக்கின்றார்கள். குறிப்பிட்ட நாட்கள் முடிந்தவுடன் மறுபடியும் தங்கள் பாவக்கிரியைகளுக்குள் பிரவேசித்து விடுகின்றனர். இந்த நிலை ஒரு மேடை நாடகத்திற்கு ஒத்திருக்கிறது. பக்தி என்றால் என்ன? என்பதைக் குறித்து இந்து மார்க்கத்தின் பகவத் கீதையின் உபதேசம் உரைக்கிறதாவது: பரமாத்மாவோடு (பரலோகத்தின் தேவன்), ஜீவாத்மா (மனிதன்) இணைந்து வாழ்கின்ற நிலையே பக்தியாகும் என்று கூறுகிறது. ஒரு மனிதன் மெய்த் தேவனிடத்தில் அதிகமான அன்பு செலுத்தும்போது, மெய்த்தேவன் அவனிடத்தில் வாசம் செய்யும்படியாக மோட்சத்தை விட்டு கடந்து வருகிறார். கடந்து வந்து அவனிடத்தில் வாசம் செய்கிறார். இந்த நிலை, இந்த இணைப்பு வாழ்க்கை மனிதனின் ஜீவ கால மட்டும் நிலைத்திருக்கக் கூடியதாகும். இந்த இணைப்பு வாழ்க்கை ஆரம்பமானது முதல் மகா சந்தோஷத்திற்கும், மகா சமாதானத்திற்கும் நேராய் வழி நடத்தப்படும். "பூவோடு சேர்ந்த நாரும் நறுமணம் தருவது போல" பரமாத்வோடு இணைக்கப்பட்ட மனித ஆத்மா (பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொள்கிற அனுபவம்) பரமாத்மாவின் குணாதிசயங்களை, வெளிப்படுத்துகிறது. பரமாத்மா உலக பழக்க வழக்கத்திற்கும், பாவ வாழ்க்கைக்கும் சம்பந்தப்படாதவராதலால் ஜீவாத்மாவும் உலக பழக்க வழக்கங்களையும், பாவ வாழ்க்கையையும் வெறுத்து, விட்டு, பரமாத்மாவின் ஆலோசனையின் பிரகாரம், அவருக்கு பிரியமாய் நடக்க ஆரம்பிக்கிறது. இந்த வாழ்க்கை குறிப்பிட்ட சில நாட்களுக்கு மாத்திரமல்ல, மனித ஆத்மாவின் ஜீவ கால மட்டும் நிலைத்திருக்கக் கூடியதாகும். இதுவே பக்தி நிலையின் விளக்கமாகும் என்று பகவத் கீதை உபதேசிக்கிறது. ஆனால் இந்த அனுபவம் கிறிஸ்தவ ஜீவியத்திலேதான் திட்டமாய் நிறைவேறுகின்றது. "இதோ உலகத்தின் முடிவு பரியந்தம் சகல நாட்களிலும் நான் உங்களுடனே கூட இருக்கிறேன்" என்றார் இயேசு (மத் 28:20) பரலோகத்தின் தேவன் மனிதனோடு இணைந்திருப்பதே பக்தியாகும். இந்தப் பக்தியில் தேர்ச்சி அடையும்போது, அவருடைய சாயலுக்கு ஒப்பாக மனிதன் மாற்றப்படுகின்றான். இந்த சிலாக்கியம், இந்த மேன்மையான பாக்கியம் கிறிஸ்துவை ஏற்றுக் கொள்வதின் மூலமே உண்டாகிறது.

மெய் ஞானமாகிய கிறிஸ்துவைப் பின்பற்றினால் மோட்சத்தில் பிரவேசிக்கும் மகா கிருபை உண்டாகின்றது. "நான் போய் உங்களுக்காக ஸ்தலத்தை ஆயத்தம் பண்ணின பின்பு, நான் இருக்கிற இடத்திலே நீங்களும் இருக்கும்படி, நான் மறுபடியும் வந்து உங்களை என்னிடத்தில் சேர்த்துக் கொள்வேன்" (யோவா 14:3) என்று இயேசு

கிறிஸ்து அறிவிக்கிறார். உலகத்தில் அநேக மார்க்கங்களும், அநேக தெய்வங்களும் காணப்பட்டாலும், மோட்சத்திற்கும் அந்த மார்க்கங்களுக்கும், மோட்சத்திற்கும் அந்தத் தெய்வங்களுக்கும் எந்தவித சம்பந்தமும் கிடையாது. பரலோக ராஜ்யத்தின் திறவுகோல் தம்மிடத்தில் உள்ளதாக இயேசு கிறிஸ்து கூறுகிறார். "பரலோக ராஜ்யத்தின் திறவுகோல்களை நான் உனக்குத் தருவேன்" (மத் 16:19) என்று தம்முடைய பிரதான சீஷனைப்பார்த்துச் சொல்லுகிறார். பரலோகத் திற்குரிய அதிகாரமும், திறவுகோலும் இயேசு கிறிஸ்து ஒருவருக்கே உண்டு. பல நதிகள் ஓடி கடலிலே சங்கமம் ஆகிறது போல, எந்த மார்க்கத்தின் வழியாக போனாலும் மோட்சத்தில் பிரவேசித்து விடலாம் என்று பலர் கருதுகின்றனர். இவர்களுடைய கருத்தின்படி, சாக்கடையும் கடலில் கலக்கிறது. அப்படியானால் சாக்கடையின் தன்மை உள்ளவர்கள் எப்படி மோட்சத்தில் பிரவேசிக்க முடியும். ஆகையால் இவர்களுடைய கருத்து முற்றிலும் தவறானதாகும். மோட்சத்தில் பிரவேசிக்க கிறிஸ்துவே வழியாய், வழிகாட்டியாய் இருக்கிறார். "நானே வழியும் சத்தியமும் ஜீவனுமாயிருக்கிறேன்; என்னாலேயல்லாமல் ஒருவனும் பிதாவினிடத்தில் வரான்" (யோவா 14:6) என்று மெய் ஞானமாகிய இயேசு கிறிஸ்து அறிவிக்கிறார். ஆகையால் அஞ்ஞானிகளே, விஞ்ஞானிகளே உங்கள் சுய ஞானத்தை விட்டு விலகுங்கள். மெய் ஞானமாகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசியுங்கள். "நித்தியமும் அழிவில்லாமையும் அதரிசனமுமுள்ள ராஜனுமாய், தாம் ஒருவரே ஞானமுள்ள தேவனுமாயிருக்கிறவருக்கு, கனமும் மகிமையும் சதாகாலங்களிலும் உண்டாயிருப்பதாக. ஆமென்" (I தீமோ 1:17).

..."கிறிஸ்து தேவ பெலனும், தேவ ஞானமுமாயிருக்கிறார்" —I கொரி 1:24

# மோட்ச வழி

## குரு — சிஷ்ய உரையாடல்

**சிஷ்ய:** குருவே இறைவன் ஒருவரே என்று வேதம் நமக்குச் சொல்லுகின்றது. ஆனால் பிதா, குமாரன், பரிசுத்த ஆவி என்று மூன்று பேர்களைச் சொல்லுகிறீர்களே, அது எப்படி?

**குரு:** தேவன் ஒருவரே. அவர் பிதா, குமாரன், பரிசுத்த ஆவியே தேவன் தம்முடைய உரு இலக்கண எண்ணிக்கையின் படி அளக்கப்படக்கூடியவரல்ல. ஒன்று என்று சொல்லும்போது அதனுடைய அர்த்தம் மூன்று ஆகும். எந்த ஒரு பொருளை எடுத்துக் கொண்டாலும் அடி, முடி, நடு என்று மூன்று பாகங்கள் உண்டு. ஒரு குத்து விளக்கை நமக்கு முன் வைத்தால் அந்த விளக்கை தாங்குகிறதற்கு ஒரு பூமி உண்டு. குத்து விளக்குக்கு ஒரு முடி உண்டு. அதற்கு ஒரு நடுப்பாகம் உண்டு. உதாரணமாக எந்த ஒரு பொருளையும் தாங்க கீழே ஒரு பூமியும், மேலே ஒரு ஆகாயமும் தேவை. அப்படிப் போல பிதா என்று சொல்லும் போது அங்கே குமாரனும் உண்டு என்று அறிகிறோம். இயேசு கிறிஸ்து இந்த உலகத்தில் பிறந்த பொழுது குமாரனாகவில்லை; ஏற்கனவே குமாரனாக இருக்கிறார். பரிசுத்த ஆவியானவரும் இருக்கிறார். பிதா, குமாரன், பரிசுத்தாவியானவர் மூவரும் ஒரே தேவனே.

பிதா என்று சொல்லும் பொழுது அங்கே குமாரனும் உண்டு, பரிசுத்த ஆவியும் உண்டு. குமாரன் என்று சொல்லும் பொழுது அங்கே பிதாவும் உண்டு, பரிசுத்த ஆவியும் உண்டு. பரிசுத்த ஆவி என்று சொல்லும் பொழுது அங்கே பிதாவும் உண்டு, குமாரனும் உண்டு. ஆனபடியினால் தேவன் பிதா, குமாரன், பரிசுத்த ஆவி என்று மூன்று ஆள் தத்துவம் உடையவராய் இருக்கிறார்.

சிஷ்ய: சிலர் இயேசுகிறிஸ்துவை தேவன் அல்லவென்றும், அவர் குமாரன்தான் என்றும், அவர் தேவகுமாரனே, தேவனாக உயர்த்தப்பட்டிருக்கிறார் என்றும் சொல்லுகிறார்கள். இன்னும் சிலர் இயேசு கிறிஸ்துவே பிதா என்றும், இயேசு கிறிஸ்துவே குமாரன் என்றும், இயேசுகிறிஸ்துவே பரிசுத்த ஆவி என்றும், பிதாவும் பரிசுத்த ஆவியும் கிடையாது என்றும், எல்லாம் இயேசு கிறிஸ்துவே என்றும் சொல்லுகிறார்களே அது சரியா?

குரு: இல்லை. இயேசு கிறிஸ்து தேவனே. அவரை தேவன் என்று அறிகிற அறிவு தேவனால் தெரிந்துகொள்ளப் பட்டவர்களுக்கு மாத்திரமே உண்டாகும். அவர் தேவன் இல்லை என்று சொல்லுகிறவர்கள் இயேசு கிறிஸ்து தம்முடைய மனித அவதாரத்தில் தம்மை பிதாவுக்குக் கீழ்ப்படுத்திக் கொண்டவராய் ஒரு திட்டமான வாழ்க்கை வாழ்ந்தார். பிதாவே என்று அழைத்து ஜெபித்ததையும் கூறுகிறார்கள். ஆனால் அவரை பிதாவும், தேவனே நீர் உம்முடைய ....., என்று அழைத்துள்ளார் (எபி 1:8, சங் 110 : 1) என்பதையும் கவனிக்க வேண்டும். தேவன் மாம்சத்தில் வெளிப்பட்டதே ஒரு இரகசியமாகும் (1 தீமோ 3:16). இவரே மெய்யான தேவனும் நித்திய ஜீவனுமாயிருக்கிறார் (1 யோவா 5:20). நாம் நம்பி எதிர்பார்த்துக் கொண்டிருக்கிற ஆனந்த பாக்கியமும், வரப் போகிற மகா தேவனும், நம்முடைய இரட்சகராகிய இயேசுக்கிறிஸ்துவே (தீத் 2:13) இவர் என்றென்றைக்கும் ஸ்தோத்தரிக்கப்பட்ட சர்வத்துக்கும் மேலான தேவன் (ரோம 9:5).

இயேசு என்கிற நாமம் இறைவன் மனித அவதாரமாய் வந்தபொழுது அவருக்குச் சூட்டப்பட்ட பெயராகும். அந்த இயேசு என்கிற நாமம் எல்லா நாமங்களுக்கும் மேலாய் உயர்த்தப்பட்டிருக்கிறதும், வல்லமையுள்ளதும், அபிஷேகிக்கப்பட்டிருக்கிறதுமாய் இருக்கிறது என்பதையே வேதம் அறிவிக்கிறதேயொழிய குமாரனாயிருந்தவர் தேவனாய் உயர்த்தப்பட்டிருக்கிறார் என்று அர்த்தமல்ல. குமாரன் தேவனுக்குச் சமமானவராக இருக்கிறார், குமாரன்தான் எல்லாம் என்றோ, பிதாவும் பரிசுத்தாவியுமாக காணப்படுவது குமாரன் என்றோ வேதம் சொல்லவில்லை. என் பிதா என்னிலும் பெரியவராய் இருக்கிறாரென்றும் (யோவா 14:28, யோவா 10:29), இந்த கட்டளையை என் பிதாவினிடத்தில் பெற்றுக் கொண்டேன் என்றும் (யோவா 10:18), நான் சுயமாய் வரவில்லை என்றும், பிதாவே என்னை அனுப்பினார் என்றும் (யோவா 8:42). இன்னும் பல விதத்திலும் இயேசுகிறிஸ்து தன்னை குமாரன் என்று தெளிவாக சொல்லியிருக்கிறார்; அதே சமயத்தில் நான் தனித்தில்லை பிதாவும் நானும் ஒன்றாயிருக்கிறோம் என்றும் சொல்லியிருக்கிறார் (யோவா 8:16; 10: 30).

(தொடரும்)

"ஒன்றான மெய்த்தேவனாகிய உம்மையும் நீர் அனுப்பினவராகிய இயேசு கிறிஸ்துவையும் அறிவதே நித்திய ஜீவன்" — யோவா 17:3

## வேத பாடம்

யாத் 4: 19 — 26; மோசே தன்னுடைய குடும்பத்தோடே எகிப்துக்கு திரும்பவும் வருகிறார். தேவனுடைய கோலையும் கையிலே பிடித்துக் கொண்டு வருகிறார். வழியிலே மோசேக்கு இறைவனால் ஆபத்து உண்டாயிற்று. மோசே தேவனுடைய உடன்படிக்கையான விருத்தசேதனத்தை அடையாதிருந்தார். இதினிமித்தம் கர்த்தர் மோசேயைத் தடுத்தார் (ஆதி 17:14).

யாத் 4:27; தேவனுடைய வசனத்தின்படி ஆரோன் மோசேக்கு எதிர்கொண்டு வந்து மோசேயை சந்தித்து வாழ்த்தினார். தேவன் தனக்கு கட்டளையிட்டதையும், கொடுத்த அதிகாரத்தையும் மோசே ஆரோனுக்கு அறிவித்தார். அடையாளங்களைச் செய்து காண்பித்தார். பின்பு மோசேயும் ஆரோனும் எகிப்திலிருக்கிற இஸ்ரவேலரை கண்டு

சந்தித்தார்கள். கர்த்தர் மோசேயிக்கு சொல்லிய சகல வார்த்தைகளையும் ஆரோன் சொல்லி அந்த அடையாளங்களையும் செய்தார். ஜனங்கள் கண்டு விசுவாசித்தார்கள். இஸ்ரவேல் புத்திரரை தேவன் கண்ணோக்கினாரென்று கண்டு சந்தோஷப்பட்டார்கள்.

யாத் 5 : 1 — 23: பின்பு மோசேயும் ஆரோனும் பார்வோனிடத்திற்குப் போய் இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தருக்கு வனாந்தரத்தில் போய் பண்டிகை ஆசரிக்கும்படியாக இஸ்ரவேல் ஜனங்களை போக விடும்படியாக கர்த்தர் அறிவிக்கிறார் என்று தெரிவித்தார்கள். பார்வோன் கர்த்தர் யார்? எனக்குத் தெரியாது நான் இஸ்ரவேலரை போகவிடுவதில்லை என்று அறிவித்தான். அதோடு தன்னுடைய ஆட்களை தூண்டி இஸ்ரவேல் புத்திரரை கொடுமைப்படுத்த ஆரம்பித்தான். அவர்கள் செய்யும் அடிமை தொழிலில் அவர்களை கொடுமைப்படுத்தவும், அடித்து ஒடுக்கும் படியாகவும், ஆளோட்டிகளுக்கு கட்டளையிட்டான். இஸ்ரவேல் ஜனங்கள் ஒடுக்கப் பட்டார்கள், அவர்கள் பார்வோனிடத்தில் போய் முறையிட்டபோது, நீங்கள் சோம்பேறியாயிருக்கிறீர்கள் அதினாலே உங்கள் கடவுளுக்கு ஆராதனை செய்யப் போக வேண்டுமென்று சொல்லுகிறீர்கள். போங்கள், போய் வேலை செய்யுங்கள் என்று விரட்டி விட்டான். இஸ்ரவேலர்கள் தங்களுக்கு ஆபத்து உண்டாயிற்றென்று கண்டு மோசேயின் மேலும், ஆரோன்மேலும் முறுமுறுத்தார்கள். வேலையின் கடினத்தினிமித்தமும், உபத்திரவத்தினிமித்தமும் இஸ்ரவேலர்கள் நெருக்கப்பட்டார்கள், ஒடுக்கப்பட்டார்கள். தேவனுடைய ஜனங்கள் தேவனுடைய சுவிசேஷத்தைக் கேட்டு விடுதலையாக என்னும் பொழுது சாத்தான் தன்னுடைய கொடிய அடக்கு முறையினாலும், உபத்திரவங்களினாலும் அவர்களை ஒடுக்குவான். அநேக நல்ல தேவனுடைய ஜனங்கள் சாத்தானுடைய ஒடுக்குதல், பரியாசம், நிந்தை, வேலையின் நெருக்கடி இவைகளினால் மனம் மடிந்து, சோர்ந்து தேவனுடைய இரட்சிப்பை ஏற்றுக்கொள்ளாமலும், உலகமாகிய எகிப்தை விட்டு புறப்படாமலும், வெறுபட்டு புறப்பட்டுச் சென்று தேவனை ஆராதிக்காமலும் சாத்தானுக்குக் கீழ்ப்படிந்து அடிமை நிலையிலேயே இருந்து விடுவார்கள். என் ஜனங்கள் என்னை ஆராதிக்கும் படி அவர்களை போகவிடு என்று கர்த்தர் சொல்லுகிறார்.

யாத் 6 : 1 — 13: தேவன் மோசேயை நோக்கி நான் யெகோவா (இருக்கிறவராக இருக்கிறேன், தானேயிருக்கிறார்) நான் சர்வ வல்லமையுள்ள தேவன், ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு என்பவர்களுக்கு தரிசனமானவர் அவர்கள் தங்கியிருந்த பூமியை அவர்களுக்கும், அவர்களுடைய சந்ததிக்கும் சுதந்தரமாகக் கொடுப்பேன் என்று அவர்களோடு உடன்படிக்கை செய்திருக்கிறேன். ஆகையால் நான் இஸ்ரவேல் புத்திரரை அவர்களுடைய எல்லா அடிமைத்தனத்திலிருந்தும் விடுதலையாக்கி என்னுடைய வல்லமையினால் மீட்டு நான் வாக்கருளிய தேசத்திற்குக் கொண்டு போய் அதை சுதந்தரமாகக் கொடுப்பேன் என்றார். மேலும் கர்த்தர் மோசேயோடும், ஆரோனோடும் பேசி இஸ்ரவேல் ஜனங்களை எகிப்திலிருந்து அழைத்துக்கொண்டு போங்கள் என்று கட்டளை கொடுத்து அவர்களை இஸ்ரவேலரிடத்திற்கும் பார்வோனிடத்திற்கும் அனுப்பினார். தேவனால் அழைக்கப்பட்டவர்கள். கட்டளையும் அதிகாரமும் பெற்று அனுப்பப்பட்டவர்களே ஜனங்களை சாத்தானிடத்திலின்று விடுதலையாக்கி தேவன் வாக்கருளிய வாக்குத்தத்த தேசத்தை சுதந்தரித்துக் கொள்ள நடத்திச் செல்ல முடியும்.

யாத் 6 : 14 — 27: ரூபன், சிமியோன், லேவி ஆகிய வம்சங்களின் தலைவர்கள் இஸ்ரவேல் புத்திரருக்குத் தலைவர்களாக இருந்தார்கள். இஸ்ரவேல் புத்திரர் எல்லாரின் மேலும் லேவி கோத்திரத்தில் பிறந்த அம்ராமின் குமாரர்களாகிய மோசேயும், ஆரோனும் தலைவர்களாக இருந்தார்கள். மோசே, ஆரோனுடைய தாயின் பெயர் யோகெபேத். (தொடரும்)

“பறந்து காக்கிற பட்சிகளைப்போல, சேனைகளின் கர்த்தர் எருசலேமின் மேல் ஆதரவாக இருப்பார். அவர் அதைக் காத்துத் தப்பப்பண்ணுவார், அவர் கடந்து வந்து அவர்களை விடுவிப்பார்” — ஏசா 31 : 5

மாதர் பகுதி:

# குடும்பம்

(தொடர்ச்சி)

பிள்ளைகளுடைய குண அமைப்பு:- நூலினுடைய தரம், நிறத்திற்குத் தக்கபடியே சேலைகள் இருக்கும். அப்படிப்போல பெற்றோர்களுடைய குணநலன்களுக்குத் தக்கபடியே பிள்ளைகளுடைய குணநலன்கள் அமையும். வீட்டிலே பெற்றோர்கள் பிள்ளைகள் காண பரியாசமும், கிண்டல் கேலியும் செய்து விளையாடக்கூடாது. ஞானமாகவும், அமைதியாகவும், கண்டிப்பாகவும் நடந்து கொள்ளவேண்டும். பிள்ளைகளை கண்டிப்பாகவும் அதே சமயத்தில் அன்பாகவும் நடத்தவேண்டும். ஒரேயடியாக கட்டாயச்சட்டங்களை விதித்து வீட்டில் கடைப்பிடிப்பவர்கள் ஏமாந்து போவார்கள். அவர்களுடைய குடும்பம் நொறுங்கிப் போகும். பெற்றோர்கள் சில வேளைகளில் பிள்ளைகள் கேட்கும் பண்டங்களையோ, சில பொருட்களையோ தரமாட்டோம் என்று மறுப்பார்கள். ஆனால் பிள்ளைகள் அடம் பிடித்து அழும்போது தட்டிக்கொண்டே கொடுத்துவிடுவார்கள். இது மகா தவறு.

ஒரு பொருள் பிள்ளைக்கு தீமை பயக்கும் அதை பிள்ளைக்கு கொடுக்கக்கூடாதென்று பெற்றோர்கள் தீர்மானித்தால் அதை கொடுக்கவே கூடாது அல்லது ஆரம்பத்திலேயே கொடுத்துவிடுவது நல்லது. அப்படிச் செய்யாவிடில் அவைகள் அடம் பிடித்து அதன் பின்பு கொடுப்பதினால் எந்த பொருளையும் அடம்பிடித்து அழுது பெற்றுக் கொள்ளலாம் என்று பிள்ளைகளுடைய இருதயத்தில் தவறான எண்ணத்தை பெற்றோர்கள் புகுத்தி விடுகின்றனர். பிள்ளைகளுக்கு நல்ல பழக்க வழக்கங்களை படிப்பிக்க வேண்டும். அவர்களுடைய சரீர சுகத்தைக் குறித்தும் கவனம் செலுத்த வேண்டும்.

தாய்மார்கள் தங்களுடைய பெண் பிள்ளைகள் மேல் கவனமாக இருக்க வேண்டும். உத்தேசமாக 12(பன்னிரெண்டு) வயதிற்கு மேற்பட்ட பெண்பிள்ளைகள்மேல் மிகவும் கவனம் செலுத்த வேண்டியது அவசியம். அவர்களுடைய நடை உடை பாவனைகள், உடம்பின் மாற்றங்கள், அவர்கள் இரகசியமாய் படிக்கும் புஸ்தகங்கள் இவைகளை இரகசியமாய் கவனிக்க வேண்டும்.

தகப்பன்மார்கள் தங்கள் பையன்கள் மேலும், மகன்கள் மேலும் கவனம் செலுத்த வேண்டும். 16 (பதினாறு) வயதிற்கு மேற்பட்ட தங்கள் பையன்களின் மேல் கவனம் செலுத்துவது மிகவும் அவசியம். தகப்பன்மார்களே, ஈரமுள்ள உன் மகனின்மேல் உன் ஒரு கண் இருக்கட்டும் என்று ஞான ஆகமத்தில் தகப்பன்மார்களுக்கு ஆலோசனை கொடுக்கப்பட்டுள்ளது (தள்ளு படியாகமம்).

ஒரு ஒழுக்கமுள்ள குடும்பத்தில் பிள்ளைகள், பையன்கள், வாலிபர்கள் எப்படியிருக்க வேண்டுமென்று தொடர்ந்து நாம் கவனிப்போம்

(தொடரும்)

---

"உன் இருதயத்தைப் புத்திமதிக்கும், உன் செவிகளை அறிவின் வார்த்தைகளுக்கும் சாய்ப்பாயாக"— நீதி 23:12.

---

சிறுவர் பகுதி:

# கொடுங்கள், கொடுக்கப்படும்

கடும்பனி காலத்தின் ஞாயிறு காலை ஆராதனை முடிந்து வீடு திரும்பிக்கொண்டிருந்தான் சிறுவன் ஸ்தேவான். அவன் வருகின்ற வழியில் அவனுக் கொத்த வயதுடைய சிறுவனைப் பார்த்தது முதற்கொண்டு ஸ்தேவானின் உள்ளம் பதைத்தது. காரணம் அந்தப் பனியிலும் மேலே போர்த்திக் கொள்ள வஸ்திரம் இல்லாது, ரோட்டின் ஓரத்தில் தனிமையாக ஒரு இடத்தில் ஒதுங்கி நடுங்கிக் கொண்டிருந்தான அந்தச் சிறுவன். அவனது நிலை கண்டு மிகவும் மனம் வருந்தினான் ஸ்தேவான்.

ஞாயிறு காலை ஆராதனையில் தேவ ஊழியர் பிரசங்கித்த தேவனுடைய வார்த்தைகள் பசுமரத்தாணிபோல் ஸ்தேவானின் இதயத்தில் ஆழமாக பதிந்துவிட்டன. கொடுங்கள், அப்பொழுது உங்களுக்கும் கொடுக்கப்படும் என்று தேவ ஊழியர் பிரசங்கித்திருந்தார். ஏழை விதவை தனக்குள்ள தன் ஜீவனத்துக்கு வைத்திருந்ததையும் காணிக்கைப் பெட்டியில் போட்டு விட்டாள், என கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவின் கண்முன் நடந்த சம்பவத்தை ஊழியர் கூறினார். கடைசியில் ஊழியர் ஒரு வார்த்தையைச் சொன்னார். நிச்சயமாக அந்த விதவை அதிகமாய் கிறிஸ்துவினிடத்திலிருந்து பெற்று ஜீவித்திருப்பாள் என நான் விசுவாசிக்கிறேன், என அவர் அறிவித்தார். அது முதற்கொண்டு ஸ்தேவானின் இருதயத்தில் அந்த வார்த்தைகள் அதிகமாய்கிரியைச்செய்ய ஆரம்பித்தது. ஆலயத்திலிருந்து வீடு திரும்பும் வழியில் ஸ்தேவான் பார்த்த காட்சி மிகவும் அவனை வருத்தியது.

அந்தச் சிறுவனுக்கு தன்னால் இயன்ற உதவியை செய்ய அவன் மனம் மிகவும் துடித்தது. கடைசியில் அவன் தன்னிடத்தில் இருந்த இரண்டு சட்டைகளில் ஒன்றை அந்தச் சிறுவனுக்கு கொடுக்க முடிவு செய்தான். ஆனால் பெற்றோர்கள் சம்மதிக்க மாட்டார்கள் என அவனுக்குத் தெரியும். எனவே பெற்றோருக்குத் தெரியாமல் அவன், அவனது சட்டையில் ஒன்றை எடுத்துக் கொண்டு வேகமாக நடக்க ஆரம்பித்தான். ஸ்தேவான் தான் வீடு திரும்பும் போது பார்த்த அதே இடத்தில் தான் இன்றும் அந்தச் சிறுவன் குளிரில் நடுங்கிக் கொண்டு இருந்தான். அவனை கூப்பிட்டு அவனிடத்தில் அவன் கொண்டு வந்த சட்டையைக் கொடுத்து விட்டு நீ போட்டுக் கொள், எனச் சொன்னான். அந்தச் சிறுவன் அந்தச் சட்டையை உடுத்திக் கொண்ட பின்னர் ஸ்தேவானின் இருதயத்தில் ஒரு பாரம் நீங்கியது போல ஒரு உணர்ச்சியும் மறுபறம் மிகவும் ஆனந்தமும் ஏற்பட்டது. அந்தச் சட்டையைப் பெற்றுக் கொண்ட சிறுவனும் ஸ்தேவானுக்கு நன்றி சொல்லி ஆனந்த கண்ணீர் விட்டான். குளிரினின்று ஓரளவு தன்னை பாதுகாத்துக் கொள்ள கிடைத்த அந்த வஸ்திரத்தைக் கொடுத்த ஸ்தேவானுக்கு நன்றி சொல்லி நடக்க ஆரம்பித்து விட்டான். ஸ்தேவானும் இதை விட அதிகமாக ஒன்றும் செய்ய முடியவில்லையே என மனம் வருந்தி வீடு திரும்பினான். ஆனால் வீடு திரும்பிய ஸ்தேவானின் மகிழ்ச்சி அதிக நேரம் நீடித்திருக்கவில்லை. ஏனென்றால் அவனது தாயார் அவனிடத்தில் கேட்ட கேள்வி 'உனது மற்றொரு சட்டையை எங்கே?' என்றதுதான். அவன் நடந்த காரியங்களை ஒன்று விடாமல் காலையில் ஆராதனை முதற்கொண்டு நடந்த சம்பவங்களையும் கேட்ட பிரசங்கத்தையும் சொன்னான். அம்மா! அந்தச் சிறுவனின் பரிதாப நிலையைப் பார்த்து தான் நான் கொடுத்தேன் என்றான். இதைக் கேட்ட மாத்திரத்தில் அவனது அம்மா அவனை நன்றாக அடித்து விட்டார்கள். ஆனாலும் அதற்காக ஸ்தேவான் கவலைப்படவில்லை.

அவனது அம்மா ஸ்தேவானிடம், நாமோ ஏழைகள் உனக்கு இருந்ததோ இரண்டு சட்டைகள்தான், அதிலும் ஒன்றைக் கொடுத்து விட்டாயே என கோபத்துடன் திட்டினார்கள். ஆனால் ஸ்தேவான் கர்த்தரின் வார்த்தைகளை உறுதியாக விசுவாசித்தான். எனவே அம்மாவிடம் ஆணித்தரமாக அம்மா, கர்த்தர் தமது வார்த்தையை நிறைவேற்ற வல்லவர், அவர் அப்படியே செய்வார் வேறு சட்டையைத் தருவார் என்று கூறினான். ஆனாலும் அவனது தாய் அதை ஒத்துக் கொள்ளவில்லை. அவனது தகப்பனாரோ அவனுக்குத் தைரியம் ஊட்டினார். அவர் கர்த்தர் அவர் நேற்றும் இன்றும் என்றும் மாறாதவர் அவர் அப்படியே செய்வார். நீ கவலைப்படாதே, என மகனுக்கு ஆறுதல் கூறி அவனைத் தேற்றினார்.

இப்படியாக நாட்கள் நான்கைந்து கடந்து சென்று விட்டன. ஒருநாள் போஸ்ட் மேன் ஸ்தேவானின் வீட்டைத் தேடி தன்னுடைய கரத்தில் பார்சல் ஒன்றைக் கொண்டு வந்தார். அதில் ஸ்தேவானின் பெயரும், விலாசமும் இருந்தன. பார்சலை பெற்றுக் கொண்டு, திறந்து பார்த்தனர். அந்தப் பார்சல் அவர்களது

உறவினர் ஒருவர் ஸ்தேவானுக்காய் வெளிநாட்டிலிருந்து அனுப்பியதாக அறிந்து கொண்டனர். அதைத் திறந்து பார்த்த பொழுது ஸ்தேவானின் பெற்றோர்கள் ஆச்சரியப்பட்டனர். அதில் ஸ்தேவானுக்கென்று இரண்டு ஜோடி கால்சட்டைக்கும், சட்டைக்கும், துணிகளும், சில தின்பண்டங்களும், அவனது அப்பாவிற்கும் துணிகள் இருந்தன. ஆனால் அம்மாவிற்கோ ஒன்றுமில்லை. அப்பொழுது ஸ்தேவானின் விசுவாசத்தைக் கண்டு பெற்றோர்கள் கர்த்தரைத் துதித்தனர். ஆனால் விசுவாசியாத அவனது தாயாரோ ஒன்றும் பெற்றுக் கொள்ளவில்லை. கர்த்தரின் வார்த்தையை விசுவாசித்த ஸ்தேவான் பெற்று கொண்டான். ஸ்தேவானின் அம்மா அந்நாள் முதற்கொண்டு மகனின் விசுவாசத்தை பின்பற்றினார்கள். பிள்ளைகளே, நாமும் கர்த்தரின் வார்த்தைகளை அப்படியே ஏற்றுக் கொண்டு அதன்படி நடப்போம். நாமும் தேவனுக்கென்று, இல்லாத ஏழைகளுக்கு கொடுத்து, நம்மால் இயன்ற உதவிகளைச் செய்து தேவனிடத்தின்று பெற்றுக் கொள்வோம். முதலாவது நாம் கொடுக்க வேண்டும். அதற்குப் பின்பு தான் கொடுக்கப்படும் என்று கர்த்தர் சொல்லுகிறார். நாம் அப்படியே செய்து கர்த்தரின் கரத்திலிருந்து ஆசீர்வாதங்களை, நமது தேவைகளை, நாம் பூர்த்தி செய்து கொள்வோம். ஸ்தேவான் கொடுத்து பெற்றுக் கொண்டான். அது போல நாமும் பெற்றுக் கொள்வோம்.

"கொடுங்கள், அப்பொழுது உங்களுக்கும் கொடுக்கப்படும். அமுக்கி குலுக்கிச் சரிந்து விழும்படி நன்றாய் அளந்து உங்கள் மடியிலே போடுவார்கள். நீங்கள் எந்த அளவினால் அளக்கிறீர்களோ அந்த அளவினால் உங்களுக்கும் அளக்கப்படும்" (லூக் 6 : 38).

---

"ஏழையின் கூக்குரலுக்குத் தன் செவியை அடைத்துக் கொள்ளுகிறவன், தானும் சத்தமிட்டுக் கூப்பிடும் போது கேட்கப்படமாட்டான்"—*நீதி 21 : 13.*

---

சுவிசேஷம்:

# இறை நோக்கு

மனிதர்களாகிய நாம் எதையாவது ஒரு பொருளை உருவாக்கினால் அதை ஒரு குறித்த நோக்கத்தோடு உருவாக்குகிறோம். பிரயோஜனமற்ற எந்த ஒரு வஸ்துவையும் உருவாக்குவதோ வாங்குவதோ கிடையாது. விலை மதிப்புள்ள பொருளாகட்டும், விலை குறைந்த பொருளாயிருக்கட்டும் அது எதற்காக உருவாக்கப்பட்டதோ, அதற்காக பயன்படுத்தப்படுகிறது. ஒரு சாதாரண நாற்காலியை உருவாக்குகிறோம், அதன் மேல் நாம் உட்காரும் படிக்கே. நாலுகாலில் ஒரு கால் உடைந்துபோனால் அது நாற்காலியாக பயன்படுத்தப்பட முடியாமல் இருந்த இடத்தைவிட்டு மாற்றப்படுகிறது. ஒரு போதும் அது முன்பிருந்த இடத்திற்கு உடைந்த காலுடன் வர முடியாது. அந்த இடத்தை விட்டு நிரந்தரமாகப் பிரிக்கப்படுகிறது. அதே சமயம் உடைந்த கால் சரி செய்யப்பட்டால், பழையபடி முன்பிருந்த இடம் வரலாம். மறுபடியும் அதன்மேல் உட்கார முடியும்.

இவ்வண்ணமே இறைவனால் உருவாக்கப்பட்ட மனிதனும் இருக்கிறான். ஒரு குறித்த காரியத்திற்கே தேவன் மனிதனை சிருஷ்டித்தார். அவருக்கு பிரயோஜனமாய் இருக்கவே உருவாக்கினார். நாம் உருவாக்கின நாற்காலி ஒரு ஜடப் பொருள். இறைவனால் உருவாக்கப்பட்ட நாம் ஜீவனுள்ள ஆத்மா. நாம் உருவாக்கின நாற்காலிக்கு சுயமாய் ஒன்றும் செய்ய இயலாது. இறைவனால் உருவாக்கப்பட்ட நாமோ நலமோ, தீதோ எது என சிந்தித்து செயல்படும்படியாக ஆத்தும சுதந்திரம் உடையவர்கள். நாம், உருவாக்கின வஸ்துகளைக் காட்டிலும் நாம் மேன்மை உடையவர்கள். நம்மை உருவாக்கிய சிருஷ்டி கர்த்தர் நம்மை விட மேன்மை உள்ளவர். நாம் உருவாக்கிய நாற்காலி ஜடப் பொருளான நிலை (State) யில் இருக்கிறது. நாமோ மாம்சமும் இரத்தமுமுடையவர்களாக கை கால்களை இயக்கி செயல்படும்படியான ஒரு மேலான நிலையில் (State) இருக்கிறோம்.

நம்மை உருவாக்கின கர்த்தரும் நம்மை விட மேலான ஒரு நிலையில் (State) இருக்கிறார். அவர் ஆவியாய் இருக்கிறார் என்று வேதம் சொல்லுகிறது. நாற்காலிக்கு உணர்ச்சிகள் கிடையாது. நமக்கு உணர்ச்சிகள் உண்டு. அந்த உணர்ச்சிகளாலே இறைவனுக்கு ஏற்றபடி அவருக்கு பிரயோஜனப்படும்படி நாம் நடந்து கொள்ளும் தன்மை உடையவர்கள். 'படைத்தான் படைப்பெல்லாம் மனுவுக்காக, மனுவைப் படைத்தான தன்னை வணங்க' என்ற பழங்கூற்றின் படி, நாம் இறைவனிடம் நன்மை பெற்று இறைவனைத் துதித்து போற்றி அவரை மகிமைப்படுத்தும்படி உருவாக்கப்பட்டுள்ளோம். அவர் சொல் கேட்டு, அவருக்கு கீழ்ப்படிந்து, அவர் விருப்பத்தை நிறைவேற்றும்படி உருவாக்கப்பட்டவர்கள். நாற்காலியில் நாம் உட்கார அதன் கால் உடைந்து, நம்மை கீழே விழத் தள்ளினால் எப்படியிருக்கும். உடனே அந்த நாற்காலியைத் தூக்கி ஒரு ஒதுக்குப்புறத்தில் போடுவோம் அல்லவா? நமக்கு மனதுண்டாகும் காலமட்டும் அது அங்கேயே கிடக்கும். திடீரென்று நமக்கு மனது வருகிறது உடனே ஒரு மரக்கட்டையை எடுத்து வெட்டி, உடைந்த காலை நீக்கி, புதிய கால் பொருத்தி செப்பனிட்டு, துடைத்து, வர்ணம் பூசி, புத்தம் புதிய நாற்காலியாக்கி, அது முன்பு எப்படி பயன்பட்டதோ அதே நிலையில் கொண்டு வந்து வைத்து, அதன் மீது அமர்ந்து அதை பிரயோஜனப்படுத்தி நம்மோடே வைத்துக் கொள்கிறோம். மாறாக உடைந்த நாற்காலி செப்பனிடப்பட முடியாத நிலையில் இருக்குமானால், அதை உடைத்து அடுப்பில் போட்டு எரித்து விடுவோம். அது இனிமேல் இல்லை.

சிருஷ்டிகருடைய சொல்லுக்கு கீழ்ப்படியாமல் அவரின் விருப்பம் ஆதிமனிதனில் நிறைவேறாமல் அவன் கெட்டுப் போகவே தேவன் அவனை புறம்பாக்கி போட்டார் (ஆதி 3:23). பல ஆயிரமாண்டுகளாக தேவனற்றவர்களாக இருந்தோம் (எபே 2:12). தேவனுக்கு மனதுண்டாயிற்று. நம்மை மறுபடி செப்பனிட்டு பிரயோஜனப்படுத்த சித்தம் கொண்டார். நாற்காலியின் கால் செப்பனிடப்பட இன்னொரு மரக்கிளை வெட்டப்பட்டு உடைந்த நாற்காலியை அதனோடே சேர்க்கையில் அது சரியாகிறது போல் இறைவனும் மாம்சமும் இரத்தமும் உடையவராய் நம்மைப் போல் வெளிப்பட்டு இயேசு என்னும் பெயரில் இந்த உலகில் ஜீவித்து, கொலை செய்யப்பட்டு, உடைந்த காலுக்கு பதிலாக பொருத்தப்பட வெட்டப்பட்ட மரக்கட்டையைப் போல், நம் கீழ்ப்படியாமைக்கு(பாவத்திற்கு)பரிகாரியானார் (எபே 2:13-22).

இவரோடு இணைந்து கொண்டவர்கள் புதுப்பிக்கப்பட்டு மறுபடியும் இறைவனுக்கு பிரயோஜனப்படுவார்கள். இறைவனோடே இருப்பார்கள். அவரை அண்டி கொள்ளுகிறவர்கள் பாக்கியவான்கள். நித்திய காலமாய் பரமனுடைய லோகத்தில் இருப்பார்கள் இவரோடே சேராதவர்கள், இவரை ஏற்றுக் கொள்ளாதவர்கள், இறைவனுக்கு ஒரு போதும் பிரயோஜனப்பட மாட்டார்கள் என நிச்சயிக்கப்பட்டு நிரந்தரமாய்த் தெய்வத்தை விட்டு பிரிக்கப்பட்டு அக்கினியிலே போடப்படுவார்கள். அங்கே அவர்கள் இரவும் பகலும் சதாகாலமும் வாதிக்கப்படுவார்கள் (வெளி 20:10).

இறைவனைக் காணாமல் குருடராய்ப் போனவர்களே, இதோ இயேசு பார்வையை பிரசித்தப் படுத்துகிறார் (லூக் 4:18). இறைவனுக்கு கீழ்ப்படியாமல், தள்ளப்பட்டு போனதால் இருதயம் நொறுங்குண்டுபோனவர்களே, இதோ இறைவன் இயேசு குணமாக்குகிறார்(லூக் 4:18). இறைவனால் புறம்பாக்கப்பட்டு ஒதுக்குப்புறத்தில் (இருளில் — பாவ இருளில்) சிறைக் கைதிகள் போல் கிடக்கிறவர்களே, இதோ இயேசு விடுதலையாக்குகிறார் (லூக் 4:18). இவ்வளவு காலம் செப்பனிடப்படாமல் கிடந்த நீங்கள் செப்பனிடப்படும்படி தேவனுக்கு மனதுண்டாகி உள்ளது. இது உங்களுக்கு அநுக்கிரகக் காலம். இந்த அநுக்கிரகக் காலத்தை இயேசு பிரசித்தப் படுத்துகிறார் தமது தாசர்கள் மூலம். இதற்காகவே அனுப்பியிருக்கிறார். ஆவியானவர் அவர்கள் மேல் இருக்கிறார். இந்த நற்செய்தியை பிரசங்கிக்கும்படி அபிஷேகித்திருக்கிறார் (லூக் 4:19; யோவா 21:22).

உங்களுக்கு உண்டாயிருக்கிற ஆத்தும சுதந்திரத்தின்படி, நீங்களே வந்து, செப்ப விடப்படுங்கள். கர்த்தர் உங்களைச் செப்பனிட்டு பிரயோஜனமாக்க மனதுள்ளவராயிருக்கிறார். இயேசு கிறிஸ்துவை விசுவாசியுங்கள்.

---

"ஞானியின் இருதயம் வலது கையிலும், மூடனின் இருதயம் இடது கையிலும் இருக்கும்" —பிர 10:2

---

# II - கிறிஸ்தவர்களின் தப்பெண்ணங்கள் (மத் 22:29)

*1.* நான் சிறுபிள்ளையிலேயே ஞானஸ்நானம் பெற்று விட்டேன். ஒரே ஞானஸ்நானம் (எபே 4:5) என்று தானே பைபிளில் எழுதியிருக்கிறது. ஆகையால் இன்னொரு முறை ஞானஸ்நானம் நீங்கள் சொல்லுகிறபடி முழுகி எடுக்க மாட்டேன்.

2. நான், இந்த ஞானஸ்நானம் எடுத்த பெந்தேகோஸ்தேகாரரைக் காட்டிலும் சுத்தமாயிருக்கிறேன் எனக்கொன்றும் ஞானஸ்நானம் தேவையில்லை.

3. ஞானஸ்நானம் ஒரு மதச் சடங்கு, இதைப் போய், முக்கியப் படுத்தி, இதை ஒரு உபதேசமாகப் போதித்து வீண் குழப்பத்தை ஏன் உண்டாக்க வேண்டும். அதைப் போதிப்பதினால் அநேகர் இரட்சிக்கப் படுவது தடைபடுகிறதே.

*4.* நீ கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டுள்ளாய் என்பதற்கு அது ஒரு வெளியரங்கமான சாட்சி. ஆகையால் நீ ஞானஸ்நானம் பெற்றுக் கொள்.

5. எனக்கு கர்த்தர் வெளிப்படுத்தட்டும். அதற்கு பின்பு ஞானஸ்நானம் பெற்றுக் கொள்கிறேன்.

6. அட, என்னை கர்த்தர் பரிசுத்தாவியாலேயே குளுப்பாட்டி விட்டார். இந்த தண்ணீர் முழுக்கு என்னத்திற்கு?

7. நாங்கள் இரட்சிக்கப்பட்டவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுப்போம். இது எங்கள் வழக்கம்.

இப்படி இந் நாட்களில் கிறிஸ்தவர்களிடையே ஞானஸ்நானத்தைக் குறித்து மாறுபாடான கருத்துக்களும் தப்பெண்ணங்களும் காணப் படுகிறது.

இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின் தாம் தெரிந்து கொண்ட அப்போஸ்தலருக்கு பரிசுத்த ஆவியினாலே கொடுத்த கட்டளை (order) [அப் 1:1]; நீங்கள் புறப்பட்டு உலகமெங்கும் போய், சர்வ சிருஷ்டிக்கும் சுவிசேஷத்தை பிரசங்கித்து, சகல ஜாதிகளையும் சீஷராக்கி பிதா, குமாரன், பரிசுத்த ஆவியின் நாமத்திலே ஞானஸ்நானம் கொடுங்கள். விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான். விசுவாசியாதவனோ ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படுவான் (மத் 28:19; மாற் 16:15,16).

இப்படி கட்டளையோடே அனுப்பப் பட்டவர்கள் என்ன காரியமாய் அனுப்பப் பட்டார்களோ அந்தக் காரியத்தை எப்படி செய்து முடிக்க வேண்டும் என்பதைக் குறித்து தெளிவாக அறிந்திருப்பர். (உ.ம்) பரி. பவுலை கர்த்தர் தெரிந்தெடுத்து, நீர் பூமியின் கடைசி பரியந்தம் இரட்சிப்பாயிருக்கும்படி உம்மை ஜாதிகளுக்கு ஒளியாக வைத்தேன், என்கிற வேத வாக்கியத்தை ஆதாரமாகக் காட்டி புறஜாதிகளுக்கு சுவிசேஷம் அறிவிக்கும்படி கட்டளையிட்டு அனுப்பினார் (அப் 13 : 47). இப்படி அவர் அனுப்பப் பட்ட படியால் புற ஜாதியாரைப் பற்றிய தேவ இரகசியத்தை இறைவன் அவருக்கு வெளிப் படுத்தியிருந்தார் (எபே 3 : 2,3).

இந்த இரகசியத்தை அறியாமல் கட்டளை பெறாத சில அதிக பிரசங்கிகள் தங்களுக்குத் தோன்றியபடி பேசி கலக்கமுண்டாக்கினார்கள் (அப் 15 : 24). இப்படியே இந் நாட்களிலும் ஆதி அப்போஸ்தலர்கள் ஞானஸ்நானம் கொடுக்கும் படி கட்டளை பெற்றது போல் பெறாத படியால்

அதன் தாற்பரியத்தை அறியாதபடி தங்களுக்கு தோன்றுகிறபடி அலப்புகிறுர்கள்.

எபே 4 : 5 - ல் ஒரே ஞானஸ்நானம் என்றே உள்ளது. ஒரு முறை ஞானஸ்நானம் என்றில்லை. பாருங்கள் எபேசு பட்டணத்தார் பெற வேண்டிய ஒரே ஞானஸ்நானத்தைப் பெறுமல், வேறெ ஞானஸ்நானம் பெற்றிருந்த படியால், அவர்களுக்கு சரியான ஞானஸ்நானத்தைக் கொடுத்தாரே பவுல் (அப் 19:1—15). 'நீ தேவனுடைய குமாரனேயானல் தாழக் குதியும். உன் பாதம் கல்லில் இடறுதபடி தூதர்கள் கைகளில் ஏந்திக் கொண்டு போவார்கள் என்பதாய் எழுதியிருக்கிறது' என்று பிசாசு வசனத்தைச் சொன்னது போல செல்லக் கூடாது (மத் 4 : 6). என்று எழுதியிருக்கிறதே. என்றும் எழுதியிருக்கிறதே. என்று எழுதியிருக்கிறதே (மத் 4: 4, 7, 10) என்று இயேசு சொன்ன படியே வசனமாய்ச் சொல்ல வேண்டும்.

நியாயந்தீர்க்கிறவர் கர்த்தர். நீதிமான்களாக்குகிறவர் கர்த்தர். நீ மீட்படைய தேவன் கொடுக்கும் ஆலோசனை : நீ மனந்திரும்பி பாவ மன்னிப்புக்கென்று முழுகி ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ள வேண்டும் (அப் 2:38). இந்த தேவனுடைய ஆலோசனையைத் தள்ளிப்போட்டால் உனக்கு கேடுண்டாகும் (லூக்7 : 30). தேவ ஆலோசனைக்கு கீழ் படிகிற பாவி. பரிசுத்தவானாவான்.

இயேசுவானவர் தாம் உயிர் தெழுந்த பின் அப் போஸ்தலர் செய்து முடிக்கும் படி கொடுத்த கட்டளைகளில் முக்கியமான ஒன்றை (மத் 28 : 19) மதச் சடங்கு என்று அற்பமாய் எண்ணுவது அறியாமை.

ஒருவன் போதித்தால் தேவனுடைய வாக்கியங்களின் படி போதிக்க வேண்டும். 1 பேது 4 : 11). தப்பாக கற்றுக் கொண்டதை மற்றவர்களுக்கும் போதித்து கெடுக்கக் கூடாது. கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டதற்கு சாட்சியாக ஞானஸ்நானம் எடுக்க வேண்டும் என்பதற்கு வேத ஆதாரம் கிடையாது. அது உங்களுடைய அபிப்பிராயம்.

விசுவாசமுள்ளவனாகி (மாற் 16:16) பாவத்தை விட்டு, மனந்திரும்பி, பாவ மன்னிப்புக்கென்று (அப் 2:38; மாற் 1:4) பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் (மத் 28:16,19), கட்டளை பெற்ற ஊழியக்காரனுல் (மத் 28:19 ; அப் 19:1-5) முழுகி (எபே 5:26 ; தீத் 3:5) ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ள வேண்டும். அப்பொழுது உன் பாவங்கள் கழுவப்படும் (அப் 22:16). நீ இரட்சிக்கப்படுவாய் (மாற் 16:16) வேதத்தை வாசித்துக் கொண்டு வந்த ராஜஸ்திரியாகிய காந்தாகே என்பவளுடைய மந்திரிக்கு அதன் அர்த்தம் விளங்கவில்லை. பிலிப்பு வேத வாக்கியத்தை விவரித்துக் காண்பித்தான். பெரிய அந்தஸ்திலிருந்த பக்தியுள்ள அந்த மனிதன் தாழ்மையாய் வசனத்தை ஏற்றுக் கொண்டான். உடனே ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டான். கர்த்தர் தனக்கு வெளிப்படுத்தட்டும் என்று அசட்டையாய் இருக்கவில்லை. அவன் சந்தோஷத்தோடே தன் தேசம் சென்றான் (அப் 8:27-39).

சிலர் ஞானஸ் நானம் பெறுமுன் பரிசுத்தாவியை பெற்றுக் கொள்வதுண்டு (அப் 10:44-45). ஆதியிலே இருந்த அப்போஸ்தலர்கள் பரிசுத்த ஆவி பெற்றது போல பரிசுத்த ஆவியைப் பெற்றவர்கள், ஞானஸ்நானம் பெறுதபடி தண்ணீரை விலக்கலாமா என்று சொல்லி ஞானஸ்நானம் பெற்றுக் கொள்வர் (அப் 10:47,48). பெந்தெ கோஸ்தே நாளில் ஊற்றப்பட்ட ஆவியைப் போல் அல்லாத வேறே ஆவியைப் பெற்றவன் எவனும் வேத வசனத்திற்கு கீழ்ப்படியாமல் போவதொன்றும் ஆச்சரியமல்லவே.

இவன் இரட்சிப்புக்கு தூரமானவன். ஏனெனில் ஞானஸ்நானமானது மாம்ச அழுக்கை நீக்குகிறதாயிராமல் தேவனைப் பற்றும் நல் மனசாட்சியின் உடன்படிக்கையாயிருந்து இப்போது நம்மையும் இயேசுகிறிஸ்துவினுடைய உயிர்த்தெழுதலினால் இரட்சிக்கிறது (1பேது 3:21) என்று வேதம் சொல்லுகிறது. அதாவது ஞானஸ்நானம் பெறுவதாலே ஒருவன் பாவமன்னிப்பாகிய இரட்சிப்பை (லூக் 1:77) பெற்றுக் கொள்கிறான். ஆகவே இரட்சிக்கப்பட்டவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்க வேண்டும். வேத வாக்கியங்களின்படி இரட்சிக்கப்படும்படி ஞானஸ்நானம் கொடுங்கள்.

இது தேவ ஆலோசனை. ஏற்றுக் கொண்டு கேட்டுக்கொள்ளத் தப்புங்கள். இது பைத்தியமான விருதா காரியமாகத் தோன்றலாம். 'எப்படியெனில் தேவ ஞானத்துக்கேற்றபடி உலகமானது சுய ஞானத்தினாலே தேவனை அறியாதிருக்கையில் பைத்தியமாகத் தோன்றுகிற பிரசங்கத்தினாலே விசுவாசிகளை இரட்சிக்கத் தேவனுக்குப் பிரியமாயிற்று (1கொரி 1:21).

---

"இப்பொழுது நீ தாமதிக்கிறதென்ன? நீ எழுந்து கர்த்தருடைய நாமத்தைத் தொழுது கொண்டு, ஞானஸ்நானம் பெற்று, உன் பாவங்களைப் போகக் கழுவிப்போடு"—அப் 22:16.

---

திருநெல்வேலி ஜில்லா, நாங்குநேரி தாலுகா, இராஜாக்கள்மங்கலம் என்ற ஊரின் அருகிலுள்ள புதிய எருசலேம் அனாதை ஆசிரமத்திற்கு உதவி செய்கிறவர்கள் தங்கள் உதவிகளை Chief Pastor N. Lazar, "New Jerusalem Church", 7 Triloksingh Chawl, Jerimeri, Sakinaka Post, Bombay - 400 072, India என்ற விலாசத்திற்கு அனுப்பும்படி கேட்டுக் கொள்ளுகிறோம்.

13 டிசம்பர் 1986 சனிக்கிழமையன்று பம்பாய் தலைமை சபையில் 14 பேர்களும், 1.1.1987 வியாழக்கிழமையன்று வள்ளியூர் கிளை சபையில் 51 பேர்களும் கிறிஸ்துவுக்குள்ளாக்கும் ஞானஸ்நானத்தினால் ஞானஸ்நானம் பெற்று திருச்சபையோடு சேர்க்கப்பட்டார்கள்.

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் - 39 ★ MARCH 1987

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள் விழித்திருங்கள். உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்."

மாற்கு 13 : 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY. INDIA.

# ஆசிரியர் உரை

தேவ ஜனங்கள் வேதாகமத்தின் போதனைகளைப் பின்பற்ற வேண்டும். தேவன் தம்முடைய சித்தத்தை வேதாகமத்தின் மூலம் வெளிப்படுத்தியுள்ளார். அதற்கு மாறாய் நல்லவை போன்று தோன்றுகிற மனித அபிப்பிராயங்களும், தத்துவங்களும், பாரம்பரியங்களும் மக்களைப் பிடித்துள்ளன. "பிள்ளைகள் ஆசிரியர் இல்லாமல் தங்களிஷ்டப்படியே நடக்கவிடப்படவேண்டுமென்கிற" நவீனகால கொள்கைப்படி தேறுவடைய பிள்ளைகளில் அநேகர் அலைகின்றனர். தேவனுடைய வார்த்தை இப்படிப்பட்ட சுய இஷ்டமான கொள்கைகளுக்கு நேர் விரோதமாய் இருக்கிறது. மேய்ப்பனில்லாத ஆடுகளைப் போல் மக்கள் அலைகிறார்கள். தாங்கள் சிந்திக்கிறதும் செய்கிறதும் சரி என்று நினைக்கிறார்கள். இப்படி அலைகிறவர்கள் தங்களைப் போன்ற அப்படிப்பட்டவர்களோடு கூட்டு வைத்துக் கொள்ளுகிறார்கள். தேவ ஆராதனை என்று சொல்லி தேவனை ஆராதிக்கவும் செய்கிறார்கள். இவ்விதமான கூட்டங்களையும், ஆராதனைகளையும் தேவன் வெறுக்கிறார். இவைகளை மக்கள் அறியவேண்டும். "மகனே உன் தகப்பன் கற்பனையைக் காத்துக்கொள். உன் தாயின் போதகத்தை தள்ளாதே" என்றும் "பின்பு அவர் அவர்களோடே கூடப்போய் நாசரேத்தூரில் சேர்ந்து அவர்களுக்கு கீழ்ப்படிந்திருந்தார்" என்றும் வாசிக்கிறோம். நாமும் நம்முடைய ஆவிக்குரிய தகப்பன் தாய்களின் போதகத்தைக் கேட்டு கீழ்ப்படிந்திருப்போமாக. ஆலோசனையைக் கேட்காத மூடனாகிய இராஜாவைக் காட்டிலும் புத்திமதியைக் கேட்கிற ஏழ்மையும், தாழ்மையுமுள்ள இளைஞனே வாசி.

தேவனுடைய சித்தத்தை அறிந்து அதையே நிறைவேற்றுவோமாக. தேவ சித்தம் செய்வோம். அதுவே பூரணம்.

கிறிஸ்துவுக்குள்,
Chief Pastor N. LAZAR.

20-2-1987 வெள்ளிக்கிழமையன்று பம்பாய் தலைமை சபையில் 5 பேர்கள் கிறிஸ்துவுக்குள்ளாக ஞானஸ்நானம் பெற்று திருச்சபையின் அங்கங்களாக சேர்க்கப்பட்டார்கள்.

## பாவ மன்னிப்பு (தொடர்ச்சி)

பாவ மன்னிப்பு பெற மனந்திரும்பி இயேசுகிறிஸ்துவை விசுவாசிக்க வேண்டும் (மாற் 1:15, அப் 16:31). அந்நிய தெய்வங்களையும், விக்கிரக ஆராதனையையும், பாவத்தையும் விட்டு மனிதன் மனந் திரும்ப வேண்டும் மனந்திரும்புதலில்லாமல் பாவ மன்னிப்பு இல்லை (லூக் 24 : 47). இயேசு கிறிஸ்துவை விசுவாசி என்றும், அந்த விசுவாசத்தில் மூன்றுபடிகளுண்டு.

1. கர்த்தராகிய இயேசு கிறிஸ்து என்னுடைய பாவங்களுக்காக கல்வாரி சிலுவையில் மரித்தார், அடக்கம்பண்ணப்பட்டார், உயிரோடெழுந்தார் என்று விசுவாசிப்பது.

2. அவர் மரித்தது எனக்காக ஆதலால் நான் மரித்தேன், அடக்கம் பண்ணப்பட்டேன். என்னை பிதாவாகிய தேவன் ஏற்றுக்கொண்டார். ஆதலால் நான் பாவத்துக்கு மரித்தேன், அடக்கம் பண்ணப்பட்டேன், உயிர்த்தெழுந்தேன் என்பதற்கு அடையாளமாக மனந்திரும்பி விசுவாசித்து பிதா, குமாரன், பரிசுத்த ஆவியின் நாமத்தில் முழுகி ஞானஸ்நானம் பெற்றுக் கொள்வது.

3. இப்பொழுது பிழைத்திருக்கிறது எனக்காகஅல்ல; எனக்காக மரித்துயிர்த்தவர்க்காக பிழைத்திருக்கிறேன் என்று சொல்லி புது வாழ்க்கை ஆற்றுவதாகும். இதுவே சுவிசேஷம். சிலர் சுவிசேஷம் என்றும் என்ன வென்றே தெரியாமலிருக்கிறார்கள். சுவிசேஷம் என்றும் நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து வேதவாக்கியங்களின்படி நமது பாவங்களுக்காகமரித்து, அடக்கம்பண்ணப்பட்டு வேதவாக்கியங்களின் படி மூன்றாம் நாளில் உயிர்த்தெழுந்தார் என்பதே. இதுவே சுவிசேஷம் (காண் : 1 கொரி 15 : 1 - 4). இந்த சுவிசேஷத்தை விசுவாசிப்பது மாத்திரமல்ல கைக்கொள்ள வேண்டும். மற்றபடி இரட்சிப்பு கிடையாது (1 கொரி 15 : 1, 2). கைக் கொள்வதென்றால் விசுவாசிப்பது மாத்திரமல்ல; ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டு கர்த்தருக்கென்று ஜீவிப்பதாகும்.

மனிதனுக்கு பாவமன்னிப்பு கிறிஸ்துவுக்குள்தான் உண்டாகும்; கிறிஸ்துவுக்கு வெளியே அல்ல. "(குமாரனாகிய) அவருக்குள் அவருடைய இரத்தத்தினாலே பாவமன்னிப்பாகிய மீட்பு நமக்கு உண்டாயிருக்கிறது" (கொலோ 1 : 14) "அவருடைய கிருபையின் ஐசுவரியத்தின்படியே இவருடைய இரத்தத்தினாலே பாவமன்னிப்பாகிய மீட்பு இவருக்குள் நமக்கு உண்டாயிருக்கிறது" (எபே 1:7) ஆம்! பாவமன்னிப்பு இயேசுகிறிஸ்துவுக்குள் உண்டாகிறதேயொழிய இயேசுகிறிஸ்துவுக்கு வெளியேயல்ல.

ஒரு மனிதனை கிறிஸ்துவுக்குள்ளாக்குகிறது ஞானஸ்நானமும், பரிசுத்தாவியின் அபிஷேகமுமே, ஞானஸ்நானமானது கிறிஸ்துவுக்குள்ளாக்கும்படியாகவே கொடுக்கப்படுகிறது. 1900 (ஆயிரத்து தொள்ளாயிரம்) வருஷங்களுக்கு முன்பாக சிலுவையில் அறையப்பட்டு, இரத்தம் சிந்தப்பட்டு, மரித்து, அடக்கம் பண்ணப்பட்டு உயிர்த்த கிறிஸ்துவின் மரணம் அடக்கம் பண்ணப்படுதல், உயிர்த்தெழுதலிலே ஒரு மனிதன் பங்கு பெறுவது ஞானஸ்நானத்தின் மூலமாகவே. "கிறிஸ்து இயேசுவுக்குள்ளாக ஞானஸ்நானம் பெற்ற நாமனைவரும் அவருடைய மரணத்துக்குள்ளாக ஞானஸ்நானம் பெற்றதை அறியாமலிருக்கிறீர்களா?" "மேலும் பிதாவின் மகிமையினாலே கிறிஸ்து மரித்தோரிலிருந்து எழுப்பப்பட்டதுபோல, நாமும் புதிதான ஜீவனுள்ளவர்களாய் நடந்து கொள்ளும்படிக்கு அவருடைய மரணத்திற்குள்ளாக்கும் ஞானஸ்நானத்தினாலே கிறிஸ்துவுடனே கூட அடக்கம் பண்ணப்பட்டோம் (ரோம 6: 3,4). "ஞானஸ்நானத்திலே அவரோடே கூட அடக்கம் பண்ணப்பட்டவர்களாகவும், அதிலே அவரை மரித்தோரிலிருந்தெழுப்பின தேவனுடைய செயலின் மேலுள்ள விசுவாசத்தினாலே அவரோடே கூடஎழுந்தவர்களாகவும் இருக்கிறீர்கள் (கொலோ 2 : 12).

ஆனபடியினால் ஒரு மனிதன் ஞானஸ்நானம் பெறும்பொழுது கிறிஸ்துவுக்குள்ளாக்

கப்படுகிறான். "ஏனெனில், உங்களில் கிறிஸ்துவுக்குள்ளாக ஞானஸ்நானம் பெற்றவர்கள் எத்தனை பேரோ, அத்தனைபேரும் கிறிஸ்துவைத் தரித்துக் கொண்டீர்கள்" (கலா 3 : 27) என்று வேதத்தில் மிகவும் தெளிவாக எழுதியிருக்கிறது.

ஆனபடியால் ஒரு மனிதன் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து மனந்திரும்பி தன் பாவங்களை அறிக்கையிட்டு விட்டு விட்டு ஒப்புரவாக வேண்டியவர்களுடன் ஒப்புரவாகி, திருடினதையும், வஞ்சித்து எடுத்துக்கொண்டதையும் திருப்பிக் கொடுத்து, சரி செய்ய வேண்டியவைகளை சரிசெய்து விட்டு, நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவின் கட்டளையின்படி பிதா, குமாரன், பரிசுத்த ஆவியின் நாமத்தினாலே முழுகி ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ளும் பொழுதே அவனுடைய பாவம் மன்னிக்கப்படுகிறது.

"விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான்; விசுவாசியாதவனோ ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படுவான்" (மாற் 16 : 16). "இதை அவர்கள் கேட்டபொழுது இருதயத்திலே குத்தப்பட்டவர்களாகி, பேதுருவையும் மற்ற அப்போஸ்தலரையும் பார்த்து : சகோதரரே, நாங்கள் என்ன செய்ய வேண்டும் என்றார்கள். பேதுரு அவர்களை நோக்கி : நீங்கள் மனந்திரும்பி, ஒவ்வொருவரும் பாவமன்னிப்புக்கென்று இயேசுகிறிஸ்துவின் நாமத்தினாலே ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ளுங்கள். அப்பொழுது பரிசுத்த ஆவியின் வரத்தைப் பெறுவீர்கள்" (அப் 2 : 37, 38). 'இப்பொழுது நீ தாமதிக்கிறதென்ன? நீ எழுந்து கர்த்தருடைய நாமத்தைத் தொழுது கொண்டு, ஞானஸ்நானம் பெற்று உன் பாவங்கள் போகக் கழுவப்படு என்றான்". (அப் 22 : 16). ஆனால் தேவனுடைய திட்டத்தையும், திருச்சபையினுடைய முக்கியத்தையும் அறியாத திருச்சபையல்லாத சிலர் ஒரு மனிதன் பாவ மன்னிப்பு பெற ஞானஸ் நானம் அவசியமல்ல. விசுவாசமே போதுமென்றும், ஞானஸ்நானத்துக்கு முன்னாலே ஒரு மனிதன் பாவமன்னிப்பு பெற்றுகொள்ளலாம், இரட்சிக்கப்படலாமென்றும், நீ கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை விசுவாசி, அவரை நோக்கி உன் பாவங்களை அறிக்கையிட்டு ஜெபம் பண்ணு, நீ இரட்சிக்கப்படுவாய், உன் பாவம் மன்னிக்கப்படுமென்றும், நான் இயேசுகிறிஸ்துவை நோக்கி பாவ அறிக்கைசெய்து ஜெபம் பண்ணினேன், அவர் என் பாவத்தை மன்னித்தார், நான் இரட்சிக்கப்பட்டேன் என்றும், நான் அவரை நோக்கி பாவ அறிக்கை செய்து ஜெபம் பண்ணினேன், மன்னித்தேன் என்று சத்தம் கேட்டது என்றும், தீர்க்கதரிசனம் உண்டாயிற்றென்றும், காட்சி கண்டேன் என்றும், சொப்பனம் கண்டேன் என்று கூறியும் கிறிஸ்துவுக்கு வெளியே பாவமன்னிப்பைப் பெற்றுக்கொள்ள முடியும் என்று பிரசங்கித்தும், போதித்தும், சாட்சி கொடுத்தும் எழுதியும் வருகின்றனர்.

தேவஜனம் அறிய வேண்டியது, தேவன் நமக்கு கொடுத்திருக்கும் மகா பெரிய கிருபை நம்மை கிறிஸ்துவுக்குள்ளாக்கியிருப்பதே. "அந்தப்படி நீங்கள் அவராலே கிறிஸ்து இயேசுவுக்குட்பட்டிருக்கிறீர்கள். எழுதியிருக்கிறபடி மேன்மை பாராட்டுகிறவன் கர்த்தரைக் குறித்தே மேன்மை பாராட்டத்தக்கதாக அவரே தேவனால் நமக்கு ஞானமும் நீதியும், பரிசுத்தமும் மீட்புமானார் (1 கொரி 1:30, 31).

ஆனபடியினால் ஒரு மனிதன் பாவ மன்னிப்பை முதலாவது பெற்றுக்கொள்வது மனந்திரும்பி கிறிஸ்து இயேசுவை விசுவாசித்து தன் பாவங்களை அறிக்கைசெய்து விட்டு விட்டு முழுகி ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ளும் பொழுதே பாவ மன்னிப்பை பெறுகிறான்.

(தொடரும்)

---

கிருபையினாலும், சத்தியத்தினாலும் பாவம் நிவர்த்தியாகும். —நீதி 16:6

---

# அப்போஸ்தலன் (APOSTLE) என்றால்......

ஒரு புத்தகத்தில் இப்படி படிக்க நேர்ந்தது. ஒரு பாஸ்டர் பெயரைக் குறிப்பிட்டு ஒருவர் எழுதியிருந்தார். ஆண்டவர் அவருக்கு அநேக பொறுப்புகளை கொடுத்திருப்பதால் நாங்கள் அவரை செல்லமாக அப்போஸ்தலர் என்று அழைக்கிறோம் என்பதாய். சிலர் சொல்வதுண்டு: எங்கள் சபையில் அப்போஸ்தல ஊழியம் உண்டு. ஆனால் இவர் அல்லது இவர்கள்தான் அப்போஸ்தலர் என்று சொல்வதில்லை. ஒருவேளை இன்னார் அப்போஸ்தலனாக இருக்கலாம் என்பதாய். இன்னும் சிலர்: ஆண்டவர் என்னை உபயோகிப்பதைப் பார்த்தால் ஒருவேளை எனக்கு அப்போஸ்தல அழைப்பு இருப்பதுபோல் தெரிகிறது என்று. சிலர் சொல்வது: எல்லாரும் ஊழியர்கள்தான் அல்லது எல்லாரும் சமமே. ஒருவருக்கும் ஒரு பதவிப் பெயர் (Designation) என்று கிடையாது. இப்படிப் பலரும் பலவித கருத்துள்ளவர்களாய் இருக்கிறார்கள்.

அப்போஸ்தலன் (Apostle) என்றால் கட்டளையோடு அனுப்பப்பட்ட தூதன் (A messenger, one sent forth with orders) என்று அர்த்தம். அப்போஸ்தலர் என்பது பலரைக் குறிக்கும். அப்போஸ்தலன் என்பது தனிநபரைக் குறிக்கும். எருசலேமில் உருவான சபையில் அப்போஸ்தலர் பலர் இருக்கையில் விருத்தசேதனமுள்ளவர்களுக்கு அப்போஸ்தலனாய் இருக்கும்படி கர்த்தர் பேதுருவைப் பலப்படுத்தினார் என்று பவுல் குறிப்பிடுகிறார் (கலா 2:7,8). இந்தப் பேதுருவானவர் மட்டும் பரலோகராஜ்ஜியத்தின் திறவுகோலை இயேசுவிடமிருந்து பெற்றிருக்கிறார் (மத் 16:19). ஆட்டுக்குட்டிகளை (விசுவாசிகளை) ஆடுகளை (ஊழியர்களை) மேய்க்க தனிப்பட்ட முறையில் உயிர்த்தெழுந்த கர்த்தரிடம் நேரடியாக கட்டளை பெற்றிருந்தார் (யோவா 21:15-17). அப்படியே பர்னபாவும், பவுலும் அப்போஸ்தலராக இருந்தபோதிலும் (அப் 14:14), தேவ அறிவிப்பின்படி இருவரும் எருசலேமுக்குப்போய் அங்கு சபையை சந்திக்கையில் (கலா 2:1, 2) புறஜாதிகளுக்கு அப்போஸ்தலனாயிருக்கும்படி என்னை (எங்களை என்றல்ல) பலப்படுத்தினபடியால் விருத்தசேதனமில்லாதவர்களுக்கு சுவிசேஷம் பிரசங்கிக்கும்படி எனக்கு (எங்களுக்கல்ல) கையளிக்கப்பட்டதென்று சபையார் கண்டார்கள் என்று தனது விசேஷித்த தன்மையை (தகுதியை) பவுல் குறிப்பிடுகிறார் (கலா 2:7, 8).

இப்படி இவர் புறஜாதிகளுக்கு அப்போஸ்தலனாய் இருக்கும்படி தேவன் இவரை முன்குறித்து தெரிந்துகொண்டார் (அப் 9:15). அப்போஸ்தலரைக் குறித்து நாம் ஆராய்ச்சி செய்யவில்லை. குறிக்கப்பட்ட நோக்குடனே, தேவனால் ஏற்படுத்தப்பட்ட அப்போஸ்தலனை (அனுப்பப்பட்டவன்) குறித்தே சிந்திக்கிறோம்.

(1) அப்போஸ்தலனென்றால் தான் யார் என்பதை திட்டமாய் அறிந்திருப்பான்: நான் அப்போஸ்தலனல்லவா (I கொரி 9:1) அப்போஸ்தலனாகும்படி நான் அழைக்கப்பட்டவன் (ரோம 1:1), தேவனுடைய சித்தத்தினால் நான் அப்போஸ்தலனாகும்படி அழைக்கப்பட்டவன் (1 கொரி 1:1), தேவனுடைய சித்தத்தினாலே இயேசுகிறிஸ்துவின் அப்போஸ்தலனானேன் (II கொரி 1:1) என்று பவுல் தன்னை யார் என்று திட்டமாக அறிந்து சொல்கிறார். அப்படியே தேவனால் குறிக்கப்பட்ட நோக்குடன் அனுப்பப்பட்ட யோவான்ஸ்நானகனும் (யோவா 1:6), தான் யார், எதற்காக அனுப்பப்பட்டார் என்பதை திட்டமாய் அறிந்து அறிக்கையிட்டார் (யோவா 1:23).

(2) அப்போஸ்தலன் என்றால் தேவனால ஏற்படுத்தப்பட்டவனாய்(அனுப்பப்பட்டவனாய்) இருக்க வேண்டும்: இருக்கிறவர் இறந்ததால் அவர் மகனை அந்த பட்டத்திற்கு அவராய் வர முடியாது. அல்லது அடுத்தவர் அப்போஸ்தலன் பதவிக்கு தானாய் ஏற்பட முடியாது. அல்லது ஓட்டுப் போட்டும் வருவதில்லை. "மனுஷராலுமல்ல, மனுஷன் மூலமாயும் அல்ல, இயேசுகிறிஸ்துவினாலும், அவரை மரித்தோரிலிருந்தெழுப்பின பிதாவாகிய

தேவனாலும், அப்போஸ்தலனாயிருக்கிறவன் நான் என்றும் (கலா 1:1), தேவனும் இயேசு கிறிஸ்துவும் கட்டளையிட்டபடியே(as per the appointment order) இந்த அப்போஸ்தல உத்தியோகத்திலிருக்கிறேன் என்றும்(1தீமோ 1:1) அப். பவுல் சொல்கிறார். தேவனால் அனுப்பப்பட்ட ஒரு மனுஷன் இருந்தான். அவன் பெயர் யோவான்(யோவா 1:6)என்று யோவான்ஸ்நானகனைக் குறித்து சொல்லியிருக்கிறது.

**(3) அப்போஸ்தலனென்றால் நேரடி கட்டளை (உத்தரவு) பெற்றவனாயிருக்க வேண்டும்:** இதோ நாங்கள் புற ஜாதியாரிடத்தில் போகிறோம். நீர் பூமியின் கடைசி பரியந்தமும் இரட்சிப்பாயிருக்கும்படி உம்மை ஜாதிகளுக்கு ஒளியாக வைத்தேன் என்கிற வேதவாக்கின்படி கர்த்தர் எங்களுக்கு கட்டளையிட்டிருக்கிறார் (அப் 13:47). பவுல் பெற்ற கட்டளை புற ஜாதியாரிடத்தில் சுவிசேஷத்தை பிரசங்கிக்கும் படி (கலா 2:8 ; 1கொரி 1:17). பரி. யோவான்ஸ்நானகன் பெற்ற கட்டளை ஜலத்தினால் ஞானஸ்நானம் கொடுக்கும்படி (யோவா 1:33).

**(4) அப்போஸ்தலன் என்றால் கர்த்தரை தரிசித்திருக்க வேண்டும்:** மேல் சொன்னபடி கட்டளை பெற வேண்டுமானால் கட்டளை கொடுக்கிறவரை அறியாமல், பார்க்காமல் தொடர்பில்லாமல் எப்படி பெற முடியும்? நான் அப்போஸ்தலனல்லவா? நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை த ரி சி க் க வில்லையா? என்கிறார் பவுல் (1கொரி 9:1). தரிசனம் என்று சொல்லும் போது (சொப்பனத்தை குறிக்கிறதல்ல) கர்த்தரிடத்திலிருந்து பல வழிகளிலும் நேரடியாய் பெறும் செய்திகளையே குறிக்கிறது ஏசாயா கண்ட தரிசனம் என்று சொல்லி கர்த்தர் பேசிய செய்திகள் சொல்லப்படுகிறது (ஏசா 1:1,2). அப்படியே யோவான்ஸ்நானகனும் என்னை அனுப்பினவர், ஆவியானவர் இறங்கி யார் மேல் தங்குவதை நீ காண்பாயோ அவரே பரிசுத்த ஆவியினால் ஞானஸ்நானம் கொடுக்கிறவர் என்று எனக்குச் சொல்லியிருந்தார் (யோவா 1:33) என்கிறார்.

**(5) அப்போஸ்தலன் என்றால் அனுப்பப்பட்ட காரியத்தின் இரகசியத்தை அறிந்திருக்க வேண்டும்:** அப். பவுல் உயிர்த்தெழுந்த கர்த்தரை தரிசித்து, புறஜாதிகளுக்கு அப்போஸ்தலனாய் இருந்து அவர்களுக்கு சுவிசேஷத்தை பிரசங்கிக்க கட்டளை பெற்றிருந்தார். எதைப் பிரசங்கிக்க வேண்டும், எப்படி பிரசங்கிக்க வேண்டும் என்பதை தெளிவாய் தேவனால் போதிக்கப்பட்டிருந்தார். அவர் பிரசங்கித்த சுவிசேஷம் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவே (கலா 1:16). தேவனுக்கும் புறஜாதிகளுக்கும் உள்ள காரியத்தின் மறைக்கப்பட்டிருந்த ரகசியத்தை தேவன் அவருக்கு வெளிப்படுத்தியிருந்தார் (எபே 3:3,6). அவருடைய வேலை முடிந்தது அவர் போய் விட்டார் (IIதீமோ 4:7). அப்படியே யோவான்ஸ்நானகனும் கர்த்தருக்கு பாதையை செவ்வைப்படுத்தி, ஒரு உத்தமமான ஜனத்தை ஆயத்தப்படுத்தி, அவர்களை இயேசுவை பின்பற்றும்படி ஆலோசனைக் கொடுத்து விட்டு, தன் வேலை முடிந்தது என கண்டு கடந்து போய் விட்டார் (யோவா 1:35-37;3:28-30). இப்படி உண்மையிலேயே தேவனால் எழுப்பப்பட்ட அப்போஸ்தலனும் அனுப்பப்பட்டவரும் தாங்கள் என்ன செய்ய வேண்டும் என்ற திட்டமுடையவர்களாய் (Plan) காரியத்தை நிறைவேற்றினார்கள்.

பிரியமானவர்களே, நீங்கள் அப்போஸ்தலன் என்று என்னுகிறவர் (கள்) இத்தன்மை உடையவர் (கள்) தானா? புருஷன் (Head of the house) இல்லா வீடும், தலைவன் இல்லாத சேனையும், தலையில்லாத சரீரமும் எப்படியிருக்குமோ, அப்படியே அப்போஸ்தலன் இல்லா சபையும் இருக்கும்.

பரி. பவுல் சொன்னார்: நாமெல்லாரும் நித்திரையடைவதில்லை, நாமெல்லாரும் மறுரூபமாக்கப்படுவோம்(1கொரி 15:51) ஆனால் அவர் மரித்து போய் விட்டார் ஆகையால் அவர் சொன்னதின் பொருள்: கர்த்தருடைய வருகை மட்டும் உயிரோடிருக்கும் நாம் (1தெச 4:15)என்பதாம். அதாவது அப்போஸ்தலனோடு சேர்ந்து உயிரோடிருக்கிறவர்கள் (நாம்) மறு ரூபமாக்கப்படுவோம் என்பதாம். ஏனெனில் சபையை மணவாட்டியாய் கிறிஸ்துவிடம் கற்புள்ள கன்னிகையாக ஒரு அப்போஸ்தலனே ஒப்புக்

கொடுக்க முடியும் (IIகொரி 11:2). இப்படி ஒரு அப்போஸ்தலனில்லாமல் ஒருவனும் தானாய் கர்த்தரின் வருகைக்கு ஆயத்தப்பட முடியாது.

தேவ வாக்கியங்களை உற்று கவனித்துப் பார்க்கையில் கர்த்தரின் வருகைக்கு ஜனங்களை (சபையை) ஆயத்தப்படுத்தி கிறிஸ்துவிடம் ஒப்படைக்க ஒரு அப்போஸ்தலன் தேவை.

உங்களுக்கு ஒரு அப்போஸ்தலன் தேவை. அவரைக் கண்டு அவர் சத்தம் கேட்டு, கர்த்தரின் வருகைக்கு ஆயத்தப் படுங்கள்.

இதோ கர்த்தர் வருகிறார்.

---

"எங்களுக்குக் கிருபையையும், அப்போஸ்தல ஊழியத்தையும் அருளிச் செய்திருக்கிறார்" —ரோம 1:7.

---

# III-கிறிஸ்தவர்களின் தப்பெண்ணங்கள்(மத் 22:29)

1. நீங்கள் சத்திய வசனத்தைக் கேட்டு விசுவாசிகளானபோது, வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட பரிசுத்தாவியால் அவருக்குள் முத்திரை போடப்பட்டீர்கள் (எபே 1.13), என்ற வசனத்தின்படி ஒருவன் பரிசுத்த ஆவியின் கிரியையில்லாமல் விசுவாசித்து இயேசு கிறிஸ்துவை ஏற்றுக்கொள்ள முடியாததாகையால் ஒருவன் விசுவாசியாகும் போதே பரிசுத்தாவியைப் பெற்றிருக்கிறான். ஆகையால் பரிசுத்த ஆவியைப் பெறும்படி காத்திருக்கவேண்டிய அவசியம் கிடையாது.

2. பரிசுத்த ஆவியினாலேயன்றி இயேசுவைக் கர்த்தரென்று (LORD ஆண்டவர்-எஜமான்) ஒருவனும் சொல்லக் கூடாது (I கொரி 12:3) என்ற வாக்கியத்தின்படி நான் பரிசுத்த ஆவியைப் பெற்றிருக்கிறேன், ஏனெனில் நான் இயேசுவை கர்த்தரென்று சொல்லுகிறேனே!

3. அந்நிய பாஷை பேசுவதுதான் பரிசுத்த ஆவியைப் பெற்றதற்கு அடையாளம் என்று பைபிளில் (BIBLE) எழுதியிருக்கவில்லை. அந்நிய பாஷைகளானாலும் ஓய்ந்துபோம் (I கொரி 13:8) என்று எழுதியிருக்கிறது. ஆகையால் அந்நிய பாஷை பேச வேண்டிய அவசியமில்லை.

4. அதோ அவன் அந்நியபாஷை பேசுகிறான். ஆனால் அக்கிரமம் செய்கிறான். நானோ அந்நியபாஷை பேசவில்லை, ஆனால் யோக்கியன். ஆகவே நான்தான் பரிசுத்தாவியை உடையவன்.

5. பற்பல பாஷைகளைப் பேசுதல் ஒருவரம் (I கொரி 12:10). ஆகையால் நான் பேசுவது கிடையாது ஏனெனில் எனக்கு அந்த வரம் கிடையாது.

6. அந்நிய பாஷையில் பேசினால் அர்த்தத்தையும் சொல்ல வேண்டும் (I கொரி 14:27). ஆகையால் சும்மா அந்நிய பாஷை பேசக்கூடாது.

7. பரிசுத்த மானவர்களுக்குத்தான் பரிசுத்தாவி கிடைக்கும். ஆகையால் இன்னும் உனக்குப் பரிசுத்தாவி கிடைக்கவில்லை என்றால், இன்னும் நீ உன்னை சுத்திகரித்துக் கொள்ள வேண்டும்.

இப்படியாக பரிசுத்த ஆவியைக் குறித்தும், அந்நியபாஷை பேசுதலைக் குறித்தும் கிறிஸ்தவர்களிடையே சத்திய வேதவாக்கியங்களுக்கு அப்பாற்பட்ட தவறான கருத்துக்கள் காணப்படுகிறது.

கர்த்தருடைய வார்த்தை கற்பனையின் மேல் கற்பனையும் கற்பனையின்மேல் கற்பனையும், பிரமாணத்தின்மேல் பிரமாணமும் பிரமாணத்தின்மேல் பிரமாணமும் இங்கே கொஞ்சமும், அங்கே கொஞ்சமுமாக இருக்கும் (ஏசா 28:13). கர்த்தருடைய புஸ்தகத்திலே தேடிவாசியுங்கள். இவைகளில் ஒன்றும் ஜோடில்லாதிராது; அவருடைய வாய் இதைச் சொல்லிற்று. அவருடைய ஆவி அவைகளைச் சேர்க்கும் (ஏசா 34:16). அவருடைய ஆவியை உடையவர்கள் மூலம் பரியாச உதடுகளினாலும், அந்நிய பாஷையினாலும், இந்த ஜனத்தோடே (அவிசுவாசிகள்)

பேசுவார். அவர்களோ அவருடைய வார்த்தைகளை கேட்கமாட்டோமென்று பின்னிட்டு விழுந்து, நொறுங்கி, சிக்குண்டு பிடிபடுவார்கள் (ஏசா 28:11, I கொரி 14:21 ஏசா 28:13).

செல்வந்தன் ஒருவன் தான் வாசமாயிருக்கும்படி ஒரு இடத்தை தெரிந்து கொண்டு அதில் வீடு கட்ட ஆரம்பிக்கிறான். வீடு எழும்பி வருகிறதான வேளையில் அந்த இடம்குடியிருப்புக்கு ஏற்றதல்ல என கண்டு, கட்டுவதை நிறுத்திவிட்டான். அந்த மனிதனுடைய பிரசன்னத்தினாலும், கிரியை (Work) யினாலுமேயன்றி அந்த இடத்தில் இந்த அளவுக்கு வீடு எழும்பியிருக்க முடியுமா? ஆனாலும் அவன் அந்த இடத்தில் வாசம் செய்ய வரவில்லை.

மேலும் பரிசுத்த ஆவியின் கிரியையினாலன்றி எப்படி அசுத்த ஆவி ஒரு மனுஷனை விட்டுப்போகும்? பரிசுத்தாவியின் கிரியையினாலே புறப்பட்டு போன ஆவி, மறுபடியும் வந்து பார்க்கையில் அந்த மனிதன் பரிசுத்தாவியின் வாசஸ்தலமாக மாறாமல், வெறுமையாய் இருந்தால் பழையபடி அந்த ஆவி, ஏழு ஆவிகளோடே அவனிடத்தில் வந்து தங்குமே (மத் 12:43). அப்படியே ஆவியானவருடைய கிரியை வேறே, அவர் வந்து தங்கும் அனுபவம் (பரிசுத்தாவியால் நிரப்பப்படுதல்) வேறே (யோவா 14:17, 23). சவுலை தேவன் சந்தித்தார். அவன் தன்னை, கர்த்தரின் சித்தம் செய்ய ஒப்படைத்தான். விசுவாசமுள்ளவனானபடியால் ஜெபம் பண்ணிக் கொண்டிருந்தான். அனனியா என்ற சீஷன் வந்து தன்மேல் கை வைத்து ஜெபிப்பதாக தரிசனமும் கண்டான் (அப் 9:11, 12). இவன் இயேசுவை விசுவாசிக்கவில்லையா? இவனிடத்தில் பரிசுத்த ஆவி கிரியை செய்யவில்லையா? அப்படியிருந்தும் அவன் பரிசுத்தாவியால் நிரப்பப்படவில்லை. ஆகவே அவன் பரிசுத்தாவியைப் பெற்றுக் கொள்ளும்படி, அவன் மேல் கையை வைத்து ஜெபிக்கும்படியாக அனனியாவை தேவன் அனுப்பினார் (அப் 9 : 17). மேலும் சமாரியா பட்டணத்தில் சுவிசேஷகனாகிய பிலிப்பின் பிரசங்கத்தாலே அநேகர் கர்த்தரை ஏற்றுக் கொண்டு விசுவாசித்து ஞானஸ்நானமும் பெற்றுவிட்டார்கள். இதைக் கேள்விப்பட்ட அப்போஸ்தலர்களாகிய பேதுருவும், யோவானும் அவர்களைக் காண வந்தபோது, அவர்களில் ஒருவனும் பரிசுத்தாவியை இன்னும் பெற்றுக் கொள்ளவில்லை என்று கண்டார்கள் (அப் 8:12-15). இந்த சமாரியர்கள் சத்திய வசனத்தைக் கேட்டு விசுவாசிகளானபோது பரிசுத்தாவியைப் பெறவில்லை நீங்களோ விசுவாசிக்கும்போதே பெற்றுக் கொண்டதாகச் சொல்லுகிறீர்கள். நீங்கள் வேத வாக்கியங்களை அறியாமல் தப்பெண்ணங் கொள்கிறீர்கள் (மத் 22:29).

ஊழியங்களில் வித்தியாசமுண்டு (I கொரி 12:5) இயேசுவுக்கு (எஜமானுக்கு) ஊழியம் செய்ய ஊழியர்களாக பரிசுத்த ஆவியே ஏற்படுத்துகிறார் (அப் 20 : 28). பரிசுத்த ஆவியினாலே அல்லாமல் ஒருவனும் ஊழியனாகக்கூடாது. அவர் ஒருவனை இயேசுவுக்கு ஊழியனாக ஏற்படுத்தாதிருக்க அவன் தான் இயேசுவுக்கு ஊழியக்காரன், அவர் எனக்கு கர்த்தர்(LORD ஆண்டவன் எஜமான்) என்று சொல்லக்கூடாது (I கொரி 12:3).

தேவன் தாம் தெரிந்து கொண்ட ஜனங்களோடேதான் இருக்கிறார். அவருடைய ஆசீர்வாதம் அவருடைய ஜனத்திற்கே சொந்தம். வாக்குத்தத்தம் ஆபிரகாமின் சந்ததிக்கே உரியது. இஸ்ரவேலரல்லாத புறஜாதிகள் இஸ்ரவேலருடைய காணியாட்சிக்கு புறம்பானவர்களும், தேவனற்றவர்களாகவும் இருந்தார்கள். இயேசுவானவர் இஸ்ரவேலரையும் புறஜாதிகளையும் ஒன்றாக்கினார். அந்தப்படியே இருதிறத்தாரும் ஒரே ஆவியினாலே பிதாவினிடத்தில் சேரும் சிலாக்கியம் பெற்றார்கள் (எபே 2:12-18). எப்படியெனில் ஆதியிலே பரிசுத்தாவியானவரை இஸ்ரவேலருக்கு (பேதுருவைச் சேர்ந்தவர்கள்) எப்படிக் கொடுத்தாரோ, அதேவிதமாய் புறஜாதியாருக்கும் கொடுத்து இருவருக்கும் யாதொரு வித்தியாசமுமிராதபடி செய்தார்(அப் 11:15;15:8,9)

ஆதியிலே எருசலேமில் காத்திருந்த யூத விசுவாசிகள் எவ்விதமாய் பரிசுத்த ஆவி

யைப் பெற்றார்கள்? அவர்களெல்லாரும் பரிசுத்த ஆவியால் நிரப்பப்பட்டு ஆவியானவர் தங்களுக்குத் தந்தருளின வரத்தின்படியே வெவ்வேறு பாஷைகளைப் பேசத் தொடங்கினார்கள். இப்படி இவர்கள் பேசுகிறதை கூடி வந்தவர்கள் கேட்டார்கள் (அப் 2:4,6). இவ்விதமாகவே பேதுரு கொர்நேலியு வீட்டில் பேசிக்கொண்டிருக்கையில் பரிசுத்தாவியானவர் வசனத்தைக் கேட்ட யாவர் மேலும் இறங்கவே, புறஜாதிகளாகிய அவர்களும் பல பாஷைகளைப் பேசி தேவனைப் புகழ்ந்தார்கள். இதை யூதவிசுவாசிகள் கேட்டபோது தங்களுக்குக் கொடுக்கப்பட்ட விதமாய் இவர்களுக்கும் கொடுக்கப்பட்டுள்ளது என அறிந்து பிரமித்தார்கள் (அப் 10:44-47). இப்படி புறஜாதியார் அந்நிய பாஷை பேசினபடியால்தான் தங்களைப் போல் அவர்களுக்கும் பரிசுத்தாவி கிடைத்திருக்கிறது, ஆகையால் இனிமேல் நமக்கும் அவர்களுக்கும் வித்தியாசம் கிடையாதெனக் கண்டுகொண்டார்கள் (அப் 11:15-18). ஒருவன் பரிசுத்த ஆவி பெற்றுக் கொள்ளும் வேளையில் அது காணவும், கேட்கவும் கூடிய வகையில் இருக்கும் (அப் 2:33). பரிசுத்தாவி வரும்போது அந்நிய பாஷை உண்டாவதால் மற்றவர்கள் கேட்க முடியும் (அப் 10:46). ஒருவன் பரிசுத்த ஆவி பெறுவதை மற்றவன் காணவும் முடியும் (அப் 8:18). ஆகவே இந்த அனுபவம் இல்லாதவர்கள் இன்னும் இஸ்ரவேலின் காணியாட்சிக்கு தூரமானவர்களே.

இயேசுவை கர்த்தர் என்று சொன்னாலும் பரிசுத்தாவியின் கிரியையினால் விசுவாசியாகியிருந்தாலும், இன்னும் தேவ ஆவியின் வாசஸ்தலமாகவில்லை. அறிவு ஒழிந்து போனவர்களுக்கு, வேத அறிவு ஒழிந்து போனவர்களுக்கு, அந்நிய பாஷை ஓய்ந்து போனதொன்றும் ஆச்சரியமல்லவே (1கொரி 13:8). ஆதியில் அந்நிய பாஷை அடையாளத்தோடே இறங்கின பரிசுத்தாவியானவர் வேத கணக்குப்படி தொடர்ந்து 27 வருஷங்களுக்கு மேல் (கலா 1:18, 2:1, அப் 15:39,40,19:1-6) அவ்விதமாகவே இறங்கியிருக்க எப்போது தன்னுடைய பாணியை (Method) மாற்றிக் கொண்டாரோ?

வெகு தூரம் பிரயாணப்பட்டு (Picnic) வந்த உல்லாசப் பயணிகள், நேரமானதால் வீடு திரும்ப ஆயத்தப்பட்டார்கள். தங்கள் தங்கள் வாகனங்களை எடுத்துக் கொண்டு புறப்பட்டார்கள். வேகமாய்ப் போன சிலர் பிரயாணக் களைப்பால் தூங்கிப் போனதால்; வண்டி வழி விலகி சாலையோர மரங்களில் மோதி நொறுங்குண்டார்கள். இதைக் கவனித்த சிலர் தங்கள் ஓட்டத்தை நிறுத்தி விட்டார்கள். விபத்தின் செய்தியைக் கேள்விப்பட்ட பலர் வண்டியை ஸ்டார்ட் (Start) பண்ணாமலேயே இருந்து விட்டார்கள். ஆனால் தைரியசாலிகளும், திறமைசாலிகளுமான சிலர் தங்கள் வழியிலேயே போய் வீடு சேர்ந்தார்கள். அப்படிப் போல பரிசுத்தாவிப் பெற்று அந்நிய பாஷை பேசின சிலர் கெட்டுப் போனதால பயந்து போய் பாஷை வேண்டாமென்று சொல்வதும்; கிடையாது என்று சொல்வதும் புத்தியீனம். அவர்கள் என்ன அந்நிய பாஷை பேசினதினாலா கெட்டார்கள்? பேசினால் பக்திவிருத்தியல்லவா உண்டாகும் (1 கொரி 14:4). பரிசுத்தாவி பெறாவிடில் சத்தியத்தில் நடக்க முடியாது (யோவா 16:13). சேர வேண்டிய இடம் (இளைப்பாறுதல்) போய் சேர முடியாது. ஏனெனில் இதுவே இளைப்பாறுதல். இதுவே ஆறுதல் (ஏசா 28:11,12).

அந்நிய பாஷை பேசுதல் பரிசுத்தாவியால் உண்டாகும் வரமென்றால் விசுவாசமும் ஆவியால் உண்டாகும் வரம்தானே (1கொரி 12:9). வரமாகிய விசுவாசம் எல்லாருக்கும் இருக்காது. ஆனால் இரட்சிப்புக்கேதுவான விசுவாசம் எல்லாருக்கும் இருக்க வேண்டும். அப்படியே பற்பல பாஷைகளை பேசுதலாகிய வரம் (1 கொரி 12:10, 14:18) எல்லாருக்கும் இருக்காது. ஆனால் பரிசுத்தாவி பெற்றதின் அடையாளமாகிய அந்நிய பாஷை எல்லாருக்கும் (அப் 10:44, 45,1 கொரி 14:23, அப் 19:5,6) இருக்க வேண்டும்.

அப்படியே உங்கள் அறிவின்படி, அந்நியபாஷை பேசுதல் வரமென்றே எடுத்துக் கொண்டாலும், உங்களோடே ஐக்கியப்பட்டவர்களில் எத்தனை பேருக்கு இந்த வரம் இருக்கிறது? ஒருவருக்கும் இல்லையென்றால் நீங்கள் கிறிஸ்துவின் வருகைக்கு ஆயத்

தப்பட முடியாதென திருவசனம் தீர்ப்பளிக்கிறது (1 கொரி 1:7).

பற்பல பாஷைகள் பேசுவது ஒருவரம். அதற்கு அர்த்தம் சொல்லுவது இன்னொரு வரம் (1 கொரி 12:10). இவ்வித வரங்கள் பெற்ற இருவர் சபையாரோடே கூடிவந்து, ஒருவர் பேச மற்றவர் அர்த்தம் சொன்னால் சபை பக்திவிருத்தியடையும். அர்த்தம் சொல்லுகிறவன் இல்லாவிட்டால் பாஷை பேசும் வரமுடையவன் சபைக் கூட்டத்தில் சும்மா பேசிக்கொண்டிருந்தால் யாருக்கும் பிரயோஜனமுண்டாகாது. அவன் சபை பக்திவிருத்தியடைய வரத்தை உபயோகிக்க முடியாதாகையால் சபையார் கேட்க பேசாமல், தனக்கும் தேவனுக்கும் தெரியப் பேசக்கடவன். அதனால் அவனுக்கு பக்திவிருத்தி உண்டாகுமே என்று பவுல் சபை கூடிவரும் போதுள்ள ஒழுங்கை சொல்கிறார் (1 கொரி 14 அதி). தனிப்பட்ட ஆலோசனை சொல்லவில்லை.

சத்தியத்தை ஒருவன் அறிந்து கைகொள்கையில் அவன் பரிசுத்தமாவான் (யோ 17 : 17). சத்தியத்தை எப்படி அறிவான்? சத்திய ஆவியாகிய அவர் வரும் போதே சத்தியத்திற்குள் நடந்து பரிசுத்தமாவான் (யோவா 16 : 13). எனவே ஒருவனை பரிசுத்தமாக்கவே ஈவாக பரிசுத்தாவியானவர் கொடுக்கப்படுகிறார். இது தேவனுடைய வாக்குத்தத்தம்.

வாக்குத்தத்தத்தைப் பெற காத்திருங்கள். பரிசுத்தாவியைப் பெற்றுக்கொள்ளுங்கள். பரிசுத்தாவியால் ஏற்படுத்தப்பட்ட ஊழியக்காரனை வகைவைத்து ஜெபிக்கச் சொல்லி கேளுங்கள். கேளுங்கள் அப்போது கொடுக்கப்படும். கேட்கிற எவனும் பெற்றுக் கொள்வான். பரமபிதா நல்ல ஈவைத் தருவது அதிக நிச்சயம் (லூக் 11 : 13).

---

*நீங்கள் விசுவாசிகளானபோது பரிசுத்த ஆவியைப் பெற்றீர்களா?*

—அப் 19 : 2

---

# வேத பாடம்

யாத் 6 : 28 - 30 யாத்திராகமம் 7–ஆம் அதிகாரம் இங்கிருந்து ஆரம்பமாகிறது. கர்த்தர் எகிப்திலே மோசேயோடு பேசின போது நானே கர்த்தர் என்றார் (I am the LORD). வேதாகமத்தில் 30 இடங்களில் நான் இன்ன கடவுளாயிருக்கிறேன் என்று கர்த்தர் சொல்லுகிறார்.

1. இருக்கிறேன் என்பவர் (யாத் 3 : 14)
2. நான் இருக்கிறவராக இருக்கிறேன் (யாத் 3 : 14)
3. நான் யேகோவா, இருக்கிறவராக இருக்கிறேன் (யாத் 6 : 2, 6, 7, 8, 29). மேலும் முழு வேதாகமத்தில் இப்படி 106 தடவை காணப்படுகிறது.
4. நான் சர்வ வல்லமையுள்ள தேவன் (ஆதி 17 : 1 ; 35 : 11)
5. நான் ஆபிரகாமின் தேவனாயிருக்கிறேன் (ஆதி 26 : 24 ; மத் 22 : 31, 32 ; மாற் 12 : 26).
6. நான் ஆபிரகாமின் தேவனாகிய கர்த்தராயிருக்கிறேன் ( ஆதி 28 : 13).
7. நான் தேவன், நான் உன் தகப்பனுடைய தேவன் (ஆதி 46 : 3).
8. நான் பெத்தேலில் தரிசனமான தேவன் (ஆதி 31 : 13)
9. நான் ஆபிரகாமின் தேவனும், ஈசாக்கின் தேவனும், யாக்கோபின் தேவனுமாகிய உன் பிதாக்களுடைய தேவன் (யாத் 3 : 6).
10. நான் உங்கள் தேவனாகிய கர்த்தர் (லேவி 11 : 44; 18 : 2, 4). இப்படி மேலும் பழைய ஏற்பாட்டில் 28 முறை வருகிறது.

11. உங்கள் தேவனும் கர்த்தராகிய நான் பரிசுத்தர் (லேவி 19 : 2).

12. கர்த்தராகிய நான் பரிசுத்தர் (லேவி 20 : 26)

13. உன் தேவனாகிய கர்த்தராயிருக்கிற நான் எரிச்சலுள்ள தேவன் (உபா 5 : 9).

14. நானே அவர் (ஏசா 41 : 4 ; 43 : 10, 11, 13, 25).

15. நானே தேவன் (சங் 50 : 7 ; ஏசா 43 : 12 ; 46 : 9, எரே 23 : 23, ஓசி 11 : 9)

16. உன் தேவனாகிய கர்த்தர் நானே (ஏசா 43 : 3, 48 : 17 ; 51 : 15 ; ஓசி 13 : 4)

17. இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர் நானே (ஏசா 45 : 3)

18. நான் உன் தேவன் (ஏசா 41 : 10).

19. நான் முந்தினவராயிருக்கிறேன் (ஏசா 44 : 6 ; 48 : 12).

20. நான் பிந்தினவராயிருக்கிறேன் (ஏசா 44 : 6 ; 48 : 12).

21. நானே உன் பங்கும் உன் சுதந்தரமுமாயிருக்கிறேன் (எண் 18 : 20).

22. நான் உன் இரட்சகர் (ஏசா 49 : 26 ; 60 : 16).

23. நான் மாம்சமான யாவருக்கும் தேவனாகிய கர்த்தர் (எரே 32 : 27).

24. நானே சாட்சி (எரே 29 : 23).

25. நான் இஸ்ரவேலுக்கு பிதாவாயிருக்கிறேன் (எரே 31 : 9)

26. நான் கர்த்தராகிய ஆண்டவர் (எசே 23 : 49, 29 : 16)

27. நான் அவர்களுடைய தேவனாகிய கர்த்தர் (எசே 28 : 26 ; சக 10 : 6).

28. நான் உங்கள் தேவன் (எசே 34 : 31).

29. நான் மகத்துவமான ராஜா (மல் 1 : 11)

30. நான் உன் பிதாக்களுடைய தேவன் (அப் 7 : 32)

யாத் 7 : 1 - 5 கர்த்தர் மோசேயை நோக்கி நான் உன்னை பார்வோனுக்கு ஒரு தேவனாக்கினேன் என்று சொன்னார். தேவ வசனத்தை பெற்றுக் கொண்டவர்கள் தேவர்களே (யோவா 10 : 34,35). ஆரோனை மோசேக்கு தீர்க்கதரிசியாக கர்த்தர் நியமித்து மறுபடியும் கர்த்தர் அவர்களை பார்வோனிடத்தில் அனுப்பி இஸ்ரவேல் ஜனங்களை எகிப்திலிருந்து விடுதலையடையச் செய்து புறப்படப்பண்ணும் பொழுது நான் கர்த்தர் என்று எகிப்தியர் எல்லாரும் அறிந்து கொள்வார்கள் என்றார். ஆம்! கர்த்தர் தம்முடைய ஜனங்களை பாவத்திலிருந்தும், வியாதியிலிருந்தும், துன்ப துக்கத்திலிருந்தும் அவர்களுக்கு உண்டாகிற சகல இக்கட்டிலிருந்தும் அவர்களை விடுதலை அளிக்க தம்முடைய வல்லமையை உபயோகிக்கிறார்.

யாத் 7 : 6 , 7 மோசேயும் ஆரோனும் கர்த்தருடைய கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்தார்கள். அவர்கள் பார்வோனிடத்தில் பேசும் பொழுது மோசேக்கு 80 வயதும், ஆரோனுக்கு 83 வயதுமாயிருந்தது.

(தொடரும்)

"நீர் சொன்னது சத்தியம்; ஒரே தேவன் உண்டு, அவரைத் தவிர வேறொரு தேவன் இல்லை."
— மாற்12 : 32

# மோட்ச வழி

## (குரு-சிஷ்ய உரையாடல்)

(தொடர்ச்சி)

**சிஷ்யன் :** சிலர் இந்து மார்க்கத்தில் சிவன், பிரம்மா, விஷ்ணு இருக்கிறதுபோல் கிறிஸ்தவத்தில் பிதா, குமாரன், பரிசுத்த ஆவி என்ற உபதேசத்தைக் கொண்டு வந்திருக்கிறார்கள் என்று சொல்லுகிறார்களே அது சரியா?

**குரு :** இது அறியாமையினால் தவறான கொள்கைக்காரர்கள் அவ்விதமாக சொல்லுகிறார்கள். பிதா, குமாரன், பரிசுத்த ஆவி என்ற திரியேகத்துவம் மிகவும் வல்லமை பொருந்தியதாகும். இந்து மார்க்கத்தில் சிவன், பிரம்மா, விஷ்ணு என்பது மூன்று வெவ்வேறு கடவுள்களைக் குறிப்பிடுகிறது. மூன்று பேருக்கும் வெவ்வேறு பிறந்த நட்சத்திரம் உண்டு. அவர்கள் மூன்று பேருக்கும் வெவ்வேறு மனைவிமார்கள் உண்டு. வெவ்வேறு சந்தானங்கள் உண்டு. மூன்று பேரும் வெவ்வேறு உலகங்களில் வாசம் பண்ணுகிறவர்கள் என்று சொல்லுகிறார்கள். மூன்று பேர்களிலும் நான் பெரியவன், நீ பெரியவன் என்று அடிபிடி சண்டைகள் உண்டு. ஆனால் கிறிஸ்தவ மார்க்கத்தில் இறைவன் தன்னை பிதா, குமாரன், பரிசுத்த ஆவி என்கிற திரியேக தெய்வமாய் வெளிப்பட்டிருப்பதே மிகவும் அதிசயமானதும், ஆத்துமாக்களை திருப்திபடுத்துகிற சத்திய உபதேசமாகவும் இருக்கிறது. பிதாவும், குமாரனும், பரிசுத்தாவியானவரும் நித்தியமானவர்கள். இவர்களிடையே பிரிவினை கிடையாது. வாக்குவாதம் கிடையாது. நான் பெரியவன் சிறியவன் என்கிற போட்டி கிடையாது. மூவரும் ஒரேவிதமான சர்வ வல்லமை, சர்வ வியாபகம், சர்வ ஞானம், பரிசுத்தம், அன்பு, இரக்கம், உண்மை உடையவர்களாக இருக்கிறார்கள். இவர்களிலே வேறுபாடு கிடையாது. தேவன் ஒருவரே. அவர் பிதா, குமாரன், பரிசுத்தாவியே. அவராலே சகலமும் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது. நாமும் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறோம். அவரே நம் தேவன். சிருஷ்டிகராகிய தேவன் தம்மை பிதா, குமாரன், பரிசுத்தாவியாக வெளிப்படுத்தியிருக்கிறார். தேவன் தம்மை வெளிப்படுத்தின பிரகாரம் விசுவாசிப்போம். அவரை வணங்கி தொழுது கொள்வோமாக.

(தொடரும்)

> நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினுடைய கிருபையும், தேவனுடைய அன்பும், பரிசுத்த ஆவியினுடைய ஐக்கியமும், உங்கள் அனைவரோடுங்கூட இருப்பதாக. ஆமென்.
> — II கொரி 13 : 14

மாதர் பகுதி :

# குடும்பம்

**பிள்ளைகள் :** பிள்ளைகளைப் பயிற்றுவித்தல் மிகவும் முக்கியமான காரியம். "பிள்ளைகள் கர்த்தரால் வரும் சுதந்தரம், கர்ப்பத்தின் கனி அவரால் கிடைக்கும் பலன். வாலவயதின் குமாரர் பலவான் கையிலுள்ள அம்புகளுக்கு ஒப்பாயிருக்கிறார்கள். அவைகளால் தன் அம்பறாத் தூணியை நிரப்பின புருஷன் பாக்கியவான்; அவர்கள் நாணமடையாமல் ஒலி முகவாசலில் சத்துருக்களோடே பேசுவார்கள்" (சங் 127 : 4-6). பிள்ளைகள் பாக்கியம் பெரிய ஆசீர்வாதம். ஒரு நாள் ஒரு ஏழை மனிதன் தன்னுடைய பிள்ளைகளை அவரவர் வளர்த்தியின் பிரகாரம் நிற்க வைத்து சந்தோஷப்

பட்டுக் கொண்டிருக்கும் போது அங்கே வந்த ஒரு பிரபு அந்தப் பிள்ளைகளைப் பார்த்து இத்தனை பிள்ளைகளா? இவர்கள் தான் ஐசுவரியவான்களையும் பிச்சைக்காரர் களாக்கி விடுகிறவர்கள் என்றான். உடனே பிள்ளைகளின் தகப்பன் அந்தப் பிரபுவைப் பார்த்து, பிரபுவே, நீர் சொல்லுகிறபடியல்ல. இவர்கள்பிச்சைக்காரரை ஆஸ்திக்காரராக்கு கிறவர்கள் நீர் உம்முடைய ஆஸ்தி முழு வதையும் கொடுத்து இவர்களில் ஒருவனைக் கேட்டாலும் நான் கொடுக்க மாட்டேன், என்றான். பிள்ளைகளில்லாத இடம் வெகு நிர்ப்பாக்கியமுள்ள இடமே. பிள்ளை களினால் அநேக விதமான குறைவுகளும், சஞ்சலங்களும் உண்டானாலும், அவர் களால் அநேகவிதமான ஆறுதல்களும் சந்தோஷங்களும் உண்டாகிறது. நாடோடி யாய் காடோ, செடியோ என்று அலையும் ஆடவரை விட தாய்மார்களே தங்களுடைய பிள்ளைகளை சரியான வளர்ப்பில் வளர்க்க அதிகமாய்க் கடமைப்பட்டிருக்கிறார்கள். தகப்பனும் கவலையற்றிருக்கக் கூடாது. பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளை நடத்து வதில் வெகு ஜாக்கிரதையுள்ளவர் களாயிருக்க வேண்டும்.

முறை, கீழ்ப்படிதல், அன்பு, கறு கறுப்பு ஆகிய முக்கிய சாதனங்களைக் கைக்கொண்டு நடத்து கொள்ளும் பெற்றோர் கடைசியில் சித்தியடைவது நிச்சயம். இவைகளை எப்படிக் கைக் கொள்ள வேண்டுமென்று ஒவ்வொன்றிலும் கொஞ்சம் கொஞ்சம் எழுதுகிறேன்.

1. முறை:- முறையென்றால் ஒவ்வொரு காரியத்தையும் அதற்குரிய ஒழுங்கு பிரகாரம் செய்வதே. ஒவ்வொரு காரியமும் அதற் குரிய முறைப்படி அந்தந்த நேரத்தில் செய்யப்பட வேண்டுமென்பதைப் பிள்ளை கள் அதிபாலிய பிராயத்திலே தெரிந்து கொள்ளும்படி பழக்க வேண்டும். சிலரிடம் உங்கள் பிள்ளைகளை நெறிப்படி வளர்க்கக் கூடாதாவென்று கேட்டால் அவர்கள், 'ஆ இப்போது என் பிள்ளைகள் பச்சைப் பாலக ராயிற்றே. அவர்களுக்கு இப்போது என்ன தெரியும், அவர்களுக்கு வயசு வரும் போது ஒழுங்காக நடந்து கொள்வார்கள்' என்பார்கள். வயது வந்த பின் எல்லாம் வந்துவிடும் என்பது வாஸ்தவம்தான். ஆனால், எப்படிப்பட்ட விஷயங்கள் அவர் கள் மனதில் பதிந்து விடும் என்று நினைக் கிறீர்கள்? அவர்கள் தங்கள் சிறு வயதிலே தங்கள் கண்களால் பார்த்து, செவிகளால் கேட்டு புத்தியினால் உணர்ந்த விஷயங்களே என்பதை மறந்து விடாதிருங்கள். அவர்கள் கீழ்ப்படியாமலிருக்கும் போதும், பொய் பேசும் போதும் பெற்றோர் அவர்களைக் கண்டிக்கவில்லை என்று சிறுவயதிலே உணருவார்களாகில், பெரியவர்களாகும் போதும் அவர்கள் அந்தக் குற்றங்களைச் செய்கையில் நீங்கள் அவர்களைக் கண்டிக் காமலிருக்க எதிர்பார்ப்பது நியாயந்தானே. சிசுக்களுடைய இருதயம் ஒன்றும் எழுதப் படாத சுத்தமான ஓர் வெள்ளைத்தாளைப் போல் இருக்கிறது. ஒவ்வொரு பிள்ளை யினுடைய இருதயமும் சிசு பிராயத்திலே வெகு சுத்தமாயிருக்கிறது. நாம் அந்த கடுதாசி யில் பலரும் மெச்சிக் கொள்ளத் தக்கதும் தேவனால் விரும்பப்படத்தக்கதுமான புத்தி யும் ஞானமும் நிறைந்த விஷயங்களை எழுதினாலும் எழுதலாம். வெறுக்கப்படக் கூடிய விகார ரூபங்களை எழுதினாலும் எழுதலாம். எதை எழுத வேண்டுமென் பது நம்முடைய சித்தத்துக்கு விடப் பட்டிருக்கிறது. இதெல்லாம் என்னுடைய விதி (தலையெழுத்து) என்று போக்குச் சொல்லாதே. உன்னுடைய மதியை சரி யானபடி உபயோகிக்காமல் விதியென்று போக்குச் சொல்லாதே

ஒரு தடவை ஒரு அம்மாள் ஒரு பெரிய குருவிடம் அவர் கேட்டதற்கு என் பிள்ளை களுக்கு சரியான வயது வரை மதக்கத் தைப் பற்றிப் போதிக்கத் நான் விரும்ப வில்லை என்றாள். அதற்கு அந்த ஞான முள்ள பெரிய குரு அந்த அம்மாளை நோக்கி, "நீங்கள் இளவயதிலே உங்கள் பிள்ளைகளுக்கு கடவுளைப் பற்றி போதனை செய்யாவிடில் சாத்தான் அவர்களுக்கு தன்னைப் பற்றி போதிப்பான்" என்றார். பாலியத்தில் கட்டாயமாய்ப் பழகும் பழக்கங்கள் முதிர் வயதாகும் போது இயல்பான காரியங்களாகத் தோன்று கின்றன.

பெரிய சேனதிபதி நெப்போலியன். கெம்பன் என்னும் அம்மாளைப் பார்த்து கடந்த காலங்களில் ஏற்படுத்தப்பட்ட கற்பிக்கும் முறை ஒன்றுக்கும் உதவாத முறையாயிருக்கிறது. நமது பிரான்ஸிலே தற்காலத்திலிருக்கும் இளைஞர்கள் படிப்பிலும், தைரியத்திலும், ஆரோக்கியத்திலும் இன்னும் மற்றக் காரியங்களிலும் தேறிக் கெட்டிக்காரராகும்படி என்ன தேவையாயிருக்கிறதென்று வினவினன். அதற்கு அந்த அம்மாள் "தாய்மாரே" என்று ஒரே வார்த்தையில் மாறுத்தரம் சொன்னாள். இதைக் கேட்ட மாவீரன் நெப்போலியன் போனபார்ட் ஆ! ஆ! படிப்பிக்கும் முறை ஒரே வார்த்தையிலே எவ்வளவு ஞானமாய் அடக்கப்பட்டிருக்கிறதென்று ஆச்சரியப் பட்டான்.

பிள்ளைகள் மூர்க்க குணமுள்ளவர்களைச் சாந்தப்படுத்துவதில் பேர் போனவர்கள். உன்னுடைய பிள்ளைகளுக்கு உன்னால் கூடிய போதெல்லாம் ஏதாவது சரித்திரங்களைச் சொல்லு. படங்களைக் காண்பி. அவர்களை எவ்விதமாய்ச் சந்தோஷப்படுத்தலாம் என்பதில் நோக்கமுள்ளவளாயிரு. தகப்பனும் பிள்ளைகளைப் பற்றிக் கவலையாயிருக்க வேண்டும். நீ வேலைக்குப் போய் விட்டுத் திரும்பும் போது பிள்ளைகள் ஆவலாய் உனக்காக காத்துக் கொண்டிருக்கும் படியாக நடந்து கொள். இதோ அப்பா வந்து விட்டார்கள், எல்லாருக்கும் முந்தி நான் ஓடிப் போய் பார்ப்பேன் என்று அவர்கள் உன்னைப்பற்றிய ஆவலுள்ளவர்களாயிருக்கும்படி நடந்து கொள். உன்னால் கூடிய போதெல்லாம் மாலைப் பொழுதில் பிள்ளைகளை உன்னோடு கூட்டிக் கொண்டு போய் புற்தரையில் அவர்களோடு விளையாட வெட்கப்படாதே. நீ அவர்களைப் போல நடந்து கொள்வாயானால் சீக்கிரம் அவர்கள் உன்னைப் போல் நடந்து கொள்ளுவார்கள். சிறுவர்களுடைய விளையாட்டு, அவர்களுடைய மழலைப் பேச்சு, அவர்களுடைய சிறு சிறு கோபங்கள், அவர்களுடைய களங்கமற்ற குணம், அவர்களுடைய குறைவுகள், அவர்களுக்கு தேவையானவைகள், இன்னும் இவை போன்றவைகள் தகப்பனுக்கு அநேகவிதமான மகிழ்ச்சியைக் கொடுக்கக் கூடியவைகளாயிருக்கின்றன. நீ உன் சொந்தப் பிள்ளைகளைப் பார்த்து இதுவே என் பொக்கிஷம். இது எனக்கெவ்வளவு அருமையாயிருக்கிறதென்று புகழும் போது உன் மனைவியாளுக்குண்டாகும் சந்தோஷத்துக்கு கணக்கில்லை. அது அவள் உனக்கு அதிக கவலையோடு சாப்பாடு ஆயத்தம் பண்ண நல்ல ஏதுவாயிருக்கும். இதுவுமன்றி அவள் தனக்கு அதினால் வரும் சந்தோஷங்களைப் பற்பல விதமாய்க் காண்பிப்பாளே. "நல்ல பழக்கங்கள் உண்மையுள்ள நல்ல வேலைக்காரனையும் கெட்ட பழக்கங்கள் கடினமும், குரூரமான எஜமானுமிருக்கின்றன," என்பது வாஸ்தவமே. ஆகையால் பிள்ளைகளை பாலியத்திலேயே நல்ல பழக்கங்களில் பயிற்றுவிக்க ஜாக்கிரதையாயிருக்க வேண்டும். பின் சொல்லப் படும் சில குறிப்புகள் பிள்ளைகள் பயிற்றுவிக்க ஏற்ற உதவியாயிருக்கும்.

(தொடரும்)

---

"உன் மகனை சிட்சை செய், அவன் உனக்கு ஆறுதல் செய்வான், உன் ஆத்துமாவுக்கு ஆனந்தத்தையும் உண்டாக்குவான்" — நீதி 29 : 17.

---

# சிறுவர் பகுதி

வருடந்தோறும் நடக்கின்ற விளையாட்டுப் போட்டிகளில் ஆயிரம் மீட்டர் ஓட்டப்பந்தயத்தில் முதலில் வருபவர்களுக்கு பிரதானமான பரிசாக ஒரு தங்கப் பதக்கமும், நற்சான்றிதழும் வழங்கப்பட்டு வந்தது. தொடர்ந்த நான்கு ஆண்டுகளாக விக்டர் என்ற வாலிபன் அந்தப் பரிசினை தட்டிச் சென்று கொண்டிருந்தான். அவனோடு போட்டியில் கலந்துகொண்ட மற்ற பத்து பேர்களில் ஜான்சன் என்ற வாலிபனும் ஒருவன் ஆவான். ஜான்சனும் வழக்கமாக தொடர்ந்து தோற்று வெறுங்கை

யுடன் வீடு திரும்புவான். இவ்வாண்டும் அப்படியே திரும்பினான். ஜான்சன் மிகவும் சோர்வுடன் வீடு திரும்பி வீட்டை அடைந்தான். அவனது தாய் ஜான்சி அம்மாள் மகனை வரவேற்றார்கள்.

ஜான்சன் அம்மாவிடம் "அம்மா இந்த ஆண்டும் அதே விக்டர்தான் தங்கப்பதக்கத்தை தட்டிச் சென்றுவிட்டான்" என மிகவும் வருத்தத்துடன் கூறினான். அதற்கு அவனது தாய் நான் உனக்கு கொடுக்கின்ற ஆலோசனையின்படி நடந்தால், வருகிற ஆண்டில் நடக்கும் விளையாட்டுப் போட்டியில் நிச்சயமாக நீ அந்த தங்கப்பதக்கத்தை தட்டிக் கொண்டு வரலாம் என அவனது அம்மா கூறினார்கள். அவனது அம்மா ஜான்சனிடம் தினமும் காலையிலும், மாலையிலும் ஓட்டத்தில் பயிற்சி பெற வேண்டும். ஒழுங்காக அந்தப் பயிற்சியை செய்து வரவேண்டும். அதோடு இறைவனை நோக்கி ஜெபிக்க வேண்டும். நிச்சயமாக வருகிற ஆண்டில் நான் தங்கப்பதக்கத்தை பெற வேண்டும் என்ற ஒரே எண்ணத்தில் ஓடி நீ பயிற்சி பெற்றால் முடியாதது ஒன்றும் இல்லை என்று சொன்னார்கள்.

அது மட்டுமின்றி ஜான்சனுக்கு வேதத்திலிருந்து அப்போஸ்தலர் பவுல் மூலமாக தேவ ஆவியானவரால் எழுதப்பட்ட வார்த்தையையும் போதித்தார்கள்...நீங்கள் பெற்றுக் கொள்ளத்தக்கதாக ஓடுங்கள் (வெற்றிப் பெற்றுக் கொள்ளத் தக்கதாக) பந்தயத்திற்கு போராடுகிற யாவரும் எல்லாவற்றிலேயும் இச்சையடக்க முடையவர்களாயிருப்பார்கள் (I கொரி 92:5) எனவே மகனே இந்த வசனத்தின் படியும், நான் சொன்ன ஆலோசனையின் படியும் நடந்தால், வருகின்ற ஆண்டின் தங்கப்பதக்கம் உனக்குத்தான் கிடைக்கும். வேறு ஒருவனும் பெற்றுக்கொள்ள மாட்டான். என்று அறிவுரை கூறினார்கள்.

அது முதற்கொண்டு ஜான்சன் தினமும் காலையிலும் மாலையிலும் பயிற்சிகளை செய்து வந்தான். இயேசுவை நோக்கி ஜெபித்தும் இச்சையடக்கம் உடையவனாகவும் திகழ்ந்து வந்தான். நாட்கள் வாரங்களாகி, வாரங்கள் மாதங்களாகி, மாதங்கள் வருடமாக முடிவடையப் போகின்ற காலம் வந்தது. மேலும் ஜான்சன் எதிர்நோக்கியிருந்த விளையாட்டு போட்டி நாளும் வந்தது. எப்பொழுதும் போலவே விக்டர், ஜான்சன் உட்பட பலர் கலந்து கொண்டனர். போட்டி தொடங்குவதற்கு அடையாளமாக விசில் ஊதப் பட்டது. ஆரம்ப முதலே ஜான்சன் வேகமாக ஓடி கடந்த ஆண்டுகளில் விக்டர் இந்த ஆயிரம் மீட்டர் தூரத்தைக் கடக்க எடுத்துக் கொண்ட நேரத்தைவிட அதிக சீக்கிரமாய் ஓடி வெற்றி பெற்றான். தங்கப் பதக்கத்தைப் பெற்றுக் கொண்டான். விசேஷமாக அறிவிப்பாளர் ஜான்சனை மிகவும் பாராட்டினார். ஒவ்வொரு ஆண்டும் நான்காவது, ஐந்தாவது இடத்தில் வந்து கொண்டிருந்த ஜான்சன், இவ்வாண்டு முதலாவது இடத்தில் வந்து விட்டான். அது மட்டுமின்றி முந்திய ஆண்டுகளில் ஓடி வந்த நேரத்தைக் காட்டிலும் 30 வினாடிகள் சீக்கிரமாய் வந்து சேர்ந்தான் என்று அறிவித்து ஜான்சனைப் பாராட்டினார்கள்.

அதே வேளையில் விக்டர் மிகவும் வருத்தப்பட்டான். தான் அதிகமாக பயிற்சி செய்யாததையும், இவ்வாண்டும் எனக்கே தான் கிடைக்கும் என்று பெருமையாக நினைத்ததினிமித்தமும் தனக்கு வரவேண்டிய பரிசு பொருள் கிடைக்கவில்லை என நினைத்து வருந்தினான்.

ஆம் பிள்ளைகளே, நாமும் (வெற்றி) பெற்றுக் கொள்ள வேண்டும். (பள்ளிப் படிப்புகளிலும், மற்றெல்லாத் துறைகளிலும்) என்ற நோக்கத்துடன் நமது பெற்றோர்கள் கொடுக்கின்ற ஆலோசனையின்படி நடக்க வேண்டும். அப்பொழுது நாம் கட்டாயம் பெற்றுக் கொள்ளுவோம். விக்டரைப்போல் இறுமாப்பிலாமலும், முயற்சி செய்யாமலும் நாம் இருந்தோமானால் நமக்கு கிடைக்க வேண்டியவைகளை பிறர் பெற்றுச் சென்று விடுவர். எனவே நாம் கவனமாக வாழ வேண்டும். மற்றும் தாயாகிய சபையிலிருந்து கிடைக்கின்ற வார்த்தைகளைப் பற்றிக் கொண்டு நாம் நடந்தால் மோட்ச ராஜ்யமும் சென்றடைய முடியும். கர்த்தருடைய வருகையில் நாம் எடுத்துக் கொள்ளப்படு

வோம். இல்லையேல் நாம் இந்தப் பூமியில் தான் இருப்போம்.

"பந்தயச் சாலையில் ஓடுகிறவர்களெல்லாரும் ஓடுவார்கள். ஆகிலும், ஒருவனே பந்தயத்தைப் பெறுவானென்று அறியீர்களா? நீங்கள் பெற்றுக்கொள்ளத்தக்கதாக ஓடுங்கள்" (I கொரி 9:24).

---

"அவர்களெல்லாருக்கும் சமயமும் தேவச் செயலும் நேரிட வேண்டும்" —பிர 9:11.

---

## புதிய எருசலேம் நடபடிகளில் சில (தொடர்ச்சி)

நமது கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுக்கு அதிசயமானவர் என்றொரு பெயருமுண்டு. அவர் இன்றைக்கும் அதிசயங்களை நடப்பிக்கிற படியால் கர்த்தரை ஸ்துதிக்கிறேன்.

மதுரை ஜில்லாவில் பள்ளப்பட்டி என்ற ஊரில் புதிய எருசலேம் சபை (கிளை) ஒன்று இருக்கிறது. இந்த கிளை சபை உருவான வரலாறு பெரிது. அதைப் பின்னால் அறிந்து கொள்ளலாம். கடந்த மாதத்தில் திடீரென்று நடந்த ஓர் சம்பவத்தை மட்டும் கீழே தருகிறேன்.

மேற்படி ஊரிலுள்ள ஒரு இந்து விவசாயக் குடும்பத்தில் இரண்டு வயதுள்ள ஒரு குழந்தை உண்டு. அவர்கள் வீட்டில் மாட்டுக்குத் தண்ணீர் ஊற்றுவதற்காக தொட்டியண்டை சென்ற பிள்ளையின் தாயார் தொட்டியிலுள் தன்னுடைய குழந்தை தலைகீழாய் நிற்பதைக் கண்டு அவசர அவசரமாய்ப் பிள்ளையைத் தூக்கினார்கள். பிள்ளை கட்டையாக விறைத்து விட்டது. பிள்ளையின் வயிறு தண்ணீரால் உப்பியிருந்தது. தாயாரின் கூக்குரலைக் கேட்ட பக்கத்து வீட்டுக்காரரெல்லாம் வந்து கூடி விட்டார்கள். பிள்ளையை வண்டியின் சக்கரத்தில் வைத்து சுழற்றி வயிற்றிலுள்ளிருக்கும் நீரை வெளியேற்ற முயற்சித்தனர். முயற்சியால் பலன் ஒன்றுமில்லை

உடனே அவ்வூர் மருத்துவரிடம் குழந்தையைக் கொண்டு போனார்கள். குழந்தை மரித்துவிட்ட படியால் மருத்துவருடைய பிரயாசமும் வீணாகி விட்டது. தாயாரின் கதறுதலைக் கண்ட மருத்துவர் (Doctor) உங்கள் பிள்ளைக்கு கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவால் மட்டுமே ஜீவனைக் கொடுக்க முடியும். ஆகையால் புதிய எருசலேம் சபைக்கு குழந்தையைக் கொண்டு போய் அங்குள்ள தேவனுடைய மனிதர்களிடம் முறையிடுங்கள். அவர்கள் உங்களுடைய பிள்ளைக்காய் ஜெபிப்பார்கள் என்று கூறி மேற்படி ஆட்களை சபைக்கு அனுப்பி விட்டார்.

இப்பொழுது ஊரிலுள்ள பெரும் பகுதி மக்கள் கூடிவிட்டார்கள். ஒரு பெரிய கூட்டம் தேவனுடைய ஆலய ஸ்தலத்துக்குள் பிரவேசித்து உயிரற்ற குழந்தையை ஆராதனை ஸ்தலத்தின் நடுவில் படுக்க வைத்து விட்டு பிள்ளைக்கு அருமையானவர்களெல்லாரும் உரத்த குரலில் கடவுளே, நீதான் எங்கள் குழந்தையை காப்பாற்ற வேண்டும் என்று கண்ணீரோடு வேண்டினார்கள்.

நான் (Postor Isaac Gnanaiah), யாரும் அழாதீர்கள். கர்த்தர் இங்கே இறங்கி வந்து பிள்ளைக்கு உயிரூட்டும்படி எல்லோரும் கர்த்தரை ஸ்தோத்தரியுங்கள் என்று கூறி, நானும் விசுவாசிகளில் சிலரும் வந்திருந்த கூட்டத்தினரும் பரலோகத்தின் தேவனை உரத்த குரலில் ஸ்தோத்தரிக்கவே எலியாவின் பலியில் அக்கினி மயமாய் இறங்கின தேவன் தம்முடைய பக்தர்களின் ஜெபத்தைக் கேட்டு வல்லமையோடு இறங்கினார். என்னே அதிசயம்! என்னே அதிசயம்!! உயிரற்ற குழந்தை இரண்டு தடவை தும்மி எழுந்து விட்டது (II இரா 4:35). கூடி வந்திருந்த எல்லோரும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தை மகிமைப் படுத்தினார்கள்.

இயேசு கிறிஸ்து நேற்றும் இன்றும் என்றும் மாறாதவர். அவருக்கே மகிமை உண்டாவதாக.

Postor Isaac Gnanaiah
New Jarusalam Church
Pallapatti.

“மேலும், நீங்கள் விசுவாசமுள்ளவர்களாய் ஜெபத்திலே எவைகளைக் கேட்பீர்களோ அவைகளையெல்லாம் பெறுவீர்கள் என்றார்”
—மத் 21:22.

# யார் சீயோன்

சீயோன் என்றால் எது? சீயோன் என்றால் யார்? என்பதைக் குறித்து கிறிஸ்தவர்களிலே பொதுவாக பல கருத்துக்கள் காணப்படுகிறது. வழியக்காரர்கள் சீயோன் என்றும், விசுவாசிகள் புதிய எருசலேம் என்றும் சிலர் சொல்லுகின்றனர். இன்னும் சிலர் எல்லோரும் சீயோன் என்றும் சொல்லுகின்றனர். இன்னும் பலர் பல விதமாக சொல்லுகின்றனர். வேதவசன வெளிச்சத்திலே சீயோனைப் பார்ப்போம்.

எருசலேம் பட்டணத்தில் நான்கு குன்றுகள் உள்ளது. இவைகளில் சீயோனும் ஒன்று. தாவீது அரசனின் காலம் வரை எருசலேம் யூதர்களால் பிடிக்க முடியாமல் இருந்தது. கி. மு. 2000 வருடங்களுக்கு முன்பே எருசலேம் பட்டணம் கட்டப்பட்டதாக தெரிகிறது. மெல்கி செதேக்கு இதற்கு ராஜாவாக இருந்தார் என்றும், அதற்கு சாலேம் என்று பெயர் உண்டாயிற்று என்றும் அறிகிறோம் (ஆதி 14:18). கி. மு. 1450-இல் கானானுக்குள் இஸ்ரவேலர்கள் பிரவேசித்தனர். அப்போது எபூசியர்கள் எருசலேமில் குடியிருந்தார்கள். இது புறஜாதிகளின் பட்டணம் என்று சொல்லப்பட்டது (நியா 19:10-12; யோசு 15:28). கி. மு. 1000 வரை அதாவது தாவீதின் காலம் மட்டும் இஸ்ரவேலர்கள் எபூசியைப் (எருசலேம்) பிடிக்கவில்லை. தாவீது ராஜா எருசலேமைப் பிடித்தார். “தேசத்திலே குடியிருக்கிற எபூசியர் மேல் யுத்தம் பண்ண ராஜாவானவன் தன் மனுஷரோடே கூட எருசலேமுக்குப் போனான். அவர்கள், இதிலே பிரவேசிக்க தாவீதினால் கூடாது என்று எண்ணி, தாவீதை நோக்கி: நீ இதற்குள் பிரவேசிப்பதில்லை. குருடரும், சப்பாணிகளும் உன்னைத் தடுப்பார்கள் என்று சொன்னார்கள். ஆனாலும் தாவீது சீயோன் கோட்டையைப் பிடித்தான். அது தாவீதின் நகரமாயிற்று எவன் சாலகத்தின் வழியாய் ஏறி, எபூசியரையும், தாவீதின் ஆத்துமா பகைக்கிற சப்பாணிகளையும், குருடரையும் முறிய அடிக்கிறானோ, அவன் தலைவனாயிருப்பான் என்று தாவீது அன்றையத் தினம் சொல்லியிருந்தான். அதனால் குருடரும் சப்பாணியும் வீட்டிலே வரலாகாது என்று சொல்லுகிறதுண்டு. அந்தக் கோட்டையிலே தாவீது வாசம்பண்ணி, அதற்கு தாவீதின் நகரம் என்று பேரிட்டு, மில்லோ என்னும் ஸ்தலந்துவக்கி, உட்புறமட்டும் சுற்றிலும் இருக்கிற மதிலைக் கட்டினான் (II சாமு 5:6-9). ஆபிரகாம் ஈசாக்கைப் பலியிட கொண்டு போன மோரியா என்ற மலை நாடு இங்கேதான் உள்ளது (ஆதி 22:2). எருசலேம் தேவாலயம் கட்டப்பட்ட இடம் இந்த மோரியா மலையேயாகும். அர்வனாவின் களம் அல்லது எபூசியனாகிய ஒர்னானின் களம் உள்ளதும் இந்த மோரியா மலையேயாகும். இந்த எருசலேமிலே கர்த்தருடைய ஆலயம் கட்டப்பட்டது (II நாளா 3:1).

சீயோன் என்பது எருசலேம் ஆலயம் கட்டப்பட்ட மலைக்கு தாழ்வான ஒரு குன்றாகும். இங்கே தாவீது தனக்கு அரண்மனை கட்டினார் இதற்கு சீயோன் என்றும், தாவீது நகரம் என்று பெயர் சொல்லப்பட்டது. அநேக சமயங்களில் எருசலேம் சீயோன் என்றுகுறிப்பிடப்பட்டுள்ளது (சங் 87:2, 3; சங் 74:2; சங் 126:1, ஏசா 8:18; எரே 8:19; மீகா 4:2). ஆனபடியினால் சீயோன் என்பது எருசலேமில் உள்ள ஒரு இடமாகும். எருசலேம் அல்லது சீயோனின் மகள் என்பது

[illegible] (… 1:1 … 10:1,2 … 3:11) [illegible] (… 1:26, … 21:2).

[illegible]

[illegible] (… 28:16) [illegible] (… 2:19-22; 1 … 2:4-6). [illegible]

([illegible])

## 4 FORM IV

[See Rule 8]

| | | |
|---|---|---|
| 1. | Place of Publication | BOMBAY |
| 2. | Periodicity of its publication | MONTHLY |
| 3. | Printer's Name<br>(Whether citizen of India?)<br>(if foreigner, state the country of origin)<br>Address | Chief Pastor N. LAZAR<br>YES<br>7, Triloksingh Chawl<br>Jerimeri, Sakinaka, Bombay-72 |
| 4. | Publisher's Name<br>(Whether citizen of India?)<br>If foreigner' state the country of origin)<br>Address | Chief Pastor N. LAZAR.<br>YES<br>7, Triloksingh Chawl, Jerimeri,<br>Sakinaka, Bombay-400 072. |
| 5. | Editor's Name<br>(Whether citizen of India?)<br>(If foreigner, state the country of origin)<br>Address | Chief Pastor N. LAZAR<br>YES<br>7, Triloksingh Chawl, Jerimeri,<br>Sakinaka, Bombay-400 072. |
| 6. | Names and addresses of individuals who own the newspaper and partners or share holders holding more than one per cent of the total capital. | NEW JERUSALEM CHURCH<br>7, Triloksingh Chawl, Jerimeri,<br>Sakinaka, Bombay-400 072. |

I, Chief Pastor N. LAZAR hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief

Dated......

Signature of Publisher

(Chief Pastor N. LAZAR)
Editor Printer Publisher

# ஆசிரியர் உரை

கர்த்தராகிய இயேசுகிறிஸ்து தம்முடைய திருச்சபையை தமக்குப் பின் பூலோகத்தில் கட்டவும், சுவிசேஷத்தை பிரசங்கித்து விசுவாசிக்கிற மக்களை கூட்டிச் சேர்த்து தம்முடைய வருகைக்கு ஆயத்தப்படுத்தும்படியாகவும், அதிகாரங்களையும் உபதேசங்களையும் கட்டளைகளையும் தம்முடைய அப்போஸ்தலர்களுக்கு (கையளித்தார்) கொடுத்தார் (அப் 1:1). அவர்களே ஆதி சாட்சிகள். அவர்கள் மூலமாக திருச்சபை ஆரம்பமாயிற்று.

இந்தக் கல்லின்மேல் என் சபையைக் கட்டுவேன் என்று திருவுளம்பற்றின கர்த்தராகிய இயேசுகிறிஸ்து (மத் 16:18) பெந்தெகொஸ்தே நாளில் பரிசுத்தாவியானவர் மூலமாக கூடியிருந்த சீஷர்களின் மேல் இறங்கி வந்தார். அப்போஸ்தலனாகிய பேதுரு பரிசுத்த ஆவியானவரால் ஆட்கொள்ளப்பட்டு பதினொரு அப்போஸ்தலர்களோடு கூட எழுந்து நின்று தன்னுடைய முதலாவது பிரசங்கத்தை நிகழ்த்தினார் (அப் 2:14-40).

முதலாவது திருச்சபையில் அன்றையத்தினமே மூவாயிரம் யூதர்கள் கூட்டிச் சேர்க்கப்பட்டார்கள். திருச்சபையின் பொறுப்பு அப்போஸ்தலனிடமே ஒப்படைக்கப் பட்டிருந்தது. வேத வசனத்தைப் போதிக்கிறதும் ஆளுகை செய்கிறதும் அப்போஸ்தலர்களுடைய திருப்பணிகளாகும். தேவன் அவர்களுக்கே கட்டளையிட்டார். எல்லாருக்கும் அல்ல (அப் 10:40-42). தேவ வசனத்தைப் போதிக்கிற ஊழியம் அப்போஸ்தலர்களுக் குரியது (அப் 6:4). ஆனால் இந்நாட்களில் கள்ள ஆவியினால் தூண்டப்பட்டு அநேகர் வேத வசனத்துக்கு விளக்கம் கொடுக்கவும், தவறான உபதேசங்களை (கொள்கைகளை) உருவாக்கவும், பத்திரிகைகள் வெளியிடவும், துண்டுப்பிரதிகள் (Tracts), அறிக்கைகள் வெளியிடவும் ஆரம்பித்துவிட்டனர். தங்களை திருச்சபைகள் என்று சொல்லுகிற சங்கங்கள் தங்களுடைய சபையில் அங்கத்தினர்கள், ஊழியர்கள் இஷ்டப்பிரகாரம் கூட்டங்கள் நடத்தவும், பத்திரிக்கைகள் நடத்தவும், ஜனங்களுடைய பணங்களை இவர்கள் கவர்ந்து பணம் சேர்க்கவும், பிழைப்பு நடத்தவும் அனுமதித்துள்ளனர். இதனால் உபதேச குழப்பங்களும் பிரிவினைகளும், ஸ்திரீகள் ஜெபக் கூட்டங்களும், தான்தோன்றித்தனமான அறிக்கைகளும் கிறிஸ்தவ சமுதாயங்களில், சங்கங்களில் பெருகிப் போயிற்று இவைகளெல்லாம் தேவனுடைய மாதிரியல்ல.

தவறான இயக்கங்களுக்கு, ஆட்களுக்கு அனுமதியும் உதவியும் செய்துவிட்டு பின்பு தங்கள் தவறுகளை உணர்ந்து திருச்சபைகள் என்று சொல்லப்படுகின்ற கூட்டங் களின் தலைவர்கள் மறுப்பு கொடுக்க ஆரம்பித்திருக்கிறார்கள். மக்கள் வஞ்சிக்கப் படுகின்றனர். இவ்விதமான தவறுகள் நேராத வண்ணம் தேவனுடைய திருச்சபை (புதிய எருசலேம்) இருக்கிறது தேவனுடைய திருச்சபையில் தனியான தத்துவத்திற்கோ, தனி சம்பாத்தியத்திற்கோ, சுய விளக்கத்திற்கோ இடமில்லை, வேதத்திலுள்ள எந்தத் தீர்க்கதரிசனமும் சுய தோற்றமான பொருளை உடையதாயிராதென்று (அவனவன் சுயமாய் விளக்கம் கொடுக்கத்தக்கதல்ல) நீங்கள் முந்தி அறிய வேண்டியது (திருச்சபையே வேதத்தை விளக்க வல்லது). தீர்க்கதரிசனமானது ஒருக்காலும் மனுஷனுடைய சித்தத்தினால் உண்டாகவில்லை. தேவனுடைய பரிசுத்த மனுஷர்கள் பரிசுத்த ஆவியினாலே ஏவப்பட்டு பேசினார்கள் (II பேது 1:20,21).

சுவிசேஷத்தை யாரும் பிறருக்கு அறிவிக்கலாம், சாட்சி கொடுக்கலாம். உபதேசம் கொடுப்பதோ வேதத்தை வியாக்கியானிக்கிறதோ அப்போஸ்தலர்களுக்கே அதிகாரம் உண்டு (I தெச 2:13) உங்களுக்கு ஒருவர் உபதேசம் கொடுத்தால், நீர் அப்போஸ்தலரா? என்று கேளுங்கள். இல்லையென்றால் விட்டுவிடுங்கள். அந்த உபதேசத்தில் தவறு உண்டு. ஏனெனில் இயேசுகிறிஸ்து அப்போஸ்தலருக்கே கட்டளையிட்டார் (அப் 1:1; 10:40-42).

கிறிஸ்துவுக்குள்,

Chief Pastor N. LAZAR

(தொடர்ச்சி)

# பாவ மன்னிப்பு

பாவ மன்னிப்புப் பெற பாவத்தை அறிக்கை செய்ய வேண்டும். தன் பாவங்களை மறைக்கிறவன் வாழ்வடைய மாட்டான். அவைகளை அறிக்கை செய்து விட்டு விடுகிறவனே இரக்கம் பெறுவான். பாவங்களை அறிக்கை செய்து விட்டு விட வேண்டும். அறிக்கை என்றால் என்ன என்று நாம் முதலாவது விளங்கிக் கொண்டால்தான் நாம் சரியான முறையின்படி அறிக்கை செய்வோம்.

அறிக்கை என்றால் வெளிப்படுத்தி அறிவிப்பதாகும். மலையாளத்தில் ஏற்றிப் பறைவது என்று சொல்லுவார்கள். 1. இரட்சிப்பின் திட்டத்தில் மனிதன் இயேசுவை அறிக்கை செய்ய வேண்டும். மனுஷர் முன்பாக என்னை அறிக்கை பண்ணுகிறவன் எவனோ அவனை நானும் பரலோகத்திலிருக்கிற என் பிதாவின் முன்பாக அறிக்கை பண்ணுவேன். மனுஷர் முன்பாக என்னை மறுதலிக்கிறவன் எவனோ அவனை நானும் பரலோகத்திலிருக்கிற என் பிதாவின் முன்பாக மறுதலிப்பேன் (மத் 10 : 32, 33) என்று இயேசுகிறிஸ்து சொல்லியிருக்கிறார். "நீதியுண்டாக இருதயத்திலே விசுவாசிக்கப்படும்; இரட்சிப்புண்டாக வாயினாலே அறிக்கை பண்ணப்படும்." என்னவென்றால் கர்த்தராகிய இயேசுவை நீ உன் வாயினால் அறிக்கையிட்டு தேவன் அவரை மரித்தோரிலிருந்து எழுப்பினாரென்று உன் இருதயத்தில் விசுவாசித்தால் இரட்சிக்கப்படுவாய் (ரோம 10 : 10, 9).

ஒரு மனிதன் கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தன்னுடைய பாவங்களுக்காக மரித்தார். அடக்கம் பண்ணப்பட்டார். உயிரோடெழுந்தார் என்று இருதயத்தில் விசுவாசிக்கிறதும், இயேசுகிறிஸ்து என்னுடைய பாவங்களுக்காக மரித்தார், அடக்கம் பண்ணப்பட்டார், உயிரோடெழுந்தார், என்று நான் நம்புகிறேன். இயேசுகிறிஸ்துவை விசுவாசிக்கிறேன், என்று ஒரு தேவ ஊழியர் முன்பாகவோ அல்லது திருச்சபையின் மத்தியிலோ அறிக்கை செய்ய வேண்டும், சாட்சி கொடுக்க வேண்டும், வாக்கு கொடுக்க வேண்டும். நீதியுண்டாக இருதயத்திலே விசுவாசிக்கப்படும். இரட்சிப்புண்டாக வாயினாலே அறிக்கை பண்ணப்படும். அறிக்கையென்றால் வெளிப்படுத்தி அறிவிப்பது வாயினாலே பிற மனிதர் கேட்க அறிவிப்பது. அறிக்கை என்றால் ஜெபம் பண்ணுவதல்ல, மனதிலே நம்புவது அல்ல, அறிவிப்பதாகும். காந்தாகே என்பவளுடைய மந்திரியும் இவ்விதமாக அறிக்கை செய்த போதே இயேசுவை தேவனுடைய குமாரன் என்று விசுவாசிக்கிறேன் என்று அறிக்கை செய்த போதே சுவிசேஷகராகிய பிலிப்பு மந்திரிக்கு ஞானஸ்நானம் கொடுத்தார் (அப் 8 : 37, 38).

இன்றைக்கு இயேசு கிறிஸ்துவை தெய்வமாக விசுவாசிக்கிற மக்கள் புறமதஸ்தர் களிலேயும் அநேகர் உண்டு. அவர்களுடைய விசுவாசம் அவர்களை இரட்சிக்குமா? அவர்கள் கிறிஸ்தவர்களா? அவர்கள் இரட்சிக்கப்பட்டிருக்கிறார்களா? இல்லை. அவர்கள் இயேசுகிறிஸ்துவை விசுவாசிக்கிறதுபோல இன்னும் அநேக தெய்வங்களையும் விசுவாசிக்கிறார்கள். அநேகத்தின் மேல் நம்பிக்கை வைத்திருக்கிறார்கள். அவர்கள் இரட்சிக்கப்படவேண்டும் என்றால் ஒரு மெய்யான தேவ ஊழியரிடமோ அல்லது திருச்சபையினிடமோ கடந்து வந்து இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்கிறேன் என்று அறிக்கை செய்து ஊழியர்கள் அல்லது திருச்சபை மூலமாய் உபதேசம் பெற்று தன்னுடைய பழைய வழிபாடுகளையும், பழக்க வழக்கங்களையும், கொள்கைகளையும், பாவங்களையும் விட்டு வேறுபட்டு பாவமன்னிப்புக்கென்று ஞானஸ்நானம் பெற்று, திருச்சபையோடு ஐக்கியப்பட்டு தேவனைத் தொழுது கொள்ள வேண்டும். அப்பொழுதே அவர்கள் செய்த பாவம் மன்னிக்கப்படும். இரட்சிக்கப்படுகிறார்கள். தேவனுடைய குடும்பத்தில் (திருச்சபை)ஒரு அங்கமாகிறார்கள். ஆதலால் கர்த்தருடைய நாமத்தை தொழுது கொள்ளுகிற எவனும் இரட்சிக்கப்படுவான் (ரோம 10 : 13). 'இதை அவர்கள் கேட்ட பொழுது, இருதயத்திலே குத்தப்பட்டவர்களாகி பேதுருவையும் மற்ற அப்போஸ்

தலரையும் பார்த்து: சகோதரரே! நாங்கள் என்ன செய்ய வேண்டும் என்றார்கள். பேதுரு அவர்களை நோக்கி: நீங்கள் மனந்திரும்பி, ஒவ்வொருவரும் பாவமன்னிப்புக்கென்று இயேசுகிறிஸ்துவின் நாமத்தினாலே ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ளுங்கள், அப்பொழுது பரிசுத்த ஆவியின் வரத்தைப் பெறுவீர்கள். வாக்குத்தத்தமானது உங்களுக்கும், உங்களுடைய பிள்ளைகளுக்கும் நம்முடைய தேவனாகிய கர்த்தர் வரவழைக்கும் தூரத்திலுள்ள யாவருக்கும் உண்டாயிருக்கிறது என்று சொல்லி; இன்னும் அநேக வார்த்தைகளாலும் சாட்சி கூறி, மாறுபாடுள்ள இந்தச் சந்ததியை விட்டு விலகி உங்களை இரட்சித்துக் கொள்ளுங்கள் என்றும் புத்தி சொன்னான். அவனுடைய வார்த்தையைச் சந்தோஷமாய் ஏற்றுக் கொண்டவர்கள் ஞானஸ்நானம் பெற்றார்கள். அன்றையத்தினம் ஏறக்குறைய மூவாயிரம் பேர் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள். அவர்கள் அப்போஸ்தலருடைய உபதேசத்திலும் அந்நியோந்நியத்திலும், அப்பம் பிட்குதலிலும், ஜெபம் பண்ணுதலிலும் உறுதியாய்த் தரித்திருந்தார்கள்" (அப் 2 : 37-42).

ஆனால் இந்நாட்களில் நீ எங்கிருந்தாலும் சரி இயேசு கிறிஸ்துவை விசுவாசி, நீ இருக்கிற இடத்திலிருந்தே ஜெபம் பண்ணு, கர்த்தர் உன் பாவங்களை மன்னிப்பார்; உன்னை இரட்சிப்பார் என்றும், இரட்சிக்கப்பட நீ எங்கும் போக வேண்டாம்; சபை தேவை இல்லை என்றும், தவறுதலாக சிலர் பிரசங்கிக்கிறார்கள், எழுதுகிறார்கள். தேவன் மனுமக்களை சபையில் கூட்டி சேர்ப்பதினால் இரட்சிக்க திட்டமிட்டார். அப். பேதுருவும் இன்னும் அநேக வார்த்தைகளாலும் சாட்சி கூறி மாறுபாடுள்ள இந்தச் சந்ததியை விட்டு விலகி உங்களை இரட்சித்துக் கொள்ளுங்கள் என்றும் புத்தி சொன்னான். அவனுடைய வார்த்தையை சந்தோஷமாக ஏற்றுக் கொண்டவர்கள் ஞானஸ்நானம் பெற்றார்கள். அன்றையத்தினம் ஏறக்குறைய 3000 பேர் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள் என்று (அப் 2 : 39-42) வேதத்தில் தெளிவாக எழுதியுள்ளது. காணப்படாத சபையோடு (Invisible Body) மாத்திரமல்ல, காணப்படுகிற சரீரமாகிய சபையோடே (Visible Body) சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள் என்றே வேதத்தில் எழுதியிருக்கிறது. இரட்சிக்கப்படுகிறவர்களைக் கர்த்தர் அநுதினம் சபையிலே சேர்த்துக் கொண்டு வந்தார் (அப் 2 : 47). வசனத்தைக் கேட்டவர்களில் அநேகர் விசுவாசித்தார்கள். அவர்கள் தொகை ஏறக்குறைய ஐயாயிரமாயிருந்தது. (அப் 4 : 4). திரளான புருஷரும், ஸ்திரீகளும் விசுவாசமுள்ளவர்களாகி கர்த்தரிடமாய் அதிகமதிகமாய்ச் சேர்க்கப்பட்டார்கள் (அப் 5 : 14).

அந்நாட்களிலே சீஷர்கள் பெருகின போது (அப் 6 : 1) தேவ வசனம் விருத்தியடைந்தது. சீஷருடைய தொகை எருசலேமில் மிகவும் பெருகிற்று. ஆசாரியர்களில் அநேகர் விசுவாசத்திற்குக் கீழ்ப்படிந்தார்கள். தேவனுடைய ராஜ்யத்துக்கும் இயேசு கிறிஸ்துவினுடைய நாமத்துக்கும் ஏற்றவைகளைக் குறித்து, பிலிப்பு பிரசங்கித்ததை அவர்கள் விசுவாசித்த போது, புருஷரும் ஸ்திரீகளும் ஞானஸ்நானம் பெற்றார்கள் (அப் 8 : 12). அப்பொழுது அநேகர் கர்த்தரிடத்தில் விசுவாசமுள்ளவர்களானார்கள் (அப் 9 : 42). பேதுரு அவனைப் பார்த்து ஐனேயாவே, இயேசுகிறிஸ்து உன்னைக் குணமாக்குகிறார்; நீ எழுந்து உன் படுக்கையை நீயே போட்டுக்கொள் என்றான். உடனே அவன் எழுந்திருந்தான். அவனைக் கண்டு, லித்தாவிலும், சாரோனிலும் குடியிருந்தவர்களெல்லாரும் கர்த்தரிடத்தில் திரும்பினார்கள் (அப் 9 : 34, 35). கர்த்தருடைய கரம் அவர்களோடே இருந்தது. அநேக ஜனங்கள் விசுவாசிகளாகி கர்த்தரிடத்தில் திரும்பினார்கள். (அப் 11 : 21). அவன் நல்லவனும் (பர்னபா) பரிசுத்தாவியினாலும், விசுவாசத்தினாலும் நிறைந்தவனுமாயிருந்தான். அநேக ஜனங்கள் கர்த்தரிடமாய் சேர்க்கப்பட்டார்கள் (அப் 11 : 24). இந்த வசனங்களெல்லாம் இயேசுகிறிஸ்துவை விசுவாசித்து ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டு காணப்படுகிற திருச்சபையில் அங்கமான மக்களையே குறிப்பிடுகிறது.

அப்படியில்லாமல் சபை இரட்சிக்காது என்றும் ஒரு மனிதன் இரட்சிக்கப்படுகிறதற்கு எங்கும் போக வேண்டாம் என்றும் உபதேசிக்கிற, பிரசங்கிக்கிற, போதிக்கிற கள்ள பிரசங்கிகளுக்கு, சபைகளுக்கு

ஜனங்கள் எச்சரிக்கையாயிருக்க வேண்டும். விசுவாசமுள்ளவனுகி ஞானஸ்நானம் பெற்ற வன் இரட்சிக்கப்படுவான் (மாற்16:16). நீ இரட்சிக்கப்பட இயேசு கிறிஸ்துவை விசுவா சிப்பது மாத்திரமல்ல, வெளிப்படையாய் அவரை அறிக்கை செய்ய வேண்டும் எல்லாவற்றையும் உயிரோடிருக்கச் செய்கிற தேவனுடைய சந்நிதானத்திலேயும், பொந்து பிலாத்தியின் முன்னின்று நல்ல அறிக் கையை சாட்சியாக விளங்கப் பண்ணின கிறிஸ்து இயேசுவினுடைய சந்நிதானத்திலே யும் உனக்கு கட்டளையிடுகிறேன் (1 தீமோ 6:14). இயேசுகிறிஸ்து தம்மைக் குறித்து வெளிப்படையாய் வாயினுலே சாட்சி சொன்னதையே அறிக்கை என்று எழுதி யுள்ளது (காண்: யோவா 18:36,37; லூக் 22: 66-71; மாற் 14:61-63; மத்26:64,65). ஆனபடி யால் அறிக்கை என்றால் வெளிப்படுத்தி அறிவிப்பதாகும். எழுத்தின் மூலமாய் அறிவிப்பதும் அறிக்கையே.

**2. பாவ அறிக்கை:** இயேசுகிறிஸ்துவை அறிக்கை செய்கிறவன் தன் பாவங்களையும் அறிக்கை செய்வான். பழைய ஏற்பாட் டிலே ஒருவன் பாவம், குற்றம் இவைகளைச் செய்து விட்டால் அதைச் சபைக்கு முன் அல்லது ஆசாரியன் முன் தான் செய்தது பாவம் என்று அறிக்கை செய்ய வேண்டும். பாவத்திற்கான பிராயச்சித்தப் பலியைக் கொண்டு வரவேண்டும். ஆசாரியன் அவனுக்காக பாவ நிவிர்த்தி செய்வான் (எண் 5:5-8; லேவி 5:1-10). இப்படி ஆசாரி யன் முன்பாக அல்லது தலைவர்களுக்கு முன்பாக அறிக்கை செய்வதே கர்த்தருக்கு முன்பாக பாவ அறிக்கை செய்வதாகும். அப்பொழுது யோசுவா ஆகானை நோக்கி நீ இப்பொழுது இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தரை மகிமைப்படுத்த அவருக்கு முன்பாக அறிக்கை பண்ணி நீ செய்ததை எனக்குச் சொல்லு. அதை எனக்கு ஒளிக்காதே என்றான் (யோசு 7:19). தாவீதும் நாத்தான் தீர்க்கதரிசியின் முன் பாக அறிக்கை செய்தான் (II சாமு 12:13). இப்படி அறிக்கை செய்வதையே கர்த்த ருக்கு முன்பாக அறிக்கையிடுகிறேன் என்று தாவீது சொல்லியிருக்கிறார் (சங் 51:4;32:5)

சிறையிருப்பிலிருந்து திரும்பி வந்த சபை யாரும் இப்படியே அறிக்கை செய்தார்கள் (நெகே 9:1-3; எஸ்றா 10:11). புதிய ஏற்பாட் டிலே சுவிசேஷத்தின் ஆரம்பம் யோவான் ஸ்நானகனுடைய ஊழியத்திலிருந்தே ஆரம்பமாகிறது. யோவான் முன் தூதனாக வந்து மனந்திரும்புதலின் சுவிசேஷத்தை பிரசங்கித்து பாவ மன்னிப்புக்கென்று ஞானஸ்நானம் கொடுத்ததிலிருந்தே ஆரம்ப மாகின்றது. நான்கு சுவிசேஷங்களிலேயும் ஆரம்ப அதிகாரங்களில் யோவான் ஸ்நான கனுடைய ஊழியம் எழுதப்பட்டுள்ளது. யோவானுடைய பிரசங்கத்தைக் கேட்ட மக்கள் மனந்திரும்பி தேவனை விசுவாசித்து யோவானிடத்திற்குப் போய் தங்கள் பாவங் களை அறிக்கையிட்டு யோர்தான் நதியில் அவனால் ஞானஸ்நானம் பெற்றார்கள் (மத் 3:1-6).

இந்த ஞானஸ்நானம் பெற்ற மக்கள் எல்லாரும் பாவமன்னிப்பை பெற்றுக் கொண்டார்கள். பாவமன்னிப்பாகிய இரட் சிப்பை பெற்றுக் கொண்டார்கள். யோவான் வனாந்தரத்தில் ஞானஸ்நானங் கொடுத்து பாவமன்னிப்புக்கென்று மனந் திரும்புதலுக்கேற்ற ஞானஸ்நானத்தைக் குறித்துப் பிரசங்கம் பண்ணிக் கொண் டிருந்தான். அப்பொழுது யூதேயா தேசத் தார் அனைவரும் எருசலேம் நகரத்தார் யாவரும், அவனிடத்திற்குப் போய் தங்கள் பாவங்களை அறிக்கையிட்டு, யோர்தான் நதியில் அவனால் ஞானஸ்நானம் பெற்றார் கள் (மாற் 1 : 4, 5). "நீயோ பாலகனே, உன்னதமானவருடைய தீர்க்கதரிசி என்னப்படுவாய்; நீ கர்த்தருடைய வழிகளை ஆயத்தம் பண்ணவும், நமது தேவனுடைய உருக்கமான இரக்கத்தினாலே அவருடைய ஜனத்துக்குப் பாவமன்னிப்பாகிய இரட்சிப் பைத் தெரியப்படுத்தவும், அவருக்கு முன்னாக நடந்து போவாய் (லூக் 1:76, 77). இந்த இடத்திலே மக்கள் பாவ மன்னிப்புப் பெற மனந்திரும்பி தங்களுடைய பாவங்களை அறிக்கையிட்டு பாவமன்னிப்புக்கென்று ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டார்கள் என்று பார்க்கிறோம். அவன் யோர்தான் நதிக்கு அருகான தேசமெங்கும் போய், பாவமன்னிப்புக் கென்று மனந்திரும்புதலுக் கேற்ற ஞானஸ்நானத்தைக் குறித்துப் பிர சங்கித்தான் (லூக் 3:6). இந்த ஞானஸ் நானத்தையே அப்போஸ்தலர்கள் எல்லாரும்

பெற்றிருந்தார்கள். இந்த ஞானஸ்நானம் பெற்றவர்கள் தேவனுடைய இராஜ்யத்துக்குள் பிரவேசிக்கிறார்கள் என்று இயேசுகிறிஸ்து சொல்லுகிறார் (மத் 21:25-32).

இந்த ஞானஸ்நானத்தை பெறாத மக்களை இயேசுகிறிஸ்து கடிந்து கொண்டார். அவர்கள் தங்களுக்குக் கேடுண்டாகத் தேவனுடைய ஆலோசனையை தள்ளி விட்டார்கள் என்று சொன்னார் (லூக் 7 : 29,30).

புதிய ஏற்பாட்டின் ஞானஸ்நானம் யோவான் ஸ்நானகனுடைய ஞானஸ்நானத்தை தொடர்ந்து வருகிறது. இங்கே மனந்திரும்புதலும், இயேசுகிறிஸ்துவைப் பற்றி விசுவாசமும், அறிக்கை செய்தலும் சம்மந்தப்பட்டிருக்கிறது. பெந்தேகோஸ்தே நாளில் அப்போஸ்தலனாகிய பேதுரு தன்னுடைய முதல் பிரசங்கத்தை செய்தபொழுது நாங்கள் என்ன செய்ய வேண்டும் என்று கேட்ட மக்களுக்கு நீங்கள் ஒவ்வொரும் மனந்திரும்பி பாவமன்னிப்புக்கென்று கிறிஸ்துவின் நாமத்தினால் ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ளுங்கள் என்று சொன்னார் (அப் 2:37, 38). முறையாக ஞானஸ்நானம் பெறப் போகிறவர் ஞானஸ்நானத்திற்கு முன்னாலோ ஞானஸ்நானம் பெறும் பொழுதோ தங்களுடைய பாவங்களை அறிக்கை செய்துவிட்டு ஞானஸ்நானம் பெறவேண்டும். இதுவே சரியான ஞானஸ்நானம்.

யோவான் ஞானஸ்நானத்தை விளங்கிக் கொள்ளாதவர்கள் அப்போஸ்தலர்களாக இருக்க தகுதியற்றவர்களென்று ஆதி சபை தீர்மானித்தது (அப் 1:21, 22). இயேசுகிறிஸ்துவை அறிக்கை செய்கிறவன் தன் பாவங்களையும் அறிக்கை செய்வான். விசுவாசித்தவர்களில் அநேகர் வந்து தங்கள் செய்கைகளை வெளிப்படுத்தி அறிக்கையிட்டார்கள் (அப் 19 : 18). இப்படியே ஆதி சபை ஞானஸ்நானம் கொடுத்தது. யோவானிடத்தில் பாவ அறிக்கை செய்யவில்லை. தங்களுடைய மனதில் தான் தேவனை நோக்கி பாவ அறிக்கை செய்தார்கள் என்று சிலர் சொல்லலாம். இல்லை! யோவானிடத்திலேயே பாவ அறிக்கைசெய்து ஆலோசனையும் பெற்றுக் கொண்டார்கள். அவரிடத்தில் ஞானஸ்நானம் பெற வந்தவர்கள் ஒவ்வொருவரும் நாங்கள் என்ன செய்ய வேண்டும் என்று கேட்டார்கள். யோவான் அவர்களுக்கு ஆலோசனையும் கொடுத்தார் (காண்: லூக் 3:7-14).

இன்றும் சிலர் நான் இயேசுவினிடத்திலே பாவ அறிக்கை செய்வேன் என்று சொல்லுவார்கள். இயேசுகிறிஸ்து இந்த பூமியிலிருந்த பொழுது தன்னிடத்தில் பாவ அறிக்கை செய்யும்படியாக யாரையும் சொல்லவில்லை. ஒரு மனிதனாவது அவரிடத்தில் பாவ அறிக்கை செய்யவுமில்லை. அவர் தேவன். மனிதருடைய இருதயத்தின் யோசனைகளையும், அதின் தோற்றுவாய் முதற்கொண்டு அவர் அறிந்திருக்கிறார். அவரிடத்திலே யாராவது பாவ அறிக்கை செய்ததாக ஒரு வேத வசனத்தையாவது யாராவது காட்டக் கூடுமா? நம்முடைய பாவங்களை நாம் அறிக்கையிட்டால், பாவங்களை நமக்கு மன்னித்து எல்லா அநியாயத்தையும் நீக்கி நம்மைச் சுத்திகரிப்பதற்கு அவர் உண்மையும் நீதியும் உள்ளவராயிருக்கிறார் (1யோவா 1:9). தன் பாவங்களை மறைக்கிறவன் வாழ்வடையமாட்டான்; அவைகளை அறிக்கை செய்து விட்டு விடுகிறவனே இரக்கம் பெறுவான் (நீதி 28:13).

நீ இயேசுகிறிஸ்துவை விசுவாசித்து முழுகி ஞானஸ்நானம் பெற்றிருந்தாலும் உன் பாவங்களை நீ அறிக்கை செய்யாத வரை பாவத்திலிருந்தும், குற்ற மனச்சாட்சியிலிருந்தும் உனக்கு பூரணமான விடுதலை கிடைக்காது. அரைகுறை உபதேசத்தினால் சத்தியங்கள் மறைக்கப்பட்டிருக்கிறது.

மக்கள் பாவ உணர்வினால் தாக்கப்பட்டு தேவனை நோக்கி ஜெபிக்கும் பொழுதெல்லாம் அழுது ஒப்பாரி வைக்கிறார்கள். தேவனை நோக்கி பாவ அறிக்கை செய்து ஜெபம் பண்ணினால் மன்னிப்பு உண்டாகி விடுகிறதென்றால் மறுநாளும், பின்னாலும் நீ ஜெபிக்கும் பொழுதெல்லாம் உன் பாவம் உனக்கு முன்பாக வருகிறதும், நீ அழ வேண்டியதுமான அவசியம் என்ன? பொதுவான கிறிஸ்தவர்களும் ஆவி பெற்றிருக்கிறோம் என்று சொல்லுகிற சில கூட்டத்தார்களும் பாவ அறிக்கை செய்வதைப் பற்றி என்ன அபிப்பிராயம் கொண்டிருக்கிறார்கள் என்பதை கீழே கவனிப்போம்.

(தொடரும்...)

"அவன் மனுஷரை நோக்கிப் பார்த்து: நான் பாவஞ் செய்து செம்மையானதை புரட்டினேன்...... என்று சொல்லுவான்.

—யோபு 33:27,28.

# ஆதியாகமத்தைப் பற்றி ஒரு ஆராய்ச்சி

எழுதப்பட்ட இடம்: சீனாய் மலை வனாந்தரம்
காலம்: 1658 BC (கிறிஸ்துவுக்கு முன்)
எழுதியவர்: தேவனுடைய தாசனும், இஸ்ரவேலின் தலைவனுமாகிய மோசே.

ஆதியாகமம் பஞ்சாகமம் என்று அழைக்கப்படும் வேதாகமத்தில் முதல் ஐந்து புஸ்தகங்களில் ஆரம்ப புஸ்தகமாக இருக்கிறது. இந்த ஐந்து (5) புஸ்தகங்களுக்கும் நியாயப்பிரமாணம் என்று பெயர். இதற்கு "தோரா" என்று யூதர்கள் சொல்லுவார்கள். மூலபாஷையில் இந்த ஐந்து (5) புஸ்தகங்களும் ஒரே புஸ்தகமாகவும் ஐந்து பிரிவுகளாகவும் இருக்கிறது.

நியாயப்பிரமாணத்தின் முதற்பிரிவே ஆதியாகமம். உபாகமத்தின் கடைசி அதிகாரத்தை (அதி 34) மோசேயின் மரணத்திற்குப்பின் யோசுவா எழுதி (நியாயப் பிரமாண புஸ்தகத்தில்) வைத்தார் (யோசு 24 : 26).

**நோக்கம்:** ஆதியாகமம் எல்லாவற்றிற்கும் ஆதியாகவும், மூலமாகவும் இருக்கிறது. எந்த ஒரு முக்கியமான உபதேசத்திற்கும், வெளிப்படுத்தல்களுக்கும் இது மூலமாக, ஆதாரமாக இருக்கிறது. மனிதன் பாவத்தில் விழுந்தது முதல் தேவனுடைய மீட்பின் திட்டத்தின்படி இயேசுகிறிஸ்து மூலமாய் உண்டாகப் போகும் மீட்கும் திட்டத்து விதை இங்கேயிருந்து ஆரம்பமாகிறது. வேதாகமத்தின் (Bible) சத்தியங்களுக்கு ஆதாரம் இங்கே இருக்கிறது. வேதாகமத்தின் நோக்கம், கருத்து ஆகியவைகளை இதில் காணலாம். வேதாகமத்தை சரியாக விளங்கிக் கொள்ள, அர்த்தம் புரிய ஆதியாகமத்தை ஆராய வேண்டும். உலகத்துக்கு தேவன் அருளும் உற்பத்தி ஆதாரம் ஆதியாகமமே.

**காரணம்:** முதல் உலகத்தைப் பற்றியும், முதலாவது வானம் பூமி சிருஷ்டிப்பைப் பற்றியும் ஆதியாகமம் அறிவிக்கிறது (ஆதி 1 : 1). பின் மறுபடியும் வானமும் பூமியும் புதுப்பிக்கப்பட்ட வரலாற்றையும் மனிதனின் சிருஷ்டிப்பையும், மனிதனின் வீழ்ச்சியையும், ஆதாமில் ஏதேனில் பாவம் நுழைந்த சம்பவத்தையும் ஆதியாகமம் அறிவிக்கிறது. முந்திய உலகமாயிருக்கட்டும்; இப்பொழுதிருக்கிற உலகமாயிருக்கட்டும்; வானமும் பூமியும் அவைகளின் சர்வ சிருஷ்டிகளும் ஒரே சிருஷ்டி கர்த்தராகிய தேவனால் சிருஷ்டிக்கப்பட்டது என்பதை வேதாகமம் நிரூபிக்கிறது. முதல் உலகத்திற்கும் இப்பொழுதிருக்கிற உலகத்திற்கும் மத்தியில் பல லட்சக்கணக்கான வருஷங்கள் கடந்து சென்றுள்ளது.

பரிணாமதத்துவத்தின் படியல்ல. ஒரே சிருஷ்டிகராய் உலகம் சிருஷ்டிக்கப்பட்டுள்ளது. மனிதன் பாவத்தில் விழுந்த பின் அல்லது பிந்திய உலகம் சிருஷ்டிக்கப்பட்ட (புதுப்பிக்கப்பட்டதற்கு) 2391 வருஷங்களுக்குப்பின் மோசே இருந்தார். ஆதியாகமத்தில்: அதிகாரங்கள் 50 ; 1533 வசனங்கள், 38267 வார்த்தைகள்; 1355 வார்த்தைகளில் சரித்திரம் உள்ளது. 148 கேள்விகள்; 56 தீர்க்கதரிசனங்கள்; 123 வசனங்களில் தீர்க்கதரிசனங்கள் அடங்கியுள்ளன; 23 வசனங்களில் சுருக்கமான தீர்க்கதரிசனங்கள் உள்ளன. சிறிய அதிகாரம் அதி 16; பெரிய அதிகாரம் அதி 24; அதி 16ல் வசனங்கள் 16; அதி 32ல் 32 வசனங்கள்; 5 அதிகாரங்கள் 34 வசனங்களுள்ளவைகள். 22, 24, 32 வசனங்கள் முறையே (4) நான்கு (4) நான்கு அதிகாரங்களில் காணப்படுகின்றன. 106 கட்டளைகள்; 71 வாக்குத்தத்தங்கள்; 326 முன் அறிவிப்புகள் (Predictions); கர்த்தர் சொன்னதாக 95 இடங்கள் காணப்படுகிறது.

ஆதியாகமத்தை எழுதியவர் மோசே என்பதற்கு 16 ஆதாரங்கள்:

1. தேவனே மோசேயை எழுதும்படி கட்டளையிட்டார் (யாத் 17 : 14 ; 34 : 27).
2. மோசே அப்படியே எழுதினார் (யாத் 24 : 4-7 , எண் 33 · 2; உபா 31 : 9).
3. மோசே இதை உடன்படிக்கையின் புத்தகமென்று அழைத்தார் (யாத் 24 : 7). நியாயப் பிரமாணம், நியாயப்பிரமாண புத்தகம் என்றழைத்தார் (உபா 28 : 58, 61 ; 29: 20-27, 30 : 10 ; 31 : 24-26).

4. மோசே எழுதின இந்த நியாயப்பிரமாண புஸ்தகத்தை ராஜா பார்த்து தனக்கென்று ஒரு பிரதி(Copy)எழுதி எடுத்து தன்னிடத்தில் வைத்து வாசிக்க வேண்டும் (உபா 17:18-20).

5. தேவன் யோசுவாவிடம் மோசேயின் நியாயப்பிரமாணத்தின்படி நட, எழுது என்றார் (யோசு 1:5-9; 8:30-35).

6. யோசுவா நியாயப்பிரமாணம் மோசேயால் உண்டாயிற்று என்று ஒப்புக்கொண்டிருந்தார். மோசேயின் மரணத்துக்குப்பின் பின் அதோடு மோசேயின் மரணத்தை எழுதி வைத்தார் (உபா 34, யோசு 24:26).

7. மோசேயின் நியாயப்பிரமாணத்தின்படி நடவுங்கள் என்று இஸ்ரவேல் ஜனங்களுக்கு யோசுவா கட்டளையிட்டார் (யோசு 23:6).

8. ராஜாக்கள் இதை ஒத்துக் கொண்டார்கள்:-

a. தாவீது (I நாளா 16:39).

b. தாவீது சாலொமோனுக்கு கட்டளையிட்டார் (I இரா 2:3,4).

c. யோசியாவும் இஸ்ரவேல் ஜனங்களும் கண்டெடுக்கப்பட்ட நியாயப்பிரமாண புஸ்தகத்திற்கு கீழ்ப்படிந்தார்கள் (II இரா 22:8; 23:1-24; II நாளா 34:14; 35:12).

d. யோசபாத் இந்த புஸ்தகத்தை எல்லா இஸ்ரவேலருக்கும் போதிக்கும்படி கட்டளையிட்டான் (II நாளா 17:9).

e. அமத்சியா அதற்கு கீழ்ப்படிந்தான் (II நாளா 25:4).

f. யோவாஸ் கீழ்ப்படிந்தான் (II நாளா 24:18).

g. எசேக்கியா அதற்குக் கீழ்ப்படிந்தான் (II நாளா 30:1-18).

9. தீர்க்கதரிசிகள் அதிலிருந்து ஆதாரம் காட்டியுள்ளனர் (ஏசா 8:20; தானி 9:11; மல்கி 4:4).

10. எஸ்றாவும், நெகேமியாவும் மோசேயின் நியாயப்பிரமாணம் என்கின்றனர் (எஸ்றா 3:2; 6:18; 7, 6. 10, 14, 21, 25; நெகே 1:7-9; 8:8, 14, 18; 10: 28, 29; 13:1).

11. இயேசுகிறிஸ்து ஒப்புக்கொண்டுள்ளார் (லூக் 24:27, 44; மாற் 12:26; மாத் 3; மாற் 7:10; மாத் 20:12; 21:17; யோவா 1:17; 5:46; 7:19,23).

12. அப்போஸ்தலர்கள் மோசேயின் நியாயப் பிரமாணம் என்றார்கள் (அப் 13:39; 15:1, 5, 21; 28:23).

13. கிட்டதட்ட 3500 வருஷங்களாக யூதர்கள் பஞ்சாகமத்தை மோசே எழுதினார் என்பதில் விசுவாசமாயிருக்கிறார்கள்.

14. பல வேத ஆராய்ச்சியாளர்களும், சரித்திர ஆசிரியர்களும் பஞ்சாகமத்தை மோசே எழுதினதாகவே ஒப்புக் கொள்ளுகின்றனர்.

15. முகமது போன்ற மதத் தலைவர்களும் பஞ்சாகமத்தை மோசே எழுதினதாகவே ஒப்புக் கொள்ளுகின்றனர்.

16. மோசேயே தான் எழுதினதாக கூறியுள்ளார் (யாத் 24:4; எண் 33:2; உபா 31:9, 22).

(தொடரும்)

"உலகங்கள் தேவனுடைய வார்த்தையினால் உண்டாக்கப்பட்டது .." -எபி 11:13

# வேதபாடம்

(தொடர்ச்சி)

யாத் 7:8,9 பார்வோன் உங்களை அற்புதம் காட்டுங்களென்பான், நீ ஆரோனை நோக்கி உன் கோலை, எடுத்து அதை பார்வோன் முன் போடு. அது சர்ப்பமாகும் என்று கர்த்தர் தீர்க்கதரிசனமாக சொன்னார்.

யாத் 7:10 ஆரோன பார்வோனுக்கு முன்பாக கோலைப் போட்டான். அது சர்ப்பமாயிற்று இது கர்த்தர் மோசேயின் மூலமாய் எகிப்தில் செய்த முதலாம் அற்புதம்.

யாத் 7:11—13 பார்வோன் எகிப்தின் ஞானிகளையும், மந்திரவாதிகளையும் அழைத்தான். அவர்களும் தங்கள் மந்திர வித்தைகளினால் சர்ப்பங்களை உண்டு பண்ணினார்கள்.

ஆனால் ஆரோனுடைய கோலோ அவர்களுடைய கோல்களை விழுங்கிற்று. இதில் சாத்தானுடைய வல்லமையை தேவனுடைய வல்லமை மேற்கொள்ளுகிறதைப் பார்க்கிறோம். அந்த மந்திரவாதிகளின் பெயர்கள் யந்நே, யம்பிரே என்பது. ஆனால் பார்வோனின் இருதயம் கடினப்பட்டது மோசே, ஆரோனுக்கு செவிகொடாமற் போனான்.

யாத் 7:14—25 கர்த்தர் மோசேயை நோக்கி நீ பார்வோனிடத்தில் போய் எனக்கு ஆராதனை செய்யும்படி என் ஜனங்களை அனுப்பி விடும்படி என்னை கர்த்தர் அனுப்பியும் நீர் இதுவரைக்கும் கேளாமற் போனீர். ஆனபடியினால் என் கையில் இருக்கிற கோலினால் நதியை அடிப்பேன். அப்பொழுது நதியின் தண்ணீர் இரத்தமாய் மாறிப்போம், மீன்கள் செத்து நாறும். இதினால் நான் தேவன் என்பதை நீ அறிந்து கொள்ளுவாய் என்று கர்த்தர் சொல்லுகிறார் என்று சொல்லி எகிப்தின் எல்லா நீர்நிலைகளின் மேலும் ஆரோன் கோலை நீட்டினான். அப்பொழுது எகிப்தின் நீர்நிலைகளெல்லாம் இரத்தமாய் மாறிற்று. பாத்திரங்களில் இருந்த தண்ணீரெல்லாம் இரத்தமாய் மாறிற்று. இது மோசே எகிப்தில் செய்த 2-ம் அற்புதம். எகிப்தின் மந்திரவாதிகளும் தங்கள் மந்திர வித்தைகளினால் அப்படிச் செய்தார்கள். எகிப்தின் மந்திரவாதிகள் கோலை சர்ப்பமாக்குவதும், தண்ணீரை இரத்தமாக்குவதும், தவளைகளைப் பிறப்பிப்பதுமான சில மந்திர வித்தைகளை மாத்திரம் செய்ய முடிந்தது. மோசே செய்த எல்லா அற்புதங்களையும் மந்திரவாதிகளால் செய்ய முடியவில்லை(யாத் 8:18;9:11). சாத்தானுடைய வல்லமை மட்டுக்குட்பட்டதாகும். தேவனுடைய வல்லமைக்கு முன்பாக சாத்தானுடைய வல்லமை ஒன்றுமில்லாமல் ஒடுப்போம்.

யாத் 8:1—15 ஐந்தாவது தடவையாக எனக்கு ஆராதனை செய்ய என் ஜனங்களை அனுப்பி விடு அல்லவென்றால் உன் எல்லைகளெல்லாம் தவளைகளை அனுப்பி விடுவேன் என்று கர்த்தர் சொல்லுகிறார் என்று மோசேயின் மூலமாய் கர்த்தர் சொன்னார். அப்படியே மோசேயும், ஆரோனும் எகிப்தை தவளைகளினால் நிரப்பினார்கள். இது மோசே எகிப்தில் செய்த 3-ம் அற்புதம். மந்திரவாதிகளும் தங்கள் மந்திர வித்தைகளினால் அப்படிச் செய்தார்கள். பார்வோன் மோசேயையும் ஆரோனையும் அழைப்பித்து தவளைகளை எங்களை விட்டு நீங்கும்படி கர்த்தரை வேண்டிக் கொள்ளுங்கள் என்று கேட்டான். மோசே ஜெபம் பண்ண தவளைகள் எல்லாம் செத்துப் போயின. இளைப்பாறுதல் உண்டாயிற்றென்று பார்வோன் கண்டபோதோ தன் இருதயத்தை கடினமாக்கி மோசே, ஆரோனுக்கு செவிகொடாமற் போனான்.

யாத் 8:16—19 மோசே ஆரோனின் கோலைக் கொண்டு புழுதியில் அடிக்கக் கட்டளையிட்டான். அப்பொழுது மனிதர் மேலும், மிருக ஜீவன்கள் மேலும் பேன்களாய், எகிப்து தேசத்தின் புழுதிகளெல்லாம் பேன்களாயிற்று. இது மோசே எகிப்து தேசத்தில் செய்த 4-ம் அற்புதம். மந்திரவாதிகளும் அப்படி செய்ய முயற்சித்த போது அவர்களால் கூடாமற் போயிற்று. அப்பொழுது மந்திரவாதிகள் பார்வோனை நோக்கி இது தேவனுடைய விரல் என்று சொன்னார்கள். ஆனாலும் பார்வோனுடைய இருதயம் கடினப்பட்டது.

யாத் 8:20—32 ஆறுவது தடவையாக எனக்கு ஆராதனை செய்யும்படியாக என் ஜனங்களை போகவிடு. போகவிடா விட்டால் உன் தேசம் முழுவதையும் வண்டுகளினால் நிறையப் பண்ணுவேன்; என் ஜனங்கள் இருக்கிற கோசேன் நாட்டில் வண்டுகள் வராதபடி அதை விசேஷப்படுத்துவேன். இதினாலே நானே தேவன் என்பதை நீ அறிந்து கொள்வாய் என்று தேவன் சொன்னார். அப்படியே எகிப்து தேசமெங்கும் வண்டுகளால் நிறைந்தது. இது மோசே எகிப்தில் செய்த 5-வது அற்புதம். ஆனால் இஸ்ரவேல் குடியிருந்த கோசேன் நாட்டில் மாத்திரம் அவைகள் காணப்படவில்லை. இதன் மூலமாய் தேவ ஜனங்களுக்கும் உலகத்தாருக்கும் மத்தியில் தேவன் வித்தியாசத்தைக் காண்பித்தார். தேவ ஜனங்களுக்கு மீட்பு உண்டாயிருந்தது. சாத்தான் தன்னுடைய ஜனங்களுக்கு பாதுகாப்பு கொடுக்க முடியவில்லை. மோசேயின் மூலமாய் எகிப்தில் உண்டான வாதைகளால் கோசேன் நாடு பாதிக்கப்படவில்லை. மகா திரளான வண்டுகளினால் எகிப்து தேசம் சேதப்பட்டது.

அப்பொழுது பார்வோன் மோசேயையும் ஆரோனையும் அழைப்பித்து நீங்கள் போய் உங்கள் தேவனுக்கு தேசத்தில் தானே பலியிடுங்கள் என்று சொன்னான். மோசேயும் ஆரோனும் நாங்கள் எகிப்திலே பலியிட மாட்டோம். அது எங்கள் தேவனுக்கு அருவருப்பு. நாங்கள் மூன்று நாள் பிரயாணம் போய் வனாந்தரத்தில் பலியிடுவோம் என்றார்கள். அப்பொழுது பார்வோன் வண்டுகள் எங்களைவிட்டு நீங்கும்படி செய்யுங்கள். அப்பொழுது நான் உங்களை போக விடுவேன் என்றான். மோசே வண்டுகள் நீங்கும்படி தேவனை நோக்கி வேண்டிக் கொண்டார்; அப்பொழுது வண்டுகள் தேசத்தை விட்டு நீங்கிப் போயிற்று. ஆனால் பார்வோனோ இந்த முறையும் வஞ்சனை செய்து ஜனங்களை தேவனை ஆராதிக்க போகவிட மாட்டேன் என்று சொல்லி விட்டான்.

(தொடரும்)

> "நான் தேவனுடைய விரலினாலே பிசாசுகளைத் துரத்துகிற படியால் தேவனுடைய ராஜ்யம் உங்களிடத்தில் வந்திருக்கிறதே"
>
> —லூக் 11:20.

# மோட்ச வழி

## குரு—சிஷ்ய உரையாடல்

*சிஷ்யன்:* சாத்தான் என்பது யார்?

குரு: முந்திய உலகத்தில் தேவனுக்கு கீழ்ப்படியாமையினால் தள்ளப்பட்ட ஒரு பிரதான தேவ தூதனாகும் சாத்தான். அவன் ஒரு சிருஷ்டி (எசே 28:1-19; ஏசா 14 : 11-14)

சிஷ்யன்: அவன் எதற்காக சிருஷ்டிக்கப்பட்டான்?

குரு: அவன் தேவனுடைய பாதுகாவலரில் ஒருவனாகச் சிருஷ்டிக்கப்பட்டான்?

சிஷ்யன்: அவன் எப்படி வீழ்ச்சியடைந்தான்?

குரு: தனக்கு கொடுக்கப்பட்ட சக்தியும் வல்லமை அறிவினாலே தேவனின்றி வாழவும் தேவனுடைய சட்டங்களை மீறி நடக்கவும் தான் தேவனாக வேண்டுமென்றும் எண்ணினான். அவனோடு ஒரு கூட்டம் தூதர்களும் உண்டு.

சிஷ்யன்: பிறகு என்ன நேர்ந்தது?

குரு: தேவன் அவன் ஆளுகையைத் தள்ளிப் போட்டு அவன் ஆண்டு வந்த முந்திய உலகத்தை ஜலப்பிரளயத்தினால் அழித்துப் போட்டார் (II பேது 3 : 5, 6). அவனையும் அவனோடு சேர்ந்த தூதர்களையும் கீழே தள்ளிப் போட்டார்.

சிஷ்யன்: இப்பொழுது அவன் என்ன செய்கிறான்?

குரு: அவனும் அவனுடைய தூதர்களும் பிசாசுகளாக கெட்ட ஆவிகளாக மனித உலகில் உலாவி தேவன் நேசிக்கும் மனிதர்களை வஞ்சித்து ஏமாற்றி தன்னை வணங்கும்படி செய்து அவனுக்கு கீழ்ப்படிகிற மனிதர்களை ஆண்டு வருகிறான்.

சிஷ்யன்: அவனுடைய நோக்கமென்ன?

குரு: மனிதர்களைக் கெடுத்து பாவம் செய்யவும் தன்னை வணங்கவும் செய்து அவர்களை வேதனைப்படுத்தி தன்னோடு கூட எரிகிற கந்தகமும் அக்கினியுமுள்ள நரகத்திற்கு கூட்டிச் செல்வதே.

சிஷ்யன்: சாத்தான் இப்பொழுது எங்கேயிருக்கிறான்?

**குரு:** ஆகாய மண்டலத்தில் வீற்றிருந்து ஆளுகை செய்கிறான்.

**சிஷ்யன்:** அவனுடைய இராஜ்யத்தின் பிரஜைகள் யார்?

**குரு:** விழுந்துபோன தூதர்களும் தேவனுடைய இரட்சிப்பை ஏற்றுக் கொள்ளாத அவிசுவாசிகளுமே. உலகத்தில் உண்டாகிற சகல தீமைகளுக்கும், பாவங்களுக்கும் அக்கிரமங்களுக்கும், அநியாயங்களுக்கும், துன்ப, துக்கம் வியாதிகள் மரணத்துக்கும் கலகங்களுக்கும் அவனே காரணம்.

**சிஷ்யன்:** சாத்தானை தேவன் ஏன் விட்டு வைத்திருக்கிறார்?

**குரு:** தேவன் சாத்தானை உடனே அழித்திருந்தால் மற்ற தேவ தூதர்கள் தேவனுடைய நீதியை அறிந்து கொள்ள முடியாமற் போயிருக்கும். அவனை விட்டு வைத்ததாலே தேவனுடைய நீதியும் சாத்தானுடைய கர்வமும், அகந்தையும், தீய குணங்களையும், கேடுகளையும் மற்றச் சிருஷ்டிகளும் அறிந்து தேவனை நேசித்து, அவர் நீதி நியாயமுள்ளவரென்பதை உணர்ந்து கொள்ள தேவன் சாத்தானை விட்டு வைத்திருக்கிறார்.

**சிஷ்யன்:** சாத்தானுடைய முடிவு என்ன?

**குரு:** அவன் சீக்கிரமாய் நித்திய நரகத்தில் தள்ளப்படுவான் (வெளி 21 : 10).

"பிசாசுகளுக்கு எதிர்த்து நில்லுங்கள், அப்பொழுது அவன் உங்களை விட்டு ஓடிப்போவான்" யாக்-4 : 7

# பிரியமான புருஷன் தானியேல்

தேவனுக்குப் பிரியமான புருஷனாகிய தானியேலிடத்தில் (தானி 10 : 11) பல விசேஷித்த குணநலன்கள் இருந்தன. அந்த குணாதிசயங்களே அவரை மேன்மைபடுத்தி உலகப்பிரகாரமாகவும், ஆவிக்குரியப்பிரகாரமாகவும் அவரை பெரியவராக்கிற்று. அவரின் குணநலன்கள்:

**1. தானியேலின் தீர்மானம்:**

இவரோ அடிமையாகக் கொண்டு வரப்பட்டவர். இராஜாவோ, அவரை தன்னுடைய போஜனத்தினால் கொழுக்க வைத்து தன் இராஜ்யத்தின் உத்தியோகஸ்தராக ஏற்படுத்த எண்ணினான். இராஜா விக்கிரகாராதனைக்காரனானபடியால், விக்கிரகத்திற்கு படைக்கப்பட்ட ராஜ போஜனத்தினால் தன்னை தீட்டுப்படுத்தக்கூடாதென தன் இருதயத்தில் தீர்மானித்தார் (தானி 1:8)

அந்த தீர்மானம் சமய சந்தர்ப்பத்தினால் மாறிப் போகாத திட்டமான தீர்மானம். ஜீவித்தாலும் மரித்தாலும் ஒருபோதும் மாறாத தீர்மானம். தேவன் இருதயத்தைப் பார்த்தார், தானியேலின் உண்மைநிலையைக் கண்டார், பிரியம் கொண்டார், மனிதர் கண்களில் தயை கிடைக்கச் செய்தார். தானியேலுடைய மாறாத தீர்மானத்தினால் தேவப்பிரமாணத்தை மீறாதபடி கர்த்தர் சகாயம் பண்ணினார். நாம் பாவத்தை ஜெயிப்பதும், பாவம் நம்மை ஜெயிப்பதும் நம்முடைய உள்மனத்தைப் பொறுத்ததே. பாவஞ்செய்ய விரும்பினால் தேவபெலன் குன்றிப்போகும். எதிரி எளிதில் மேற் கொள்வான்.

**2. தானியேலுக்கும் அவர் போன்ற ஞானிகளுக்கும் உயிராபத்து கேட்டபோது தோழர்களுடன் சேர்ந்து தேவனை நோக்கி ஜெபித்தார்.**

இந்த நெருக்கத்தினின்று விடுதலை பெற தாழ்மையுள்ள தானியேல் தேவ இரக்கத்தை தேடினார். தேவன் தயை செய்யும்படி தனது தோழர்களின் ஜெப உதவியை நாடி, எல்லாரும் சேர்ந்து ஜெபித்தார்கள் முப்புரிநூல் எளிதில் அறாது. இரண்டுபேராய் படுத்துக் கொண்டால் சூடுண்டாகுமே (பிர 4:12,11) என்ற பிரசங்கியின் தத்துவப்படி

நெருக்கத்தில் தனியேவிடப்பட்டு சோர்ந்து போகாதபடி சகோதரர்களின் ஜெப உதவியை நாடி கூடி ஜெபித்து இறைவனிடம் இரக்கம் பெற்றுக் கொண்டார்கள் (2:17,18).

ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் அதிலும் விசேஷமாய் ஊழியர்கள் கூடிவந்து ஜெபிப்பதில் தேவன் பிரியம் கொள்கிறார். அப்படி கூடி வரும்போது நடுவில் அவர் வந்து ஜெபத்தைக் கேட்கிறார். காரியம் செய்கிறது (மத் 18 : 20, 21). தேவப்பிரியர்கள் ஜெபப்பிரியர்களாய் இருப்பார்கள்.

3. தானியேலுக்கு மறை பொருளை தேவன் வெளிப்படுத்தின போது தானியேல் தேவனை ஸ்தோத்தரித்தார் (தானி 2:19). நன்மையான எந்த ஈவும் சோதிகளின் பிதாவினிடத்திலிருந்தே கிடைக்கிறது. ஈவைப் பெற்றவர்கள் இறுமாப்புக் கொள்ளாமல் தேவனுக்கு நன்றி சொல்ல வேண்டும் என தேவன் எதிர்பார்க்கிறார். அதில் அவர் பிரியப்படுகிறார். நாம் பரிசுத்த ஆவியினால் பெற்றுக் கொள்ளும் வேத இரகசியங்களுக்காகவும், காட்சி தரிசனங்களுக்காகவும், வெளிப்படுத்தல்களுக்காகவும் நன்றி (ஸ்தோத்திரம்) சொல்ல வேண்டும்.

(4) தேவ அநுகிரகத்தால் தானியேல் உலக பிரகாரமான பெரும் உயர்வு பெற்று மிகப் பெரியவரானார். உயர்வு பெற்றவுடன் அவர் செய்ததான காரியம் தன்னைப்போல் தேவபக்தியுள்ள சகோதரர்களை உயர்த்த தன்னுடைய மேன்மையைப் பயன்படுத்தினார் (தானி 2 : 48,49). அநேகரை தேவன் உயர்த்துவதின் நோக்கமே தேவ ஜனங்களுக்கு ஆதரவும் உயர்வும் செய்யவே. (உ-ம்) யோசேப்பை தேவன் உயர்த்தினார் இஸ்ரவேலரைப் பாதுகாக்க.

இதை அறியாமல் தேவனால் உயர்த்தப்பட்ட அநேகர் தங்கள் உயர்வை பெரிதாய் மதித்து, உலக மனிதர்கள் முன் நற்பேர் வாங்கவும் அவர்களையும் உறவினர்களையும் ஜாதிக்காரர்களையும் பிரியப்படுத்தவும் முற்பட்டு தங்கள் மேன்மையை இழந்து போனதுண்டு (இறை வெளிப்பாடு). எஸ்தர் ராஜாத்தி தன் ஜீவனையும் பாராமல் தேவ ஜனங்களைப் பாதுகாக்கும்படி தன்னுடைய மேன்மையை பயன்படுத்தினாள். ஆகையால் அவளும் அவள் குடும்பத்தாரும் அழியாமல் பாதுகாக்கப்பட்டனர் (எஸ்த 4 : 14).

(5) கோணலும் மாறுபாடுமான சந்ததியின் நடுவிலே குற்றமற்றவர்களும், கபடற்றவர்களும், தேவனுடைய மாசற்ற பிள்ளைகளாக இருக்க வேண்டு (பிலி 2 : 15) மென்றபடி தன்னுடைய பொறுப்பிலே குற்றமற்றவராய், உண்மை உள்ளவராய் இருந்தார் (தானி 6 : 4, 22). கொடுக்கப்பட்ட உலகப் பொருளிலே உண்மையில்லாதவன் பரம காரியத்திலும் உண்மையாயிருக்க முடியாது.

(6) அரசாங்கத்தில் பெரும் அந்தஸ்துள்ள அதிகாரியாக தானியேல் இருந்தபோதிலும் தினமும் மூன்று வேளையும் தன் தேவனுக்கு 'முன்பாக' முழங்காற்படியிட்டு ஜெபம் பண்ணி, ஸ்தோத்திரம் செலுத்தினார். இந்த ஜெப ஒழுங்கை அவர் இடைவிடாமல் செய்து வந்தார் (தானி 6 : 10). இவர் இப்படி வெட்கப்படாமல் ஜெபம் பண்ணுகிற காரியம் சுற்றிலுமிருக்கிற மக்களுக்குத் தெரிகிறதாயிருந்தது (தானி 6 : 16)

வழக்கமாய், குறித்த வேளைகளில் வீடுகளில் ஏறெடுக்கப்படும் குடும்ப ஜெபங்களில் தேவன் மிகவும் பிரியப்படுகிறார். தினமும் குறிப்பிட்ட வேளைகளில் இடைவிடாமல் பாட்டுப்பாடி ஜெபிக்க வேண்டுமென கர்த்தர் வெளிப்படுத்தியிருக்கிறார். இதனால் அந்தக் குடும்பத்தாருக்கு ஆத்மிக பாதுகாவலும், சரீர பாதுகாவலும், பிரச்சனையற்ற நிறைவான வாழ்வும், நற்சாட்சியும் கிட்டும்.

(7) பயங்கரமான உபத்திரவத்திலும், நீதிமான் சிங்கத்தைப் போல் தைரியமாயிருப்பான் (நீதி 28 : 1) என்றபடி தானியேல் தன் தேவன்மேல் அசையா விசுவாசமாயிருந்தார் (தானி 6 : 23). ஒரு நல்ல விசுவாசி ஆபத்திலும் சோர்ந்து போகாமல் பதற்றமடையாமல் எல்லாவற்றையும் ஜெபத்தில் தேவனுக்குத் தெரியப்படுத்தி சமாதானமாயிருப்பான்.

(8) தானியேலுக்கு உலகப் பிரகாரமாக பல வேலைகள் இருந்த போதிலும், வேலை அதிகம் பைபிள் படிக்க நேரம் கிடைக்கவில்லை என்று இன்று பலர் சொல்லுகிறபடி சொல்லாமல், வேதத்தை ஆராய்ந்து

பார்க்கிறவராயிருந்தார் (தானி 9 : 2). வேதம் நமக்கு மனமகிழ்ச்சி, அதை நேசித்தால் சுகம் உண்டாகும்.

(9) தனக்கானவைகளை அல்ல பிறருக்கானவைகளையும் தேடக்கடவன் என்றபடி தானியேல் ஜனத்தாரின் நலனுக்காய் உபவாசமிருந்து ஜெபம் பண்ணுகிறவராயிருந்தார் (தானி 9 . 2-19).

தானியேலின் பக்தியையும், பரிசுத்தத்தையும் தேவனுக்கேற்ற வாழ்க்கையையும் கண்டீர்கள். அவருடைய மேன்மையையும் அறிந்தோம். இது நமக்கு திருஷ்டாந்தமாய் எழுதப்பட்டுள்ளது. அவரைப் போல நாமும் தேவனுக்குப் பிரியமானவர்களாய் நடப்போமாக.

---

"கர்த்தருக்கு பிரியமானது இன்னதென்று நீங்கள் சோதித்துப் பாருங்கள்" (எபே 5 : 10).

---

# நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய உயிர்த்தெழுதல்

இந்த இயேசுவை தேவன் எழுப்பினார், இதற்கு நாங்கள் எல்லாரும் சாட்சிகளாயிருக்கிறோம் (அப் 2 : 32). கிறிஸ்தவ மார்க்கம் இயேசு கிறிஸ்துவினுடைய உயிர்த்தெழுதலின் மேல் நிற்கிறது. பிற மத கர்த்தாக்களும், தலைவர்களும் மரித்து விட்டார்கள். அவர்களுடைய சரீரம் அழிந்து போய் விட்டது. அவர்கள் இல்லை. இயேசு கிறிஸ்துவோ மனுமக்களுடைய பாவங்களுக்காக மரித்து அடக்கம் பண்ணப்பட்டு மூன்றாம் நாளில் உயிரோடெழுந்தார். இது சரித்திர சம்பவமாகும்.

அவருடைய மரணம், அடக்கம் பண்ணப்படுதல், உயிர்த்தெழுதலை நேரடியாகக் கண்ட சாட்சிகளே அதை எழுதி வைத்தார்கள். முன்னொரு காலத்தில் ஒரு இராஜா இருந்தார். அவருக்கு இப்படியொரு மகன் பிறந்தான். இப்படி, இப்படி செய்தான் என்று மிக பிந்திய காலத்தில் ஒருவர் இன்னொருவருக்குச் சொல்ல அவர் இன்னொருவருக்குச் சொல்ல இவர் கேள்விப் பட்டது என்று எழுதப்பட்டதல்ல சத்திய வேதாகமம். இயேசு கிறிஸ்து உயிரோடெழுந்ததை நேரடியாகக் கண்ட கண் கண்ட சாட்சிகளினாலும், அவரிடத்தில் கேட்டும் எழுதப்பட்டதே புதிய ஏற்பாடு ஆகும். ஆதி அப்போஸ்தலர்கள் விசேஷித்த விதமாய் இயேசு கிறிஸ்துவினுடைய உயிர்த்தெழுதலுக்கு சாட்சிகளாயிருக்கிறார்கள். இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந்தார். இதற்கு நாங்கள் சாட்சிகள். இதையே நாங்கள் கண்டோம் என்று அப்போஸ்தலர்கள் சொல்லுகிறார்கள் (அப்2 : 24, 32; 3 : 15; 4 : 20; லூக் 1 : 1 — 4; I கொரி 15 : 1 — 8).

கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலைக் குறித்து அப்போஸ்தலர்கள் மிகுந்த பலமாய் சாட்சி கொடுத்தார்கள் (அப் 4 : 33). இயேசு உயிரோடெழுந்ததைக் குறித்து சாட்சி சொல்லுவதே அப்போஸ்தலருடைய பிரதான கடமை (அப் 1 : 8, 22). இயேசு கிறிஸ்து மரித்தோரிலிருந்து எழுப்பப்பட்டார். மற்ற மத கர்த்தாக்கள், தலைவர்களுடைய கல்லறைகள் இங்கே இருக்க, அவர்கள் மரணத்தினால் கட்டப்பட்டிருக்க இயேசு கிறிஸ்துவோ, மரித்தோரிலிருந்து எழுப்பப்பட்டார் (அப்3: 15, 4 : 10)

உயிர்த்த கிறிஸ்துவை சாட்சி கொடுத்ததிலிருந்தே கிறிஸ்தவ மார்க்கம் ஆரம்பமாயிற்று. அதை விசுவாசித்தவர்கள் எல்லாரும் இரட்சிக்கப்பட்டார்கள். தங்கள் பாவங்களிலிருந்து விடுதலையானார்கள். பரிசுத்தாவியைப் பெற்றுக் கொண்டார்கள். இந்த சாட்சியை சொல்லக் கூடாது என்று மதச் சங்கங்களும் அரசாங்கங்களும் கட்டளையிட்டபோதும் அப்போஸ்தலர்கள் தாங்கள் கண்டவைகளையும் கேட்டவைகளையும் பேசாமல் இருக்கக் கூடாதே என்றார்கள் (அப் 4 : 20). இந்நாட்களில் இயேசு கிறிஸ்து சிலுவையில் மரிக்கவில்லை. அவர் மயக்கத்திலிருந்து தெளிந்து பிரயாணம்

பண்ணி காஷ்மீரிலே மரித்தார். அவருடைய கல்லறை இங்கே இருக்கிறது என்று சில அண்ட புளுகர்கள்' புளுகலாம். அவர் நம்முடைய பாவங்களுக்காக ஒப்புக் கொடுக்கப்பட்டும் (மரித்து) நாம் நீதிமான்களாக்கப்படுவதற்காக எழுப்பப்பட்டும் இருக்கிறார் (ரோம 4 : 25). என் கர்த்தராகிய இயேசுகிறிஸ்து மரிக்கவில்லையென்றால் எனக்கு பாவ மன்னிப்பு இல்லை. கர்த்தராகிய இயேசுகிறிஸ்து மரணத்திலிருந்து உயிர்த்தெழவில்லையென்றால் எனக்கு பாவத்திலிருந்து விடுதலை கிடைத்திருக்காது. அவர் மரித்தார். அடக்கம் பண்ணப்பட்டார். உயிரோடெழுந்தார் என்பதற்கு நான் சாட்சி.

ஒவ்வொரு கிறிஸ்தவனும் கிறிஸ்தவளும் சாட்சி. இயேசுகிறிஸ்துவினுடைய உயிர்த்தெழுதலின் வல்லமை, ஜெபத்தின் வல்லமையைப்போல் உலகில் மகா பெரிய வல்லமையாகும். இந்து மார்க்கத்திலேயும், இஸ்லாம் மார்க்கத்திலேயும், புத்தமதத்திலேயும் பிறமதங்களிலேயும் விழுந்து போனவர்கள் விழுந்து போனவர்களே. ஆனால் கிறிஸ்தவ மார்க்கத்தில் விழுந்து போனவர்களை இயேசுகிறிஸ்துவினுடைய உயிர்த்தெழுதலின் வல்லமை மறுபடியும் எழுந்து நிற்கச்செய்கிறது. கிறிஸ்துவுக்குள்ளிருக்கிறவர்களை விழாமல் நிலை நிறுத்துகிறது.

இயேசுகிறிஸ்து மரித்தோரிலிருந்து எழுந்ததினாலே அவரை உயிரோடெழுப்பின தேவன் என்னையும் உன்னையும் தம்முடைய உயிர்த்தெழுதலின் வல்லமையினால் நிரப்புகிறார். நாம் வெற்றியடைவோம். பாவத்தின் மேலும், உலகத்தின்மேலும், மாம்சத்தின் மேலும், பிசாசின் மேலும் மரணத்தின் மேலும் வெற்றியடைவோம் (1 பேது 1 :4, 21). இதற்கு நாங்கள் சாட்சிகள் (அப் 5 :30 — 32)

அவர் தம்முடைய உயிர்த்தெழுதலின் வல்லமையால் தம்மை விசுவாசித்து கடந்து சென்ற (மரித்து அடக்கம் பண்ணப் பட்டிருக்கிற) பக்தர்களை மகிமையோடு உயிர்த்தெழுப்புவார். அவர்கள் உயிர்த்து ஆயிர வருஷம் இந்த உலகத்தை உயிரோடு இருந்த மறுரூபமடையப்போகிற பரிசுத்தவான்களோடு சேர்ந்து ஆளுகை செய்யப் போகிறார்கள் (வெளி 20 : 4 — 6; 5 : 10; II தீமோ 2 : 11; ரோம 8 : 17) இயேசுகிறிஸ்துவினுடைய உயிர்த்தெழுதலின் வல்லமையை பெற்றுக் கொள்வோம். வெற்றி வாழ்க்கை வாழ்வோம் (ரோம 6 : 4,5).

உயிர்த்தெழுந்த கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை தரிசித்ததினாலே சவுல் என்ற கிறிஸ்தவமார்க்க எதிரி இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து கிறிஸ்தவரானார் (அப் 9 : 1 — 22 அவர்தான் அப். பவுல்). நாம் ஒரு செத்த ஆவியையல்ல உயிருள்ள கடவுளைத் தொழுது கொள்கிறோம். ஆனபடியினால் கிறிஸ்தவ மார்க்கம் ஜீவனும் வல்லமையுமுள்ள (Power) புதிதான மெய்தேவ மார்க்கமுமாகும். இயேசு கிறிஸ்து உயிரோடெழுந்தார். அவர் தம்முடைய சத்துருக்களைத் தமக்குக் கீழ்ப்படுத்துவார். கிறிஸ்தவ மார்க்க பகைவர்களையும் நம் பக்தர்களாக மாற்ற உயிர்த்தெழுந்த கர்த்தரால் முடியும்.

இதோ! இயேசு கிறிஸ்து உயிரோடிருக்கிறார்.

ஆமென்

---

"... இயேசு சமீபத்தில் வந்து, அவர்களை நோக்கி வானத்திலும் பூமியிலும் சகல அதிகாரமும் எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் நீங்கள் புறப்பட்டுப் போங்கள். நான் உங்களோடிருக்கிறேன் என்றார்.

ஆமென் — மத் 28 : 18 — 20

---

மாதர் பகுதி

# குடும்பம்

(தொடர்ச்சி)

I. முறை :

1. பிள்ளைகள் அழுது தொந்திரவு செய்கிறார்களென்று எதையும் கொடாதே.

2. பிள்ளை வேணுமென்று முரட்டுத்தனமாய்க் கீழ்ப்படியாமைக் காண்பிக்கும் போது அதைத் தண்டிக்கத் தவறாதே. நீ தண்டிக்கும்போது அமைதலாயும் உறுதியாயும் இரு.

3. அவர்களுக்கு உன்னால் கொடுக்கக்கூடியதையே அவர்களிடம் கொடுப்பேன் என்று சொல். சகல விஷயத்திலும் அவர்கள் உண்மை பேசும்படி கற்பி. அற்பகாரியங்களிலும் அவர்கள் உன்னை வஞ்சிக்க இடங்கொடாதே. அப்படி இடங்கொடுப்பாயானால் நீ பெரிய காரியங்களிலும் வஞ்சிக்கப்படுவாய்.

4. அவசியமானபோது தப்பிதங்களைத் திருத்து.

5. பிள்ளைகளோடிருக்கும்போது, நீ அவர்களைத் தண்டிக்கும்போது கோபத்தைக் காண்பியாதே.

6. அடிக்கடி பயமுறுத்தாதே. நீ சொல்வதை நிறைவேற்ற ஜாக்கிரதையாயிரு.

7. எப்போதும் குற்றம் கண்டுபிடித்துக் கொண்டிருக்கும் பழக்கத்தை விட்டு விடு. கோபமான வார்த்தைகளை உபயோகிக்காதே.

8. தீவிரமான அடிகளை விலக்கு.

9. அவர்கள் தப்பிதமான செய்கைகளைச்செய்து கொண்டிருக்கும்போது உன்னுடைய புன்னகையினாலாவது வேறெந்த காரியங்களினாலாவது அவர்களைத் தைரியப் படுத்தாதபடி ஜாக்கிரதையாயிரு.

10. ஒரு தடவை நீ செய்யவேண்டாம் என்று தடுத்த விஷயங்களை அவர்கள் மறுதடவை அதை செய்ய இடங் கொடாதே.

11. அவர்கள் எப்போதும் பிறர் உதவியையே தேடாதபடி கற்பி.

12. நீ ஒரு காரியத்தை அவர்கள் செய்யும்படி சொல்லும்போது அல்லது செய்ய வேண்டாமென்று சொல்லும்போது அவசியமின்றி அதற்கு முகாந்திரம் சொல்லாதே.

13. மற்றவர்களோடு அன்பும் பாசமும் உள்ளவர்களும், புத்தியுள்ளவர்களுமாய் நடந்து முற்கோபத்தையும் அன்பற்ற சுபாவத்தையும் விட்டு விலகவும் அவர்களுக்குக் கற்பி.

14. தங்களுடைய குணத்தையும் மனதையும் அவர்கள் அடக்கி ஆளும்படி கற்பி.

15. பிள்ளைகள் இரவில் உன் வீட்டை விட்டு உன் உத்தரவின்றி வேறிடம் போக இடங்கொடாதே.

16. நுகமாயும், சிக்கனமாயும் வரவுக்குத் தக்கதாய் செலவு செய்யும்படி கற்பி. "வேறுமென்று செய்த வீண்செலவு கட்டாயமான வறுமையை உண்டாக்கும்" என்று அவர்களுக்கு காண்பி.

17. வருங்காலத்துக்கு பிரயோஜனமுண்டாகும் விஷயங்களை இக்காலத்திலே கற்பி.

18. அவர்களுடைய தோழர்களைப்பற்றி எச்சரிக்கையாயிரு. துர்நடக்கையுள்ளவர்களோடும், ஊதாரி செலவு செய்கிறவர்களோடும், தேவ பக்தியற்றவர்களோடும் அவர்கள் சிநேகம் செய்துகொள்ளாதபடி எச்சரிக்கையாயிரு.

19. யோசிக்காமல் வாக்குக் கொடுக்கும் வழக்கத்தை விட்டு விடவும், கொடுத்த வாக்கை நிறைவேற்றுமை கேவலம் என்று உணரவும் பழக்கு.

20. உன்னுடைய பெண்கள் டம்பமான பெண்களாவதைவிட நாகரீகமும் பிரயோஜனமுமுள்ளவர்களாய் நடந்து வரும்படி பழக்கு.

21. பிள்ளைகள் தங்களுக்கு வேண்டிய நியாயமான காரியங்களை அவர்களே தங்களுக்குச் செய்யும்படியும் சாதாரணமாகச் செய்து கொள்ளக் கூடியவைகளைச் செய்து

கொள்ளவும், பழுதுபார்க்க வேண்டியவைகளைப் பழுதுபார்க்கவும், சுத்தம் பண்ண வேண்டியதை சுத்தம் பண்ணவும் அவர்கள் பழகும்படி செய். சாதாரணமான பொருளங்களை ஆயத்தப் படுத்தவும் சாமான்களை விலைபேசி நியாயமான விலைக்கு வாங்கவும் பழக்குவி.

22. அவர்கள் வாசிக்கும் புஸ்தகங்கள் எப்படிப்பட்டவைகள் என்று கவனி. நல்ல புஸ்தகங்களை மட்டும் படிக்க இடங்கொடு.

23. அவர்கள் கையில் அவசியமாய் வேண்டியதற்கு மிஞ்சி அதிகமாக பணங் கொடுத்து பணத்தின் அருமை தெரியாமல் போகும் படி செய்யாதே.

24. அதிகாலையிலெழும்பி சுறுசுறுப்பாய் வேலைசெய்யும்படி கற்பி.

25. அமரிக்கையாயும், மரியாதையாயும் உட்கார்ந்து சாப்பிடவும், சாப்பிடு முன் நன்றாய் கைகளைக் கழுவவும் கற்பி.

26. வெளியிலிருந்து வீட்டுக்குள்ளே வரும்போது அமரிக்கையாய் வரவும், காலில் படிந்திருக்கும் தூசியை வெளியிலேயே சுத்தம் பண்ணிவிட்டு உள்ளே வரவும் கற்பி.

27. இரண்டுபேர்கள் ஒருவரோடொருவர் பேசிக் கொண்டிருக்கும்போது இவர்கள் இடையில் பேசாமல் அவர்கள் பேசிமுடியுமட்டும் காத்திருந்து பின்புபேச பழக்கு.

28. அவர்கள் நல்ல காரியங்களைச் செய்யும்போது உன் வார்த்தையினாலும், புன்னகையினாலும், செய்கையினாலும், சமயத்துக்கேற்ற உதவியினாலும் அவர்களை உற்சாகப்படுத்து.

29. சுறுசுறுப்பான பழக்கங்களை உண்டுபண்ணு. ஒவ்வொரு பொருளுக்கும் ஒவ்வொரு இடத்தை தெரிந்து கொள்ளவும் அந்தந்த இடத்தில் அந்தந்த பொருளை வைப்பதில் ஜாக்கிரதையாயிருக்கவும் கற்பி.

30. ஏற்றகாலத்தில் அவர்கள் தேவனுக்கும், மனிதருக்கும் பிரயோஜனமுள்ளவர்களாகவேண்டுமென்று அவர்கள் உணரும்படி செய்.

31. பிள்ளைகள் தங்களுடைய உடுப்புகள், புஸ்தகங்கள், விளையாட்டு சாமான்கள் மற்றும் அவர்களுக்குரிய பொருள்களைப்பற்றி கவலையுள்ளவர்களாயிருக்கும் படி பயிற்றுவி.

32. தங்களுக்கு உடுப்பைத் தெரிந்து கொள்ளுவதில் டம்பமான மெல்லிய உடுப்புகளையல்ல நாகரீகமும் உறுதியுமுள்ள உடுப்புகளையே தெரிந்து கொள்ளும்படி போதி.

33. வேதாகமத்திலிருந்து தண்டனைக்குப் பாடத்தைக் குறிக்காதே.

34. தங்களுடைய சுத்தத்தைப் பற்றியும், தாங்கள் சாப்பிடும் ஆகாரத்தைப பற்றியும், பருகும் நீரைப் பற்றியும், தாங்கள் விலக்கிப்போடவேண்டிய காரியங்களைப் பற்றியும் கவலையுள்ளவர்களாயிருக்கும்படி பயிற்றுவி.

35. உன் பிள்ளைகளை ஜெபம் செய்யக் கற்பி. நீயும் அவர்களோடு ஜெபி. இப்படி உன் பிள்ளைகள் பேரிலும் உன் குடும்பத்தின் மேலும், உன் பிரயாசத்தின் மேலும் கடவுளுடைய மட்டற்ற ஆசீர்வாதங்களைப் பெற்றுக் கொள்ளப் பிரயாசப்படு.

36. கண்டிப்பாய் அவர்களுக்கு தேவபக்தியை போதி. பயிற்றுவி. அவர்களுக்கு முன்னால் மரணமும், நியாயத்தீர்ப்பும், நித்தியமும் இருக்கின்றனவென்று உணர்த்தி உன்னுடைய நல்ல மாதிரியினால் அவர்களை அவற்றிற்கு ஆயத்தப்படுத்து.

நீயும் உன் குடும்பமும் மறுமையிலே நீங்கள் ஒன்றாய்ச் சேர்க்கப்பட்ட ஒரே குடும்பமாய் இருக்கும்படி பிரயாசப்படுங்கள். பிஞ்சிலே வளைத்து பக்குவப்படுத்து. 'தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும்' என்ற பழமொழிப்படி இள வயதிலே உன் பிள்ளைகளை பழக்குவி அவன் முதிர் வயதிலும் அதை விடாதிருப்பான் (நீதி 22 : 6).

(தொடரும்...)

"பிதாக்களே நீங்களும் உங்கள் பிள்ளைகளைக் கோபப்படுத்தாமல், கர்த்தருக்கேற்ற சிட்சையிலும், போதனையிலும் அவர்களை வளர்ப்பீர்களாக"

— எபே 6 : 4

# அப்போஸ்தலரே நமக்கு மாதிரி

எருசலேமில் தொடங்கிய கிறிஸ்தவ மார்க்கத்திற்கு கர்த்தராகிய இயேசு கிறிஸ்து மாதிரியாக இருந்தார். அவர் மரித்து, உயிர்த்தெழுந்து பரலோகம் சென்ற பின்னர் அவர் தம்மை வெளிப்படுத்தி அவர்களுக்கு உயிருள்ளவராக காண்பித்து, அவரது பக்தர்களுக்கு முன் மாதிரியாக நடந்து காண்பிக்கும்படி அப்போஸ்தலர்களை நியமித்தார். அப்போஸ்தலர்களும் தங்களை கிறிஸ்துவுக்கு மெய்யான சீஷர்களாகவும், கிறிஸ்தவர்களுக்கு மாதிரிகளாகவும் நடந்து காண்பித்தார்கள். கிறிஸ்தவர்களும் அப்போஸ்தலர்களை மாதிரியாகப் பார்த்து நடந்தார்கள்.

இந்நாட்களில் கிறிஸ்தவர்களுக்கு உலகில் மாதிரிகளாக நடந்து காண்பிப்பவர்களோ, அல்லது என்னை, (எங்களை) பின்பற்றுங்கள் என சொல்லுபவர்களோ மிகவும் சொற்பமானவர்களாக இருக்கின்றனர். தங்களை கிறிஸ்தவர்கள் என்று சொல்லி நடப்பவர்களையோ, அல்லது பிரசங்கிப்பவரையோ பார்த்து நடந்தால் நாம் சென்று அடைய வேண்டிய பரம் போய் சேர முடியாது. சிலர் சொல்லுகின்றனர் பிரசங்கத்தைப் பார், பிரசங்கியைப் பாராதே என்று. ஆனால் ஜனங்களது எண்ணம் அவராலேயே நடந்து காட்ட முடியவில்லையே பிறகு நாம் எப்படி நடப்பது என எண்ணுகின்றனர். தேவனே, இக்கடைசி நாட்களில் தமது மந்தையை மேய்க்க பராமரிக்க, நடந்து முன்மாதிரி காண்பிக்க தமது அப்போஸ்தலரை கொடுத்திருக்கின்றார். இவர்கள் ஜனங்களுக்கு முன்பாக நடந்து மாதிரியைக் காண்பிக்கின்றனர்.

தேவனுடைய அப்போஸ்தலர்கள் சொல்லுகின்றார்கள் என்னை பின்பற்றுங்கள் என்று (I கொரி 1 : 16). அப்போஸ்தலர்களைப் பின்பற்றுவது ஒவ்வொரு கிறிஸ்தவனின் கடமையாகும். இந்நாட்களில் அநேகர் அப்போஸ்தலர் என தங்களது பெயருடன் சேர்த்துக் கொள்கின்றனர். சிலர் எல்லாவற்றையும் விட்டு விட்டவர்கள் அப்போஸ்தலர்கள் என்கின்றனர். அப்படியானால் ஜீவனையுமல்லவா விட வேண்டும். (ஆனால் அவர்கள் ஜீவனை விட்டுவிடவில்லை-லூக் 14 : 26). அப்போஸ்தலர்கள் முதலாவது தேவனை (இயேசு கிறிஸ்துவை) தரிசித்திருக்க வேண்டும் (I கொரி 9 : 1; 15 : 15). அடுத்து அவரால் அதிகாரம் பெற்றிருக்க வேண்டும் (யோ 20 : 21-23). தேவனைத் தரிசித்தவர்களும், அதிகாரம் பெற்றவர்களும் மாத்திரம் தான் சொல்ல முடியும் என்னை (எங்களை) பின்பற்றுகிறவர்களாகுங்கள் என்று. இப்படி சொல்லுகின்ற அப்போஸ்தலர்கள் பின்னும் நாம் தைரியமாகச் செல்லலாம். இதே அப்போஸ்தலர்கள் சொல்லுகின்றனர்: சகோதரரே நீங்கள் என்னோடே கூடப் பின்பற்றுகிறவர்களாகி, நாங்கள் உங்களுக்கு வழிகாட்டுகிறபடி நடக்கிறவர்களை மாதிரியாக நோக்குங்கள்" (பிலி 3 : 17).

இந்த அப்போஸ்தலர்(கள்) சொல்லுகின்றார்(கள்) என்னையும், நாங்கள் உங்க

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் - 41 ★ MAY 1987

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள்.... விழித்திருங்கள்...உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்..."

மாற்கு 13 : 35-37

EDITOR : CHIEF PASTOR N. LAZAR

BOMBAY. INDIA.

## பத்திரிகையின் நோக்கம்

தேவனுடைய பிள்ளைகள் எல்லாரும் கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்திலும், அறிவிலும் ஒருமைப்பட்டு கிறிஸ்துவுக்கேற்பபூரண வளர்ச்சியடையும்படியாகவும் தலையாகிய கிறிஸ்துவைப் பற்றிக் கொண்டு ஒரே சரீரமாய்க் கிறிஸ்துவுக்குள் கட்டப்படவும்; சபையானது வஞ்சக போதனைகளுக்குத் தப்பி ஒரே சரீரம் பூரண வளர்ச்சியடையும்படியாகவும் இப்பத்திரிகை வெளியிடப் படுகிறது.

(எபே. 4 : 11-16).

## புதிய எருசலேம் சபையின் அஸ்திபார உபதேசங்கள்

இயேசுவிடமிருந்து எனக்குத் தரிசனமாகி "தெயோப்பிலுவே, இயேசுவானவர் (தேவன்) தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினால் அப்போஸ்தலருக்கு கட்டளையிட்ட அதிகாரங்களும், கட்டளைகளும் ஏழு (அப் 1 : 1 -3)" எனக் காண்பித்து எனக்குக் கையளித்த சபையின் அஸ்திபார உபதேசங்கள்:

1. உலகமெங்கும் போய் மனந்திரும்புங்கள் என்று சுவிசேஷத்தைப் பிரசங்கியுங்கள்—மத் 28:18; மாற்கு 16:15
2. விசுவாசித்து ஏற்றுக் கொள்ளுகிறவர்களை பிதா குமாரன் பரிசுத்தாவியின் நாமத்தில் ஸ்நானப் படுத்துங்கள்—மத் 28 : 19 [இயேசு மாதிரி (Through action) செய்து காண்பித்தார்]
3. திருச்சபையைக் கட்டி (மத் 16 : 18) நான் உங்களுக்குக் கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்—மத் 28 : 20.
4. அவர்களுடைய பாவங்களை மன்னியுங்கள்—யோவா 20 : 23.
5 அவர்களை மேய்த்து ஆண்டு கொள்ளுங்கள்—யோவா 21 : 15 – 17.
6. இவைகளை நடப்பிக்க காத்திருந்து பரிசுத்தாவியைப் பெற்றுக் கொண்டு—அப் 1 : 5, 8.
7. நான் வருகிறவரையிலும் என்னை நினைவு கூரும்படி திருவிருந்தை (நற்கருணை) நடப்பியுங்கள் என்றார்—I கொரி 11 : 23 – 26.

நான் ஆண்டவரே, சிலர் அஸ்திபார உபதேசங்கள் இரண்டு (2) என்கிறார்கள்; வேறுசிலர் ஏழு (7) என்கிறார்களே, அதெப்படி என்றேன்.

இயேசுவானவர் பிரதியுத்தரமாக: இல்லை, அஸ்திபார உபதேசங்கள் ஏழு ஆகும் (நீதி 9 : 1 - 6). இது ஆதி அப்போஸ்தலர்களுக்கு நான் கொடுத்த கட்டளைகளும் அதிகாரங்களுமாகும். இவைகளை நான உனக்கு கொடுக்கிறேன் என்றார் (அப் 1 : 1 ; 10 : 40 - 43).

CHIEF PASTOR N. LAZAR

## இதழின் உள்ளே


1. ஆசிரியர் உரை 1
2. பாவமன்னிப்பு 2
3. ஆதியாகமத்தைப் பற்றி ஒரு ஆராய்ச்சி 5
4. தேவனுக்கேதுவான மனந்திரும்புதல் 6
5. மோட்ச வழி 8
6 வேதபாடம் 9
7. யார் சீயோன்? 10
8. மாதர் பகுதி 12
9. தெய்வ அவதார சேவகம் 14

# ஆசிரியர் உரை

சாத்தானுடைய தந்திரங்கள் நாம் அறியாதவைகளல்லவே. நமக்கு ஒரு எதிரி உண்டு. அவன் சாத்தானே, (சாத்தானும் அவன் தூதர்களும்) அவனுடைய நோக்கம் எப்படியும் நம்மை பாவம் செய்ய வைத்து, நம்மைக் கெடுத்து தன்னை சேவிக்கச் செய்து தன்னோடுகூட நித்திய நரகத்துக்குக் கொண்டு செல்வதே. இரட்சிக்கப்படாத பாவியான மனிதன் சாத்தானுடைய விருப்பத்தை தன்னுடைய சுய சித்தத்தை நிறைவேற்றுகிறான். அக்கிரமங்களிலும் பாவங்களிலும் மரித்தவனாயிருக்கிற மனிதன் இவ்வுலகில் இப்பொழுது கிரியை செய்கிற ஆகாயத்து அதிகாரப் பிரபுவாகிய ஆவிக்கேற்றபடி நடந்து கொள்ளுகிறான் என்று வேதம் திட்டமாக வெளிப்படுத்தியுள்ளது (எபே 2 : 1, 2)

கிறிஸ்து இயேசுவினால் மீட்கப்பட்ட மனிதன் புதிய மனிதனாக இருக்கிறான். இப்பொழுது இவன் தன் சுயசித்தத்தை நிறைவேற்றாமல் தன்னில் வாசமாயிருக்கிற பரிசுத்த ஆவிக்கேற்றபடி நடக்க வேண்டும். பரிசுத்த ஆவியினால் நடத்தப்பட வேண்டும். இரட்சிக்கப்படாத மனிதன் தன் ஆத்துமாவின்படி நடக்கிறான். அதாவது தன் மனதின் யோசனையின்படி நடக்கிறான். ஒரு இடத்திற்கு போக வேண்டுமென்று நினைக்கிறான், போகிறான். வரவேண்டுமென்று நினைக்கிறான், வருகிறான். இதை செய்ய வேண்டுமென்று நினைக்கிறான், செய்கிறான்.

இரட்சிக்கப்பட்ட பின்பும் போக வேண்டுமென்று நினைக்கிற இடத்துக்கு போகிறதும், வரவேண்டுமென்று நினைக்கிற இடத்துக்கு வருகிறதும், செய்ய வேண்டுமென்று நினைக்கிறதை செய்கிறதும், செய்ய வேண்டாமென்று நினைக்கிறதை செய்யாமலிருக்கிறதுமாய் ஜீவித்தால் இரட்சிக்கப்பட்டவனுக்கும் இரட்சிக்கப்படாதவனுக்கும் உள்ள வித்தியாசம் என்ன? அவனும் தன் ஆத்துமாவினால் வாழ்கிறான் இவனும் தன் ஆத்துமாவினால் வாழ்கிறான். இதுவல்ல கிறிஸ்தவ ஜீவியம்.

கிறிஸ்துவுக்குள்ளான ஒருவன் ஒரு இடத்துக்கு போகிறது வருகிறதாயிருந்தாலும், ஒரு காரியத்தைச் செய்கிறதாயிருந்தாலும் ஜெபித்துக் கேட்டு தேவ ஆவியின் நடத்துதல் பெற்று தேவ வசனத்தின்படி ஜீவிக்க வேண்டும். தேவ ஆவியின் விருப்பத்தின்படி ஜீவிக்க வேண்டும். நாம் செய்கிற காரியத்திற்கு தேவனைத் துணை தேடாமல் (தேவன் உதவி செய்யும்படி ஜெபிக்காமல்) நாம்செய்கிற காரியம் தேவனுடைய நன்மையும் பிரியமும், தேவனுடைய பரிபூரண சித்தம்தானா என்று அறிந்து அதையே செய்ய வேண்டும். இல்லையென்றால் சாத்தானால் வஞ்சிக்கப்படுவோம்.

தங்கள் இருதயத்தின் தூண்டுதலையே பின்பற்றுகிற மதிகெட்ட தீர்க்கதரிசிகளுக்கு ஐயோ! அநேகர் இரட்சிக்கப்பட்ட பின்பும் தங்கள் விருப்பத்தின்படியான இடத்திற்கு சென்று ஆராதனை செய்கிறார்கள்; தங்கள் விருப்பத்தின்படி ஊழியம் செய்கிறார்கள்.

நீ ஆராதிக்கும் ஆராதனை தேவ வசனத்தின்படியானதுதானா? நீ ஐக்கியம் வைத்திருக்கிற சபை வசனத்தின்படியானதுதானா? உன்னுடைய அபிஷேகம் வசனத்தின்படியானதுதானா? உன்னுடைய ஊழியம் வசனத்தின்படியானதுதானா? உன்னுடைய ஜீவியம் வசனத்தின்படியானதுதானா? என்று தேவ வசனத்தோடு ஒத்துப்பார். இல்லையென்றால் தேவனுடைய வசனத்தினிடத்திற்குத் திரும்பு. சாத்தானுடைய தந்திரத்திற்குள் சிக்கிக் கொள்ளாதே. தீர்ப்பு வசனத்தின்படியிருக்கும் (யோவா 12 : 48). சாத்தானுக்கும் அவனுடைய தந்திரங்களுக்கும் தப்புங்கள். அவனுடைய தந்திரங்களில் சிக்கிக் கொள்ளாதீர்கள்.

கர்த்தர் உங்களை ஆசீர்வதித்து தம்முடைய சத்தியத்திற்கு நேராக நடத்துவாராக!

கிறிஸ்துவுக்குள்,

Chief Pastor N. LAZAR

# பாவமன்னிப்பு

(தொடர்ச்சி)

இடம் : வள்ளியூர்.

காலம் : 1971

வள்ளியூர் கன்வென்ஷன் முடிந்த மறு நாள் மத்தியான நேரம் இளைப்பாறும்படி பாயைவிரித்து அமர்ந்தோம். கிருபாசனத்தைச் சேர்ந்த ஊழியர் ஒருவரும், சுயாதீனமாய் சுற்றி ஊழியம் செய்கிற இரண்டு ஊழியர்களும் என்னை சந்திக்க வந்தார்கள். 'புதிய எருசலேம் சபை' ஊழியர் ஒருவர் அவர்களை அறிமுகப்படுத்தி வைத்தார். அமர்ச்செய்து குசலம் விசாரித்துக் கொண்டோம். நான் அவர்களிடம், கன்வென்ஷனுக்கு வரவில்லையா என்று கேட்டேன். கிருபாசனம் ஊழியர் நேரம் கிடைக்கவில்லை என்றார்.

அடுத்தபடியாக அவர்கள் ஏதோ கேட்க வந்திருக்கிறார்கள் என்று அறிந்து ஏதும் விசேஷம் உண்டா என்று வினவினேன். கிருபாசனம் ஊழியர் ஐயா, நீங்கள் வெளியிட்ட அந்த நோட்டீஸின் அர்த்தம் விளங்கவில்லையே என்று சொன்னார். எந்த நோட்டீஸ் என்று நான் கேட்டேன். பல நோட்டீஸ் வெளியிடுகிறோமே இரட்சிப்பு, பரிசுத்தாவியானவர், ஜாதியும் கிறிஸ்தவர்களும், இந்த ஜாதி பிசாசு.(வாருங்கள், உங்களுக்குத் தேவை), சத்திய வேதமும் திருச்சபையும், பாவமன்னிப்பு [புதிய எருசலேம் சபையின் வெளியீடுகள்] இவைகளில் எந்த நோட்டீஸ் விளங்கவில்லை என்றேன். அதற்கு அவர் பாவமன்னிப்பு என்றார். அந்த நோட்டீஸ் வைத்திருக்கிறீர்களா என்று கேட்டேன். இல்லை என்றார்.

என்னுடைய வேதாகமத்தின் அட்டைப் பகுதியில் வைத்திருந்த பாவமன்னிப்பு நோட்டீஸ் (Tract) ஒன்றை எடுத்து அவரிடம் நீட்டினேன். இதில் எந்த பாகம் விளங்கவில்லை என்று கேட்டேன். முதல் பக்கத்தில் "உணர்த்தப்பட்ட பாவங்களை தேவனிடத்தில் ஒப்புக்கொண்டு தேவ சமுகத்தில், அதிகாரம் பெற்ற ஒரு தேவ ஊழியரிடம் அறிக்கையிட்டு அவர் மூலமாய் பாவமன்னிப்பும், தேவ ஆலோசனையும் பெற்றுக்கொள்ள வேண்டும். கடவுள் தம்முடைய சீஷர்களுக்கு பாவங்களை மன்னிக்க அதிகாரம் கொடுத்திருக்கிறார்" என்ற பாகத்தைச் சுட்டிக் காட்டினார்.

நான் கேட்டேன் நீங்கள் எப்படி பாவமன்னிப்பு பெற்றீர்கள் என்று. நான் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினிடத்தில் என்னுடைய பாவங்களை அறிக்கையிட்டு பாவமன்னிப்புப் பெற்றுக் கொண்டேன் என்றார். அதற்கு ஏதாவது வேத ஆதாரம் உண்டா; உங்கள் பாவங்களை இயேசுகிறிஸ்து தவிர வேறு யாரிடமும் சொல்லவில்லையா என்று கேட்டேன். அவர் கொஞ்ச நேரம் யோசித்தார். யோசித்துவிட்டு எங்களுக்கு விடுதலை பெறமுடியாத பாவங்களை எங்களுக்கு மேலுள்ள ஊழியர்களிடம் சொல்லி ஆலோசனை கேட்டுக்கொள்வோம் என்றார்.

அப்படியே விடுதலை பெறமுடியாத பெரிய பாவங்களை மேலுள்ள ஊழியர்களிடம் சொல்லி ஆலோசனை கேட்கிறதற்கு வேதத்தில் ஆதாரம் உண்டா என்றேன். அவர் பேசாதிருந்தார். பெரிய பாவங்களை பிறரிடத்தில் அறிக்கை செய்யும் போது சிறிய பாவங்களை அறிக்கை செய்வதில் தவறென்ன. சிறிய பாவங்களானாலும் பெரிய பாவங்களானாலும் அதிகாரம்பெற்ற ஊழியர் முன் அறிக்கை செய்ய வேண்டும். இதுவே சத்தியம். அதையே தேவ வசன ஆதாரத்துடன் இந்த நோட்டீஸில் எழுதியுள்ளோம் என்றேன்.

அவர் சிறிது நேரம் அமைதியாக இருந்துவிட்டு அப்படியென்றால் இயேசு கிறிஸ்துவினிடத்தில் பாவ அறிக்கை செய்து பாவமன்னிப்பு பெற்றுக்கொண்டவர்களெல்லாம் பாவமன்னிப்பு பெறவில்லையா, இரட்சிக்கப்படவில்லையா, மோட்சம் போகமாட்டார்களா என்று கேட்டார்.

அவர்கள் மோட்சம் போவார்களா நரகம் போவார்களா என்று தீர்ப்பளிக்கிறது அல்ல என் காரியம். அவர்கள் பூரண இரட்சிப்படையவோ, பரிபூரணமடையவோ மாட்டார்கள் என்று இந்த வசனங்களின் படி நாங்கள் திட்டமாய் சொல்ல முடியு

மென்று சொன்னேன். அப்பொழுது இது புது வெளிப்படுத்தலாயிருக்கிறது. உங்களுக்கு முன்னும் உள்ளவர்களுடைய நிலை என்னவென்று கேட்டார். அதற்கு நான் சகோதரனே, தானி 12 : 7–10 முடிய காணப்படுகின்ற தீர்க்கதரிசனத்தின்படி இது கடைசி காலத்தில் எங்கள் மூலமாய் தேவன் வெளிப்படுத்தி அறிவிக்கிற சத்திகரிப்பின் உபதேசம் புடமிடுதலின் உபதேசமாகும். அந்தந்த காலத்தில் தேவன் வெளிப்படுத்திய சத்தியத்தை ஏற்றுக்கொண்டவர்கள் அந்தந்த காலத்து பரிசுத்தவான்கள்.

இந்த கடைசிக் காலத்தில் 'புதிய எருசலேம் சபை' மூலமாய் வெளிப்படுகிற சத்தியத்தை ஏற்றுக்கொள்கிறவர்கள் இந்தக் காலத்துப் பரிசுத்தவான்களாகும். இதை கர்த்தர் எங்களுக்கு வெளிப்படுத்தி அறிவித்தார் என்று சொன்னேன். அவர் அமைதியாகி ஜெபித்து விட்டு கடந்து சென்றார்.

இடம் : ஆலங்கோட்டை முடிதிருத்தும் நிலையம்.

சில கிறிஸ்தவ அன்பர்களும், புறஜாதியாரும் ஒரு புதிய எருசலேம் விசுவாசியும் காணப்படுகிறார்கள். அமெரிக்காவில் பைபிள்படிப்பு (Bible Study) படித்த வேத பண்டிதர் ஒருவரும் அவர்கள் மத்தியில் இருந்தார். அவர் பரியாசமாய், டேய்! மனுஷன் பாவங்களை மன்னிக்கிறானமே தெரியுமா! என்று ஏகதாளமாய் சொல்ல அங்கிருந்த சிலர் கொல்லென்று சிரிக்கிறார்கள். சிலர் புதிய எருசலேம் சபை விசுவாசி முகத்தை உற்றுப் பார்க்கிறார்கள் உடனே புதிய எருசலேம் சபை விசுவாசி அந்த வேத பண்டிதரைப் பார்த்து ஆமா, பாவங்களை யாரிடத்தில் அறிக்கை செய்து பாவமன்னிப்பு பெற்றுக் கொள்ள வேண்டும் என்று கேட்டார். அதற்கு வேதபண்டிதர் இயேசுகிறிஸ்து விளிடத்தில் என்றார். புதிய எருசலேம் சபை விசுவாசி கேட்டார்: இயேசுகிறிஸ்து எங்கே இருக்கிறார் என்று. அதற்குப் பண்டிதர் இரண்டு மூன்று பேர்கள் என் நாமத்தினால் எங்கே கூடியிருக்கிறார்களோ அங்கே அவர்கள் நடுவில் இருக்கிறேன் என்று இயேசு கிறிஸ்து சொல்லுகிறார் என்று பதில் சொன்னார்.

உடனே புதிய எருசலேம் சபை விசுவாசி ஆமா! அதைத்தானே நாங்களும் சொல்லுகின்றோம். சபை மத்தியில் ஊழியர்களுக்கு முன்னால் பாவ அறிக்கை செய்ய வேண்டுமென்று. இதைக் கூட தெரியாத நீர் என்ன அமெரிக்கா வேத படிப்பு படித்தீர் என்று கேட்க வேதபண்டிதருக்கும் கூட்டுக்காரர்களுக்கும் முகத்தில் ஈ ஆடவில்லை. முடித்திருத்துவோரும் மீதி இருந்தோரும் அவர்களைப் பார்த்து கொல்லென்று சிரிக்க வேதப்பண்டிதர் இடத்தை காலி செய்து விட்டு போய்விட்டார்.

இடம்: பம்பாய் அவுட்-ரீச் (Out-Reach) என்ற கிறிஸ்தவ ஸ்தாபனம். ஸ்தாபனத்தின் தலைவரும் அகில இந்திய அவுட்-ரீச் பொதுச் செயலாளருமான அமெரிக்கர் ஒருவருடன் பிரதரன் மிஷன் (Brothren Mission)ஐ சேர்ந்த Elder விசுவாசியும், மற்றொரு கிறிஸ்தவ ஸ்தாபனத்தைச் சேர்ந்த பாஸ்டரும் ஊழியரும் திட்டமிட்டபடி அமர்ந்திருக்கின்றனர்.

'புதிய எருசலேம் சபை'யைச் சேர்ந்த நாங்கள் இருவர் போய் அமர்ந்தோம். காரசாரமாய் விவாதம் ஆரம்பமாயிற்று. அமெரிக்கர் சொன்னார் ஓ! நீங்கள் பாவங்களை மன்னிக்கிறீர்களாமே அது தவறு. நான் ரோமன் கத்தோலிக்கில் Reverent ஆக இருந்து அங்கேயிருந்து பெந்தெகொஸ்தாக மாறி இப்பொழுது இந்த ஸ்தாபனத்தின் தலைவராக இருக்கிறேன். பாவங்களை மன்னிக்க மனிதனுக்கு அதிகாரம் கிடையாது என்றார். நான், பாவங்களை மன்னிக்க மனிதனுக்கு அதிகாரம் கிடையாதுதான். மனிதன் என்றால் பாவியான மனிதன். தேவனுடைய மனிதனுக்கு அதிகாரம் உண்டு. தேவனுடைய பிள்ளைகளுக்கு சகோதரர்கள் என்றும், விசுவாசிகள் என்றும், பரிசுத்தவான்கள் என்றும் வேதத்தில் சொல்லியிருக்கிறது. மீட்கப்படாத மனிதனுக்கு பாவங்களை மன்னிக்க அதிகாரம் கிடையாதுதான் என்றேன்.

அதற்கு அவர், எந்த மனிதனுக்கும் பாவங்களை மன்னிக்க அதிகாரம் கிடையாது என்றார். நான் கேட்டேன் இயேசு கிறிஸ்துவுக்குமா என்று. அதற்கு அவர், ஓ! இயேசு கிறிஸ்து தேவன் என்றார். நான் அவர்

மனிதனாக இந்த பூமியில் இருந்தாரே என்றேன். அவர்கள் மறுபடியும் சொன்னார்கள் மனிதனுக்கு பாவங்களை மன்னிக்க அதிகாரம் கிடையாது என்று.

அதற்கு நான், இயேசு கிறிஸ்து தங்களிடத்தில் பாவ அறிக்கை செய்கிற மக்களின் பாவங்களை மன்னிக்க தம்முடைய அப்போஸ்தலர்களுக்கு அதிகாரம் கொடுத்திருக்கிறார் (யோவா 20 : 23) என்றேன்.

ஓ! அது ரோமன் கத்தோலிக்க உபதேசம் என்றார். நான் சொன்னேன், இல்லை. அது வேதாகமத்திலுள்ள வசனமாகும். ரோமன் கத்தோலிக்க குருக்கள் பரிசுத்த ஆவியின் அபிஷேகம் பெறாதவர்கள். அவர்களுக்கு அதிகாரம் கிடையாதுதான் ஆனால் வசனம் சொல்லுகிறது சரியே என்று சொன்னேன்.

அடுத்தபடி நான் கேட்டேன் பாவ அறிக்கை (Confession) என்றால் என்ன வென்று. அதற்கு அவர் அறிக்கை என்றார். தெரியாதவர்களிடம்தானே அறிக்கை செய்ய வேண்டும். பாவ அறிக்கை எங்கே? யாரிடத்தில்? செய்ய வேண்டும் என்று கேட்டேன். இயேசுவினிடத்தில் என்றார். புதிய ஏற்பாட்டிலிருந்து ஏதாவது ஒரு வேத வசன ஆதாரம் காட்ட முடியுமா என்று கேட்டேன். மவுனமாயிருந்து விட்டு மனிதர்களிடத்தில் பாவ அறிக்கை செய்ய வேண்டுமென்பதற்கு ஆதாரம் காட்ட முடியுமா என்று கேட்டார் யாக் 5 : 13 - 18; மத் 3 : 5, 6 என்றேன்.

ஓ! யாக்கோபு எழுதியிருக்கிறது விசுவாசிகள் ஒருவருக்கொருவர் அறிக்கை செய்வது பற்றி என்றார். நான் சொன்னேன் இல்லை மூப்பர்களை, ஊழியர்களை வரவழைக்கும் படியாகவும் அவர்களிடத்தில் அறிக்கை செய்யும்படியாகவும், நீதிமான் செய்யும் ஊக்கமான வேண்டுதல் பெலனுள்ளதென்றும் சொல்லி பரிசுத்தாவியானவர் ஒரு ஊழியக்காரனுடைய பெயரை எழுதியிருக்கிறார். அவருடைய பெயர் எலியா என்றேன். அவர்கள் அமைதியாய் இருந்தார்கள்.

மேலும் நான் சொன்னேன், விசுவாசிகள் ஒருவருக்கொருவர் பாவஅறிக்கை செய்தால் பாவம் வெளியாக்கப்பட்டு பெரிய பிரச்சனைகளும், தவறுகளும் உண்டாகுமென்றேன். அதை நீங்கள் ஒப்புக் கொள்ளுகிறீர்களா என்று கேட்டேன். ஒரே நிசப்தம். மேலும் நான் சொன்னதாவது பாவ அறிக்கை சபையின் மத்தியிலே செய்யப் படவேண்டும். ஆனால் எல்லா பாவங்களையும் சபையின் மத்தியிலே அறிக்கை செய்ய முடியாது அவைகளை தனிப்பட்ட முறையில் ஊழியர்கள் முன் முழங்கால் படியிட்டு பாவ அறிக்கை செய்து பாவ மன்னிப்புக்காக வேண்டிக் கொள்ள வேண்டும். கர்த்தர் ஊழியர்கள் மூலமாய் பாவமன்னிப்பை வெளிப்படுத்துவார் ஆலோசனைக் கொடுப்பார். இதுவே முறை இந்த முறையிலேதான் விசுவாசிகள் சுத்திகரிக்கப்படமுடியும். பரிசுத்தமாக முடியும், பூரணப்படமுடியும் என்றேன்.

பாவங்களை மறைத்தால் கர்த்தருடைய ஆவியானவர் வெளிப்படுத்திக் காட்டுவார். இதுவே சத்திய வேதத்திலுள்ள சத்திய போதனை. கர்த்தர் இதை எங்களுக்கு வெளிப்படுத்தி நடைமுறைப்படுத்தி காண்பித்தார் என்றோம். அவர் அதை ஏற்றுக் கொண்டு சகோதரரே, இது புது வெளிப்படுத்தலாக (Revelation) இருக்கிறது. கடைசிகால உபதேசம்தான் எனக்குத் தெரிந்த எட்டு(8) Cut Missionaryகள் இங்கே Bombayல் இருக்கிறார்கள். நாங்கள் ஒன்றாய் கூடி உங்களை ஒரு நாள் வரவழைக்கிறோம். நீங்கள் வந்து கர்த்தரால் உங்களுக்கு வெளிப்படுத்தப் பட்ட சத்தியத்தை எங்களுக்கு பிரசங்கித்து காட்டுங்கள் என்று கேட்டுக் கொண்டார். அப்படியே செய்வதாகச் சொல்லி ஜெபித்து விட்டு கடந்து வந்தோம்.

(தொடரும்)

---

நம்முடைய பாவங்களை நாம் அறிக்கையிட்டால் பாவங்களை நமக்கு மன்னித்து எல்லா அநியாயத்தையும் நீக்கி நம்மைச் சுத்திகரிப்பதற்கு அவர் உண்மையும் நீதியும் உள்ளவராயிருக்கிறார்- (1யோவா 1 : 9)

---

(தொடர்ச்சி)

# ஆதியாகமத்தைப்பற்றி ஒரு ஆராய்ச்சி

**ஆதி 1:1** ஆதியிலே தேவன் வானத்தையும் பூமியையும் சிருஷ்டித்தார் என்று வேதத்தில் எழுதியிருக்கிறது ஆம், தேவன் ஆதியில் முழுமையான ஒரு உலகத்தை சிருஷ்டித்தார். வானமும் பூமியும் சூரியசந்திர நட்சத்திரங்களும் சகலமும் பூரணமாய் சிருஷ்டித்திருந்தார் என்று தெரிகிறது. இது தேவனுடைய முழுமையான கிரியையாகும் (யோபு 38 அதி:சங் 8:3; 19:1-6; நீதி 8:22-30; யோவா 1:3,10; அப் 17:24; கொலொ 1:15-17; எபி 1:1-12; 11:3; வெளி 4:11). தேவன் எதையும் உண்டாக்கினார் என்றால் அது முழுமையாகவே இருக்கும். அதில் குறைபாடு இருக்காது. அவர் எல்லாவற்றையும் சரியாக உண்டாக்கியிருந்தார் (பிர 3:11; ஏசா 45:18).

இதில் வானம் (Heaven) முதலாவது சிருஷ்டிக்கப்பட்டதா பூமி(Earth) முதலாவது சிருஷ்டிக்கப்பட்டதா என்று கவனிக்கும் போது (யோபு 38 : 4 – 7 ) பூமி சிருஷ்டிக்கப்பட்டபோது விடியற்காலத்து நட்சத்திரங்கள் ஏகமாய் பாடின என்பதால் வானம் தான் முதலாவது சிருஷ்டிக்கப்பட்டதாகத் தெரிகிறது.

**ஆதி 1:2** பூமியானது ஒழுங்கின்மையும் வெறுமையுமாயிருந்தது. ஆழத்தின் மேல் இருள் இருந்தது தேவ ஆவியானவர் ஜலத்தின்மேல் அசைவாடிக் கொண்டிருந்தார் என்று எழுதப்பட்டிருப்பதினால் ஏதோ ஒரு சாபத்தினால் முந்திய உலகம் அழிவுற்றதாகத் தெரிகிறது. அந்த சாபம் ஜலத்தினாலும் இருளினாலும் முந்திய உலகை அழித்துள்ளது. ஆதி 1,2 அதிகாரங்களில் உண்டாக்கப்பட்டது என்ற வார்த்தை 7 முறை வருகிறது.

**ஆதி 1:3-25:** முடிய உண்டாக்கப்பட்டவைகள் புது சிருஷ்டிப்பல்ல;புதிதாக மறுபடியும் புதுப்பிக்கப்பட்டவைகளேயாகும்.

**ஆதி 1:26-31** மனித சிருஷ்டிப்பு புதிதாக சிருஷ்டிக்கப்பட்டதாகும். ஆதி 1:2ல் பூமியானது வெறுமையும் ஒழுங்கின்மையுமாய் இருந்தது என்று எழுதப்பட்டிருக்கிறது. ஆனால் ஆதி 1:9, 10ல் தான் பூமியை மூடியிருந்த ஜலம் நீங்கி வெட்டாந்தரை காணப்பட்ட சம்பவம் எழுதப்பட்டிருக்கிறது. ஆனபடியால் ஆதி 1:2ல் பூமியானது ஜலத்தினால் மூடப்பட்டிருந்தது என்பதையும்; தேவ ஆவியானவர் ஜலத்தின்மேல் அசைவாடிக் கொண்டிருந்தார் என்பதையும் அறிந்து கொள்கிறோம் (சங் 104:5-9; IIபேது 3: 5, 6) ஆதி 1:3-31 படைக்கப்பட்டு 6000 (ஆறாயிரம்) வருஷங்கள் ஆயின. ஆதியாகமம் 1-ம் அதிகாரம் 1-ம் வசனத்திற்கும் 3-ம் வசனத்திற்கும் இடையேயுள்ள இடைவெளி பல லட்சக்கணக்கான ஆண்டுகளாகும் (Billion years).

முதல் உலகத்திலேயும் வானமும், பூமியும் பூரணமாக சிருஷ்டிக்கப்பட்டிருந்தது. இவைகள் சிருஷ்டிக்கப்பட்ட காலம் நமக்குத் தெரியாது. புல்பூண்டுகள், மரங்கள், பறவைகள், மிருகங்கள், நீர்வாழும் ஜெந்துக்கள் மச்சங்கள் சூரிய சந்திர, நட்சத்திரங்கள் எல்லாம் உண்டாக்கப்பட்டிருந்தன. நாடு நகரங்கள் எல்லாம் உண்டாக்கப்பட்டிருந்தன. அந்த உலகம் தூதர்களினால் நிரப்பப்பட்டிருந்தது. லூசிபர் என்று சொல்லப்படுகிற தூதனே அந்த உலகத்தை ஆளும்படியாய் தேவன் நியமித்திருந்தார். அவனுக்கு அதிகாலையின் விடிவெள்ளி என்னுமொரு பெயருமுண்டு (ஏசா 14:12). அவன் தனக்குக் கொடுக்கப்பட்டிருந்த அதிகாரத்தினாலும், ஞானத்தினாலும் பெருமையடைந்தான். ஏசா14:12- 14ல் அதிகாலையின் மகனாகிய விடிவெள்ளியே, நீ வானத்திலிருந்து விழுந்தாயே!ஜாதிகளை ஈனப்படுத்தினவனே, நீ தரையிலே விழ வெட்டப்பட்டாயே!நான் வானத்துக்கு ஏறுவேன், தேவனுடைய நட்சத்திரங்களுக்கு மேலாக என் சிங்காசனத்தை உயர்த்துவேன்; வடபுறங்களிலுள்ள ஆராதனைக் கூட்டத்தின் பர்வதத்திலே வீற்றிருப்பேன் என்றும், நான் மேகங்களுக்கு மேலாக உன்னதங்களில் ஏறுவேன். உன்னதமானவருக்கு ஒப்பாவேன் என்றும் நீ உன் இருதயத்தில் சொன்னாயே, என்று வாசிக்கிறோம். அதினால் விழுந்து போனான், அப்பொழுதிருந்த உலகத்தின் மேல்

அக்கினி உண்டாயிற்று. அப்பொழுதிருந்த உலகம் அழிக்கப்பட்டது (எசே 25:11-67; ஏசா 14:12-14; லூக் 10:15; எரே 4:23-26) எனத் தெரிகிறது.

ஆதி 1:3ல் வெளிச்சம் உண்டாகக் கடவது என்று வாசிக்கிறோம். முந்தின உலகத்தில் வெளிச்சம் இருந்தது. சூரிய சந்திர நட்சத்திரங்கள் இருந்தன. அனபடியினாலே புல் பூண்டுகள், பறவைகள், மிருகங்கள், நீர் வாழும் ஜெந்துக்கள் முதலியவை உண்டாயிருந்தன. ஆனால் லூசிபர் வீழ்ச்சியடைந்தபடியினால் அவனுடைய அதிகாரம் பறிக்கப்பட்டது. அவன் கீழே விழத்தள்ளப்பட்டான். அப்பொழுதிருந்த உலகம் ஜலப்பிரளயத்தினால் அழிக்கப்பட்டது. அவனோடு கூட சேர்ந்த தூதர்களும் தள்ளப்பட்டார்கள். சூரிய சந்திரன் இருளடைந்தது (ஒளியிழந்தது). தேவன் வெளிச்சத்தை நீக்கிவிட்டார். ஜலப்பிரளயத்தினாலும், சூரிய வெளிச்சம் இல்லாததினாலும் பூமியிலுள்ள புல்பூண்டுகள், மரங்கள், பட்சிகள், மிருகங்கள், ஜலத்திலுள்ள பிராணிகள் எல்லாம் மாண்டுபோயின. பூமி வெறுமையும் ஒழுங்கின்மையுமாய் இருந்தது. ஜலத்தினால் மூடப்பட்டிருந்தது.

தேவனுடைய வார்த்தையினால் உண்டாயிருந்த முந்திய உலகம் (எபி 11:3) அழிக்கப்பட்டது (IIபேது 3:5,6; எரே 4:23-26). இப்பொழுதிருக்கிற உலகம் நோவா காலத்தில் ஒரு முறை ஜலத்தினால் அழிக்கப்பட்டது. இது இரண்டாவது ஜலப்பிரளயமாகும். லூசிபர் காலத்தில் உண்டான ஜலப்பிரளயத்துக்கும், இதற்கும் சில வேறுபாடுகள் உண்டு. லூசிபரையே சாத்தான் என்றும் வலுசர்ப்பம் என்றும், பழைய பாம்பு என்றும், பிசாசு என்றும் வேதத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது (வெளி 12:9; 20:2).

(தொடரும்)

---

ஆதியிலே தேவன் வானத்தையும் பூமியையும் சிருஷ்டித்தார் – ஆதி 1:1.

---

# ஜீவனுக்கேதுவான மனந்திரும்புதல்

ஆதியிலே ஆதாமுக்கு தேவன் கட்டளை கொடுத்தார். நன்மை தீமை அறியத்தக்க விருட்சத்தின் கனியைப் புசிக்க வேண்டாம், அதைப் புசிக்கும் நாளிலே சாவாய் என்று கட்டளையிட்டார் (ஆதி 2:7).

தேவனுடைய வார்த்தை அசட்டை பண்ணப்பட்டது. மனிதன் தன் மனம் போல் நடக்க ஆரம்பித்தான். அதன் விளைவு, தன் ஜீவனை தேவனை இழந்தான். மனித சமுதாயம் தேவனை விட்டுப்பிரிந்து தூரம் போயிற்று. தேவனில்லாதவன் ஜீவனில்லாதவன். தேவனை உடையவன் ஜீவனை உடையவன். நோவா தேவனுடைய சொல்லுக்கெல்லாம் கீழ்ப்படிந்தான், அவனோடே தேவன் இருந்தார். (ஆதி 6 : 22, 9). ஆபிரகாம் தேவனுடைய சொல்லுக்கெல்லாம் கீழ்ப்படிந்தான். அவர் அவனுக்கு தேவனானார் (ஆதி 12 : 4; 22:18; 26 : 4; யாத் 3 : 6).

தேவகட்டளைகளுக்கு யார் யார் கீழ்ப்படிந்து, அவருக்குப் பிரியமானதையே செய்கிறார்களோ அவர்களோடே தேவன் இருக்கிறார் (யோசு 1 : 7-9; யோவா 8 : 29). தேவனுடைய வார்த்தைகளை (கற்பனைகளை) ஒருவன் அசட்டை பண்ணினால் தேவன் அவர்களை விட்டு விலகிவிடுவார் (I நாளா 28 : 8,9).

இஸ்ரவேலருக்குத் தேவன் கிருபையாய், மோசேயின் மூலம் நியாயப்பிரமாணம் கொடுத்தார் (யோவா 1 : 16 : 7). அதை அவர்கள் கைக்கொண்டு நடந்தால், அவர்களோடே தேவன் இருந்திருப்பார். அவர்களும் தேவனை உடையவர்களாய் உயிருள்ளவர்களாக இருந்திருப்பார்கள். அந்த நியாயப் பிரமாணம், அவர்களுக்கு ஜீவனுக்கேதுவாய் இருந்திருக்கும் (ரோம 7 : 10). ஆனால் அவர்களோ அதில் நிலைநிற்கவில்லை (எபி 8 : 9). எல்லோரும் மீறி பாவம் செய்து

தேவ மகிமையற்றவர்களானார்கள் (ரோம 3 : 23).

இவர்களிடத்துக்கு தேவனுடைய வார்த்தை கடந்து வந்தது. வனாந்தரத்தில் யோவான் ஸ்நானகன் மனந்திரும்புங்கள் என்றான் (மத் 3 : 2). கர்த்தராகிய இயேசு கிறிஸ்து மனந்திரும்புங்கள் என்றார் (மத் 4 : 17). அவர் மரித்து, உயிர்த்து பரிசுத்தாவி சீஷர்கள் மீது வந்தபோது, அப்போஸ்தலர்கள் மனந்திரும்புங்கள் என்றார்கள் (அப் 2 : 38).

யோவானுடைய சத்தத்தைக்கேட்டு மனந்திரும்பினவர்கள் அவனுடைய வார்த்தைக்குக் கீழ்ப்படிந்தார்கள். இயேசு கிறிஸ்துவினுடைய சத்தத்தைக் கேட்டு மனந்திரும்பியவர்கள் அவருடைய வார்த்தைக்குக் கீழ்ப்படிந்தார்கள். அப்போஸ்தலருடைய சத்தத்தைக்கேட்டு மனந்திரும்பினவர்கள் பரிசுத்தாவியால் உண்டாகும், அப்போஸ்தலருடைய உபதேசத்துக்குக் கீழ்ப்படிந்தார்கள் (அப் 2 : 41,42). இப்படி கீழ்ப்படிந்தவர்கள் தேவனுக்கேற்றவர்கள். தேவனை உடையவர்களானார்கள். ஜீவனைப் பெற்றார்கள். தங்களுடைய ஜீவனை ஆதாயப்படுத்திக் கொண்டார்கள்.

தேவ கட்டளைக்குக் கீழ்ப்படியாமல் தேவனில்லாதிருந்தவர்கள், இனிமேல் கீழ்ப்படிவோம் என்று கீழ்ப்படியாமையிலின்று மனந்திரும்பினார்கள். மனந்திரும்பினவர்கள் கீழ்ப்படியும்படிக்கே மனந்திரும்புகிறார்கள். தேவனுடைய எல்லா கட்டளைகளுக்கும் கீழ்ப்படிவோம் என்று மனந்திரும்புகிறார்கள். தேவ கற்பனைகளுக்குக் கீழ்ப்படிந்தால் தேவன் நம்மோடே இருப்பார், நாம் ஜீவனுள்ளவர்களாயிருப்போம் என்று ஜீவனுக்கேதுவாக மனந்திரும்புகிறார்கள். இந்த பாக்கியம் இஸ்ரவேலருக்கு மட்டுமல்ல இஸ்ரவேலரல்லாத புறஜாதிகளுக்கும் தேவன் அருளிச் செய்கிறார் (அப் 11 : 18).

திருடுகிறவன் இனித்திருடாமல், நலமான வேலை செய்து குறைச்சலுள்ளவனுக்குக் கொடுக்கத்தக்கதாக சம்பாதிக்க வேண்டும் (எபே 4 : 28) என்பது தேவ கற்பனை. இன்னும் திருடுகிறவன் மனந்திரும்பாதவன் இவனுக்கு ஞானஸ்நானம் கொடுக்கக் கூடாது.

ஸ்திரீகள் மயிரைப்பின்னி, பொன்னாபரணங்களை அணிந்து உயர்ந்த வஸ்திரங்களை உடுத்திக் கொள்ளுதலாகிய புறம்பான அலங்கரிப்பு உங்களுக்கு அலங்காரமாயிராமல், அழியாத அலங்கரிப்பாயிருக்கிற சாந்தமும், அமைதலுமுள்ள ஆவியாகிய இருதயத்தில் மறைந்திருக்கிற குணமே உங்களுக்கு அலங்காரமாயிருக்கக்கடவது (I பேது 3 : 3, 4; I தீமோ 2 : 9, 10) என்பதும் தேவ ஆலோசனையே. இதற்கு கீழ்ப்படியாமல் மாமற்று இருக்கிறவ(ள்)ன், இன்னும் மனந் திரும்பாதவ(ன்)ள், இவ(ளு)னுக்கும் ஞானஸ்நானம் கொடுக்கக்கூடாது.

ஞானஸ்நானமானது ஆண்டவரே, நான் உமக்கு அடிமை. இனிமேல் என் இஷ்டம் போல் நடக்காமல் நீர் சொல்லுகிறபடி யெல்லாம் நடப்பேன் என்றும், இதோ கீழ்ப்படியாத பழைய பாவமனுஷன் செத்துப் போனான், அவன் அடக்கம் பண்ணப்பட்டும் (ஞானஸ்நானத்தினால்), இதோ நான் இது முதல் உம்முடைய வார்த்தைகளுக்கெல்லாம் கீழ்ப்படியும் பொருட்டு கீழ்ப்படியாமையை விட்டு மனந்திரும்பினவன்(ள்) என்று தேவனோடே பண்ணும் நல்மனசாட்சியின் உடன்படிக்கையாயிருக்கிறது (ரோம 6 : 1-7, I பேது 3 : 21).

மனந்திரும்புங்கள் என்று பிரசங்கிக்கிறவன், மெய்யாக மனந்திரும்பி வருகிறவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்து, தேவனால் பெற்ற உபதேசத்தை அவர்களுக்குக் கொடுத்து அவர்களை தேவனுடைய வழியிலே நடத்தி மகிமையில் கொண்டு போய் சேர்க்க வேண்டும். பிரசங்கம் மட்டும் பண்ணிவிட்டு ஓடிவிடக் கூடாது (மத் 3 : 2, 11, 12; 28 : 19, 20; மத் 4 : 17, யோவா 4 : 1, அப் 2 : 38-42).

மனந்திரும்புதலும் பாவ மன்னிப்பும் எருசலேம் தொடங்கி சகல தேசத்தாருக்கும் அவருடைய நாமத்தினாலே பிரசங்கிக்கப்பட வேண்டியது (லூக் 24 : 47) என்றபடி எருசலேமிலிருந்து சகல தேசத்தாருக்கும் மனந்திரும்புங்கள் என்ற சத்தம் தொனித்தது. கீழ்ப்படிந்தவர்கள் ஞானஸ்நானம் பெற்று தேவ வழியில் நடந்தார்கள்.

இந்த கடைசி நாட்களில் நீ மறுபடியும் அநேக ஜனங்களையும், ஜாதிகளையும், பாஷைக்காரரையும், ராஜாக்களையுங் குறித்து தீர்க்கதரிசனம் (சுவிசேஷம்) சொல்ல வேண்டும்" (வெளி 10 : 11) என்ற வசனத்தை ஆதாரமாகக் காட்டி புதிய எருசலேமிலிருந்து மறுபடியும் சகல தேசத்தாருக்கும் சுவிசேஷம் பிரசங்கிக்க வேண்டும் என்று கர்த்தர் எங்களுக்கு கட்டளையிட்டுள்ளார்.

எங்களுடைய சத்தம் கேட்டு வருவோருக்கு "கர்த்தருடைய ஆலயத்துக்குப் போவோம் வாருங்கள், அவர் தமது வழிகளை நமக்குப் போதிப்பார், நாம் அவர் பாதைகளில் நடப்போம் என்பார்கள். ஏனெனில் சீயோனிலிருந்து வேதமும், எருசலேமிலிருந்து கர்த்தருடைய வசனமும் புறப்படும்" (ஏசா 2 : 3) என்ற தீர்க்கதரிசனத்தின் நிறைவேறுதலாக வேதத்திற்கு சரியான விளக்கமும், தேவனுடைய ஆலோசனையும் அருளப்படும்.

ஏனெனில் "கடைசி நாட்களில் கர்த்தருடைய ஆலயமாகிய பர்வதம் பர்வதங்களின் கொடுமுடியில் ஸ்தாபிக்கப்பட்டு, மலைகளுக்கு மேலாய் உயர்த்தப்படும்" (ஏசா 2 : 2) என்றபடி இதோ கர்த்தருடைய ஆலயமாகிய "புதிய எருசலேம் சபை" எல்லா சபைகளுக்கும் மேலாய் தேவனாலே உயர்த்தப்பட்டுள்ளது.

"புதிய எருசலேம் சபை" உங்களை அழைக்கிறது. மனந்திரும்புங்கள், தேவ ஆலோசனை கேட்க மனந்திரும்புங்கள். கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவாலே உங்களுக்கு மனந்திரும்புதலையும் பாவமன்னிப்பையும் அருளுவாராக (அப் 5 : 30, 31). ஜீவனை அருளுவாராக (யோவா 5 :24).

---

"திரளான ஜனங்கள் புறப்பட்டு வந்து, நாம் கர்த்தரின் பர்வதத்துக்கும், யாக்கோபின் தேவனுடைய ஆலயத்துக்கும் போவோம் வாருங்கள்; அவர் தமது வழிகளை நமக்குப் போதிப்பார், நாம் அவர் பாதையில் நடப்போம் என்பார்கள்" —ஏசா 2 : 3.

---

(தொடர்ச்சி)

# மோட்ச வழி

## (குரு-சிஷ்ய உரையாடல்)

***சிஷ்ய :-*** *சாத்தான் எவ்விதமாக கிரியை செய்கிறான்? அவனுடைய கிரியையை எவ்விதமாகக் கண்டுபிடிக்கலாம்?*

**குரு :-** மனிதர்கள் தேவனுடைய வசனத்தை தேவனை அறிந்துகொள்ளாவிடாமல் தடுப்பதிலும், அவிசுவாசம் கொள்ளச் செய்வதிலும் தேவனுடைய வசனத்தின் அர்த்தத்தை அதின் கூரை மழுங்கச் செய்வதிலும் தேவனுடைய சித்தம், திட்டம், நோக்கத்திற்கு மாறாக வேதவசனத்தினுடைய கருத்தை மாற்றிப் போதிப்பதிலும் சாத்தான் தன்னுடைய கிரியைகளை வெளிப்படுத்துகிறான். அவிசுவாசத்திற்கும், பாவத்திற்கும், தவறான உபதேசங்களுக்கும் சாத்தானே காரணம். கடைசிக்காலத்தின் அறிகுறிகளில் ஒன்று மனசாட்சியில் சூடுண்ட பொய்யர்கள் வஞ்சிக்கிற ஆவிகளுக்கும், பிசாசின் உபதேசங்களுக்கும் செவி கொடுத்து விசுவாசத்தைவிட்டு விலகிப் போவார்கள் என்றும், அவர்களுடைய கெட்ட நடக்கைகளை அநேகர் பின்பற்றுவார்கள் என்றும் வேதத்தில் திட்டமாக எழுதப்பட்டுள்ளது. (I தீமோ 4:1-3; II பேது 2:1-3, 10, 12-22).

***சிஷ்ய :-*** *விசுவாசத்தைவிட்டு விலகிப்போவதென்பது எந்த விசுவாசத்தை குறிப்பிடுகிறது?*

**குரு :-** 1. வேதத்தில் எழுதப்பட்டிருக்கிற பிரகாரம் அப்படியே விசுவாசிப்பதே விசுவாசம். அதற்கு சுய விளக்கம் கொடுத்து வசனங்களை திரித்தும், கூட்டியும்,

குறைத்தும் தங்கள் கொள்கைக்குத் தக்க வசனங்களை மாத்திரம் பற்றிக்கொண்டு மற்ற வசனங்களை விட்டுவிடுவது விசுவாசத்தைவிட்டு விலகுவதாகும்.

2. கிறிஸ்துவினால் வருகிற இரட்சிப்பை விட்டுவிட்டு நியாயப்பிரமாணத்தின் நீதியை தேடிப்போவதோ, கிறிஸ்துவின் மனுஷீகத்தை மறுதலிப்பதோ, தெய்வீகத்தை மறுதலிப்பதோ, கிறிஸ்து தேவனுடைய குமாரன் என்ற குமாரத்துவத்தை மறுதலிப்பதோ, கிறிஸ்துவை விட்டு பிரிந்து கிருபையிலிருந்து விழுவதாகும்.

3 இரட்சிப்பைப்பெற்று கிறிஸ்துவுக்குள்ளானவர்கள் பாவத்தில் விழுந்து பொருளாசையில் சார்ந்து கொண்டு கிறிஸ்துவை விட்டு விலகுவது அல்லது இரட்சிப்பை இழந்து போவது விசுவாசத்தை விட்டு விலகுதலாகும்.

4 தேவனை அறிகிற அறிவை அடைந்து கிறிஸ்துவினால் வருகிற இரட்சிப்பைப் பெற்று பாவத்திலிருந்து விடுதலையானவர்கள் பரிசுத்த ஜீவியம் செய்து கனியுள்ள வாழ்க்கை வாழாமல்; அந்த உபதேசம் இந்த உபதேசம் என்று சொல்லிக்கொண்டு, தேவ ஊழியமும் செய்து கொண்டு, பொய்யும் புரட்டும் வஞ்சனையும் செய்துகொண்டு அந்தரங்க பாவிகளாயும் வெளியரங்கமான பாவிகளாயும் திரிகிறவர்கள் விசுவாசத்தை விட்டு விழுந்துவிட்டவர்களாகும்.

5. தேவனுக்கென்று பிரதிஷ்டை செய்து பின்பு அதைவிட்டு விலகுவது விசுவாசத்தைவிட்டு விலகுவதாகும்.

6 தேவனுடைய சித்தத்தை அறிந்தும், அவருடைய தெளிவான கட்டளைகளை அறிந்திருந்தும் அவைகளை அசட்டை செய்துவிட்டு மாம்ச சித்தத்தை, சுயசித்தத்தை நிறைவேற்றுவது விசுவாசத்தை விட்டு விலகிப்போவதாகும்.

7. கிறிஸ்துவின் வாழ்வை வாழ்ந்து சாட்சியுள்ள ஜீவியமாய் மென்மேலும் வெற்றியடைந்து முன்னேறி முடிவுபரியந்தம் நிலைநிற்காமல், வெற்றிமேல் வெற்றியடையாமல் சோர்வுக்கு இடங்கொடுத்து சபை ஐக்கியத்தை விட்டுவிடுதலும் விசுவாசத்தை விட்டு விலகிப் போவதாகும்.

(தொடரும்)

> "கள்ளத் தீர்க்கதரிசிகளும், ஜனங்களுக்குள்ளே இருந்தார்கள், அப்படியே உங்களுக்குள்ளும் கள்ளப் போதகர்கள் இருப்பார்கள்; அவர்கள் கேட்டுக்கேதுவான வேதப்புரட்டுகளைத் தந்திரமாய் நுழையப் பண்ணுவார்கள்" —II பேது 2:1

## வேதபாடம் (தொடர்ச்சி)

யாத். 9:1-4:-ஐந்தாவது தடவையாக என் ஜனங்கள் என்னை ஆராதிக்க போகும்படியாக போகவிடு என்றும், அப்படி விடவில்லையென்றால் உன் மிருக ஜீவன்கள் எல்லாம் கொடிய நோயினால் பாதிக்கப்பட்டு சாகும் என்றும்; இஸ்ரவேலர்களின் மிருக ஜீவன்களுக்கு நோய் வராதென்றும் கர்த்தர் சொல்லுகிறார் என்றும் இவ்விதமாய் என் ஜனங்களுக்கும் எகிப்தியருக்கும் வித்தியாசம் உண்டாக்குவேன் என்று கர்த்தர் சொன்னார்.

யாத். 9:5-7 எட்டாவது அற்புதம்: மறுநாளில் எகிப்தியரின் மிருகஜீவன்களெல்லாம் செத்துப்போயிற்று. இஸ்ரவேலரின் மிருக ஜீவன்களில் ஒன்றாகிலும் சாகவில்லை. ஆனாலும் பார்வோனின் இருதயம் கடினப்பட்டது. அவன் இஸ்ரவேல் ஜனங்களைப் போகவிடவில்லை.

யாத்.9:8-12 ஒன்பதாவது அற்புதம்: கர்த்தர் மோசேயையும் ஆரோனையும் நோக்கி கைப்பிடி நிறைய சாம்பலை எடுத்து வானத்துக்கு நேராக இறையுங்கள், எகிப்து தேசம் எங்கும் மனிதர்கள் முதல் மிருகஜீவன்கள் வரை எல்லார் மேலும் எரிபந்தமான கொப்புளங்கள் வருமென்றார். அவர்கள் அப்படியே செய்தார்கள். எகிப்தியர் மேலும் மந்திரவாதிகள் மேலும் மிருகஜீவன்கள் மேலும் எரிபந்தமான கொப்புளங்கள் உண்டாயிற்று. மந்திரவாதிகளும் மோசேக்கு முன்பாக நிற்கக்கூடாமல் போயிற்று. ஆனாலும் பார்வோன் இருதயம் கடினப்பட்டது. கர்த்தர் அவன் இருதயத்தை கடினப்படுத்தினார். அவன் இஸ்ரவேல் புத்திரருக்கு செவிகொடுக்கவில்லை.

யாத் 9:13-16 கடவுளுடைய எட்டாவது கட்டளை: எனக்கு ஆராதனை செய்ய என் ஜனங்களை அனுப்பிவிடு இல்லாவிட்டால் உன் இருதயத்திலும், உன் ஊழியக்காரர், ஜனங்கள் மேலும் வாதைகளை அனுப்புவேன். கொடிய கல்மழையை அனுப்புவேன். அதனால் உன் மிருகஜீவன்களும், மரங்களும் அழிக்கப்படுமென்றார். அப்படியே கல்மழை உண்டாயிற்று. வெளியிலுள்ள மனிதர்களையும், மிருகஜீவன்களையும், மரங்களையும் அழித்துப்போட்டது: இஸ்ரவேல் புத்திரர் இருந்த கோசேன் நாட்டிலே கல்மழை பெய்யாதிருந்தது.

யாத் 9:27-28: அப்பொழுது பார்வோன் மோசேயையும் ஆரோனையும் அழைத்து எனக்காக ஜெபம் பண்ணுங்கள் நான் உங்களை போகவிடுவேன் என்று வேண்டிக் கொண்டான.

யாத் 9:29-32: மோசே தீர்க்கதரிசனமாய் நான் மெய்தேவனை நோக்கி வேண்டிக் கொள்வேன். மழை நின்று போகும். ஆனால் நீயும் உன் ஜனங்களையென்றும் மெய்தேவனுக்குக் கீழ்ப்படிய மாட்டீர்கள என்று சொல்லுகிறார். அப்படியே மோசே ஜெபம் பண்ணினபோது மழை நின்று போயிற்று. ஆனால் பார்வோனும் அவனுடைய ஊழியர்களும் தங்கள் இருதயத்தை கடினப்படுத்தி இஸ்ரவேல் ஜனங்களை போகவிட மாட்டோம் என்று சொல்லிவிட்டார்கள்.

(தொடரும்)

"இன்று அவருடைய சத்தத்தை கேட்பீர்களாகில், கோபமூட்டுதலில் நடந்தது போல உங்கள் இருதயங்களைக் கடினப்படுத்தாதிருங்கள்."

—எபி 3:15

(மார்ச் மாத தொடர்ச்சி)

## யார் சீயோன்?

உலகம் சபைக்குள் புகுந்ததால் ஆதிச் சபைக்குள் உலகம் புகுந்ததால் சபை மகிமையிழந்தது. மெய்யான நகரமே திருச்சபை. ஆதிச்சபை பரிசுத்த ஆவியானவருடைய ஆளுகையை இழந்து இரட்சிக்கப்படாத துன்மார்க்கரால் நிறைந்தது. "உண்மையுள்ள நகரம் எப்படி வேசியாய்ப் போயிற்று! அது நியாயத்தால் நிறைந்தது, நீதி அதில் குடி கொண்டிருந்தது; இப்பொழுதோ அதின் குடிகள் கொலைபாதகர்" (ஏசா 1:21) என்று வாசிக்கிறோம்.

சீயோன் எருசலேமுக்குள் இருந்தது. எருசலேமின் ஒரு பாகமே சீயோன். "சீயோனைச் சேர்ந்த ஜனங்கள் எருசலேமில் வாசமாயிருப்பார்கள்..." (ஏசா 30:19). மெய்யான திருச்சபையில் சீயோன் இருக்கிறது. மறுபடியும் சீயோன் எழுப்பப்படுவதைத் தீர்க்கதரிசனமாய் வேதாகமத்தில் வாசிக்கிறோம். உன் நியாயாதிபதிகளை முன்னிருந்தது போலவும், உன் ஆலோசனைக்காரரை ஆதியில் இருந்தது போலவும் திரும்பக்கட்டளையிடுவேன் பின்பு நீ நீதிபுரம்

என்றும், சத்திய நகரம் என்றும், பெயர் பெறுவாய்" (ஏசா 1 : 26, 27). கர்த்தர் இந்தக் கடைசி காலத்தில் மறுபடியும் சீயோனைக் கட்டுகிறார். திருச்சபை கட்டி முடிக்கப் பட்ட பின்பே கர்த்தர் தமது மகிமையில் வெளிப்படுவார். "கர்த்தர் சீயோனைக் கட்டி தமது மகிமையில் வெளிப்படுவார்" (சங் 102 : 15). "கடைசி நாட்களில் கர்த்தருடைய ஆலயமாகிய பர்வதம் (சபை) பர்வதங் களின் கொடு முடியில் ஸ்தாபிக்கப் பட்டு, மலைகளுக்கு மேலாய் (எல்லா சபை களுக்கும் மேலாய்) உயர்த்தப்படும்; எல்லா ஜாதிகளும் அதற்கு ஓடி வருவார்கள். திர ளான ஜனங்கள் புறப்பட்டு வந்து: நாம் கர்த்தரின் பர்வதத்துக்கும் யாக்கோபின் தேவனுடைய ஆலயத்துக்கும் போவோம் வாருங்கள்; அவர் தமது வழிகளை நமக்குப் போதிப்பார், நாம் அவர் பாதைகளில் நடப் போம் என்பார்கள்; ஏனெனில் சீயோனி லிருந்து வேதமும், எருசலேமிலிருந்து கர்த் தரின் வசனமும் வெளிப்படும்" (ஏசா2:2,3). என் ஊழியக்காரரின் வார்த்தையை நிலைப் படுத்தி, என் ஸ்தானாபதிகளின் ஆலோ சனையை நிறை வேற்றி, குடியேறுவாய் என்று எருசலேமுக்கும் கட்டப்படுவீர்கள் என்று யூதாவின் பட்டணங்களுக்கும் சொல்லி அவைகளின் பாழான ஸ்தலங்களை எடுப்பிப்பவர்" (ஏசா 44 : 26) என்றும், கர்த் தர் எருசலேமைக் கட்டுகிறார்; துரத்துண்ட இஸ்ரவேலரைக் கூட்டிச் சேர்க்கிறார்" (சங் 147 : 2) என்றும் "வடதிசையிலுள்ள சீயோன் பர்வதம் அழகிய ஸ்தானமும் சர்வ பூமியின் மகிழ்ச்சியுமாயிருக்கிறது அதுவே மகாராஜாவின் நகரம்" (சங் 48:2) என்றும் வாசிக்கிறோம். பல நகரமல்ல, ஒரு நகரம் (எபே 2 : 19 - 22). இது இசைவாய் இணைக்கப்பட்டு கட்டப்படுகிறது. புதிய எருசலேம் ஊழியர்கள் இவ்விதமாய் இசை வாய் இணைக்கப்பட்டு கட்டப்படுகிறார்கள். இசைவில்லாதது தூர எறியப்படும். புதிய எருசலேமின் ஊழியர்கள் அதின் கல்லு களுக்காகப் பரிதாபப்படுகிறார்கள் (ஊழியர் கள் விசுவாசிகளுக்காய் கவலைப்படுதல்) (சங் 102 : 14). தேவனுடைய சபை என்று சொல்லப் படுவதற்கு தகுதியற்ற பிற சபை யின் ஊழியர்கள் தங்கள் வயிற்றுக்காகவே வலைப்படுகிறார்கள்..."...அநேகர் வேறுவித மாய் நடக்கிறார்கள்; அவர்கள் கிறிஸ்துவின் சிலுவைக்குப் பகைஞரென்று உங்களுக்கு அநேகந்தரம் சொன்னேன், இப்பொழுது கண்ணீரோடும் சொல்லுகிறேன். அவர் களுடைய முடிவு அழிவு அவர்களுடைய தேவன் வயிறு, அவர்களுடைய மகிமை அவர்களுடைய இலச்சையே, அவர்கள் பூமிக்கடுத்தவைகளைச் சிந்திக்கிறார்கள்". (பிலி 3 : 18, 19).

"சீர்கெட்ட பிள்ளைகளே, திரும்புங்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார்; நான் உங்கள் நாயகர்; நான் உங்களை ஊரில் ஒருவனும் வம்சத்தில் இரண்டுபேருமாகத் தெரிந்து உங்களை சீயோனுக்கு அழைத்துக் கொண்டு வந்து, உங்களுக்கு என் இருதயத்துக்கு ஏற்ற மேய்ப்பர்களைக் கொடுப்பேன், அவர் கள் உங்களை அறிவோடும் புத்தியோடும் மேய்ப்பார்கள். நீங்கள் தேசத்திலே பெருகிப் பலுகுகிற அந்நாட்களிலே, அவர்கள் கர்த் தருடைய உடன்படிக்கைப் பெட்டியென்று இனிச் சொல்வதில்லை; அது அவர்கள் மன தில் எழும்புவதும் இல்லை, அது அவர்கள் நினைவில் வருவதும் இல்லை; அதைக்குறித்து விசாரிப்பதும் இல்லை; அது இனி செப்ப னிடப்படுவதும் இல்லை என்று கர்த்தர் சொல் லுகிறார். அக்காலத்திலே எருசலேமைக் கர்த்தருடைய சிங்காசனம் என்பார்கள் சகல ஜாதியாரும் எருசலேமில் விளங்கிய கர்த்தருடைய நாமத்தினிமித்தம் அதனிட மாகச் சேர்வார்கள்; அவர்கள் இனித் தங்கள் பொல்லாத இருதயத்தின் இச்சையின்படி நடவார்கள்" (எரே 3 : 14 - 17) என்று வேதம் தெளிவாக சொல்லுகிறது.

இந்நாட்கள் கடைசி நாட்களாகும் கள்ள ஊழியர்களும், ஊழியங்களும் தேவ ஆவியின் நடத்திப்பின்படியல்ல சுயதுண்டு தலின்படி நடக்கும் ஊழியர்களும் ஊழியங் களும் அதிகம் (II தீமோ 3 : 1-9). பிசாசின் உபதேசங்கள் உருவாகும் என்றும் விவாகம் முடிக்கப் கூடாதென்றும்; தேவன் படைத்த சில ஆகாரங்களை (அவிழ்தங்களை) விலக்க வும் வேண்டுமென்று அந்த பொய்யர் கட்டளையிடுவார்கள் (I தீமோ 4 : 1,2).

மெய்யான சபையோ உயர்த்தப்படும் உன்னை ஒடுக்கினவர்களின் பிள்ளைகளும்

குனிந்து உன்னிடத்தில் வந்து, "உன்னை அசட்டைபண்ணின யாவரும் உன் காலடியில் பணிந்து, உன்னைக் கர்த்தருடைய நகரம் என்றும், இஸ்ரவேலுடைய பரிசுத்தரின் சீயோன் என்றும் சொல்வார்கள்" (ஏசா 60 : 14).

கர்த்தர் சீயோனுக்கு உண்மையான ஊழியர்களை சுவிசேஷகர்களைக் கொடுக்கிறார் (ஏசா 52 : 7 ; 40 :9). கர்த்தரால் மீட்கப்பட்டவர்கள் சீயோனுக்கு வருவார்கள் (ஏசா 51 : 11). ஆதலால் "எழும்பு, எழும்பு சீயோனே, உன் வல்லமையைத் தரித்துக்கொள்; பரிசுத்த நகரமாகிய எருசலேமே, உன் அலங்கார வஸ்திரங்களை உடுத்திக் கொள்; விருத்தசேதனமில்லாதவனும் அசுத்தனும் இனி உன்னிடத்தில் வருவதில்லை. தூசியை உதறிவிட்டு எழுந்திரு; எருசலேமே, வீற்றிரு; சிறைப்பட்டுப்போன சீயோன் குமாரத்தியே, உன் கழுத்திலுள்ள கட்டுகளை அவிழ்த்து விடு" (ஏசா 52 : 12). "பின்பு நான் பார்த்தபோது, இதோ, சீயோன் மலையின்மேல் ஆட்டுக்குட்டியானவரையும், அவரோடேகூட அவருடைய பிதாவின் நாமம் தங்கள் நெற்றிகளில் எழுதப்பட்டிருந்த இலட்சத்து நாற்பத்து நாலாயிரம் பேரையும் நிற்கக்கண்டேன்" (வெளி 14:1) இதில் சொல்லப்பட்ட சீயோன் மலை இப்பொழுது பரத்திலுள்ள ஒரு இடம். பரம சீயோன். அதைப்பற்றி பின் விபரம் எழுதுவோம். ஆதலால் சீயோன் என்பது அப்போஸ்தலர் தீர்க்கதரிசிகள் என்பவர்களுடைய அஸ்திபாரத்தின் மேல் கடைசி காலத்தில் கட்டப்பட்டுக் கொண்டிருக்கிற மெய்யான திருச்சபையேயாகும். அதற்கே சீயோன் என்றும் எருசலேம் என்றும் பெயர்.

"அக்காலத்திலே எருசலேமைக் கர்த்தருடைய சிங்காசனம் என்பார்கள்; சகல ஜாதியாரும் எருசலேமில் விளங்கிய கர்த்தருடைய நாமத்தினிமித்தம் அதனிடமாகச் சேர்வார்கள்; அவர்கள் இனித் தங்கள் பொல்லாத இருதயத்தின் இச்சையின்படி நடவார்கள்" (எரே 3:17). இது பூரணமானது.

"பூரண வடிவுள்ள சீயோனிலிருந்து தேவன் பிரகாசிக்கிறார்" (சங் 50:2). இங்கே கர்த்தருடைய வாசஸ்தலமுள்ளது. "சாலேமில் அவருடைய கூடாரமும், சீயோனில் அவருடைய வாசஸ்தலமும் இருக்கிறது" (சங் 76:2).

கர்த்தர் அதின் வாசல்களில் பிரியமாயிருக்கிறார் "கர்த்தர் யாக்கோபின் வாசஸ்தலங்களெல்லாவற்றைப் பார்க்கிலும் சீயோனின் வாசல்களில் பிரியமாயிருக்கிறார்" (சங் 87:2).

"எருசலேமே, கர்த்தரை ஸ்தோத்திரி; சீயோனே, உன் தேவனைத் துதி" (சங் 147:12).

---

"...எருசலேமின் மதில்களைக் கட்டுவீராக"

—சங் 51:18.

---

(தொடர்ச்சி)

மாதர் பகுதி

# குடும்பம்

2 கீழ்ப்படிதல் : நல்லவர்கள் அல்லது பொல்லாதவர்கள் என்று பிள்ளைகள் பேரெடுப்பது பெற்றோர்களால்தான். இளமைப்பிராய முதல் நல்ல வழியில் பயிற்றுவிக்கப்படும் பிள்ளைகள் நல்லவர்களாய் இருப்பார்கள். பிள்ளைகளுடைய இளமைப் பிராயத்தில் பெற்றோர்கள் அவர்களுடைய சுகத்தைப் பற்றி எப்படி கவலையுள்ளவர்களாயிருக்கிறார்களோ அப்படியே இளமைப் பிராயத்திலிருந்தே அவர்களுடைய குணநலத்தைப் பற்றியும் சுபாவத்தைப் பற்றியும் கவலையுள்ளவர்களாக இருக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

சில பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளின் உடல் சுகத்தைப்பற்றி அதிக அக்கறை எடுத்துக் கொள்ளுகிறதைப்போல் சிறிதாகிலும் அவர்களின் குணக்கேட்டிலும்

நித்திய அழிவிற்கு அவர்களை நடத்தும் குணத்தைப்பற்றி அதிக கவலையுள்ளவர்களாயிருக்க வேண்டும் என்று வருந்திக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

சிசுக்களாயிருக்கும் போதே கீழ்ப்படிய பயிற்றுவித்தால் பெரியவர்களாகும் போது சந்தோஷத்தோடே அதன் பலனை அநுபவிக்கலாம். பிள்ளைகள் கீழ்ப்படியாமைக் காட்டுகிறதற்குக் காரணம் அவர்கள் பெற்றோரே. இவர்கள் பிள்ளைகள் கீழ்ப் படியாமைக் காட்டும் பொழுது அஜாக்கிரதையாயிருந்து விட்டு பிற்பாடு வருத்தப்படுகிறார்கள்.

நிலம் பதமாயிருக்கும்போது விதைக்க வேண்டிய விதையைப் பதம் தப்பின போது விதைத்தால் எப்படி பயனற்றுப் போகிறதோ அப்படியே பிள்ளைகள் குழந்தைகளாயிருக்கும்போதே நல்ல காரியங்களைச் செய்யவும், பெற்றோருக்குக் கீழ்ப்படியவும் பயிற்றுவிக்கப்படாவிட்டால் பெரியவர்களான பின்பு அதற்காகப் படும் பிரயாசம் பயனற்றுப் போகும். பிள்ளைகள் தங்களுடைய விருப்பத்தின்படியல்ல தங்களுக்குப் பெற்றோரால் சொல்லப்படுகின்றபடியே செய்ய வேண்டுமென்பதை அவர்கள் திட்டமாய் அறிந்து கொள்ளும்படி செய்ய வேண்டும்.

பிள்ளைகள் சிறுவர்களாயிருக்கும்போதே தங்கள் பெற்றோரை மேற்கொள்ள விரும்புகிறார்கள். பெற்றோர்கள் ஒரு தடவை மேற்கொள்ளப்படுவார்களாகில் பிற்பாடு பெற்றோர் பிள்ளைகளை மேற்கொள்வது வருத்தமாயிருக்கும். ஆனபடியால் பெற்றோருக்கும் பிள்ளைகளுக்கும் உண்டாகும் வாக்குவாதத்தில் பெற்றோர் தங்கள் பிள்ளைகளுக்கு அதிக வருத்தமில்லாதபடி அவர்களை மேற்கொள்ள வேண்டும்.

சில பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளால் எப்படி மேற்கொள்ளப்படுகிறார்கள் என்பதை கவனியுங்கள்.

பிள்ளை : அம்மா, அந்த டப்பாவில் இருக்கும் மிட்டாயில் கொஞ்சம் தாருங்கள்.

தாய் : அதில் மிட்டாய் இல்லை, எல்லாம் செலவாகிப் போய்விட்டது.

பிள்ளை : இல்லை, அதில் மிட்டாய் இருக்கிறது. இப்போது நீங்கள் டப்பாவைத் திறந்த போது நான் பார்த்தேன்.

தாய் : இப்போது அந்த மிட்டாய் உனக்கு அவசியமில்லை, அது உன வயிற்றுக்கு உதவாது.

பிள்ளை : எனக்கு மிட்டாய் வேண்டும் கொஞ்சம் தின்றாலென்ன? (அழவாரம்பித்தான்)

தாய் : உன்னை அமைதியாயிருக்கும்படி சொன்னது காதில் விழவில்லையா? அம்மா அதிக வேலையாயிருக்கிறேன் தெரியவில்லையா?

பிள்ளை : எனக்கு மிட்டாய், எனக்கு மிட்டாய் (பெருஞ்சத்தமிட்டு அழவாரம்பித்தான் )

தாய் : நீ அழுகையை நிறுத்தாவிட்டால் கொஞ்சம்கூட மிட்டாய் உனக்குத் தர மாட்டேன்.

பிள்ளை : மிட்டாய் மிட்டாய் (முன் போலவே சத்தமிட்டான்).

தாய் : (கோபத்தோடு எழும்பி ஒரு மிட்டாயை எடுத்து பையனிடம் கொடுத்து) இப்போ சத்தம் போடாதே. அதோ அண்ணன் வருகிறான் சீக்கிரமாய்த் தின்று விடு. நான உனக்கு மிட்டாய் கொடுத்தேனென்று அண்ணனிடம் சொல்லாதே.

பிள்ளை : (அண்ணனைப் பார்த்து) இதோ! பார் அம்மா எனக்கு மிட்டாய் கொடுத்தார்கள், உனக்குக் கிடையாது.

ஏசுதாஸ் : ஆ! ஆ! எனக்குக் கிடையாதா அம்மா அம்மா எனக்குக் கொஞ்சம் மிட்டாய் கொடுங்கள்.

தாய் : இல்லை கொஞ்சம் பொறு என் வேலை முடியட்டும்.

ஏசுதாஸ் : எனக்கு இப்போதே வேண்டும். கொடுக்காவிட்டால் நான் அழுவேன்.

தாய் : (திரும்பவும் ஒரு மிட்டாயை எடுத்து ஏசுதாஸிடம் கொடுத்து) அப்பப்பா இந்த வீட்டில் ஏதாவது ஒரு பொருளை வைத்து வைக்க விதியுண்டா போதும்; போதும் போதுமென்றாகிவிட்டது. ஆகட்டும் இனியாராவது என்னை தொந்திரவு செய்யட்டும் நான் கொடுக்கிறதை பார்ப்போம்.

பிள்ளைகள் : கொடுக்கமாட்டீர்களா?

பாருங்கள், இப்படியே இந்தியாவிலுள்ள அநேக தாய்மார்கள் தங்கள் சிறு பிள்ளைகளால் மேற்கொள்ளப்படுகிறார்கள். அழுதால் எப்படியாவது கிடைக்கும் என்பதுதான் அநேக குடும்பங்களிலுள்ள பிள்ளைகளின் நோக்கம். தாய்மார்கள் அழுகிற பிள்ளைகளுக்கு அவர்கள் விரும்புவதை கொடுப்பதால்தான் இந்த வழக்கம் உண்டாகிறது.

இதை நிறுத்த ஒரே வழி, பிள்ளைகள் அழுவதற்காக எதையும் கொடுக்கும் பழக்கத்தை நிறுத்தி விட்டால் தாய்மார்கள் அநேக தொந்திரவுகளுக்கு நீங்கலாகலாம். ஆதலால் தாய்மார்கள் இளமையிலேயே இதைப்பற்றி ஜாக்கிரதையாயிருக்க வேண்டும்.

(தொடரும்)

"பிள்ளையானவன் நடக்க வேண்டிய வழியிலே அவனை நடத்து; அவன் முதிர்வயதிலும் அதை விடாதிருப்பான்."

—நீதி 22 . 6.

# தெய்வ அவதார நோக்கம்

மனிதர்கள் மத்தியில் பல மார்க்கங்களும் அநேக தெய்வங்களும் தோன்றியுள்ளது. உருவாகிய மார்க்கங்களின் உபதேசமும், அவதரித்த தெய்வங்களின் நோக்கமுமென்ன என்பதை உற்று நோக்கும் பொழுது: ஒரு மார்க்கம் மனிதன் நிர்வாணியாய் சஞ்சரிக்க வேண்டும் என்று உபதேசிக்கிறது. ஒரு மார்க்கம் மனிதன் ஆசையை துறக்க வேண்டும் என்று உபதேசிக்கிறது. ஒரு தெய்வம் கொழுக்கட்டை தின்னவும், குளக்கரையிலும் ஆலயங்களின் முதலிடங்களிலுமிருந்து நாயைப் போல் பெண் பார்க்கும்படி அவதரித்துள்ளது. ஒரு தெய்வம் விண்ணையும், மண்ணையும் இணைக்கும்படி இரண்டு பெண்களை திருமணம் செய்ய அவதரித்துள்ளது. ஒரு தெய்வம் வளர்ப்புத் தாய்க்கு புலிப்பால் கொண்டு வரும்படியாக அவதரித்துள்ளது.

ஆனால் மனிதனை வேதனைப்படுத்துகிற, அவனை ஆயுட்காலமெல்லாம் மரணத்துக்குள்ளாக்குகிற பாவத்திலிருந்து சுகமளிக்க, அவனுக்கு விடுதலையளிக்க இவைகள் உபதேசிக்கவுமில்லை; அதற்காக அவதரிக்கவுமில்லை.

இறைவனாகிய இயேசு கிறிஸ்துவும் மனிதர்கள் மத்தியில் அவதரித்தார். தாயானவள் தன் பாலகனுக்கு இரங்குவது போல மனிதர்களுடைய பாவத்திற்கு பரிகாரம் தேடவும், பிராயசித்தம் செய்யும்படியாகவும்

இயேசு கிறிஸ்து அவதரித்த நோக்கமாகும். அவருடைய பிராயசித்தத்தைக் குறித்து காண்போம்.

சிலுவையின் அநுபவம் மிகுந்த வேதனையுள்ள அநுபவமாகும். சிலுவை மரத்தோடு இரண்டு கைகளையும், இரண்டு கால்களையும் இணைத்து வைத்து சுவரில் ஆணி அடிப்பது போல கைகளிலும், கால்களிலும் சிலுவை மரத்தோடு ஆணி அடிப்பார்கள். ஆணி அடித்த பின்பு சிலுவை மரத்தை பூமியில் நிறுத்தி வைப்பார்கள். சிலுவையில் அடிபட்ட மனிதன் ஆணிகளின் பெலத்திலும் தொங்கிக் கொண்டிருப்பான். இந்த காட்சியைக் கண்டு அநேகர் பரியாசம் பண்ணுவார்கள், நிந்திப்பார்கள், தூஷிப்பார்கள். இதுவும் அவனுக்கு மிகுந்த வேதனையுண்டாகும். கால் கைகளிலிருந்து இரத்தக் கசிவு உண்டாகும். அவன் பசியினாலும், தாகத்தினாலும் குற்றுயிராய் தொங்கி மிகுந்த வேதனையினால் தன் ஜீவனை விடுவான். இந்தக் கோரச் சம்பவம், இந்த ஆக்கினைத் தீர்ப்பு அக்கிரமம் செய்தவர்களுக்கு நியமிக்கப்பட்டதாகும்.

இந்த ஆக்கினைத் தீர்ப்புக்கு மனுஷ அவதாரத்தில் கடந்து வந்த இயேசு கிறிஸ்து தம்மை ஒப்புக் கொடுத்து, மனிதர்களின் பாவத்தைப் போக்க பிராயச்சித்தம் செய்தார். அவர் இதற்காகவே சற்குருவாகவும், வேத வாக்கியம் நிறைவேறும்படியாகவும் பாவமன்னிப்பு அருளும்படியாகவும் வந்தார்.

**சற்குரு :** இறைவனாகிய இயேசு கிறிஸ்து மனிதர்கள் மத்தியில் சற்குருவாக சஞ்சரித்து வந்தார். சற்குரு என்றால் போதித்த பிரகாரம் செய்கையில் காண்பித்தவராகும். "அல்லாமலும் மனுஷகுமாரன் பலபாடுகள் பட்டு மூப்பராலும், பிரதான ஆசாரியராலும் ஆகாதவனென்று தள்ளப்பட்டு, மூன்று நாளைக்குப் பின்பு உயிர்த்தெழுந்திருக்க வேண்டியதென்று அவர்களுக்குப் போதிக்கத் தொடங்கினார்" (மாற் 8 : 31).

தம்முடைய ஊழியத்தில் பலபாடுகள் பட வேண்டும், மூப்பராலும், பிரதான ஆசாரியராலும், வேத பாரகராலும் ஆகாதவனென்று தள்ளப்பட்டு கொல்லப்பட வேண்டும் என்று அறிவித்திருந்தார். இந்த வார்த்தையை நிறைவேற்றும்படியாக அவர் தம்மை சிலுவைக்கு அர்ப்பணித்தார். நான் அடக்கம் பண்ணப்படுவதற்கு எத்தனமாக என் சரீரத்தில் தைலம் பூச முந்திக் கொண்டாள் என்றார் (மாற் 14 : 8).

பெத்தானியா ஊரிலே குஷ்டரோகியாயிருந்த சீமோன் வீட்டில் போஜனபந்தியிருக்கையில் ஒரு ஸ்திரீயானவள் தான் இயேசு கிறிஸ்துவின் மேல் கொண்டிருந்த அன்பை கிரியையில் வெளிப்படுத்தும்படியாக விலையேறப் பெற்ற நளதம் என்னும் உத்தம தைலத்தை அவர் சிரசின் மேல் ஊற்றினாள். அதைக் கண்ட சிலர் அவளுடைய கிரியைப் பார்த்து முறுமுறுத்தனர். இதைப் பார்த்த இயேசு கிறிஸ்து அவர்களை நோக்கி இவள் என்னிடத்தில் நற்கிரியை செய்திருக்கிறாள். இதைக் குறித்து முறுமுறுக்காதீர்கள். நான் அடக்கம் பண்ணப்படுவதற்கு எத்தனமாக என் சரீரத்தில் தைலம் பூச முந்திக் கொண்டாள் என்று இறைவனாகிய இயேசு கிறிஸ்து கூறினார். இங்கே தாம் அடக்கம் பண்ணப்படக் கூடிய நிலை வருகிறது என முன் அறிவித்தார். மரண நிலை உண்டானால்தான் அடக்கம் பண்ணக் கூடிய நிலை உண்டாகும். ஆதலால் இந்த வார்த்தையை நிறைவேற்றும் படியாக தம்மை சிலுவை மரணத்துக்கு ஒப்புக் கொடுத்தார். "நீதியினிமித்தம் துன்பப்படுகிறவர்கள் பாக்கியவான்கள் பரலோக ராஜ்யம் அவர்களுடையது" (மத் 5 : 10) என்று இயேசு கிறிஸ்து போதித்தார். அவருடைய வார்த்தைகள் நீதியான வார்த்தைகளானபடியால்; தம்முடைய வார்த்தைகளை நிறைவேற்ற சிலுவையின் துன்பத்தை சகித்தார்.

இந்த கடைசி காலத்தில் அநேகர் நாங்கள் சத்தியத்தை போதிக்கிறோம், பிரசங்கிக்கிறோம், சத்தியத்தின்படி நடக்கிறோம், கர்த்தர் எங்களோடு இருக்கிறார் என்று சொல்லுகிறார்கள். ஆனால் இரட்சிப்பின் வழியான முழுக்கு ஞானஸ்நானம் தேவையில்லை, முழுக்கு ஞானஸ்நானத்தைக் குறித்து எங்களிடத்தில் பேசாதீர்கள் என்று கூறுகிறார்கள். ஒரு C.S.I. சபைக்கு ஊழியர் ஒருவர் பிரசங்கம் செய்யும்படியாய் அழைக்கப்பட்டிருந்தார். அவர் இரட்சிப்பின் வழியான

(யோவா 3:5) முழுக்கு ஞானஸ்நானத்தைக் குறித்தும், பரிசுத்தாவி பெற்றுக்கொள்வதைக் குறித்தும் பிரசங்கித்தார். கூட்டம் முடிந்தவுடன் சபைப் போதகர் ஊழியரை நோக்கி நீங்கள் எப்படி பரிசுத்த ஆவியைக்குறித்தும், முழுக்கு ஞானஸ்நானத்தைக் குறித்தும் பிரசங்கிக்கலாம் என்று கண்டித்தாராம்.

பின்பு சபை போதகர் அந்த ஊழியருக்கு காணிக்கை கொடுத்திருக்கிறார். அந்த ஊழியர் உங்கள் காணிக்கை எனக்குத் தேவையில்லை என்று கூறிவிட்டு போய்விட்டார். இவர்கள் குருக்களாக இருக்க விரும்புகிறார்கள். ஆனால் இயேசுகிறிஸ்துவைப் போல் சற்குருவாக மாறவேண்டும் என்பதை விரும்புகிறதில்லை; அதை புறக்கணிக்கின்றனர். எல்லா நீதியான வசனங்களையும் நிறைவேற்ற வேண்டும் என இயேசுகிறிஸ்து அறிவிக்கிறார். அவர் எல்லா நீதியான வசனத்தையும் நிறைவேற்றி தம்முடைய பூரண சற்குரு குணத்தை வெளிப்படுத்தினார்.

**தீர்க்கதரிசன நிறைவு :**

இரக்கமும் மன உருக்கமும், மிகுந்த கிருபையும், நீடிய பொறுமையும் நிறைந்த தேவன் ... (Note: see below)

இரக்கமும் மன உருக்கமும், மிகுந்த கிருபையும், நீங்குக்கு மனஸ்தாபப்படுகிறவருமான தேவன் இங்கே பட்டயத்தை படுத்துக்கொள்ளும்படி தீர்க்கதரிசன வார்த்தை நிறைவேற தம்முடைய சீஷர்களிடத்தில் இயேசுகிறிஸ்து கூறுகிறார். "என் ஆத்துமா தேவன் மேல் ஜீவனுள்ள தேவன் மேலேயே தாகமாயிருக்கிறது" (சங் 42 : 2) என்று சங்கீதக்காரன் மூலமாக பரிசுத்த ஆவியானவர் திருவுளம் பற்றியுள்ளார். இந்த தீர்க்கதரிசனம் இறைவனாகிய இயேசுகிறிஸ்துவினிடத்தில், அவருடைய சிலுவையின் பாடுகளினால் உண்டான வேதனையின் மத்தியில் நிறைவேற வேண்டியதாயிருந்தது. "வேதவாக்கியம் நிறைவேறத்தக்கதாக: தாகமாயிருக்கிறேன் என்றார்" (யோவா 19 : 28). முத்தின இரக்காயம் முழுவதும் வேதனைக்குள்ளாக்கப்பட்டார், முள்முடி சூட்டப்பட்டார், கன்னத்தில் அறையப்பட்டார், சிலுவை மரத்தை தூக்கிச் செல்லும் போது முன்னும் பின்னும் தள்ளாடிச் சென்றார். சிலுவையில் அடிபட்டார், மிகுந்த வேதனைக்குள்ளானார்.

சர்வலோகத்தின் அதிபதி மனுஷ அவதாரத்தில் கடந்து வந்து ஆத்தும மீட்புப் பணியின் தாகத்தினால், இவ்வளவு வேதனையையும் பொறுமையாய் சகித்து, மீட்புப் பணியின் கடைசி மணித்துளியில் தாகமாயிருக்கிறேன் என்றார். மீட்கப்படாத ஆத்துமாக்கள் அநேகமாயிருமாய் இருக்கிறபடியால் இவ்வார்த்தைகளைச் சொன்னார். மீட்கப்பட்ட ஒவ்வொரு தேவனுடைய பிள்ளைகளிடத்திலும் இப்படிதமான ஆத்தும தாகம் காணப்பட வேண்டும் என்று கர்த்தராகிய இயேசுகிறிஸ்து விரும்புகிறார்.

பஸ்கா ஆட்டுக்குட்டியை ஒவ்வொரு வீட்டிலும் புசிக்க வேண்டும்; அந்த மாம்சத்தில் கொஞ்சமாகிலும் வீட்டிலிருந்து வெளியே கொண்டுபோகக் கூடாது; அதில் ஒரு எலும்பையும் முறிக்கக் கூடாது" (யாத் 12 : 46). இஸ்ரவேல் ஜனத்தை அடிமைத்தனமாகிய எகிப்து தேசத்திலிருந்து, கர்த்தர் மீட்டுக்கொண்டுவந்ததால், இஸ்ரவேல் தலைமுறைதோறும் நினைவுகூரும்படி, பஸ்கா பலி ஆசரிக்கவும், அதில் ஒரு எலும்பையும் ஜனங்கள் முறிக்கக் கூடாதென்றும் கர்த்தர் சொல்லியிருந்தார். இந்த காரியம் தீர்க்கதரிசனமாக உரைக்கப்பட்டதாகும்.

பாவத்தின் அடிமைத்தனத்தில் சிறையாக்கப்பட்டுள்ள ஜனத்தை மீட்கும்படி பஸ்கா பலியின் ஒப்பனையாக இயேசுகிறிஸ்து பலியிடப்பட்டார். "அவர்கள் இயேசுகிறிஸ்துவினிடத்தில் வந்து அவர் மரித்திருக்கிறதைக் கண்டு அவருடைய காலெலும்புகளை முறிக்கவில்லை" (யோவா 19 : 32) "அவருடைய எலும்புகளில் ஒன்றும் முறிக்கப்படுவதில்லை என்கிற வேதவாக்கியம் நிறைவேறும்படி இவைகள் நடந்தது" (யோவா 19 : 36). இரண்டு கள்வர்கள் மத்தியில் இயேசுகிறிஸ்துவும் ஒரு கள்வனைப் போல சிலுவையில் அடிக்கப்பட்டார். அந்நாள் பெரிய ஓய்வு நாளுக்கு ஆயத்த நாளாயிருந்தபடியால், அந்த ஓய்வு நாளில் சிலுவையில் உடல்கள் தொங்கிக்கொண்டிருக்கக் கூடாதென்று யூதர்கள் பிலாத்துவினிடத்தில் போய், சிலுவையில் அடிக்கப்பட்டவர்களுடைய காலெலும்புகளை முறித்து உடல்களை அகற்ற உத்தரவு கேட்டபின்பு, சேவகர் இரண்டு கள்வருடைய காலெலும்

புகளை முறித்தார்கள். இயேசுவினிடத்தில் வந்தபோது அவர் ஜீவன் பிரிந்திருக்கிறதைக் கண்டு, அவர் காலெலும்புகளை முறிக்கவில்லை. வேத வாக்கியம் நிறைவேறும்படி இவைகள் இயேசுகிறிஸ்துவினிடத்தில் நிறைவேறி முடிந்தது. பாவமில்லாத பரிசுத்தர் பலியிடப்பட்டதினாலே பாவமன்னிப்பாகிய மேன்மையுண்டாயிற்று.

பாவமன்னிப்பு :

அவர் தம்மைத்தாமே பலியிடுகிறதினாலே பாவங்களை நீக்கும் பொருட்டாக இந்தக் கடைசிக் காலத்தில் ஒரே தரம் வெளிப்பட்டார்'' (எபி 10 : 26). தம்முடைய ஜனங்களின் பாவங்களை, பாவக் கறைகளை தம்முடைய சொந்த இரத்தத்தினாலே கழுவி சுத்திகரிக்கும்படியாக தம்மைத் தாமே பலியாக ஒப்புக் கொடுத்தார். ஒரு மனிதன குற்றவாளியாகி காவலில் அடைக்கப்பட்டு விட்டால் அந்த மனிதனை, ஜாமீன் எடுப்பதற்கு, குற்றம் செய்யாத மனிதனே கடந்து வந்து, குற்றம் செய்த மனிதனை சிறைச்சாலையிலிருந்து ஜாமீன் எடுக்க முடியும். அதுபோலவே, எல்லா மனிதரும் பாவம் செய்து பாவத்திற்கு சிறையாக்கப்பட்டு விட்டபடியால், பாவமில்லாத பரிசுத்தர், பாவத்தை பாவத்தினால் உண்டான மரணத்தை ஜெயிக்க, மனுமக்கள் மீது இரக்கங்கொண்டு தம்மைத் தாமே பலியாக அர்ப்பணித்து, மரணத்தின் கூரையும், பாதாளத்தையும் ஜெயித்தார்.

இவ்வளவு பிரயாசப்பட்டு, பாடுபட்டு சம்பாதித்த மீட்பாகிய பாவமன்னிப்பை, பாவ மன்னிப்பின் அதிகாரத்தை இயேசுகிறிஸ்து தாம் உயிர்த்தெழுந்த பின்பு, தம்முடைய அப்போஸ்தலருக்கு வைபளிக்கின்றார்.

''எவர்களுடைய பாவங்களை மன்னிக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படும். எவர்களுடைய பாவங்களை மன்னியாதிருக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படாதிருக்கும்'' (யோவா 20:23). இயேசுகிறிஸ்து தாம் உயிர்த்தெழுந்த பின்பு. தம்முடைய அப்போஸ்தலருக்கு தரிசனமாகி, பல கட்டளைகள் கொடுத்து, விசேஷமாக பாவ மன்னிப்பின் அதிகாரத்தையும் கொடுத்தார். இந்த அதிகாரம் எருசலேமில் (புதிய எருசலேம்) உள்ள அப்போஸ்தலருக்கு, இந்தக் கடைசிக்காலத்தில் வைபளிக்கப்பட்டதாக, கர்த்தராகிய இயேசுகிறிஸ்து அறிவிக்கிறார். ''அன்றியும் மனந்திரும்புதலும் பாவ மன்னிப்பும் எருசலேம் தொடங்கி சகல தேசத்தாருக்கும் அவருடைய நாமத்தினாலே பிரசங்கிக்கப்படவும் வேண்டியது.'' அவர் சற்குருவாகவும், (பாவமன்னிப்பு அருளும்படியாகவும்) வேத வாக்கியம் நிறைவேறும்படியாகவும், பாவ மன்னிப்பு அருளும்படியாகவும் அவதரித்தார். அவதார நோக்கத்தை வெற்றி சிறக்க முடித்தார். அவதார நோக்கம் மக்களுக்கு பாவமன்னிப்பளித்து பாவத்திலிருந்து விடுதலையாக்குவதே. அதை கர்த்தராகிய இயேசுகிறிஸ்து சரியாக செய்து முடித்தார். கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவை விசுவாசியுங்கள்.

---

''தேவன் ஒருவரே தேவனுக்கும் மனுஷருக்கும் மத்தியஸ்தரும் ஒருவரே. எல்லாரையும் மீட்கும் பொருளாக ஒப்புக்கொடுத்த கிறிஸ்து இயேசு அவரே.

—1 தீமோ 2:5, 6

---



# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் - 42 ★ JUNE 1987



"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ரென்று நீங்கள் அறியீர்கள் விழித்திருங்கள். உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள்."

மாற்கு 13 : 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY. INDIA.

# ஆசிரியர் உரை

மனிதன் பூரண விடுதலையடைந்து தேவனுடைய சித்தத்தை செய்கிற பூரண மனிதனாக வேண்டுமென்பது தேவனுடைய சித்தம். அந்த நிலையை மனிதன் அடைந்து விடாதபடி சாத்தான் மனிதனுக்கு பல தடைகளை வைத்திருக்கிறான். அத்தடைகளை உடைத்தெறிந்து விட்டு தேவனுடைய சித்தத்தின்படி தேவனை ஆராதித்து அவருக்கு ஊழியம் செய்வது மனிதனுடைய கடமையாகும்.

நம்முடைய எல்லா சத்துருக்களினின்றும் நம்மை விடுதலையாக்கி பயமில்லாமல் பரிசுத்தத்தோடும், நீதியோடும் தேவனுக்கு ஊழியம் செய்ய வைப்பேன் என்பது தேவனுடைய வாக்குகளில் ஒன்று. ஆதலால் பயத்தோடும், பக்தியோடும் தேவனுக்குப் பிரியமுள்ள ஆராதனை செய்ய நாம் ஜாக்கிரதையாயிருக்க வேண்டும். நம்முடைய சிருஷ்டிப்பின்—இரட்சிப்பின் நோக்கம் தேவன் மகிமை அடைவதே. நம்முடைய ஜீவியத்திலும், சாட்சியிலும், ஆராதனையிலும் அவரை நாம் அறிவிப்பதிலும் அவரை நாம் மகிமைப்படுத்த வேண்டும்.

அவருடைய சித்தத்தை பூமியிலே நாம் நிறைவேற்றுவதின் மூலமாக அவர் மகிழ்ச்சியடைகிறார். ஆனபடியினால் அவருக்குச் சித்தமான ஜீவியமும், ஆராதனையும், ஊழியமும், செய்வோமாக. அவரவர்களுக்குத் தேவன் கொடுத்த தாலந்துகளை பிரயோஜனப் படுத்துவோமாக ஊழியத்தை நிறைவேற்றுவோமாக.

தன்னை பூரணமாக ஒப்புக்கொடுத்து அவர் சித்தம் அறிந்து அவர் சித்தம் செய்கிற ஒரு மனிதனைக்கொண்டு தேவன் செய்யக் கூடாதகாரியம் இந்த உலகில் ஒன்றுமில்லை. ஆனபடியினால் தங்களைத் தாங்களே திருப்திபடுத்திக் கொள்ளாமல் தேவனைப் பிரியப்படுத்துவோம். எல்லாவற்றிலும் தேவசித்தம் என்னவென்று அறிந்து அதையே செய், தேவன் நம்மோடிருப்பார்.

கிறிஸ்துவுக்குள்,
CHIEF PASTOR N. LAZAR

## ஆலய பிரதிஷ்டையும் கன்வென்ஷனும்

ஆரல்வாய் மொழி (கன்னியாகுமரி மாவட்டம்) யில் புதிய எருசலேம் சபைக் கென்று கட்டப்பட்ட தேவாலயம் 29-5-87 அன்று Chief Pastor N. LAZAR அவர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்டது.

தொடர்ந்து 29, 30, 1-5-87 ஆகிய நாட்களில் மாலையில் நடைபெற்ற கன்வென்ஷனில் முறையே மனந்திரும்புதல்; புதிய எருசலேம் சபை-வந்த பாதைகள்; நியாயத்தீர்ப்பு ஆகிய தலைப்புகளில் Chief Pastor N. லாசர் அவர்களால் தேவ செய்தி பிரசங்கிக்கப்பட்டது. சத்தியம் நிலைநாட்டப்பட்டது.

மேலும் 30-5-87 அன்று காலையில் 36 பேர்கள் ஞானஸ்நானம் பெற்று, சபையோடு சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள். தேவனாகிய கர்த்தர் எல்லாவற்றையும் நன்றாக செய்து முடித்தார். கர்த்தருக்கே மகிமை உண்டாவதாக!

# பாவ மன்னிப்பு

இடம்: ரபாடா (தானா-ஜில்லா, பம்பாய்). காலம்: 1975.

பிரசித்திப் பெற்ற ஊழியரிடம் (பைபிள் செமினரி) பைபிள் ஸ்டடி (Bible Study) படித்து நான் பாஸ்டர் ஆனேன், என்னிடத்தில் லைசென்ஸ் இருக்கிறது என்று பெருமையாகப்பேசி தேவ ஊழியத்தை ஆதாயத் தொழிலாக செய்து கொண்டு புதிய எருசலேம் சபையையும் சத்தியத்தையும் தூஷித்துக் கொண்டு திரிந்த தோல் உரிக்கப் படாத ஊழியர் ஒருவர், ரபாடாவில் உள்ள ஒரு ஊழியர் வீட்டிலிருந்து சத்தியத்தைக் குறித்துப் பேச எப்பொழுதும் நான் தயார், கடவுளுக்காக உயிரையும் கொடுப்பேன். ஆனால், உங்கள் விசுவாசி இன்ன இடம் என்று சொல்லாமல் உங்கள் வீட்டிற்கு என்னை அழைத்து வந்ததை கண்டித்து வையுங்கள் என்று லட்டர் எழுதியிருந்தார்.

நான் உடனே இன்ன தேதியில் உங்களை சந்திக்க வருகிறேன்; நீங்கள் வீட்டில் இருங்கள் என்று கடிதம் மூலமாக தகவல் தெரிவித்துவிட்டு குறித்த நாளில் அங்கே சில விசுவாசிகளோடு சென்றேன். அந்த வீட்டின் உரிமையாளராகிய ஊழியரும், அவருடைய குடும்பமும் எனக்கு லட்டர் எழுதியிருந்த ஊழியரும், அங்கிருந்தனர். ஒருவரையொருவர் விசாரித்துக் கொண்டு அமர்ந்தோம். மேற்படி ஊழியரிடம் நான் கேட்டேன்: நான் இத்தனை ஆண்டு பைபிள் ஸ்டடி (Bible Study) படித்திருக்கிறேன், என்னிடம் லைசென்ஸ் இருக்கிறது என்றெல்லாம் பெருமையாகப் பேசி நடக்கிறதாகக் கேள்விப்பட்டேன், எந்த பைபிள் காலேஜிலே யாரிடத்தில் பைபிள் ஸ்டடி படித்தீர்கள்? என்று கேட்டேன். அவர் விவரம் சொன்னார். ஆதாரம் என்ன? உங்கள் லைசென்ஸைக் காட்டுங்கள் என்று சொன்னேன். அவர் திருக திருக முழித்தார். லைசென்ஸை வீட்டில் வைத்துவிட்டு வந்து விட்டேன் என்றார். வீட்டில் வைத்து விட்டு இங்கே எதற்கு வந்தீர்? என்று கேட்டேன்.

சரி அது இருக்கட்டும், நான் கேள்வி கேட்கிறேன் நீர் பதில் கொடும். இல்லையென்றால் நீர் கேள்விகேளும் நான் பதில் சொல்லுகிறேன் என்று சொன்னேன். நீர் எப்படி ஊழியத்திற்கு வந்தீர்? உம்மை ஊழியத்திற்கு அழைத்தது யார்? என்று கேட்டேன். ஓ! தேவன் என்னை ஊழியத்திற்கு அழைத்தார் என்று சொன்னார். தேவன் உம்மை அழைத்தார் என்பதற்கு ஆதாரம் என்ன? யோவான் ஸ்நானகன் சொல்லுகிறார் "...ஜலத்தினால் ஞானஸ்நானம் கொடுக்கும்படி என்னை அனுப்பினவர்; ஆவியானவர் இறங்கி யார்மேல் தங்குவதை நீ காண்பாயோ, அவரே பரிசுத்த ஆவியினால் ஞானஸ்நானங் கொடுக்கிறவர் என்று எனக்கு சொல்லியிருந்தார். அந்தப்படியே நான் கண்டு, இவரே (மேசியா) தேவனுடைய குமாரன் என்று சாட்சி கொடுத்து வருகிறேன் என்றான்" என்று எழுதியிருக்கிறது (யோவா 1:33, 34). உம்மை தேவன் அல்லது இயேசு கிறிஸ்து ஊழியத்திற்கு அழைத்தார் என்பதற்கு என்ன ஆதாரம்; உம்மை அனுப்பினவர் உம்மிடத்தில் சொன்னது என்ன? அதற்கு அடையாளம் என்ன? என்றேன். பேசாதிருந்தார்.

அடுத்தபடி பாவங்களை மன்னிக்க யாருக்கும் அதிகாரம் கிடையாது என்று சொன்னதாக கேள்விப்பட்டேனே: அப்படியா! என்று கேட்டேன். அதற்கு அவர் ஆம். ஓ! தேவனைத்தவிர வேறு யாருக்கும் பாவங்களை மன்னிக்க அதிகாரம் கிடையாது என்றார். நான், இயேசு கிறிஸ்துவுக்குமா பாவங்களை மன்னிக்க அதிகாரம் கிடையாது என்று கேட்டேன். அதற்கு அவர், இயேசு கிறிஸ்துவுக்கு பாவங்களை மன்னிக்க அதிகாரம் உண்டு என்றார். அடுத்தபடி நான் சொன்னேன், அப்போஸ்தலர்களுக்கு பாவங்களை மன்னிக்க அதிகாரம் உண்டு என்றேன். அதற்கு அவர் அப்போஸ்தலருக்கு பாவங்களை மன்னிக்க அதிகாரம் கிடையாது என்றார். நான், இயேசு கிறிஸ்துவும் அப்போஸ்தலரே. பிதாவாகிய தேவனால் அவர் அனுப்பப்பட்ட படியினால் அவருக்கு அப்போஸ்தலர்

என்று ஒரு பெயரும் உண்டு (எபி 3:1) என்றேன்.

அதற்கு அவர் ஆம் அப்போஸ்தலருக்கும் அதிகாரம் உண்டு; இயேசு கிறிஸ்துவுக்கும் அதிகாரம் உண்டு. மனிதர்களுக்கு அதிகாரம் கிடையாது என்றார். நீர் தேவனாலும் இயேசு கிறிஸ்துவினாலும் ஊழியத்திற்கு அழைக்கப்பட்டிருந்தால் இந்த அதிகாரம் உமக்கு இருந்திருக்கும்; அல்லது விளங்கியாவது இருந்திருக்கும். இயேசு கிறிஸ்து தாம் உயிர்த்தெழுந்த அன்று மாலையில் தம்முடைய சீஷர்களை அப்போஸ்தலர்களாக இந்த உலகத்தில் அனுப்புகிறார். அப்பொழுது அவர்களுக்கு அவர் கொடுத்த அதிகாரம், "பிதா என்னை அனுப்பினது போல (எல்லா அதிகாரமும், பாவங்களை மன்னிக்கும் அதிகாரமும் கொடுத்து அனுப்பினது போல) நானும் உங்களை அனுப்புகிறேன் என்று சொல்லி, அவர்கள் மேல் ஊதி: பரிசுத்த ஆவியைப் பெற்றுக்கொள்ளுங்கள். எவர்களுடைய பாவங்களை மன்னிக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படும், எவர்களுடைய பாவங்களை மன்னியாதிருக்கிறீர்களோ அவைகள் அவர்களுக்கு மன்னிக்கப்படாதிருக்கும் என்றார் (யோவா 20:21-23). ஆகையால் அப்போஸ்தலர்களுக்கு பாவங்களை மன்னிக்க அதிகாரம் உண்டு என்றேன்.

அவர் ஆம் அப்போஸ்தலர்களுக்கு பாவங்களை மன்னிக்க அதிகாரம் உண்டு என்று ஒப்புக்கொண்டார்.

நாங்கள் தேவனால் அழைக்கப்பட்டு இயேசு கிறிஸ்துவினால் அதிகாரப்படுத்தப்பட்டு அனுப்பப்பட்டிருக்கிறோம். மெய்யான சபைக்கு, அப்போஸ்தலர்களுக்கு பாவங்களை மன்னிக்க அதிகாரம் உண்டு என்றேன். அவர் அமைதியாய் இருந்தார். தொடர்ந்து நான், இனிமேல் பாவங்களை மன்னிக்க தேவ ஊழியக்காரனுக்கு அதிகாரம் கிடையாது என்று பிதற்றிக் கொண்டு திரியக்கூடாது. வேதம் தெரியாத கிறிஸ்தவர்களை ஏமாற்றிக் கொண்டுத் திரியக்கூடாது என்று எச்சரித்துவிட்டு பக்கத்தில் அமர்ந்திருந்த ரபாடா I. P. C. ஊழியரிடம் சகோதரரே, உங்களுக்கு ஏதாவது சொல்லவேண்டுமா, கேட்கவேண்டுமா? என்று கேட்டேன். அவர், ஒன்றுமில்லை ஐயா என்று சொல்லிவிட்டார். ஏற்கனவே ஒருதடவை ரபாடா ஊழியருக்கு சபையைப்பற்றியும், சத்தியத்தைப் பற்றியும் விளக்கிச் சொல்லப் பட்டிருக்கிறது. (தொடரும்)

---

"ஒருவன் போதித்தால் தேவனுடைய வாக்கியங்களின்படி போதிக்கக் கடவன்"
—1பேது 4 : 11.

---

## ஞானஸ்நானத்தைப்பற்றி ஒரு ஆராய்ச்சி (தொடர்ச்சி)

ஆதி 1:1,2 — நாள் கிடையாது. ஏசா 43 : 13-ல் நாள் உண்டாகிறதற்கு முன்னும் நானே இருக்கிறேன் என்று தேவன் சொல்லியிருக்கிறார். லூசிபர் காலத்தில் உண்டான ஜலப்பிரளயத்திற்கும் நோவா காலத்தில் உண்டான ஜலப்பிரளயத்திற்கும் உள்ள வித்தியாசங்கள்.

| லூசிபர் காலம் | நோவா காலம் |
|---|---|
| 1. பூமியானது ஒழுங்கின்மையாயிருந்தது (ஆதி 1:2, எரே 4:23). | 1. பூமியிலே மரம், செடி, கொடிகள் இருந்தன (ஆதி 8:11). |
| 2. பூமி வெறுமையாயிருந்தது (ஆதி 1:2). | 2. பூமி வெறுமையாயிருக்கவில்லை (ஆதி 6: 17-22; 8:16). |
| 3. பூமி இருளாயிற்று (ஆதி 1:2; எரே 4: 23). | 3. பூமியிலே இரவும், பகலும், சீதளமும் உஷ்ணமும், கோடைக்காலமும், மாரிக்காலமும் எல்லாம் இருந்தது (ஆதி 8:6-22). |

| லூசிபர் காலம் | நோவா காலம் |
|---|---|
| 4. பூமியின் மேல் இருள் இருந்தது வெளிச்சமில்லை (ஆதி 1:2). | 4. வெளிச்சம் இருந்தது (ஆதி 8:6-22). |
| 5. நாள் இல்லை (ஆதி 1:2). | 5. நாள் இருந்தது (ஆதி 8:1-22). |
| 6. புல் பூண்டுகள் இல்லை (ஆதி 2:5; எரே 4:23-26). | 6. புல் பூண்டுகள் இருந்தன (ஆதி 8:11, 22). |
| 7. ஜலம் வற்றவில்லை (ஆதி 1:1-9). | 7. ஜலம் குறைந்து கொண்டே போனது (ஆதி 8:1-14). |
| 8. ஒரே நாளில் தண்ணீர் ஒதுங்கியது (ஆதி 1:9,10). | 8. தண்ணீர் வற்றுகிறதற்கு பல நாட்கள் ஆயின (ஆதி 8:1-14). |
| 9. தேவன் தண்ணீரைக் கடிந்தார் (சங் 104:7, ஆதி 1:1-10). | 9. தேவன் தண்ணீரைக் கடிக்கவில்லை (ஆதி 8:1-14). |
| 10. தண்ணீர் உடனே ஒதுங்கிப் போயிற்று (சங் 104:7). | 10. தண்ணீர் கொஞ்சம் கொஞ்சமாய் குறைய ஆரம்பித்தது (ஆதி 8:1-14. |
| 11. தண்ணீருக்கு எல்லையைக் குறித்தார் (சங் 104:9). | 11. முன்பே எல்லையிருந்தது (ஆதி 8:2-4, ஆதி 1:6-10). |
| 12. மீன்களும் செத்துப் போயின (எரே 4: 23-26). | 12. மீன்கள் அழிக்கப்படவில்லை (ஆதி 6: 17). |
| 13. பறவைகள் அழிந்து போயின (எரே 4: 23-26). | 13. பறவைகள் காக்கப்பட்டன (ஆதி 6:20; 8:17). |
| 14. மிருகங்கள் ஒன்றுமில்லை (ஆதி 2:9). | 14. மிருகங்கள் காக்கப்பட்டன (ஆதி 6:20; 8:17). |
| 15. மனிதன் இல்லை (எரே 4:23-26). | 15. எட்டு மனிதர்கள் இருந்தார்கள் (ஆதி 6:18). |
| 16. சமுதாய வாழ்க்கை இல்லை (எரே 4:23-26). | 16. சமுதாய வாழ்க்கை இருந்தது (II பேது 2:5). |
| 17. உயிர்களைக் காக்க பேழை உண்டு பண்ணப்படவில்லை (எரே 4 : 23 - 26, II பேது 3:6-8). | 17. ஜீவனைத் தப்புவிக்க ஒரு பேழை உண்டாக்கப்பட்டது (ஆதி 6 : 16 - 22; I பேது 3:20). |
| 18. சாத்தான் விழுந்ததற்கான காரணம்: ஏசா 14:12-14; எரே 4:23,26; எசே 28: 11-17. | 18. மனிதன் கெட்டுப் போனதற்கான காரணம்: மனிதனுடைய சீர்கெட்ட இருதயம், கலப்பு இன மக்கள் (ஆதி 6: 1-13). |
| 19. முடிவு: இரண்டாவது தடவை தேவன் மீன்களையும், பறவைகளையும், நீர்வாழும் ஜந்துக்களையும், பூமியில் வாழும் மிருகங்களையும், மனிதனையும், சமுதாய வாழ்க்கையையும் உண்டு பண்ண வேண்டியதாயிற்று (ஆதி 1:3-2:1-25). | 19. முடிவு: புதிய சிருஷ்டிப்பு உண்டாக்க வேண்டிய அவசியமில்லை இருக்கிறவைகள் பலுகிப் பெருகும்படி அனுமதிக்கப்பட்டன (ஆதி 6:16; 9:1-7). |

ஆதியாகமம் 1 : 3 முதல் எழுதப்பட்டிருக்கும் சம்பவங்கள் ஆதி சிருஷ்டிப்பல்ல புதிதாக சிருஷ்டிக்கப்பட்டவைகளும் ஒழுங்குபடுத்தப்பட்டவைகளுமேயாகும். தேவனுடைய சாபத்தினால் திரளான வெள்ளம் உண்டாகி முதல் உலகம் அழிக்கப்பட்டது. தேவன் வெளிச்சத்தை நீக்கிவிட்டபடியினால் இருள் உண்டாயிற்று. எல்லா ஜீவராசிகளும் அழிந்து போயின. ஆதி 1:3-ல் தேவன் வெளிச்சம் உண்டாகக்கடவது என்றார் வெளிச்சம் உண்டாயிற்று. வெளிச்சம் நல்லது என்று தேவன் கண்டார். தேவன் வெளிச்சத்தையும், இருளையும் வெவ்வேறாகப் பிரித்தார். வெளிச்சத்துக்கு பகல் என்றும், இருளுக்கு இரவு என்றும் பெயரிட்டார். சாயங்காலமும் விடியற்காலமுமாகி முதலாம் நாள் ஆயிற்று. சாயங்காலமும் விடியற்காலமுமென்றால் ஒரு சாயங்காலம் இல்லாமல் இரவு இல்லை, ஒரு விடியற்காலம் இல்லாமல் பகல் இல்லை. ஒரு இரவும் ஒரு பகலும் சேர்ந்து ஒரு நாள் ஆகிறது.

தேவன் வெளிச்சம் உண்டாகக்கடவது என்று சொல்லி பகலையும் இரவையும் பிரித்தபோது ஒருநாள் ஆயிற்று. முதலாவது நாளில் கர்த்தர் செய்த 4 தெய்வீக வேலைகள்:

1. தேவன் சொன்னார்: வெளிச்சம் உண்டாகக்கடவது என்று, உடனே வெளிச்சம், நாள் உண்டாயிற்று (ஆதி 1:3).

2. தேவன் பார்த்தார்: தேவன் வெளிச்சம் நல்லது என்று கண்டார்.

3. தேவன் வேறு பிரித்தார்: தேவன் வெளிச்சத்தையும், இருளையும் வெவ்வேறாகப் பிரித்தார் (ஆதி 1:4).

4. தேவன் அழைத்தார்: வெளிச்சத்துக்குப் பகல் என்றும் இருளுக்கு இரவு என்றும் தேவன் பெயர் சூட்டி அழைத்தார்.

தேவனுடைய இந்த கிரியைகள் எல்லாம் முதலாம் நாளிலே நடந்தேறி முடிந்தது. அதற்கு முன்னாலே சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், பூமி, தண்ணீர், இருள், வெளிச்சம், இவையெல்லாம் முன்னே உண்டாயிருந்ததாகத் தெரிகிறது. அவைகளை புதுப்பித்து ஒழுங்குபடுத்தினதை 6 நாட்களில் நடந்த வேலைகளென்று நாம் அறிந்து கொள்ளுகிறோம்.

(தொடரும்)

---

பூர்வ காலத்தில் தேவனுடைய வார்த்தையினாலே வானங்களும், ஜலத்திலிருந்து தோன்றி ஜலத்தினாலே நிலை கொண்டிருக்கிற பூமியும் உண்டாயினவென்பதையும், அப்பொழுது இருந்த உலகம் ஜலப் பிரளயத்தினாலே அழிந்ததென்பதையும் மனதார அறியாமலிருக்கிறார்கள்.

— II பேது 3 :5, 6)

---

# ஊழியத்தின் ஒழுங்கு

தேவனுடைய ஊழியக்காரர் ஒருவர் சில சகோதரர்களோடே சபையிலுள்ள ஒரு விசுவாசியை சந்திக்கும்படி சென்று கொண்டிருந்தார். வழியில் ஒரு ரெயில்வே கேட் பூட்டியிருக்கவே அங்கே ஒரு கார் காத்துக் கொண்டிருப்பதைக் கண்டார். அதனுள் வெண்ணுடையை தரித்த சில ஆண்களும் பெண்களும் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களும் ஊழியத்திற்கு செல்கிறார்கள் என அறிய முடிந்தது. அவர்கள் பாஸ்டர் (Pastor என்றும், பிரதர் (Brother) என்றும், மதர் (Mother) என்றும், சிஸ்டர் (Sister) என்றும் அழைக்கப்படுகிறார்கள். இவர்கள் மாம்சத்தின்படி உறவினர்கள் அல்லர்.

இந்த ஊழியருக்கு, ஏன் இவர்கள் ஆணும் பெண்ணுமாக ஊழியத்திற்கு செல்கிறார்கள் என்ற கேள்வி எழுந்தது. அவர்

களிடம் கேட்டால் ஆண்களுக்கு, ஆலோசனைக் கொடுக்க ஆண்களும், பெண்களுக்கு ஆலோசனைக் கொடுக்க பெண்களுமாகச் செல்கிறோம் என்பார்கள் என்று இவரே நினைத்துக் கொண்டார். அதே சமயத்தில் பரிசுத்த ஆவியானவர் ஊழியத்தின் ஒழுங்கை அவருக்கு வேத அடிப்படையில் தெளிவுபடுத்தினார்.

பெண்கள் ஒரு காரியத்தைக் கற்றுக் கொள்ள விரும்பினால் வீட்டில் தங்கள் புருஷரிடத்தில் (கணவனிடத்தில்) விசாரிக்கக்கடவர்கள் (I கொரி 14:35) என்று ஆலோசனை சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே பெண்களிடையே ஆண் ஊழியர்கள் நேரடியாக சொல்ல முடியாதக் காரியங்களை அவர்கள் கணவன்மார்கள் மூலம் தெரியப்படுத்தலாம். அப்படியே பெண்களும் கணவன் மூலம் கேட்டறியலாம். திருமணமாகாத பெண்களுக்கு அவர்களது பெற்றோர்கள் மூலம் காரியத்தை அறிவிக்கலாம்.

முதிர் வயதுள்ள ஸ்திரீகளைத் தாய்களைப் போலவும், பாலிய ஸ்திரீகளை சகோதரிகளைப் போலவும் பாவித்து புத்தி சொல்லும்படியாக ஆண் ஊழியர்கள் நியமம் (I தீமோ 5:2) பெற்றிருக்கிறபடியால் ஊழியர்கள் தாராளமாய் பெண்களுக்குப் புத்தி சொல்லலாம். இப்படியிருக்க ஒரு ஆண் ஊழியனும், இரண்டு பெண் ஊழியக்காரிகளும் சேர்ந்து போய் ஒரு குடும்பஸ்தர்களுக்கோ, மற்ற புறஜாதிகளுக்கோ ஊழியம் செய்வது அவலட்சணமான காரியமாகும். வேதத்தின்படி அவசியமுமில்லாததாயிருக்கிறது. இரட்சிக்கப்படக் கூடியவர்கள் இரட்சிக்கப்படும்படி இடறலற்றவர்களாயிருப்பது அவசியம் (I கொரி 10:32, 33).

சமாரிய விசுவாசிகளைச் சந்திக்க பேதுருவும், யோவானும் சபையால் அனுப்பப்பட்டார்கள் (அப் 8:14). ஆவியானவர் பரி. பேதுருவை கொர்நெலியு வீட்டுக்கு அனுப்புகையில், அவர் போகும் போது அவரோடே சில (6 பேர்கள்) சகோதரர்களும் சென்றார்கள் (சகோதரிகள், மதர்கள் செல்லவில்லை) (அப் 10:23, அப் 11:12). பவுலும் பர்னபாவும் மாற்குவோடே சேர்ந்து ஊழியத்தில் ஈடுபட்டார்கள் (அப் 13:2,5) பவுலும் பர்னபாவும் சேர்ந்து ஊழியம் செய்தார்கள் (அப் 16:25). பவுலுக்கு தீமோத்தேயுவும் எரஸ்துவும் உதவி செய்தார்கள் (அப் 19:22). இப்படி பரிசுத்தவான்களின் ஊழியங்களில் பெண்கள் ஊழியத்திற்கு உடன் அமைந்ததாய் இல்லை. நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவும் சுவிசேஷ வேலைக்காய் அழைத்து அதிகாரம் கொடுத்தனுப்பின அப்போஸ்தலர்களாயிருக்கட்டும் இரண்டிரண்டு பேராய் அனுப்பப்பட்ட 70 பேராயிருக்கட்டும் ஒரு ஸ்திரீயையும் அவர்களோடே அனுப்பவில்லை. தனி ஆளை சந்திக்கவோ, பொது இடங்களில் சுவிசேஷ வேலை செய்யவோ ஒரு ஊழியக்காரன் தனியாகச் செல்லலாம் (அப் 8:26-40; 9:10-12; 17:16-34). பொதுவாக குடும்பங்களுக்குச் சென்று ஆலோசனை கொடுக்கும் போதும், பெண்களை சந்தித்து ஆலோசனை கொடுக்கும் போதும் ஒரு ஊழியன் தனியாக செல்லாமல் தன்னோடே ஒரு ஊழியனையோ, சகோதரனையோ, சகோதரர்களையோ கூட்டிச் செல்வது நலம். அல்லது விவாகஸ்தராக இருந்தால் தன் மனைவியை உடன் அழைத்துச் செல்லலாம் என்று சுபாவம் நமக்கு போதிக்கிறது.

ஸ்திரீகள் தங்கள் ஆஸ்திகளால் கர்த்தருக்கு ஊழியம் செய்யலாம் (லூக் 5:3). தங்கள் கணவன்மார்களோடே சேர்ந்து கர்த்தருடைய காரியத்தில் ஈடுபடலாம் (அப் 18:26; ரோம 16:3). புருஷர்கள் ஊழியக்காரர்களாயிருக்கும் போது, அவர்களுடைய மனைவிகளும் (Thier Wives) (ஆங்கில பைபிளில் காணவும்) நல்லொழுக்கமுள்ளவர்களாகவும், அவதூறு பண்ணாதவர்களும், தெளிந்த புத்தியுள்ளவர்களும் எல்லாவற்றிலும் உண்மையுள்ளவர்களாயிருந்து கணவனோடே கிறிஸ்துவுக்கு ஊழியம் செய்யலாம் (I தீமோ 3:10,11). கணவன் இறந்துபோய் விட்டால் இப்படிப்பட்ட ஊழியக்காரிகளை சபை பராமரிக்க வேண்டும் (ரோம 16:1,2). முதிர் வயதுள்ள ஸ்திரீகள் பாலிய ஸ்திரீகளுக்கு புத்தி சொல்லலாம் (தீத் 2:3-5).

விவாகமான இளம் பெண்கள் புருஷரிடத்திலும் (கணவன்) பிள்ளைகளிடத்திலும் அன்பாயிருக்க வேண்டும், கற்புள்ளவர்களாயிருக்க வேண்டும், வீட்டில் தரித்திருக்க வேண்டும், புருஷருக்குக் கீழ்ப்பட்டிருக்க

வேண்டும். இப்படி இருந்தால் தேவவசனம் மகிமைப்படும் (தீத் 2:4,5). இதுவே இவர்கள் செய்யத்தக்க நல்ல ஊழியம். இவர்களின் சாட்சியால் அநேகர் கிறிஸ்துவை ஏற்றுக் கொள்வார்கள். இதை விட்டுவிட்டு ஊழியம் என்று சொல்லிக் கொண்டு வீடு வீடாய்த் திரிந்து தெரிந்ததை அலப்பினால் இவர்களுக்குப் பெயர் ஊழியக்காரிகள் அல்ல, சோம்பேறிகள், வீணலுவற்காரிகள் என்று பெயர். இவர்களால் அநேகர் இடறுவார்கள், விரோதி நிந்திக்க நேரிடும்(I தீமோ 5:11-15). விதவைகளாயிருந்து குடும்பம் பேரன், பேத்திகள் இருந்தால் வீட்டோடிருந்து பிள்ளைகளை நல்வழிபடுத்த வேண்டும். வீட்டை கவனியாமல் ஊழியத்திற்கென்று எங்கும் ஓடக்கூடாது(I தீமோ 5:4,8). வீட்டுக்காரர்களும் அவர்களை கிழவி என்று விரட்டி விடாதபடி பராமரிக்க வேண்டும் (I தீமோ 5:16). ஆதரிக்க யாருமே இல்லாதிருக்கிற 60 வயதிற்கு மேலானவளாயிருந்து நற்கிரியைகளால் நற்சாட்சி பெற்றவளை "விதவைகளை விதவை கூட்டத்தில் சேர்த்து அவர்கள் உபத்திரத்தில் விசாரிப்பதே சுத்தமான பக்தி" (யாக் 1:27) என்றபடி சபை அவர்களை பராமரிக்கலாம் (I தீமோ 5:9,10).

திருமணமாகாத பெண்களாயிருந்தால் கர்த்தர் என்னை ஊழியத்திற்கு அழைத்தார் என்று ஓடிப்போய் விடாதபடி அவர்கள் கன்னிப் பருவம் தகப்பனாலே காக்கப்பட வேண்டியதிருப்பதால் (I கொரி 7:37), சுவிசேஷகர் பிலிப்புவின் 4 தீர்க்கதரிசனம் சொல்லும் வரம் பெற்ற கன்னிகைகளாகிய புத்திரிகள் தங்கள் தகப்பன் வீட்டில் தரித்திருந்தது போல வாலிப பெண்கள் தகப்பன் வீட்டிலேயே இருங்கள். புதிய ஏற்பாட்டிலே கர்த்தர் "மகனே, எனக்கு ஊழியம் செய்ய வா" என்று ஒரு பெண்ணைக்கூட அழைத்து அதிகாரம் கொடுத்து அனுப்பவில்லை. அதே சமயம் அநேக ஆண்களை கர்த்தர் அழைத்து, அதிகாரப்படுத்தி அனுப்பியிருக்கிறார். ஊழியனாகிய தீத்துவும் பட்டணங்கள் தோறும் மூப்பர்களை ஏற்படுத்த கட்டளை பெற்றார் (மூப்பிகளை அல்ல) (தீத் 1:5).

கர்த்தர் வெறுக்கிற போதகங்களில் ஒன்று: பாலாக் என்பவனுக்கு பிலேயாமால் கொடுக்கப்பட்ட போதனை. பணத்திற்கு ஆசைப்பட்டு பிலேயாம் தேவஜனத்தை சபிக்கும்படி விரும்பி வந்தான் ஆனால் கர்த்தர் அவனை ஆட்கொண்டு ஜனங்களை ஆசீர்வதித்தார். பிலேயாம் பாலாக்குக்கு சகாயம் செய்ய விரும்பி அவனுக்கு ஒரு போதனை செய்தான். அதென்னவெனில்: இஸ்ரவேல் புத்திரர்கள் விக்கிரகங்களுக்குப் படைத்தவைகளைப் புசிப்பதற்கும், வேசித்தனம் பண்ணுவதற்கும் ஏதுவாக பெண்களை இஸ்ரவேலின் எல்லைகளில் அனுப்பு என்பதே. இதனால் கர்த்தரின் கோபம் இஸ்ரவேலர் மேல் மூண்டது (வெளி 2:14; எண் 24:25; 25:1-3). அதே போல் சபையைக் கறைபடுத்தவும், தேவ நாமம் தூஷிக்கப்படவும், சபை வல்லமை இழந்து போகப் பண்ணவும் சாத்தான் சபைகளுக்குள்ளே பெண்களை அனுப்பிவிட்டிருக்கிறான்.

வேதாகமத்திற்குப் புறம்பான எந்த மாதிரியும் தேவனால் உண்டானதல்ல. ஓ! பெண்களாலே எவ்வளவு பெரும் அற்புதம் நடக்கிறது, எவ்வளவு பேர்கள் இரட்சிக்கப்படுகிறார்கள். நீங்கள் என்ன இப்படிச் சொல்லுகிறீர்கள். பெரிய பாஸ்டர்கள் பலரும் பெண்களை வைத்து ஊழியம் செய்கிறார்கள். மேடையில் சமமாக அமர்த்தி விளம்பரப்படுத்துகிறார்கள். அவர்கள் இதைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லை என சிலர் நினைக்கலாம். அவர்களுக்கு வெளிப்படுத்தல் இல்லை. எங்களுக்கோ கர்த்தர் வெளிப்படுத்தியிருக்கிறார்.

ஆண்களோடு பெண்கள் சேர்ந்து ஊழியர் வரிசையில் அமர்ந்து ஊழியம் செய்வது ஆண்களோடு பெண்கள் சேர்ந்து வாலிபால் (Volley Ball) விளையாடுவதாகும். 18 வயது பையனும் 45 வயது பெண்ணும் கூடி வந்தாலும் குழந்தை பிறக்கும். 30 வயது வாலிபனும் 25 வயது பெண்ணும் பெரியவர்கள் முன்னிலையில் திருமணம் செய்து கூடி வரும்போது குழந்தை பிறக்கும். இது முறைப்படி உள்ளது. எல்லோராலும் அங்கீகரிக்கப்படும். ஆனால் அது அவலட்சணம், முறைகெட்ட காரியம். குழந்தை பிறந்ததை வைத்து சரியா? தப்பா? என்று தீர்மானிப்பதில்லை. அப்படியே திருவசனமாகிய நீதியின்படியே தீர்க்க வேண்டும்.

ஆண்களே, கர்த்தருக்கு ஊழியம் செய்யுங்கள். பெண்களே இருக்க வேண்டிய இடத்திலிருந்து உங்களுக்குள்ள ஊழியத்தைச் செய்யுங்கள். ஆண்கள் மத்தியில் பிரசங்கம் பண்ணாதிருங்கள். அது அயோக்கியம் (I கொ 14:37; I தீமோ 2:12). ஜெபம் பண்ணுங்கள், அதுவும் ஒரு பெரிய ஊழியமே. புருஷர்களே, நீங்கள் உங்கள் பரிசுத்தமான கைகளை உயர்த்தி எல்லா இடங்களிலேயும் ஜெபம் பண்ணுங்கள். பெண்களே, நீங்கள் எல்லா இடங்களிலும் உங்கள் கைகளை உயர்த்தி ஜெபம் பண்ணுதிருங்கள்.

---

"அவர்கள் கர்த்தருக்கு ஆராதனை செய்து உபவாசித்துக் கொண்டிருக்கிற போது, பர்னபாவையும் சவுலையும் நான் அழைத்த ஊழியத்துக்காக அவர்களை பிரித்து விடுங்கள் என்று பரிசுத்த ஆவியானவர் திருவளம் பற்றினார்" அப் 13:2.

---

# மோட்ச வழி (தொடர்ச்சி)

## (குரு - சிஷ்ய உரையாடல்)

**சிஷ்ய:** வஞ்சிக்கிற ஆவிகளின் உபதேசம்—பிசாசுகளின் உபதேசம் என்றால் என்ன? அதை கொஞ்சம் விளக்கும்படி தயவு செய்து கேட்டுக் கொள்கிறேன்.

**குரு:** "கள்ளத் தீர்க்கதரிசிகளும் ஜனங்களுக்குள்ளே இருந்தார்கள். அப்படியே உங்களுக்குள்ளும் கள்ளப் போதகர்கள் இருப்பார்கள். அவர்கள் கேடுகேதுவான வேதப்புரட்டுகளை தந்திரமாய் நுழையப்பண்ணி, தங்களை கிரயத்துக்குக் கொண்ட ஆண்டவரை மறுதலித்து, தங்களுக்கு தீவிரமான அழிவை வருவித்துக் கொள்ளுவார்கள். அவர்களுடைய கெட்ட நடக்கைகளை அநேகர் பின்பற்றுவார்கள். அவர்கள் நிமித்தம் சத்தியமார்க்கம் தூஷிக்கப்படும்" என்று II பேது 2:1,2-ல் எழுதியிருக்கிற பிரகாரமும் I யோவா 4:1-ல் கள்ளத் தீர்க்கதரிசிகள் உலகத்தில் அநேகர் தோன்றியிருக்கிறார்கள் என்று எழுதியிருக்கிற பிரகாரமும், வஞ்சிக்கிற ஆவிகளின் உபதேசங்கள் கிறிஸ்தவத்துக்குள் புகுந்திருக்கின்றன. தேவ சித்தம் செய்ய பிரியமில்லாத கிறிஸ்தவர்களுக்கு அவைகள் பிரியமாயிருக்கிறபடியால், தேவனால் உண்டாகியிருக்கிற விசுவாசத்தை விட்டு விலகி இவ்விதமான தவறான உபதேசங்களில் விழுகிறார்கள்.

1. யெகோவா சாட்சிகள் (JEHOVAH WITNESSES)
2. ஏழாவது ஓய்வு நாட்காரர்கள் (SEVENTH - DAY ADVENTISTS)
3. மர்மோனியன்ஸ் (MORMONS)
4. ரோமன் கத்தோலிக் (ROMAN CATHELIC)

இந்த வரிசையில் வரும்.

**சிஷ்ய:** இவைகளைப் பற்றி அறிய விரும்புகிறேன்.

**குரு:** யெகோவாவின் சாட்சிகள் (JEHOVAH WITNESSES) Mr. சார்லஸ் T. ரசல் (Mr. CHARLES T. RUSSELL) என்பவரால், கி. பி. 1884-ல், ஸ்தாபிக்கப்பட்டது. இவர் எழுதிய புத்தகத்தின் பெயர் "மேய்ப்பன்" (SHEPHERD). யெகோவா சாட்சிகள் பைபிளைப் படித்தாலும், பிரசங்கித்தாலும் வேதாகமத்தை முழுவதும் நம்புவதில்லை. பைபிளைக் காட்டிலும் இவர்கள் ரசல் எழுதிய "மேய்ப்பன்" (SHEPHERD) என்ற புஸ்தகத்தையே அதிகமாக நம்புகிறார்கள். இதையே தங்களுடைய முக்கிய ஆதாரப் புஸ்தகமாக வைக் கொள்ளுகிறார்கள்.

(1) வேத வாக்கியங்களெல்லாம் தேவ ஆவியினால் அருளப்பட்டிருக்கிறது; தேவனுடைய மனுஷன் தேறினவனாகவும், எந்த நற்கிரியையுஞ் செய்யத் தகுதியுள்ளவனாகவும் இருக்கும்படியாக அவைகள் உபதேசத்துக்கும், கடிந்து கொள்ளுதலுக்கும் சீர்திருத்த

லுக்கும், நீதியை படிப்பிக்குதலுக்கும் பிரயோஜனமுள்ளவைகளாயிருக்கிறது (II தீமோ 3:16,17). இவர்கள் ஒரு விதமான நோய் கொண்டவர்கள் (I தீமோ 6:3,4).

(2) இவர்கள் இயேசுகிறிஸ்துவை தேவனுடைய குமாரன் என்று ஒப்புக் கொள்ளுவதில்லை. இவர்கள் பிதாவாகிய தேவனை மாத்திரமே நம்புவார்கள். இயேசு கிறிஸ்துவை பிரதான தூதனை மிகாவேல் என்றும், அந்த தூதன் இந்த உலகத்தில் மனித வதாரத்தில் வந்தாரென்றும்; இயேசுகிறிஸ்து தேவனல்ல தேவனாக ஆக்கப்பட்டார் என்றும், SECOND CLASS GOD என்றும் சொல்லுகிறார்கள். ஆனால், சத்திய வேதமோ இயேசு கிறிஸ்துவை இவரே மெய்யான தேவனும் நித்திய ஜீவனுமாயிருக்கிறார் என்றும் (I யோவா 5:20), இவரே ஜீவாதிபதி என்றும் (அப் 3:15), இவரே நித்திய ஜீவன் என்றும் (I யோவா 5:11,12); இவர் என்றென்றைக்கும் ஸ்தோத்தரிக்கப்பட்ட சர்வத்திற்கும் மேலான தேவன் என்றும் (ரோம 9:5); தேவ பக்தியின் இரகசியம் தேவன் மாம்சத்தில் வெளிப் பட்டார் (I தீமோ 3:16). ஆதியிலே வார்த்தை இருந்தது. அந்த வார்த்தை தேவனா யிருந்தது என்றும் திட்டமாகக் கூறுகிறது (யோ 1:1).

(3) இவர்கள் நித்திய நரகத்தை நம்புவதில்லை. மனிதன் மரித்த உடனே எல்லாம் முடிந்து போகிறது; அவன் கல்லறையில் அடக்கம் பண்ணப்பட்டு விடுகிறான். நித்திய தண்டனை கிடையாது என்று போதிக்கிறார்கள். ஏனென்றால் தேவன் அன்புள்ளவர் அவர் கிருபையுள்ளவர். அவர் அன்புக்கு மாறாய் நித்தியமாய் தண்டிக்க மாட்டார் என்பது இவர்களது விளக்கம். பாவ இச்சையுள்ள பாவிகளுக்கு இந்த உபதேசம் கவர்ச்சிகரமாய் தெரிகிறதினால் இதை நம்பி அநேகர் நித்திய நரகத்திற்குப் போய் விட்டார்கள். நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து பாவிகளின் நித்திய அழிவைக் குறித்துச் சொல்லும் போது அவர்கள்: இரண்டு கையுடையவனாய் நித்திய அக்கினிக்குப் போவதைக் காட்டிலும், ஊனனாய் ஜீவனுக்குள் பிரவேசிப்பது நலமென்றும்; இரண்டு கண்ணுடைய வனாய் நித்திய அக்கினியிலே தள்ளப்படுவதைப் பார்க்கிலும் ஒற்றைக் கண்ணனாய் தேவனுடைய இராஜ்யத்துக்குள் பிரவேசிப்பது நலமென்றும்; பாவிகள் அடைகிற ஆக்கினையைக் குறித்துச் சொல்லும் பொழுது அங்கே அவர்கள் புழு சாவாமலும் அக்கினி அவியாமலும் இருக்கும் என்றும் எச்சரித்துள்ளார் (மாற் 9:43-48 ; வெளி 20:10).

(4) இவர்கள் இயேசுகிறிஸ்துவின் இரத்தத்தினால் உண்டாகிற இரட்சிப்பை ஒத்துக்கொள்கிறதில்லை, விசுவாசிப்பதில்லை; அதை பிரசங்கிப்பதுமில்லை. இவர்கள் இரட்சிக்கப்படவேயில்லை. இவர்கள் பிரசங்கிப்பது சுவிசேஷமல்ல. இயேசு கிறிஸ்துவினால் உண்டாகிற இரட்சிப்பை இவர்கள் அறியார்கள். இவர்கள் தங்களை யெகோவாவின் சாட்சிகள் என்று சொல்லுவார்கள் தேவ வாக்கியங்களை ஆராய்ச்சி பண்ணுகிறோம் என்று சொல்லி யெகோவா, யெகோவா என்று சொல்லுவார்கள். இவர்கள் கிறிஸ்தவர் களேயல்ல. இயேசு கிறிஸ்து தம்மை தனக்கு சாட்சிகளாய் இருக்கும்படி கட்டளை இட்டுள்ளார் (அப் 1:8). வேத வாக்கியங்களை ஆராய்ந்து பார்க்கிறதின் மூலமாக ஒருவன் வேத வாக்கியங்களெல்லாம் இயேசுகிறிஸ்துவைக் குறித்தே சாட்சிக் கொடுக்கின்றன என்பதை அறிந்து கொள்வான். இவைகளால் நித்திய ஜீவன் உண்டாகும் (யோவா 5:39). அப்போஸ்தலருடைய பிரசங்கமும் சுவிசேஷமும் இயேசுகிறிஸ்துவைப் பற்றியதாகும் (II கொரி 4:5; ரோம 16:25,26; II கொரி 1:19; அப் 28:31). யெகோவாவையல்ல இயேசு கிறிஸ்துவை விசுவாசிப்பதினாலேயே இரட்சிப்பு, நித்திய ஜீவன் உண்டாகிறது (அப் 16:31; I தீமோ 1:16,17).

(5) இவர்கள் சொல்லுகிறார்கள் இயேசுகிறிஸ்து மனித கண்கள் காண பூமிக்கு வரப்போவதில்லை என்றும்; ஏற்கனவே இயேசுகிறிஸ்து வந்து விட்டாரென்றும், அதை மனித கண்களால் காணமுடியாது என்றும் போதிக்கிறார்கள். ஆனால் வேத வாக்கியம் என்ன போதிக்கிறதென்றால் இயேசு கிறிஸ்து வரும்பொழுது எல்லாக் கண்களும் அவரைக் காணுமென்றும் (வெளி 1:7; மத் 24:30). சாத்தான் பிடித்து கட்டப்பட்டு பாதாளத்தில்

தள்ளி அடைக்கப்பட்ட பின்பே தேவனுடைய இராஜ்யம் ஸ்தாபிக்கப்படுமென்றும் (சாத்தான் மிகத்தீவிரமாய் இந்நாட்களில் கிரியை செய்கிறான் என்பதை நாமெல்லாரும் அறிவோம்) [வெளி 20:1-3] திட்டமாய் அறிந்திருக்கிறோம். ஆனபடியினால் யெகோவா சாட்சிகள் (Jehovah Witnesses) மூலமாக சாத்தான் அநேக ஆத்துமாக்களை நரகத்திற்கு ஏற்கனவே கொண்டு போய் விட்டான் என்பதை அறிந்துகொள்வீராக.

(தொடரும்)

"கள்ளத் தீர்க்கதரிசிகளும் ஜனங்களுக்குள்ளே இருந்தார்கள். அப்படியே உங்களுக்குள்ளும் கள்ளப் போதகர்கள் இருப்பார்கள்" —II பேது 2:1.

# வேதபாடம்

யாத் 8:33-35 மோசே ஏற்கனவே தீர்க்கதரிசனமாய் சொன்னபடி பார்வோனின் இருதயம் கடினப்பட்டது: அவன் இஸ்ரவேல் புத்திரரை போகவிடவில்லை.

யாத் 10:1-6 ஒன்பதாவது தடவையாக என் சமுகத்தில் எனக்கு ஆராதனை செய்ய என் ஜனங்களைப் போகவிடு. போகவிடமாட்டேன் என்பாயாகில் நாளை உன் எல்லைகளிலெல்லாம் வெட்டுக்கிளிகளை வரவிடுவேன். கல்மழையில் தப்பினதை வெட்டுக்கிளிகள் பட்சிக்கும். உன் வீடுகளும் உன் ஊழியக்காரருடைய வீடுகளும், எகிப்திலுள்ள எல்லா வீடுகளும் வெட்டுக்கிளிகளினால் நிரப்பப்படும் என்று கர்த்தர் சொல்லுகிறார் என்று மோசே மூலமாய் எச்சரிப்பு உண்டாயிற்று

யாத் 10:7-11 பார்வோனுடைய மூன்றாவது சமரசம்: முதலாவது (யாத் 8:25): நீங்கள் உங்கள் தேவனுக்கு தேசத்திலேதானே பலியிடுங்கள் என்றான். மோசேயோ நாங்கள் மூன்று நாள் வனாந்தரத்தில் பிரயாணம்போய் எங்கள் தேவன் எங்களுக்கு நியமித்தபடியே அவருக்குப் பலியிடுவோம் என்றார்.

இரண்டாவது சமரச ஏற்பாடு (யாத் 8:28): நீங்கள் உங்கள் தேவனாகிய கர்த்தருக்கு வனாந்தரத்தில் பலியிடுங்கள் ஆனால் நீங்கள் அதிக தூரம் போகவேண்டாம் என்றான். இப்பொழுதோ யாத் 10:7-11ல் மூன்றாவது சமரச ஏற்பாட்டை பார்வோன் சொல்லுகிறான். நீங்கள் உங்கள் தேவனாகிய கர்த்தருக்கு ஆராதனை செய்யுங்கள்; யார் யார் போகிறீர்கள் என்று கேட்டான். அதற்கு மோசே: எங்கள் இளைஞரோடும், எங்கள் முதியோரோடும், எங்கள் குமாரரோடும், எங்கள் குமாரத்திகளோடும், எங்கள் ஆடுகளையும், எங்கள் மாடுகளையும் கூட்டிக்கொண்டு போவோம். நாங்கள் கர்த்தருக்குப் பண்டிகை கொண்டாட வேண்டும் என்றார் (யாத் 10:9). அதற்குப் பார்வோன் இல்லை: புருஷராகிய நீங்கள்மாத்திரம் போய் கர்த்தருக்கு ஆராதனை செய்யுங்கள் என்றான். மோசே அதற்கு ஒத்துக்கொள்ளவில்லை.

யாத் 10:12-15 பன்னிரெண்டாவது அற்புதம். 8-வது வாதை. மோசே தன் கோலை எகிப்து தேசத்தின்மேல் நீட்டினார். தேசம் முழுவதும் வெட்டுக்கிளிகளினால் நிரப்பப் பட்டது. வெட்டுக்கிளிகள் நிலத்தின் பயிர்வகைகளையும், மரங்களின் கனிவகைகளையும், பச்சிலைகளையும் தின்று போட்டன.

யாத் 10:16-17 பார்வோன் மோசேயையும், ஆரோனையும் அழைத்து நான் தேவனுக்கு விரோதமாய் பாவம் செய்தேன். என் பாவத்தை மன்னிக்கவேண்டும். இந்த வெட்டுக் கிளிகள் என்னைவிட்டு நீங்கும்படி கர்த்தரிடத்தில் வேண்டிக்கொள்ளுங்கள் என்றான்.

யாத் 10:18-20 பதிமூன்றாவது அற்புதம். மோசே கர்த்தரை நோக்கி விண்ணப்பம் பண்ணினார் வெட்டுக்கிளிகள் தேசத்தைவிட்டு நீங்கின. பார்வோனின் இருதயம் கடினப் பட்டது.

யாத் 10:21-23 பதினைந்தாவது அற்புதம் 9-தாவது வாதை. எகிப்து தேசம் எங்கும் மூன்று நாள் மட்டும் காரிருள் உண்டாயிற்று. இஸ்ரவேலருக்கோவெனில் அவர்கள் வாசஸ்தலங்களில் வெளிச்சம் உண்டாயிருந்தது.

யாத் 10:24-28 பார்வோனின் நான்காவது சமரசம்: பார்வோன் மோசேயை நோக்கி நீங்கள் போய் கர்த்தருக்கு ஆராதனை செய்யுங்கள். உங்கள் ஆடுமாடுகள்மாத்திரம் நிறுத்தப்பட வேண்டும் என்றான். மோசே ஒப்புக்கொள்ளவில்லை. எங்களோடுகூட எங்கள் மிருக ஜீவன்களும் வரவேண்டும். ஒரு குளம்பும் பின்வைக்கப்படுவதில்லை. எங்கள் தேவனாகிய கர்த்தருக்கு ஆராதனை செய்கிறதற்கு அவைகளிலிருந்து எடுக்கவேண்டும். நாங்கள் அங்கேப்போய் சேரும்வரை இன்னவைகளைக் கொண்டு ஆராதிக்க வேண்டுமென்பது எங்களுக்குத் தெரியாது என்றார். பார்வோன் தன் இருதயத்தைக் கடினப்படுத்தி இஸ்ரவேல் ஜனங்களை போக விடமாட்டேன் என்று சொல்லிவிட்டான். தேவனுடைய ஜனங்கள் சமரச உடன்பாட்டுக்கு உட்படக்கூடாது. சாத்தானின் தந்திரங்களில் சிக்கிக் கொள்ளக்கூடாது. சாத்தானுக்கு அடையாளமாயிருக்கிற பார்வோன் முதலாவது உங்கள் தேவனுக்கு தேசத்தில் இங்கேதானே பலியிடுங்கள் என்றான்.

மோசே சொன்னார் எகிப்தை விட்டு மூன்று நாள் பிரயாண தூரம் போய் கர்த்தருக்கு ஆராதனை செய்ய வேண்டும் என்று. நாம் வேறுபடவேண்டும். உலகமாகிய எகிப்தை விட்டு வேறுபடவேண்டும். எகிப்துக்கும் நமக்கும் சம்பந்தமிருக்கக் கூடாது. உலகத்துக்கும் நமக்கும் சம்பந்தமிருக்கக் கூடாது.

இரண்டாவதாக எகிப்தை விட்டு போங்கள்; அதிகதூரம் போய்விடாதீர்கள் என்றான். உலகத்தைவிட்டு அழமான கிறிஸ்தவ ஜீவியத்தில் போய் விடாதிருங்கள் என்று சாத்தான் சொல்லுகிறான். இயேசு கிறிஸ்துவோ: ஆழத்திலே தள்ளிக் கொண்டு போய் மீன் பிடிக்கும்படி உங்கள் வலைகளைப் போடுங்கள் என்றார். எகிப்துக்கும் நமக்கும் கொஞ்சமும் சம்பந்தமிருக்கக் கூடாது.

மூன்றாவதாக சாத்தான் புருஷர்கள் மாத்திரம் போய் கர்த்தருக்கு ஆராதனை செய்யுங்கள் என்றான்; மனைவிகள், பிள்ளைகள் இங்கே இருக்கட்டும் என்று சொல்லு கிறான்.

அத்தியட்சர் (BISHOP) ஒருவர் தன் மனைவி, பிள்ளைகளை தன் காரில் கொண்டு போய் சினிமா தியேட்டரில் விட்டுவிட்டு இவர் மாத்திரம் ஆராதனை நடத்த ஆலயத்துக்குப் போவாராம்.

இன்னொரு பெரிய பிரசங்கி ஒருவர் தன் மனைவி பிள்ளைகளை அவர்கள் விருப்பப் படியான இடத்துக்கு விட்டு விட்டு இவர்மாத்திரம் ஆவியின் கூட்டம் நடத்தப் போவாராம்.

நான்காவதாக சாத்தான் சொல்லுகிறான் நீங்கள் கர்த்தருக்கு ஆராதனை செய்யுங்கள். ஆனால், உங்கள் ஆடுகள், மாடுகள், சொத்துக்கள் எகிப்திலே இருக் கட்டும். அதை கர்த்தருக்கு ஒப்புக்கொடுத்துவிடாதீர்கள் என்கிறான். நீங்கள் சாத்தானோடு உலகத்தோடு சமரச உடன்பாடு செய்திருக்கிறீர்களா? உங்களுடைய காரியம் என்ன? தேவனுடைய சித்தப்படிதான் தேவனை ஆராதிக்கிறீர்களா?

யாத் 11:1-10 பத்தாவது வாதையைக் குறித்த அறிவிப்பு பார்வோனுக்குக் கொடுக்கப் படுகிறது. எகிப்தியரின் தலைப்பிள்ளைகளையெல்லாம் சிங்காசனத்தில் வீற்றிருக்கும்

பார்வோனின் தலைப்பிள்ளை முதல் கடைசியில் இருக்கும் அடிமைவரையிலும் உள்ள எகிப்தியரின் தலைப்பிள்ளைகளும், மிருக ஜீவன்களில் உள்ள தலைச்சன்களும் சங்கரிக்கப்படும் என்று கர்த்தர் அறிவித்தார். மேலும் கர்த்தர் மோசேயை நோக்கி இந்த வாதையின் மூலமாய் பார்வோன் உங்களை எகிப்திலிருந்து போக விடுவான் அதோடு அவசரமும் படுத்துவான். உங்களில் ஒவ்வொருவனும் அயலானிடத்திலும், ஒவ்வொருத்தியும் தன்தன் அயலாளிடத்திலும் பொன்னுடைமைகள் வெள்ளியுடைமைகளையும் கேட்டு வாங்கும்படி கர்த்தர் கட்டளையிட்டார். இஸ்ரவேலர்கள் அடிமைகளாய் எகிப்தியருக்கு வேலை செய்தார்கள். அவர்களுக்கு நியாயமான சம்பளம் கொடுக்கப்படவில்லை. ஆனபடியினால், இஸ்ரவேலர்கள் தங்கள் கூலிக்கு ஈடான பொருட்களை எகிப்தியர்களிடமிருந்து கேட்டு வாங்க வேண்டும் என்று கர்த்தர் கட்டளையிட்டார். இந்த ஆபரணங்கள் கர்த்தருக்கு ஆராதனை செய்யும்படி உண்டாக்கப்பட்ட ஆசரிப்பு கூடாரவேலைக்கு தேவைப்பட்டது, கொடுக்கப்பட்டது (யாத் 12:35, 36; யாத் 35 அதி 36:1-7).

(தொடரும்)

"நானும் என் வீட்டாருமோ வென்றால் கர்த்தரையே சேவிப்போம்..." —யோசு 24:5

# ஊழியக்காரன்

ஊழியக்காரன் என்றால் வேலைக்காரன் என்று அர்த்தம். தேவனுடைய ஊழியக்காரனென்றால், தேவனுடைய வேலைக்காரன். இயேசுவானவர் ஊழியம் செய்யும்படி இந்த உலகத்துக்கு வந்தார் (மத் 20:28). அவர் ஊழியம் செய்தார். (உ-ம்) ஞானஸ்நானம் கொடுத்தார் (யோவா 3:22; 4:1). ஆனால் அவர் கொடுக்கவில்லை அவருடைய சீஷர்கள் கொடுத்தார்கள் (யோவா 4:3) ஆனாலும் அவர் கொடுத்ததாகவே வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது (யோவா 3:26).

ஆகவேதான் அவருடைய சீஷர்கள் அவருடைய ஸ்தானாபதிகளாக, அவர் பெயரில் அவர் செய்யக்கூடிய வேலையை அவர் ஸ்தானத்தில் செய்கிறார்கள் (II கொரி 5:20). இப்படி ஊழியம் செய்கிறவர்கள் எப்பேர்ப்பட்ட மேன்மைக்கு பாத்திரவான்களாக இருக்கிறார்கள். பாருங்கள், பிதா அவர்களை கனம் பண்ணுவார் (யோ 12:26). தேவனால் கனப்படுத்தப்படக் கூடியவன் எவ்வளவு பெரியவன், பாக்கியவான்,

உலகப் பிரகாரமாக சாதாரணமான ஒரு முதலாளி தன்னுடைய வாசற்படியில் காத்திருக்கிற தன்னுடைய வேலைக்காரனை அழைக்கிறான். வேலையாள் உடனே ஓடி வருகிறான். எஜமான் அவனை கடைக்கு அனுப்பி சில பொருட்கள் வாங்க விரும்பியே அழைத்தான். இந்த வேலைக்காரன் இப்பொழுது செய்ய வேண்டியது என்ன?

(1) எஜமானின் குரல் கேட்ட உடன் அவர் முன் வந்து நிற்க வேண்டும்.

(2) எஜமான் என்ன என்ன பொருட்கள் வாங்கச் சொல்லுகிறார் என்று கவனமாய்க் கேட்க வேண்டும். எந்த கடைக்குப் போகச் சொல்லுகிறார் என்று கேட்டாவது அறிய வேண்டும்.

(3) எஜமானிடம் பொருட்கள் வாங்க பணம் வாங்கிக் கொள்ள வேண்டும். அதைப் பத்திரப்படுத்த வேண்டும்.

(4) எஜமான் புறப்பட்டு போ என்றதும் உத்தரவுப் பெற்றுச் செல்ல வேண்டும்.

(5) சோம்பேறியாய் அங்கும் இங்கும் போய் நிற்காதபடிக்கு நேராக கடைக்குப் போய், வாங்க வேண்டிய எல்லாப் பொருள்களையும் வாங்கிக் கொண்டு வீட்டுக்கு வர வேண்டும்.

(6) வந்து கள்ளக்கணக்கு சொல்லாதபடி பொருட்களையும், கணக்கையும் ஒப்புவிக்க வேண்டும்.

(7) தனக்கு இடப்பட்ட வேலை முடிந்தது என்று அறிந்து அடுத்த வேலையை எஜமான் சொல்லும் வரை எஜமானின் குரல் கேட்கக் கூடிய எல்லைக்குள் இருந்து கொண்டு, தோட்டத்துக்கு நீர்ப்பாய்ச்சுதல், வீட்டை சுத்தம் செய்தல் இப்படிப்பட்ட வழக்கமான (அல்லது ஏற்கனவே ஒப்புவிக்கப்பட்ட) வேலைகளைச் செய்து கொண்டிருக்க வேண்டும்.

இந்த வேலைக்காரனே எஜமானுக்கு ஏற்றவன். எஜமான் இவனில் பிரியமாயிருப்பான், நம்புவான், அநேகத்தின் பேரில் அதிகாரியாக வைப்பான், அன்பாயிருப்பான். அவன் தேவைகளை எல்லாம் சந்திப்பான். உலகப் பிரகாரமான ஒரு வேலைக்காரனிடத்திலே இப்படிப்பட்ட ஒரு ஒழுங்கு எதிர்பார்க்கப்படுகையில் பரலோக ராஜ்யத்தின் ஊழியக்காரர்கள் எப்பேர்ப்பட்ட ஒழுங்குள்ளவர்களாக இருக்க வேண்டும்.

ஊழியம் என்பது கர்த்தர் சொல்லுகிறதை செய்வதே ஊழியம். மற்றதெல்லாம் ஊழியமாக இருக்காது, எஜமானை தன்டத்துக்குள்ளாக்கும் அட்டூழியமாயிருக்கும்.

கானான் தேசத்தை உளவு பார்த்து வந்த 12 பேர்களில் 10 பேர் அந்த தேசம் பாலும் தேனும் ஓடுகிற தேசம்தான், ஆனால் அந்த தேசத்தின் ஜனங்களெல்லாம் ராட்சதர்கள், அவர்களோடே யுத்தம் செய்து மேற்கொள்ள முடியாது என்று சொல்லி ஜனங்களுக்குள்ளே கலகமுண்டாக்கி விட்டார்கள் ஜனங்கள் மோசேக்கு விரோதமாக முறுமுறுத்தார்கள். தேவனுடைய பலத்த செய்கைகளைக் கண்டும் தேவனுடைய வாக்குத்தத்தத்தை நிறைவேற்றும் வல்லமையில் ஜனங்கள் அவிசுவாசம் கொண்டபடியால் கர்த்தர் ஜனத்தின் மேல் கோபம் கொண்டு அவர்களை அழிப்பேன் என்றார்.

மோசே மன்றாடி இரக்கம் பெற்றார் (யாத் 13, 14 அதி). ஆனாலும் கலகமுண்டாக்கின பத்து பேரும் வாதையால் செத்தார்கள். இதை அறிந்த இஸ்ரவேலர்கள் நாங்கள் பாவம் செய்தோம், கர்த்தர் வாக்குத்தத்தம் பண்ணின இடத்துக்குப் போவோம் என்று சொல்லி தேவ உத்தரவின்றி, தேவ அனுமதியின்றி, தேவனால் ஏற்படுத்தப்பட்ட மோசேயின் ஆலோசனையின்றி தங்கள் விருப்பத்தின்படி அசட்டுத் துணிச்சல் கொண்டு, கர்த்தரின் கட்டளையை மீறி மலையின்மேல் ஏறத்துணிந்தார்கள். நடந்தது என்ன? இவர்கள் நம்பிக்கை அபத்தமாயிற்று, எதிரிகளால் முறியடிக்கப் பட்டார்கள் (எண் 14 : 37-45).

தேவனுடைய ஊழியம் என்றால் என்ன? அவர் சொல்வதைச் செய்வதே ஊழியம். கர்த்தர் தம்முடைய ஊழியக்காரனை ஒரு காரியம் செய்யும்படி ஒரு இடத்துக்கு அனுப்புவாரானால், அந்த இடத்துக்கு அவர் தாமே தன்னுடைய ஊழியன் போவதற்கு முன்னே அந்த இடத்துக்கு கடந்து செல்வார் (யாத் 17:5,6). கர்த்தர் தம்முடைய ஊழியனுக்கு முன்பாக கடந்து போய் தடைகளை எல்லாம் நீக்கிப் போடுவார் (மீகா 2: 13). அவன் செய்வதெல்லாம் வாய்க்கும். கர்த்தராகிய தேவன் ஒரு இடத்தில் பிரசன்னமாகிறார் என்றால் அந்த இடத்திலுள்ள அந்தகார சக்திகளெல்லாம் (சாத்தான்—அசுத்த ஆவிகள்) ஒளி வந்தவுடன் இருள் தானாக அகன்று போவதுபோல் விலகிப் போய்விடும். மோசேயின் உத்தரவுபடி 12 பேர் கானான் தேசத்தை உளவு பார்க்க போய் வந்தார்கள். தேவ ஆலோசனையின்படி அவர்கள் சென்றார்கள். தேவன் அவர்களோடே இருந்தார். எதிரிகள் இவர்களைச் சேதப்படுத்த முடியவில்லை. இவர்களோடே தேவன் இருந்தபடியால் அவரின் பிரசன்னத்தினால் அந்த தேசத்தின் ஜனங்களை காத்த நிழல் (சாத்தானின் சத்துவம்) அவர்களை விட்டு விலகிப் போயிற்று; ஆனபடியால் அவர்கள் பலமற்றுப் போனார்கள். இஸ்ரவேலரே, நமக்கே ஜெயம் என்றார்கள் விசுவாச வீரர்கள் (எண் 14:9).

கொள்ளையடிக்கப் போகிறவன் முதலாவது ஒரு வீட்டிற்குள் புகுந்த ஒரு கத்தியைக் காட்டி அந்த வீட்டுக்காரர்களை மிரட்டி பயமுறுத்தி கட்டிப் போட்டு விட்டு அந்த வீட்டின் உடமைகளை எல்லாம் கொள்ளையடித்து வருவான். இவனைக்காட்டிலும் வீட்டுக்காரன் பலவானாய் இருப்பானானால் ஆளைப்பிடித்து நையப் புடைத்து கத்தியைப்

பிடுங்கிக் கொண்டு, கீழ்ப்படுத்தி தன் இஷ்டம் போல் செய்வான். இவன் கதி எப்படி? கொள்ளைப் பொருளை கையில் எடுத்து பார்த்ததுதான் மிச்சம் பையில் போடவில்லை. இருந்த முதலும் பறி போயிற்று. அந்தோ பரிதாபம். இயேசுவானவர், சாத்தானை பலவான் என்று சொல்லுகிறார் (லூக் 11 : 21). உண்மையிலேயே அவன் உன்னைக் காட்டிலும் பலவானே. உன்னைவிட அவனுக்கு நன்றாக வேதம் தெரியும். ஏனெனில் அவன் தானியேலைக் காட்டிலும் ஞானவான் (எசே28 : 3). மனித ஆத்துமாக்கள் இவனுடைய அருணைக்குள், இவனுடைய காலில் கிடக்கிறார்கள். நீ இவர்களைக் கைப்பற்ற வேண்டுமானால் முதலாவது அவன் கட்டப்பட வேண்டும் (மத் 12 : 29). அவனை ஜெயித்தவர் கர்த்தராகிய இயேசு கிறிஸ்து மாத்திரமே. அவராலேயல்லாமல் அவனை ஜெயங் கொள்ள உன்னால் முடியாது (யோவா 15 : 5).

அவர் உன்னை ஊழியத்துக்கு ஒரு இடத்துக்கு அனுப்புவாரானால் அவர் முன்னே போய் தம்முடைய மகிமையின் பிரசன்னத்தினால் அவனை அகற்றி விடுவார். நீ எளிதாய் காரியத்தை நிறைவேற்றலாம். ஆத்துமாக்களை ஆதாயப்படுத்தலாம். பிலிப்புவை கர்த்தர் தேவ தூதனைக் கொண்டு அனுப்பினார் (அப் 8 : 26, 29). காந்தாகே என்பவளின் மந்திரி இயேசுவை விசுவாசித்து ஞானஸ்நானம் பெற்றான் (அப் 8 : 35). பரி. பேதுருவை ஆவியினால் அவனுள் பேசி கர்த்தர் அனுப்பினார் (அப் 10 : 19,20). கொர்நெலியுவை சேர்ந்த எல்லாரும் பரிசுத்தாவி பெற்று ஞானஸ்நானம் பெற்றார்கள் (அப் 10 : 45,48). பரி. பவுலை இராத்தரிசனம் கொடுத்து கர்த்தர் மக்கதோனியாவுக்கு அனுப்பினார் (16 : 9, 10). லீதியாளும் அவள் வீட்டாரும் விசுவாசிகளானார்கள் (அப் 16 : 14). இப்படி எத்தனை பேரா ஆதாரங்கள் புதிய ஏற்பாட்டிலுள்ளது. பரிசுத்தவான்களுடைய ஊழியமெல்லாம் கடைசிவரை இப்படியே இருந்தது. உன்னுடைய ஊழியம் எப்படி? கர்த்தர் உன்னை அனுப்பாதபடிக்கு நீ ஊழியம் செய்ய போவாயானால் உனக்கு ஐயோ, கர்த்தர் உன்னோடே இரார். அவராலேயல்லாமல் உன்னால் ஒன்றும் செய்ய இயலாது (யோவா 15 : 5). சாத்தான் உன்னை மேற்கொள்ளுவான். நீ ஆவியிலும் சரீரத்திலும் தாக்கப்படுவாய், உனக்கிருக்கிற கிருபை பறிக்கப்பட்டுப்போகும், நீ வல்லமை இழந்து போவாய். நீ பாவத்தில் விழுவாய், உன் சாட்சி கெட்டுப்போகும், உன் நிலைமை பரிதபிக்கப்பட்டதாய் போய்விடும். கர்த்தரின் உத்தரவின்றி ஒருவனிலுள்ள பிசாசை துரத்தினால் அது உன்னைப் பிடிக்கும். ஒருவனுடைய வியாதியை நீக்க தலையில் கை வைத்தால் உனக்கு அந்த வியாதி வரும். அல்லது உன்னுடையவர்களுக்கு வரும்.

"நீங்கள் உலகமெங்கும் போய் சர்வ சிருஷ்டிக்கும் சுவிசேஷத்தை பிரசங்கியுங்கள்" (மாற் 16 : 15) என்ற வசனத்தை ஆதாரமாகக் காட்டாதே; காட்டினால், உபதேசத்தைக் கேட்பவர்களுக்கு நீ ஞானஸ்நானம் கொடுக்க வேண்டும் (மத் 28 : 19). அதையும் செய்வாயானால் கர்த்தர் கட்டளையிட்டவைகளை ஞானஸ்நானம் பெற்றவர்களுக்கு உபதேசிக்க வேண்டும் (மத்25 : 20). கர்த்தர் உனக்கு என்ன கட்டளை கொடுத்தார்? உனக்கு அது தெரியாது. ஆகவே கர்த்தர் உன்னை சுவிசேஷம் பிரசங்கிக்க அனுப்பவில்லை. தாம் உயிர்த்தெழுந்த பின்பு பரிசுத்த ஆவியினாலே அப்போஸ்தலர்களுக்கே கட்டளையிட்டார் என்பதை அறியக் கடவாய் (அப் 1 : 1).

"பிசாசுகளைத் துரத்தவும், வியாதியுள்ளவர்களைக் குணமாக்கவும், பரலோக இராஜ்ஜியத்தைக் குறித்து பிரசங்கிக்கவும் இயேசு தம்முடைய 12 அப்போஸ்தலர்களையும் அனுப்பினார்" (லூக் 9 : 1, 2). இந்த வசனத்தின்படி உனக்கு அதிகாரம் உண்டென நீ எண்ணுகிறாய். ஆனால் அன்றைய நாளிலே இயேசுவால் ஊழியத்துக்கு அனுப்பப்பட்ட 70 சீஷர்கள் கூட அப்படி எண்ணவில்லையே. ஆகவேதான் இயேசு அவர்களுக்கும் தனிப்பட்ட முறையில் இப்படிப்பட்ட கட்டளைகளைக் கொடுத்து அனுப்புகிறார் (லூக் 10 : 1-11). ஆகவே அழைப்பும், அதிகாரமும், அனுப்புதலும் தனிப்பட்ட முறையிலே பெற வேண்டும். ஆனால் அது வசனத்தின்படியிருக்கும். சாத்தான் இயேசுவிடம் வசனம் காட்டி கீழே தள்ளி கொலை செய்ய எண்ணியபோது, இயேசு

ல்லவர் இன்னொரு வசனத்தைக் காட்டி அவனை மேற்கொண்டார் (மத் 4 : 6,7).

எனக்கு இப்படி தேவ சத்தம் கேட்டு தேவ சித்தம் செய்யும் கிருபை இல்லையே என எண்ணினால், தேவ மனிதனாகிய பவுலின் வார்த்தைகளைக் கேட்டு அதின்படி செய்த தீமோத்தேயுவை, தீத்துவைப் போல், தேவ சத்தம் கேட்டு அவர் சித்தம் செய்யும் ஊழியனுடைய வார்த்தையின்படி செய்யலாமே. ஓ! அப்படிப்பட்ட ஊழியம் எங்கே இருக்கிறது என்று நீ கேட்பாயானால்; இதோ, எங்களை உண்மையுள்ளவர்கள் என்று எண்ணி கர்த்தர் இந்த அழியாத மகிமையுள்ள ஊழியத்தை எங்களுக்கு ஒப்புவித்துள்ளார். எங்களுக்கே வகையளித்துள்ளார்.

"புதிய எருசலேம் சபை"யாய் இந்த ஊழியத்தை அவர் சொல்ல, அவர் வார்த்தையின்படியே செய்கிறோம். பிலிப்புவைப் போல (அப் 8 : 26-38). அப் பவுலைப் போல (அப் 16 : 9,10,23 : 11): அப் பேதுருவைப்போல (அப் 10 : 6-20). கர்த்தர் எங்களை நடத்துகிறார்.

நீங்களும் இந்த ஊழியத்தில் எங்களோடே பங்காளிகளாகலாம், உங்களையும் அன்போடே அழைக்கிறோம்.

தேவன் எங்களோடே இருக்கிறார்.

---

"அப்படியே நீங்களும் உங்களுக்குக் கட்டளையிடப்பட்ட யாவற்றையும் செய்த பின்பு, நாங்கள் அப்பிரயோஜனமான ஊழியக்காரர், செய்ய வேண்டிய கடமையை மாத்திரம் செய்தோம் என்று சொல்லுங்கள் என்றார்". —லூக் 17 : 10.

---

மாதர் பகுதி

# குடும்பம்

(தொடர்ச்சி)

3. அன்பு: குடும்பத்தை இரண்டு விதமாக நடத்தலாம். ஒன்று கடுமையான சட்டதிட்டங்கள், இரண்டாவதாக அன்பு.

கடுமையான சட்டதிட்டங்களினால் குடும்பத்தை நடத்தப் பிரயாசப்படுகிறவர்கள் தோல்வியடைந்து போவார்கள். அன்பினால் குடும்பத்தைக் கண்டிப்புடன் நடத்த வேண்டும். இந்தியப் பெற்றோர்கள் அநேகர் மற்றவர்களைக் காட்டிலும் தங்கள் பிள்ளைகளிடத்தில் அதிக அன்புடையவர்களாயிருக்கிறார்கள். ஆனால் அந்த அன்பைக் காட்டத் தெரியவில்லை. பிள்ளைகள் நல்லவர்களாக வளர்வதோ, கெட்டவர்களாக வளர்வதோ பெற்றோர்கள் கையில்தான் இருக்கிறது. விசேஷமாய் தாய்மார்களுடைய பொறுப்பே இதில் அதிகம்.

ஓ! பெண்கள் என்ன செய்ய முடியும்? ஆண்கள் அல்லவா கவனிக்க வேண்டும் என்று சிலர் சொல்லலாம். தாய்மார்கள் தான் பிள்ளைகளோடு முழுநேரமும் இருக்கிறவர்கள். ஆண்கள் (1/3) ஒரு நாளில் மூன்றில் ஒருபங்கு நேரம்தான் வீட்டில் இருக்கிறார்கள் என்று சொல்லலாம். எப்படி வெளியில் தொழிற்சாலைகளிலோ, அலுவலகங்களிலோ உழைப்பதற்காக எட்டு மணி நேரம் வெளியே சென்று விடுகிறார்கள். போக்குவரத்துக்காக குறைந்த பட்சம் இரண்டு மணிநேரம் செலவழிந்து விடுகிறது. எட்டு மணி நேரம் இளைப்பாறுகிறார்கள் (அதாவது எட்டு மணி நேரம் நித்திரை செய்கிறார்கள்) மீதியுள்ள மணி நேரங்களில் தான் அவர்கள் குடும்பத்திற்காக செலவழிக்க நேரிடுகிறது. இதிலும் சில அலுவல்கள் வந்துவிடும். ஆனபடியினால் எப்பொழுதும் பிள்ளைகளை பொறுப்பாய் கவனிக்கும் வேலை தாய்மார்களுடையதே.

பிள்ளைகள் ஒருவருக்கொருவர் சண்டைச்சரவு செய்யாமல் ஒருவருக்கொருவர் அன்பு பாராட்டவும் உதவி செய்யவும் பயிற்றுவிக்க வேண்டும். நல்ல காரியங்கள் செய்ய கற்றுக்கொடுக்க வேண்டும் சிறுத் தண்டனைக்குப் பயப்படவும், அழும் பொழுது மிகுந்த சத்தமிட்டு அழாதபடிக்கு மெதுவாக அழவும் கற்பிக்க வேண்டும். இதனால் பிற்காலத்தில் மிகுந்தபயனை பெற்றோர்கள் பெறலாம்.

பிள்ளைகள் எப்படியாவது அன்பினால் கீழ்ப்படியச் செய்யும்படி பிரயாசப்பட வேண்டும். நாம் அவர்களைத் தண்டிப்பது அவர்களுடைய நன்மைக்காகவே என்று

அவர்களுக்கு விளங்கச் செய்ய வேண்டும்.

1. தாயின் அன்பு மாறாதது.
2. தாயின் அன்பு குறையாதது.
3. தாயின் அன்பு நின்றுவிடாதது.
4. தாயின் அன்பு பிரியாதது.
5. தாயின் அன்பு அதிகரித்துக் கொண்டே போகும்.

தாய் குலத்தின் மேன்மை பெரியது. பிள்ளையானவன் நடக்கவேண்டிய வழியிலே அவனை நடத்து அவன் முதிர்வயதிலும் அதை விடாதிருப்பான் (நீதி 22:6).

4. சுறுசுறுப்பு: பிள்ளைகள் சுறுசுறுப்பாய் இருக்க கவனித்துக் கொள்ளவேண்டும். அவர்கள் ஓடிச்சாடி குதித்து விளையாடச் செய்யவேண்டும். அப்படி இல்லாவிட்டால் எப்படி அவர்கள் எலும்பு நரம்புகள் பலப்படும், இரத்த ஓட்டங்கள் சரியாயிருக்கும். அவர்கள் தங்களைத் தாங்களே சரிபடுத்திக் கொள்ள கற்றுக் கொடுக்க வேண்டும். முகத்தைத் துடைக்கவும், தங்கள் பள்ளிக்கூட புஸ்தகங்களை தாங்களே அடுக்கி வைக்கவும், குறித்த நேரத்தில் குறித்த காரியத்தைச் செய்யவும் சுறுசுறுப்பாயிருக்கவும் கற்றுக்கொடுக்க வேண்டும். நல்ல காரியங்கள் செய்ய சுறுசுறுப்பாயிருக்க கற்றுக்கொடுக்காவிட்டால் அவர்கள் கெட்டகாரியங்கள் செய்ய சுறுசுறுப்பாயிருக்கக் கற்றுக் கொள்வார்கள்.

வாழ்க்கையின் முன்னேற்றத்திற்கு சுறுசுறுப்பாயிருப்பதும், முயற்சி செய்வதும் அவசியம். தாய்மார்கள் தினம் தேகாப்பியாசம் செய்ய வேண்டும் இதைப் பார்த்தே பிள்ளைகளும் தேகாப்பியாசம் செய்யப் பழகுவார்கள். குறைந்த-பட்சம் ஒரு நாளில் ஏதாவது ஒருவேளையில் வெளியே வெகுதூரம் உலாத்த போய் வருவதே ஒரு நல்ல தேகாப்பியாசம்தான். ஏதும் வாகனங்களில் பிரயாணம் செய்வதை நான் சொல்லவில்லை. கால்நடையாய் (Walking) வெகு தூரம் நடப்பதையே நான் சொல்லுகிறேன். வாகனங்களில் தூர இடங்களுக்கு பிரயாணம் செய்வது சுத்த ஆகாயம் (காற்று) கிடைக்குமென்றாலும் தேகாப்பியாசம் உண்டாகாது. நடப்பதினால் எலும்புகள் நரம்புகள் பலப்பட்டு இரத்த ஓட்டமும் சீர்ப்படும் சுத்த ஆகாயமும் கிடைக்கும். இப்படியே உங்கள் பிள்ளைகளையும் பழக்குவீர்களாக.

(தொடரும்)

---

"அவள் பிள்ளைகள் எழும்பி அவளைப் பாக்கியவதி என்கிறார்கள்" —நீதி 31:28

---

# சாட்சி

நான் ஒரு இந்துக் குடும்பத்தில் பிறந்து வளர்ந்தவன். என்னுடைய பெயர் நாராயணன். என்னுடைய தொழில் பனை மரம் ஏறுவதும், விவசாயம் செய்வதுமாகும். என்னுடைய கையில் பணம் சேரும் பொழுதெல்லாம் எனது கூட்டாளிகளுடன் சேர்ந்து குடிப்பதும், எங்களுக்குப் பிடிக்காதவர்களை கோஷ்டியுடன் சேர்ந்து அடிப்பதும் உதைப்பதும் ஆயுதங்களால் வெட்டுவதும் எங்களது பொழுதுபோக்காகிவிட்டது. இதனால் போலீஸில் 50க்கும் அதிகமான கேஸ்கள் உண்டு. அதிகமாய் ரௌடித்தனம் பண்ணுவதால் போலீஸ் அதிகாரிகள் அதிகமாய் என்னைத் தண்டிக்க ஆரம்பித்தார்கள். பணங்களை வாரி இறைத்து இந்த கேஸ்களிலிருந்து விடுதலைப் பெற்றேன்.

அதுமட்டுமல்ல, நான் இந்து மார்க்கத்தில் வைராக்கியமாய் இருந்தபடியால், கிறிஸ்தவர்களைக் கண்டால் எனக்குப் பிடிக்காது. அவர்களில் சிலரைப் பிடித்து இந்துக் கோயிலுக்கு முன்னால் கொண்டு போய் அடித்து மன்னிப்பும் கேட்க வைத்திருக்கிறேன். இப்படி நான் வாழ்ந்து வரும் நாளில் நான் செய்த பாவத்துக்குத் தண்டனையாக எனக்குப் பிறந்த மூன்றாவது பெண்குழந்தையைத் தேவன் தண்டித்தார்.

எப்படியெனில் என் குழந்தைக்கு சிறிது உடம்பில் காய்ச்சல் காணப்பட்டது அதற்காக மருத்துவரிடம் கொண்டுபோய் ஊசி போட்டேன். என் குழந்தையின் கை, கால்கள் செயல்படாமல், மரத்துப் போய்

விட்டது. எத்தனையோ ஆயிரங்களைச் செலவு செய்தும் என் குழந்தைக்குச் சுகம் கிடைக்கவில்லை. எங்கள் ஊருக்கு அருகே "புதிய எருசலேம் சபை" இருக்கிறது. இங்கே ஆராதனை நடக்கும் பொழுதும் நான் நண்பர்களோடு சேர்ந்து பரியாசம் பண்ணினதுண்டு. இந்தக் கோயிலையே உடைக்கவேண்டும் என்றெல்லாம் நான் நினைத்த நாட்களுண்டு.

இப்பொழுது என் குழந்தைக்குச் சுகம் கிடைக்க வேண்டுமானால் இந்த "புதிய எருசலேம் சபைக்கு" கொண்டுபோய் ஜெபித்தால் போதும் சுகம் கிடைக்கும் என்று என்னிடம் பலர் சொன்னதினிமித்தம், நானும் என் மனைவியும் குழந்தையை எடுத்துக் கொண்டு புதிய எருசலேம் ஆலயத்திற்குப் போனோம் (மகிழ்ச்சி புரத்துக்கு).

நீங்கள் செய்த பாவத்தினிமித்தம் ஆண்டவர் உங்கள் குழந்தையைத் தண்டித்திருக்கிறார். உங்கள் பாவங்களைத் தேவ சமுகத்தில் அறிக்கை செய்து விட்டு விட வேண்டும். இனிமேல் யாரையும் அடிக்கக்கூடாது. ஏற்கனவே நீங்கள் அடித்த ஆட்களிடமெல்லாம் மன்னிப்பு கேட்க வேண்டுமென்று எனக்கு ஆலோசனை தந்தார்கள். எனக்கு அது ரொம்ப கஷ்டமாக இருந்தது. நான் செய்த தவறுகள் ஓரளவு எல்லா மனிதர்களுக்கும் தெரியும். ஆகையால் மனிதர்கள் மத்தியில் செல்வதில் எனக்கு வெட்கமில்லை. ஆனால் நான் அடித்தவர்களிடம் போய் மன்னிப்பு கேட்பது எனக்கு கஷ்டமாக காணப் பட்டது.

ஆனாலும் என் குழந்தைக்கு விடுதலை வேண்டுமானால் இப்படித்தான் செய்ய வேண்டும் என்று தேவனுடைய ஊழியர்கள் எனக்குத் தந்த ஆலோசனையை ஏற்றுக் கொண்டு நான் பாவ அறிக்கை செய்தேன். நான் அறிக்கை செய்யச் செய்ய கொஞ்சம் கொஞ்சமாய் என்னுடைய குழந்தை கால் ஊன்றி நடக்க ஆரம்பித்தது.

இப்பொழுதுதான் என்னுடைய பாவத்துக்குண்டான வல்லமையையும், அதை அறிக்கை செய்து விட்டுவிடுகிறதினால் கிடைக்கும் விடுதலையையும் கண்டு கர்த்தரை மகிமைப்படுத்துகிறேன். இப்பொழுது என் குழந்தை அற்புதமாய் நடக்கிறது. கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக

அடுத்து என்னுடைய தம்பி தங்கப் பெருமாள் என்பவன், அவன் பனைமரம் ஏறும் பொழுது அவனுக்குள் இருந்த பிசாசு ஒன்று பனைமரத்தோடு சேர்த்து அவனை ஆட்டும். தொழிலும் செய்ய முடியாது. அவனைக் கீழே தள்ளிவிடக் கூடாதபடி பனை மூட்டில் ஆட்கள் மேலே பார்த்துக் கொண்டே நிற்கவேண்டும்.

இப்படியிருக்க அவனையும் புதிய எருசலேம் சபைக்கு அழைத்துக்கொண்டு போனோம். தேவனுடைய மனிதர்கள் இயேசுவின் நாமத்தினால் அந்தப் பிசாசை என் தம்பியிடமிருந்து துரத்தி விட்டார்கள். இப்பொழுது எங்கள் குடும்பத்தில் பெரிய ஆறுதல் உண்டாகிவிட்டது.

நானும் தம்பியும் குடும்பமாய் இயேசு கிறிஸ்துவை ஆராதிக்கப் போய் வருகி றோம். கடந்த 1-1-1957ல் கர்த்தருடைய வசனத்தின்படி பாவமன்னிப்புக்கென்று ஞானஸ்நானம் பெற ஆயத்தமானோம். என் மனைவி தன்னுடைய ஆபரணங்களைக் கழற்ற விருப்பமில்லாதவளாகக் காணப் பட்டாள். புதுவருட ஆராதனைக்கு வள்ளி யூருக்குப் போனோம். அங்கே கர்த்தராகிய இயேசு கிறிஸ்து சிலுவையில் அறையப் பட்டவராக கோரக்காட்சியோடு உன் னுடைய பாவத்துக்காக நான் இப்படி அடி பட்டேனே என்று உணர்த்தி காட்சியளித்தி ருக்கிறார். உடனே என் மனைவி ஆண்டவரே என்னை மன்னியும் நான் இனி பாவம் செய்யமாட்டேன் என்று ஒப்புக் கொடுத்து அந்நேரமே தன்னுடைய ஆப ரணங்களைக் கழற்றிவிட்டாள். அந்த ஆரா தனையின் முடிவில் நாங்கள் குடும்பமாய் பிதா, குமாரன், பரிசுத்தாவியின் நாமத்தில் ஞானஸ்நானம் பெற்றுக்கொண்டோம்.

இப்பொழுது கர்த்தர் தம்முடைய பரிசுத் தாவியையும் எங்களுக்குத் தந்து பரலோக ராஜ்யத்தை சுதந்தரித்துக் கொள்வோம் என்கிற நம்பிக்கையையும் தந்துள்ளார். நாங்கள் பெற்ற இந்தப் பேரின்பத்தை யாவரும் பெற வேண்டுமென வாஞ்சித்து எனது சாட்சியை முடிக்கிறேன்.

இப்படிக்கு,
நாராயணன் என்ற கிதியோன்
[illegible]புரம்,
நெல்லை மாவட்டம்.

---

"பாவிகளை இரட்சிக்க கிறிஸ்து இயேசு உலகத்தில் வந்தார் என்கிற வார்த்தை உண்மையும் எல்லா அங்கீகரிப்புக்கும் பாத்திரமானது

—1 தீமோ 1:15

---

# புதிய எருசலேம் செய்தி

## PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் - 43-44 ★ JUL-AUG 1987

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ன் என்று நீங்கள் அறியீர்கள் விழித்திருங்கள் . உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள். "

மாற்கு 13 : 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY. INDIA.

# ஆசிரியர் உரை

அன்பான தேவனுடைய பிள்ளைகளுக்கு, இயேசுவின் நாமத்தில் வாழ்த்துக்கள். நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து இந்த பூலோகத்துக்கு அனுப்பப்பட்டு வந்தது நமது ஜனங்களின் பாவங்களை நீக்கி இரட்சிப்பதற்காகவே (மத் 1:21; தீத்து 2:11—15)

இன்று சிலர் அதை நோக்காமல், நாமத்தைக் குறித்தும், நாளைக்குறித்தும் ஆளைக்குறித்தும், இன்னும் சில உபதேசங்களைக் குறித்தும், தங்கள் ஸ்தாபனங்களைக் குறித்தும் மேன்மை பாராட்டிக் கொண்டு பாவமன்னிப்பாகிய மீட்பை மறந்து விட்டு விட்டார்கள். நன்றாக பிரசங்கிப்பார்கள், பாடுவார்கள்; ஆனால் பாவத்திலிருந்து மீட்போ இவர்களுக்கு எட்டா கனியாயிருக்கிறது.

இரட்சகர் இயேசுகிறிஸ்துவே. இரட்சிப்பது—அவருடைய வசனம்; சத்தியத்தையும் அறிவீர்கள் சத்தியம் உங்களை விடுதலையாக்கு மென்று யோவான் 8:32ல் எழுதப்பட்டுள்ளது. இரட்சகராகிய இயேசு கிறிஸ்து தம்முடைய சத்திய வசனத்தைக் கொண்டே விடுதலையாக்கு கிறார். உபதேச சட்டம் ஒன்றே விடுதலைக்கு வழி. அதைக் கைக் கொள்ளுவதினாலேயே பாவத்திலிருந்து விடுதலையாகி தேவனுக்கு முற்றிலும் அடிமைகளாக முடியும். பரிசுத்தமாகுதலும். நித்தியஜீவனின் நிறைவையும் பெறுவோம் (ரோம 6:17-22).

பரிசுத்தவான்களுக்கு ஒரு விசை ஒப்புவிக்கப்பட்ட விசுவாசமே, உபதேசமே இந்த விடுதலையைக் கொடுக்கும். தண்ணீர் தளம்புகிறது போல அடிக்கடி தங்கள் உபதேசத்தை மாற்றிக் கொண்டு நடைமுறையை மாற்றித் திரிகிற ஒருவரும் தேவனிடத்திலிருந்து பெற்றுக் கொண்டவர்களல்ல.

திருச்சபையின் தலைவராகிய இயேசுகிறிஸ்து இவர்களிடத்தில் ஒன்றை ஒப்புக் கொடுக்கவுமில்லை. நாமோ இயேசுகிறிஸ்துவினிடத்தி லிருந்து, பெற்றுக் கொண்டதை உபதேசிக்கிறோம். ஆனபடியினால் மக்கள் விடுதலையாகி தேவனோடு கூட ஐக்கியப் பட்டு பூரண நிலையை அடைந்து வருகிறார்கள். ஆனபடியினால் தேவனுடைய பிள்ளைகள், தேவனால் ஒரு விசை ஒப்புவிக்கப்பட்ட விசுவாசத்தைப் பற்றிக் கொள்ள வேண்டுமென்றும், அந்த விசுவாசத்திற்காய் கடும்போராட வேண்டு மென்றும், எதிர்க்கிறவர்களால் மருளாதிருக்க வேண்டுமென்றும் இயேசுவின் நாமத்தில் கேட்டுக் கொள்கிறோம் (யூதா 3, பிலி 1:27).

கிறிஸ்துவுக்குள்,
Chief Pastor N. LAZAR.

# பாவமன்னிப்பு

(தொடர்ச்சி)

சில பக்தியுள்ளவர்கள் தனி ஜெபம் என்று கூடி தங்களை சுத்திகரித்துக் கொள்ளும்படி எழுந்து நின்றோ, முழங்காலில் நின்று கொண்டோ ஒவ்வொருவராய் தங்கள் பாவங்களை சத்தமிட்டு அறிக்கை செய்து ஜெபித்து வருகிறார்கள். இவர்கள் ஏற்கனவே அந்த பாவங்களை கர்த்தரிடத்தில் அறிக்கை செய்து ஜெபித்தவர்கள் தான். ஆனால் தங்கள் மனசாட்சி சுத்திகரிக்கப் படாததினாலும், பாவத்திலிருந்து மன்னிப்பு உண்டாகாதபடியினாலும் பக்தி முயற்சி என்று இப்படி கூடி பாவ அறிக்கை செய்கிறார்கள்.

இப்படி ஒரு இடத்தில் கூடி ஒரு கூட்டத்தார் பாவ அறிக்கை செய்தார்கள். அதிலே சில ஊழியர்கள் எழும்பி பாவ அறிக்கை செய்தார்கள். தங்கள் ஜீவியத்திலே அந்தரங்கமாய் கிரியை செய்து கொண்டிருக்கிற பாவங்களை அறிக்கை செய்தார்கள். கேட்டுக் கொண்டிருந்த விசுவாசிகளில் பெரிய திகைப்பு உண்டாயிற்று. இவ்வளவு பெரிய படுபாவங்களைச் செய்து கொண்டு இவனும் ஊழியக்காரனாய் இருக்கிறானே என்று நினைத்து அந்த கூட்டத்துக்குப் போவதை சில விசுவாசிகள் விட்டு விட்டார்கள். அவ்வித அறிக்கைகளும் நின்று போய் விடுகின்றன.

மேலும் பெண்கள் தங்கள் பாவங்களை இவ்விதமாய் பகிரங்கமாய் அறிக்கை செய்ய முடியாது. அறிக்கை செய்யவும் மாட்டார்கள். ஆண்களாயிருக்கட்டும் பெண்களாயிருக்கட்டும் சில ரகசிய பாவங்களை அறிக்கை செய்வது முடியாத காரியம். ஆனால் பாவமோ அறிக்கை செய்யப்பட வேண்டும்.

ஆதியிலே சில சபைகளில் ஒவ்வொருவரும் தங்கள் பாவங்களை எழுதி அறிக்கை செய்யும்படி எழுதி வாங்கினார்கள். பின்பு அதை விட்டு விட்டார்கள். இப்பொழுதும் சில சபைகளில் விசுவாசிகளின் வாழ்க்கையில் ஏற்படுகிற பாவங்களைச் சொல்லும்படி கேட்டு: நீங்கள் உங்கள் வாழ்க்கையில் உள்ள எல்லாக் காரியங்களையும் சொன்னால் தான் நாங்கள் உங்களை நடத்த முடியும் என்று சொல்லுகிறார்கள். ஆனாலும் பாவ அறிக்கை பாவமன்னிப்பு உபதேசத்தை இவர்கள் சரியாக விளங்கிக் கொள்ளவில்லை. அதனால் அது சரியாய் கைக்கொள்ளப்படவுமில்லை. இன்னும் சில சபைகளின் ஜெபப் புஸ்தகங்களில் குருமார் வியாதியஸ்தர்களைச் சந்திக்கும் இடத்தில் மரண அவஸ்தையில் இருக்கும் வியாதியஸ்தரின் மனசாட்சியில் உறுத்தப்படுகிற பாவங்களை குருவினிடத்தில் சொல்லும்படி கேட்கக்கடவர் என்றும்; விசுவாசி தன் பாவங்களை குருவினிடத்தில் சொல்லக் கடவன் என்றும்; அப்படிச் சொல்லும் போது குருவானவர் மன்னித்தேன் என்றும் சொல்லக் கடவர் என்றும் எழுதி வைத்துள்ளார்கள்.

ஆனாலும் இவர்களோ பாவ அறிக்கை, பாவ மன்னிப்பின் உபதேசத்தை அறியாமல் அதை எதிர்க்கிறார்கள். முறையாக அறிக்கை செய்வது பற்றி இவர்களுக்குத் தெரியாது. பாவ மன்னிப்பின் அதிகாரம் திருச்சபையின் திறவு கோலின் அதிகாரம். பாவங்களை மன்னிக்க மெய்யான அப்போஸ்தலருக்கு திருச்சபைக்கு அதிகாரம் உண்டு என்று லூத்தர் தம்முடைய பிரசித்திப் பெற்ற புஸ்தகமாகிய 'கெத்கெசீம்' என்னும் புஸ்தகத்தில் எழுதியுள்ளார். "திறவு கோலின் அதிகாரம்" என்னும் பகுதியைக் காண்க.

இயேசுவை அறிக்கை செய்கிற எந்த மனிதனும் தன்னை பாவி என்று அறிக்கை செய்யவும் தன்னுடைய பாவங்களை அறிக்கை செய்யவும் வெட்கப்படான். அறிக்கை செய்ய வேண்டுமென்றால் எல்லாவற்றையும் எல்லா பாவங்களையும் அறிக்கை செய்யத் தான் வேண்டும். அப்படி எல்லா பாவங்களையும் சபையின் மத்தியில் அறிக்கை செய்ய முடியாது. அது சபையை தீட்டுப் படுத்துகிறதும், கலக்கமுண்டாக்குகிறதுமாயிருக்கும்.

நல்லவர்களாகிய சில விசுவாசிகளை அது தீட்டுப்படுத்துவதும்; ஓ! இப்படியும்

சில பாவங்கள் உண்டா நாமும் செய்து பார்ப்போம் என்கிற தீய எண்ணங்களையும் உண்டாக்கும். ஆனபடியால் சபையில் அறிக்கை செய்ய முடியாத பாவங்களை அதிகாரம் பெற்ற பரிசுத்தவான்களின் முன் தனியாக அறிக்கை செய்யவேண்டும். எல்லோரும் பரிசுத்தவான்கள் அல்ல. ஆனபடியால் எல்லா ஊழியர்களையும் நம்பி உன் பாவங்களைச் சொல்லி விடாதே. இதைக் குறித்தும் தேவ ஜனங்கள் எச்சரிக்கையாயிருக்க வேண்டும். ஊழியக்காரர் ஒருவர் ஒரு பிசாசைத் துரத்தும்படி போனார். உடனே பிசாசு ஊழியனை எதிர்த்து ஏ! வேத மாணிக்கம், நீ என்னையாடா துரத்த வந்த. நீ என்னென்ன பாவம் செய்து கொண்டிருக்கிறாய்; நீ இன்னென்னப் பாவங்களைச் செய்தாய் என்று எல்லோரிடமும் சொல்லி விடுவேன் சத்தங்காட்டாமல் மரியாதையாய் போய் விடு என்றது. ஊழியக்காரர் சப்த நாடியும் ஒடுங்கி இடத்தை விட்டு உடனே போய் விட்டார். அந்த பிசாசு பிடித்த ஆத்துமாவை "புதிய எருசலேம் சபை"க்கு கொண்டு வந்தார்கள். புதிய எருசலேம் சபையின் ஊழியர்கள் பிசாசை துரத்தி அந்த ஆத்துமாவை விடுதலை செய்தார்கள்.

ஆனபடியினால் ஊழியர்கள் என்று சொல்லித் திரிகிற அநேகர் கள்ளரும் விபச்சாரக்காரருமாய் இருக்கிறார்கள். இவர்களைக் குறித்து தேவ ஜனங்கள் மிகவும் எச்சரிக்கையாயிருக்க வேண்டும். அநேக ஊழியர்கள் இரட்சிக்கப்படவேயில்லை. அவர்களுடைய கனிகளினால் அவர்களை அறிவீர்கள் (மத் 7 : 16).

சிலர் ஆவி பெற்றிருக்கிறோம் என்று அங்கும் இங்கும் ஓடித் திரிகின்றார்கள். முதலாவது இரட்சிக்கப்பட வேண்டும். பின்பு பரிசுத்த ஆவியைப்பெற்றுக் கொள்ளலாம். அநேக பெந்தெகொஸ்தேகாரர்கள் இரட்சிக்கப்படவில்லை. முதலாவது இரட்சிப்பு பின்பு பரிசுத்த ஆவியின் அபிஷேகம், மனந்திரும்பாமலும், இரட்சிக்கப்படாமலும், சரியான உபதேசம் பெறாமலும் பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொள்ளுகிறதினால் எந்தவித பிரயோஜனமும் இல்லை.

அரசனாகிய சவுலும் ஆவி பெற்று தீர்க்கதரிசனம் சொன்னான். ஆனால் அங்கே தேவனால் வர விடப்பட்ட பொல்லாத ஆவி இருந்தது. இந்நாட்களிலே ஆவியின் கூட்டம் என்று சொல்லி விழுந்து போன ஊழியர்களைக் கொண்டு கூட்டங்களை நடத்தி ஆவி பெற்றுக் கொள்ளுகிறார்கள். இவைகளில் அநேகம் அசுத்த ஆவிகளும், குறி சொல்லுகிற ஆவிகளுமாம்.

ஒரு ஸ்திரீ எங்களிடத்தில் வந்து பரிசுத்த ஆவிக்காக ஜெபம் பண்ணும்படி கேட்டுக் கொண்டாள். என்னுடைய ஆத்துமாவில் அவள் இரட்சிக்கப்படவில்லை என்பது தெரிந்தது. நான் சொன்னேன் : அம்மா நீ முதலில் இரட்சிக்கப்படு. பின்பு பரிசுத்த ஆவி பெற்றுக் கொள்ளலாம் என்று இரட்சிப்புக்காக, மனந்திரும்புதலுக்காக ஜெபித்து அனுப்பி விட்டேன். பின்பு தெரிய வந்தது அவள் தன் புருஷனால் தள்ளப்பட்ட ஒரு ஸ்திரீ என்றும், இரட்சிக்கப்படாதவள் என்றும் அறிந்து கொண்டோம். இந்நாட்களில் ஆவியின் கூட்டம் அல்லது 'கரிஸ்மேடிக் செண்டர்' (CHARISMATIC CENTRE) என்று சொல்லி பரிசுத்த ஆவிக்காக ஜெபம் பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். இதைக் குறித்து தேவ ஜனங்கள் எச்சரிக்கையாயிருக்க வேண்டும். விழுந்து போன சபைகளின் தந்திரமாகும் இது.

ரோமன் மார்க்கம் விழுந்து போய் விட்டது என்று பிராட்டஸ்டண்ட் மார்க்கம் எழும்பிற்று. அது ரோமன் மார்க்கத்தை விட சீர்கெட்டு விழுந்து போய் விட்டது. எங்கும் சீர்கேடு, தாறுமாறு, குழப்பங்கள், தவறான உபதேசம், மிஞ்சின நீதி, அடிப்படையில்லாமை, தலையில்லாமை, அஸ்திபாரம் இல்லாத நிலைகளிலே இந்த பிராட்டஸ்டண்ட்காரர்கள் இருக்கிறார்கள். இவர்களில் பெரும் பகுதியினர் தங்கள் தாயாகிய ரோமன் மார்க்கத்தோடு மறுபடியும் போய் இணைந்து விடுவார்கள். இப்பொழுதே மேடைகளிலேயும், கூட்டங்களிலேயும் இணைந்தே இருக்கிறார்கள். அதிலும் விசேஷமாய் ஆவியின் கூட்டம் என்கிற வஞ்சகத்தினால் இவர்கள் எல்லாம் இணைந்து வருகிறதைப் பாருங்கள். சுமார் 15 ஆண்டு

களுக்கு முன்பே பெந்தெகொஸ்தே சபைகளெல்லாம் விழுந்து போகும் என்று நாங்கள் அறிவித்தோம். பெந்தெகொஸ்தே சபைகளுக்கு அஸ்திபாரம் கிடையாது; தலை கிடையாது. ஆனபடியினால் அவைகள் விழுந்து போகும் என்று நாங்கள் அறிவித்தோம். ஏனென்றால் முதலாவது இவைகளுக்குத் தலை கிடையாது. இவர்கள் தலைவருக்குக் கட்டுப்பட்டு இருக்கமாட்டார்கள். பிரிந்து பிரிந்து போவார்கள். ஆவி பெற்றிருக்கிறோம் என்ற எண்ணத்தினாலும், தங்களுக்கு இருக்கிற திறமையினாலும் தேவன் கொடுக்கிற தாலந்துகளினாலும் திருப்தி அடைந்து இவைகளினால் தங்களுக்குப் பேரும், புகழும் உண்டாக்கவும், பொருள் சேர்க்கவும், தங்களுக்கும், தங்கள் குடும்பங்களுக்கும் பிழைப்பு உண்டாகவும் தனித் தனி இயக்கங்களை உண்டு பண்ணிக் கொள்வார்கள்.

இரண்டாவது இவர்கள் பெந்தெகொஸ்தே சபை என்று பெயர் வைத்திருக்கிறதே தவறாகும். ஒரு கிறிஸ்தவனென்றால் மனந்திரும்பி கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து முழுக்கி ஞானஸ்நானம் பெற்று, பரிசுத்த ஆவியைப் பெற்றவனாயிருக்க வேண்டும், அவனே மெய் கிறிஸ்தவன். இவர்கள் பெந்தெகொஸ்தே சபை என்று பெயர் வைத்துக் கொண்டு பரிசுத்த ஆவி, பரிசுத்த ஆவி என்று சொல்லி நடக்கிறார்கள். பெந்தெகொஸ்தே என்றால் 50 வது நாள் என்று அர்த்தம். எப்படி 7 வது நாட்காரர்கள் இருக்கிறார்களோ அப்படியே இவர்கள் 50 வது நாட்காரர்கள். அதனால் பெந்தெகொஸ்தே சபை என்றால் அநேகருக்கு வெறுப்பு.

இன்று பரிசுத்தாவியின் அபிஷேகத்திற்காகவும், முழுக்கி ஞானஸ்நானம் பெற்றுக் கொள்கிறதற்காகவும் தாகமுள்ள ஆத்துமாக்கள் பேர் கிறிஸ்தவ சபைகளை விட்டு பெந்தெகொஸ்தே சபைகளை நாடி வருகிறார்கள். இதை அறிந்து இந்த பேர் கிறிஸ்தவ சபைகள் பரிசுத்த ஆவியின் அபிஷேகம் பெற்று அந்நிய பாஷை பேசுகிறவர்களை அசுத்த ஆவி பிடித்து ஆடுகிறவர்களென்றும், தெளிப்பு ஞானஸ்நானமே சரி, முழுக்கு ஞானஸ்நானம் சாத்தானின் உபதேசம் என்று சொல்லுகிற பேர் கிறிஸ்தவ ஸ்தாபனங்கள் மக்கள் முழுக்கு ஞானஸ்நானத்துக்காகவும், பரிசுத்தாவிக்காகவும் பெந்தெகொஸ்தே சபைகளுக்குப் போவதைக் கண்டு நாங்களே முழுக்கி ஞானஸ்நானம் கொடுக்கிறோம். இங்கேயே பரிசுத்தாவியைப் பெற்றுக் கொள்ளலாம் என்று போதித்து அலைந்து திரிகிற சில நாடோடி ஊழியர்களை வரவழைத்து கூட்டங்களை நடத்தி, முழுக்கி ஞானஸ்நானமும் நடத்தி ஆவியையும் பெற்றுக் கொள்ளச் செய்யப் போகிறார்கள். அப்பொழுது பெந்தெகொஸ்தே சபைகளுக்கு ஆத்துமாக்கள் வருகிறது நின்று போகும் என்று அறிவித்தோம் அந்த சம்பவங்கள் இப்பொழுது நிகழ்கின்றன.

திடப்படுத்தல் ஆராதனை, உறுதி பூசுதல் என்று ஒன்றை நடத்தி செங்கோலோடு அத்தியட்சர் வந்து அங்கு முழங்கால்படியிட்டிருக்கிற ஜனங்கள் தலையிலே கை வைத்து நான் இப்பொழுது என் கைகளை உன் தலையின் மேல் வைத்தபடியினால் பரிசுத்த ஆவி உனக்குள் வந்திருக்கிறார். ஆவிக்கேற்றபடி நடந்து கொள் என்று அத்தியட்சர் சொல்லி நற்கருணை (திரு விருந்து)யில் பங்கு பெறச் செய்கிறார்கள். இந்த சபைகளில் உள்ள எத்தனையோ மக்கள் மற்ற சபைகளிலே போய் முழுக்கி ஞானஸ்நானம் பெற்றும், பரிசுத்த ஆவி பெற்று அந்நிய பாஷை பேசியும், தீர்க்கதரிசனம் சொல்லியும் கூட்டங்கள் நடத்தி குறிசொல்லியும் நடக்கிறார்கள். மேற்படி சபைகளின் தலைவர்கள் தங்கள் உபதேசங்களுக்கு மாறாக அநுபவம் பெற்றிருக்கிற இவர்களை ஏன் தங்கள் சபைகளை விட்டு நீக்கவில்லை.

நீ தான் சொன்னாய்: பரிசுத்த ஆவி பெற்று அந்நிய பாஷை பேசுவதை பிசாசு பிடித்து ஆடுவது என்றும், ஒருவன் இயேசு கிறிஸ்துவை விசுவாசித்த போதே பரிசுத்த ஆவியைப் பெற்றாயிற்றென்றும் அல்லது திடப்படுத்தல் பெற்றபோது பரிசுத்தாவியைப் பெற்றாயிற்றென்றும், நாமே திருச்சபை என்றும் சொன்னாய். இப்பொழுது என்ன ஆயிற்று? இப்பொழுது தெரிகிறதா

நீ தான் போலி மேய்ப்பன்; கள்ள மேய்ப்பன் என்று!

ஆனபடியால் இந்நாட்களில் மனு மக்களுக்கு மிகவும் தேவை மெய்யான திருச்சபையேயாகும். பூரணமான சபை இன்றேல் பூரணமான இரட்சிப்பும் அமைய முடியாது. இரட்சகர் இயேசு கிறிஸ்து. அவர் திருச்சபையின் மூலமாகவே இரட்சிக்கிறார். தேவனுடைய திருச்சபையானது ஜீவனுள்ள தேவனுடைய வீடும், சத்தியத்திற்கு தூணும் ஆதாரமுமாயிருக்கிறது. பாவமன்னிப்பின் உபதேசத்தைப் பற்றி பரியாசம் பண்ணியும், தூஷித்தும், பகைத்தும், பேசியும், எழுதியும் வருகிற சில கள்ளச் சபையார்களின் எழுத்துக்களையும், செய்கைகளையும் எழுதி அவைகளின் தாத்பரியத்தையும் தேவ ஜனங்களுக்கு எழுதி உணர்த்துவது எங்களுக்கு நலமாய்க் கண்டது.

நவீன உபதேசம் என்ற தலைப்பில் I. P. C. (ஐ. பி. சி.) சபையின் வெளியீடான 'சுவிசேஷ பூரிகையில்' வெளியான ஒரு கட்டுரையை அடுத்த இதழில் காணலாம்.

(தொடரும்)

"தன் பாவங்களை மறைக்கிறவன் வாழ்வடையமாட்டான். அவைகளை அறிக்கைசெய்து விட்டு விடுகிறவனே இரக்கம் பெறுவான்." —நீதி 28:13

# ஆதியாகமத்தைப் பற்றி ஓர் ஆராய்ச்சி

(தொடர்ச்சி)

2 வது நாளில் தேவன் செய்த 4 தெய்வீக வேலைகள் :

1. தேவன் சொன்னார் : ஜலத்தின் மத்தியில் ஆகாய விரிவு உண்டாகக்கடவது என்று (ஆதி 1 : 7).
2. தேவன் உண்டாக்கினார் : ஆகாய விரிவை உண்டு பண்ணினார் (ஆதி 1 : 7).
3. தேவன் வேறு பிரித்தார் : ஆகாய விரிவை உண்டு பண்ணி மேலே இருக்கிற ஜலத்திற்கும், கீழே இருக்கிற ஜலத்திற்கும் பிரிவை உண்டாக்கினார் (ஆதி 1 : 7)
4. தேவன் அழைத்தார் : தேவன் ஆகாய விரிவுக்கு வானம் என்று பெயரிட்டார்.

3 வது நாளில் தேவன் செய்த 5 தெய்வீக வேலைகள் :

1. தேவன் சொன்னார் : ஜலம் ஓரிடத்தில் சேரவும் வெட்டாந்தரை காணப்படவும் கடவது என்று (ஆதி 1 : 9).
2. தேவன் அழைத்தார் : வெட்டாந்தரைக்குப் பூமி என்றும் சேர்ந்த ஜலத்திற்கு சமுத்திரம் என்றும் பேரிட்டார் (ஆதி 1 : 10).
3. தேவன் பார்த்தார் : தேவன் அது நல்லது என்று கண்டார். தேவன் வெட்டாந்தரையையும், சமுத்திரத்தையும் நல்லது என்று கண்டார்.
4. தேவன் சொன்னார் : பூமியானது புல் பூண்டுகள், தங்கள் தங்கள் விதைகளையுடைய கனி விருட்சங்களையும், தங்கள் தங்கள் விதைகளையுடைய பூண்டுகளையும் முளைப்பிக்கக் கடவது என்றார். அது அப்படியே ஆயிற்று.
5. தேவன் பார்த்தார் : பூமி முளைப்பித்த புல் பூண்டுகள், மரங்கள் முதலானவைகளை தேவன் நல்லது என்று கண்டார் (ஆதி 1: 12).

4 வது நாள் தேவன் செய்த 4 தெய்வீக வேலைகள் :

1. தேவன் சொன்னார் : ஆகாய விரிவிலே சுடர்கள் உண்டாகக்கடவது என்றார் (ஆதி 1 : 14).
2. தேவன் உண்டாக்கினார் : தேவன் பகலை ஆள ஒரு பெரிய சுடரையும் இரவை ஆள ஒரு சிறிய சுடரையும் நட்சத்திரங்களையும் உண்டாக்கினார் (ஆதி 1 : 16).
3. தேவன் அவைகளை ஒழுங்குபடுத்தினார் : சூரிய சந்திர நட்சத்திரங்கள் முன் இருந்த இடங்களில் அமைத்து இயங்கச் செய்தார் (Solar System). (ஆதி 1 : 17, எரே 1 : 23-26; II பேது 3 : 5-8).
4. தேவன் கண்டார் : தேவன் அது நல்லது என்று கண்டார் (ஆதி 1 : 18).

5 வது நாள் தேவன் செய்த 5 தெய்வீக வேலைகள் :

1. தேவன் சொன்னார் : நீந்தும் ஜீவ ஜந்துக்களையும், பறவைகளையும் ஜலமானது திரளாய்ப் பிறப்பிக்கக் கடவது என்றார் (ஆதி 1 : 20).
2. தேவன் சிருஷ்டித்தார் : மனிதனுக்கு முன் தேவன் பூமியில் வசிக்கும் மிருகங்கள், நீரில் வாழும் ஜந்துக்களையும், மச்சங்களையும், பறவைகளையும் புதிதாய் சிருஷ்டித்தார் (ஆதி 1 : 21).
3. தேவன் பார்த்தார் : தேவன் நல்லது என்று கண்டார் (ஆதி 1 : 21).
4. தேவன் ஆசீர்வதித்தார் : நீரில் வாழும் ஜந்துக்களும், மச்சங்களும் பலுகிப் பெருகி சமுத்திரத்தை நிரப்பும் படியும், பறவைகள் பூமியில் பெருகும் படியும் தேவன் அவைகளை ஆசீர்வதித்தார் (ஆதி 1 : 22).
5. தேவன் சொன்னார் : பறவைகள் பூமியில் பெருகக்கடவது என்று சொன்னார் (ஆதி 1 : 22).

6 வது நாள் தேவன் செய்த 9 தெய்வீக வேலைகள் :

1. தேவன் சொன்னார் : பூமியானது ஜாதி ஜாதியான நாட்டு மிருகங்களையும், ஊரும் பிராணிகளையும், நாட்டு மிருகங்களையும், ஜாதி ஜாதியாய்ப் பிறப்பிக்கக் கடவது என்றார். இவைகளில் வெவ்வேறு ஜாதிகள் உண்டு (ஆதி 1 : 24).
2. தேவன் உண்டாக்கினார் : தேவன் ஜாதி ஜாதியான காட்டு மிருகங்களையும், நாட்டு மிருகங்களையும் பூமியில் ஊரும் பிராணிகள் எல்லாவற்றையும் மண்ணினாலே உண்டாக்கினார் (ஆதி 1 : 25; 2 : 19).
3. தேவன் கண்டார் : அது நல்லது என்று கண்டார் (ஆதி 1 : 25).
4. தேவன் சொன்னார் : தெய்வீகமாக மனிதனை உருவாக்குவோம் என்றும் அவர்கள் சமுத்திரத்தின் மச்சங்களையும் ஆகாயத்துப் பறவைகளையும் மிருக ஜீவன்களையும் பூமியனைத்தையும் சகல பிராணிகளையும் ஆளக் கடவர்கள் என்றார் (ஆதி 1 : 26).
5. தேவன் மனிதனை சிருஷ்டித்தது (ஆதி 1 : 27; 2 : 7, 21, 22; 5 : 1, 2; 9 : 6).
6. தேவன் மனிதனை ஆசீர்வதித்தது (ஆதி 1 : 28).

7. கடவுள் சொன்னார்: தேவனுடைய தெய்வீகக் கட்டளை நீங்கள் பலுகிப் பெருகி பூமியை நிரப்பி அதைக் கீழ்ப்படுத்தி சமுத்திரத்தின் மச்சங்களையும், ஆகாயத்துப் பறவைகளையும்; பூமியின் மேல் நடமாடுகிற சகல ஜீவ ஜந்துக்களையும் ஆண்டு கொள்ளுங்கள் என்று மனிதனுக்கு கட்டளையிட்டார்.

8. தேவன் சொன்னார்: மனிதர்களுக்கு பூமியின் மேல் விதை தரும் சகலவித பூண்டுகளையும், சகலவித கனி தரும் விருட்சங்களை ஆகாரமாகவும், பூமியிலுள்ள சகலவித பூண்டுகளை மிருகங்களுக்கும், பறவைகளுக்கும் ஆகாரமாகக் கொடுத்தேன் என்றார் (ஆதி 1 : 29, 30).

9. தேவன் பார்த்தார்: தேவன் தாம் உண்டாக்கின எல்லாவற்றையும் பார்த்தார் அது மிகவும் நன்றாயிருந்தது. தேவன் ஆறு (6) நாளைக்குள்ளாக இவைகளையெல்லாம் செய்து முடித்தார். ஆதி 1 : 3ல் தேவன் வெளிச்சம் உண்டாகக் கடவது என்று ஆரம்பித்து ஆறு (6) இருபத்து நான்கு (24) மணி நேரங்கள் அடங்கிய நாட்களில் தம்முடைய இரண்டாவது சிருஷ்டிப்பை தேவன் செய்து முடித்தார். ஆதாமின் காலத்துக்கு முன்னுள்ள லூசிபரின் காலத்தில் இருந்த பிரகாரம் எல்லாவற்றையும் ஒழுங்குபடுத்தி முடித்தார். இப்பொழுது கர்த்தர் எல்லாவற்றையும் பார்த்தார். எல்லாம் மிகவும் நன்றாயிருந்தது. இவ்விதமாக வானமும், பூமியும் அவைகளின் சர்வ சேனையும் உண்டாக்கப்பட்டு தீர்ந்தன. (ஆதி 2 : 1)

(தொடரும்)

> "சகலமும் அவர் மூலமாய் உண்டாயிற்று; உண்டானதொன்றும் அவராலேயல்லாமல் உண்டாகவில்லை" —யோவான் 1 : 3.

# முந்தின உலகம்

ஆதியாகமம் 6-ம் அதிகாரம் 2-ம் வசனத்தில் காணப்படும் தேவகுமாரர்களைக் குறித்துப் பல விளக்கம் எழுதும் பொழுது இவர்கள் சேத்தினுடைய சந்ததிகள் என்று கூறுகிறார்கள். இது தவறான விளக்கமாகும். ஆதி 6:1-ல் "மனுஷர் பூமியின் மேல் பெருகத் துவங்கி அவர்களுக்குக் குமாரத்திகள் பிறந்த போது" என்று பரிசுத்த ஆவியானவர் எழுதுகிறார். ஆதி 1:26-ல் "பின்பு தேவன் தமது சாயலாகவும் தமது ரூபத்தின்படியேயும் மனுஷனை உண்டாக்குவோமாக" என்கிறார். ஆதிமனிதனுகிய ஆதாமுக்குப் பெயர் மனுஷன் என்று வேதம் கூறுவதால் ஆதாமுடைய சந்ததிகள் யாவரும் மனுஷர்களே.

பின்னே இந்த தேவகுமாரர் யார்? 'வேத வாக்கியங்களெல்லாம் தேவ ஆவியினால் அருளப்பட்டிருக்கிறது" (II தீமோ 3:16) ஆகையால் இந்த இரகசியத்தையும் தேவ ஆவியானவரே வெளிப்படுத்த வேண்டும்.

நாம் ஒரு உண்மையை புரிந்து கொள்வது நல்லது. நாம் வாசமாயிருக்கும் இந்தப் பூமியானது, நோவா காலத்தில் மட்டுமல்ல அதற்கு முன்பும் ஒரு தடவை ஜலத்தினால் அழிக்கப்பட்டிருக்கிறது என்பதை சத்திய வேதத்தில் நாம் காண முடியும். தேவ ஆவியானவரும் அது உண்மை என்று வெளிப்படுத்தித் தந்துள்ளார். ஆதியாகமம் 1:1-ல் ஆதியிலே தேவன் வானத்தையும் பூமியையும் சிருஷ்டித்தார் என்று வாசிக்கிறோம். ஆதி என்பதற்கு அர்த்தம்: "காலக் கணிப்பு இல்லாதது" என்பதாகும். ஆனால் நாம் இப்பொழுது வாசம் செய்யும் உலகம் தோன்றி சுமார் 6000ம் ஆண்டுகளே ஆகிறது என்

பதை நாம் வேதத்தின் மூலம் அறிந்திருக்கிறோம்.

ஆதி 1:2-ல் பூமியானது ஒழுங்கின்மையும் வெறுமையுமாய் இருந்தது; ஆழத்தின் மேல் இருள் இருந்தது தேவ ஆவியானவர் ஜலத்தின் மேல் அசைவாடிக் கொண்டிருந்தார் என்று வாசிக்கிறோம். ஆதியில் தேவனால் உண்டாக்கப்பட்ட பூமி தண்ணீரினால் அழிக்கப்பட்டு வெறுமையும் ஒழுங்கின்மையுமாகி ஆழத்தில் மூழ்கிவிட்டதாகப் பார்க்கிறோம்.

ஆதி உலகத்தைத் தேவன் உண்டாக்கும் பொழுது, "விடியற்காலத்து நட்சத்திரங்கள் ஏகமாய்ப்பாடி, தேவபுத்திரர் எல்லாரும் கெம்பீரித்தார்களே" (யோபு 38:4-7) என்று பார்க்கிறோம். "இவரைக் கொண்டு உலகங்களையும் உண்டாக்கினார்" (எபி 1:2) என்று நாம் வாசிப்பதினால் இதற்கு முன்பும் உலகம் உண்டாக்கப்பட்டு அழிந்ததாக அறிகிறோம்.

ஒவ்வொரு தடவையும் அழிவு நடக்கும் பொழுது ஒரு பகுதியினர் பாதுகாக்கப் பட்டிருப்பதாக வேதத்தில் காண்கிறோம். நோவாவின் காலத்தில் தேவன் பூமியை ஜலத்தினால் அழித்தபோது நோவாவையும் அவருடைய குடும்பத்தையும் தேவன் பாதுகாத்தார் (ஆதி 7:1) அந்தபடியே சோதோம் கொமோரா பட்டணங்களை அக்கினியால் தேவன் அழித்தபொழுது லோத்துவையும் அவருடைய குடும்பத்தையும் தேவன் பாதுகாக்கச் சித்தங் கொண்டதாக அறிகிறோம் (ஆதி 19:16).

இப்படிப் போலவே நாம் இப்பொழுது ஆராய்ச்சி செய்கிற முந்திய உலகமும் ஜலத்தினால் அழிக்கப்பட்டுள்ளது (ஆதி 1:1,2) அதில் காக்கப்பட்ட தூதர்களுக்கே ஆதி 6:4ல் இராட்சதர் என்றும் தேவகுமாரர் என்றும் பேர் சூட்டப்பட்டிருக்கிறது. அந்நாட்களில் இராட்சதர் பூமியில் இருந்தார்கள் என்று கூறப்பட்டிருக்கிறது. பின்பு இவர்கள் (தேவகுமாரர்) மனுஷகுமாரத்திகளோடே கூடுகிறதினால் இவர்கள் அவர்களுக்குப் பிள்ளைகளைப் பெற்றபோது இவர்களும் பூர்வத்தில் பேர்பெற்ற மனுஷராகிய பலவான்களானார்கள் (ஆதி 6:4) இராட்சதரானார்கள்.

இந்த பூமியில் குடியிருந்தது யார்? அவர்களுடைய பெயர் என்ன? இவர்கள் ஏன் அழிக்கப்பட்டார்கள்? என்ற விவரங்களை நாம் வேதத்தில் பல இடங்களில் பார்க்கலாம்.

இந்த முந்திய உலகத்தில் இருந்தவர்கள் இப்பொழுதுள்ள மனிதர்களைவிடப் பெரிய உருவமுடையவர்களாகவும் (இராட்சதர்) பராக்கிரமசாலிகளாகவும் உண்டாக்கப்பட்டிருந்தார்கள். எனவே இந்த உலகத்திலுள்ள ஆதாமின் சந்ததியாரோடு அவர்கள் தொடர்பு கொண்டபோது இவர்களிடத்திலும் அப்படிப்பட்ட சந்ததிகள் தோன்றினதாக வேதம் கூறுகிறது. (உ-ம்) ஒரு ஆங்கிலேய வாலிபன், ஒரு இந்தியப் பெண்ணை விவாகம் செய்து கொண்டால் அவளிடம் பிறக்கும் பிள்ளை ஆங்கிலோ இந்தியனாகிறான். இப்படிப்போலவே அந்த சம்பவங்களாகும்.

முந்தின உலகத்தில் இருந்த மனிதர்களுக்கெல்லாம் ஒரு தலைவன் உண்டு. அவன் பெயர் "அதிகாலையின் மகனாகிய விடிவெள்ளியே" (ஏசா 14:11) என்றும், "நீ விசித்திரமாய் செய்யப்பட்ட முத்திரை மோதிரம். நீ ஞானத்தால் நிறைந்தவன், பூரண அழகுள்ளவன்." (எசேக் 28:12) என்றும், "நீ காப்பாற்றுகிறதற்காக அபிஷேகம் பண்ணப்பட்ட கேருப் "(எசேக் 28:14) என்றும் வேதத்தில் வாசிக்கிறோம். அவனே விழுந்து போன தேவதூதர்களின் தலைவன் சாத்தான்—லூசிபர் என்பவன். ஆதாமை சிருஷ்டித்த ஆண்டவர், அவனை ஏதேன் தோட்டத்தில் வைத்ததுபோல்(ஆதி2:8)இந்த லூசிபரைக் குறித்தும் "நீ தேவனுடைய தோட்டமாகிய ஏதேனில் இருந்தவன்" (எசே 28:13) என்றுவேதம் கூறுகிறது. இவனும் முந்திய உலகத்திலுள்ள ஏதேனில் மிகவும் அழகான இரத்தினகற்களால் மூடப்பட்டு மிகவும் மேன்மையானவனாக, தானியேலைப் போல்ஞானம் நிறைந்தவனாக, தேவன் உலாவுகின்ற இடமாகிய பரிசுத்த பர்வதத்திலே மேன்மையுடையவனாய் இருந்தான் (எசே 28:3, 13, 14).

இவ்விதமாக முந்திய உலகத்தில் இருந்த சிருஷ்டிகளை தேவகுமாரர் என்றும் தேவதூதர் என்றும் வேத வாக்கியம் கூறுகிறது.

ஆதாமை ஆண்டவர் படைக்கும் பொழுது மேற்கண்ட தேவதூதர்களிலும் சற்று சிறியவனாகவே படைத்ததாக வேதம் கூறுகிறது (சங் 8:4-6; எபி 2:7 8). இது பரலோகத்திலுள்ள தேவதூதனைக் குறிப்பிடவில்லை. தம்முடைய பிதாவாகிய தேவனும், தம்முடைய குமாரனாகிய இயேசுகிறிஸ்துவை மனுமக்களின் மீட்புக்காக இந்த உலகத்திற்கு அனுப்பும்பொழுது அவரையும் தேவதூதரிலும் சற்று சிறியவராகவே அனுப்பினார் (எபி 2:9) என்று வேதம் கூறுகிறது.

இந்த தேவகுமாரர்கள் அல்லது தேவதூதர்களுக்குத் தலைவனாகவும் இவர்களைக் காப்பாற்றுவதற்காகவும் வைக்கப்பட்டிருந்த கேருப் என்பவனுடைய உள்ளத்தில் பெருமையான எண்ணம் உருவாக ஆரம்பித்தது. பூமியில் இருப்பவர்கள் எல்லோரும் என்னுடைய வார்த்தைக்குக் கீழ்ப்படிகிறார்கள். நான் அற்புத அடையாளம் செய்கிறேன். பின்னே ஏன் தேவனை பணிந்து கொள்ளவேண்டும். எல்லோரும் என்னையே வணங்கவேண்டும். நான் நினைத்தால் வானத்துக்கு ஏறுவேன். தேவனுடைய நட்சத்திரங்களுக்கு மேலாக என் சிங்காசனத்தை உயர்த்துவேன். வடபுறங்களிலுள்ள ஆராதனை கூடத்தின் பர்வதத்திலே வீற்றிருப்பேன், நான் மேகங்களுக்கு மேலாக உன்னதங்களில் ஏறுவேன். உன்னதமானவருக்கு ஒப்பாவேன் என்றும் அவன் தன்னுடைய இருதயத்தில் எண்ணினான் (ஏசா 14:13,14). அது மாத்திரமல்ல பூமியிலே நடந்து கொண்டிருந்த தேவனுடைய ஆராதனைகளையும் நிறுத்தச் செய்து தன்னையே யாவரும் வணங்க வேண்டும் என்கிற தீர்மானத்தை கொண்டு வந்தான். இவனுடைய வார்த்தையைப் பெரும் பகுதியானவர்கள் ஏற்றுக் கொண்டார்கள்.

இப்படியிருக்கவே, தேவ கோபம் வானத்திலிருந்து ஊற்றப் பட்டது. உன்னத மான நிலையில் வைக்கப்பட்டிருந்த அதி காலையின் மகனாகிய விடிவெள்ளியும் அவன் கூட்டத்தாரும் அகாதமான பாதாளத்தில் தள்ளுண்டு போனார்கள். (ஏசா 14 : 12 15). ஆழம் அவர்களை மூடிக் கொண்டது. தண்ணீர் உலகத்தை மூடினது என்று நாம் பார்க்கிறோம். இவர்களுடைய சரீரங்கள் ஆழத்தில் மூழ்கினது. ஆனால் இவர்களுடைய ஆவிகளெல்லாம் ஆழத்தின் மேல் அதாவது ஜலத்தின் மேல் கூட்டமாய் இருந்தது.

ஆதியிலே தேவனால் சிருஷ்டிக்கப்பட்ட பூமியானது இப்பொழுது ஒழுங்கின்மையும் வெறுமையுமாயிருந்தது. ஆழத்தின் மேல் இருள் இருந்தது; தேவ ஆவியானவர் ஜலத்தின் மேல் அசைவாடிக் கொண்டிருந்தார். (ஆதி 1:12). இப்படி அழிக்கப்பட்ட பூமியை மீண்டும் புதுப்பிப்பதற்காக தேவ ஆவியானவர் ஜலத்தின் மேல் அசைவாடிக் கொண்டிருந்தார். "பின்பு தேவன் ஜலத்தின் மத்தியில் ஆகாய விரிவு உண்டாகக் கடவது என்றும் அது ஜலத்திலின்று ஜலத்தைப் பிரிக்கக்கடவது என்றார்" (ஆதி 1 : 6). அப்படியே ஆகாய விரிவுக்கு மேலே ஒரு பகுதி ஜலம் சென்றது. கீழே ஒரு பகுதி ஜலம் நின்றது (ஆதி 1 : 7). இப்படி மேலே சென்ற ஜலத்தின் மேல் இருந்த இருளும் அப்படியே மேலே இருக்கிறது. இவைகள் விழுந்து போன தேவதூதர்களின் ஆவிகளே. இந்த ஆவிகளைக் குறித்துதான் "வான மண்டலத்திலுள்ள பொல்லாத ஆவிகளின் சேனைகள்" (எபே 6 : 12) என்று அப். பவுலும் கூறுகிறார். இந்த ஆவிகள்தான் தானியேலுக்கு செய்தி கொண்டு வந்த தேவதூதனை இருபத்தொரு (21) நாட்கள் தடை செய்ததாக தானியேல் 10 : 13ல் வாசிக்கிறோம். இந்த விழுந்து போன ஆவிகளின் தலைவனையே பெயல்செபூல் என்றும், லூசிபர் என்றும், பிசாசுகளின் தலைவன் என்றும் புதிய ஏற்பாட்டில் வாசிக்கிறோம்.

புதுப்பிக்கப்பட்ட பூமியில் தேவன் தம்முடைய சாயலாய் சிருஷ்டிக்கப்பட்ட மனிதனை வைத்தார் அவனை (மனிதனை) வஞ்சித்து தேவ மகிமையை இழக்கச் செய்வதற்காக சர்ப்பத்தினுள் புகுந்து ஏதேனுக்குள் வந்து ஏவாளை வஞ்சித்தவனும் இவனே,

சர்ப்பத்தினுள் புகுந்து வந்தபடியினால் இவனை வலுசர்ப்பம் என்றும் வேதம் கூறுகிறது. இவன் ஆவியாயிருக்கிறபடியால் இந்த உலகத்தில் தேவ பக்தியுள்ள மக்களைக் கெடுப்பதற்காக, அவர்களைக் குற்றஞ்சாட்டுவதற்காக இவன் உலகம் முழுவதையும் சுற்றி வந்து கொண்டே இருக்கிறான்.

தெய்வீக திட்டத்தை தடை செய்வதே இவன் வேலை. இவன் ஆதியிலே தேவ ஆராதனைகளைத் தடை செய்தவன். ஆகையால் இவனுக்கு தடை செய்கிறவன் (II தெச 2 : 7) என்ற பெயரை அப். பவுல் சூட்டியிருக்கிறார். இந்த விழுந்து போன தேவ தூதர்களுக்குத் தான் அநேகர் ஆராதனை செய்து வருகிறார்கள். (கொலோ 2 : 19 I கொரி 10 : 20) இவைகளே பேய்கள் (பிசாசுகள்).

*சிலர் நினைப்பது* போல இந்த விழுந்து போன தேவ தூதர்கள் பரலோகத்திலிருந்து விழுந்தவர்களல்ல. ஆவிக்குரிய ஜீவியத்தில் உன்னதமான நிலைமையிலிருந்து தவறி விடுகிறவர்களை விழுந்து போனார்கள் என்று நாம் எப்படி சொல்லுகிறோமோ அப்படியே இவர்களும் ஆதியில் முந்திய பூமியில் தெய்வீகத்தில் உன்னதமாயிருந்து விழுந்து போனவர்கள். *சிலர்* நினைப்பது போல பரலோகத்திலேயும் வீழ்ச்சி உண்டாகியுள்ளது என்று நாம் சொல்லக் கூடாது. அப்படியானால் "உம்முடைய சித்தம் பரலோகத்தில் செய்யப்படுவது போல் பூமியிலேயும் செய்யப்படுவதாக" (மத் 6 : 10) என்று ஜெபிக்கும்படி நமது கர்த்தர் நமது சீஷர்களுக்கு கற்றுத் தந்திருக்க மாட்டாரே. ஆகையால் இவர்கள் முந்திய உலகத்தில் தேவனால் சிருஷ்டிக்கப்பட்ட தேவ தூதர்களே.

இவர்கள் ஒரு நாள் இந்தப் பூமியில் விழத் தள்ளப்படுவார்கள் (வெளி 12:7-10). இந்தப் பெயல்செபூல் பூமியில் தள்ளப்பட்ட பின்னரே அந்திக் கிறிஸ்து மனித உருவத்தில் தோன்றுவான். அந்த அந்திக்கிறிஸ்துவுக்கு இந்த தள்ளப்பட்ட சாத்தான் தன்னுடைய அதிகாரத்தைக் கொடுப்பான் (வெளி 13 : 1-4). II தெச 2 : 6-8ல் தடை செய்கிறவன் நடுவிலிருந்து நீக்கப்படும் பொழுது அக்கிரமக்காரன் (அந்திக் கிறிஸ்து) வெளிப்படுவான் என்று இவனைக் குறித்தே பவுல் எழுதியிருக்கிறார்.

இவைகள் இப்படியிருக்க மனுஷ குமாரத்திகளை செளந்தரியமுள்ளவர்களென்று கண்டு அவர்களில் தங்களுக்குப் பெண் கொண்ட தேவ குமாரர் (ஆதி 6 : 1,2) யாரென்றால், முந்திய உலகம் பெருமை கொண்ட தேவ தூதர்களோடு அழிக்கப்பட்ட போது, காக்கப்பட்ட தேவதூதர்களின் ஒரு கூட்டமே என்று நாம் அறிகிறோம். இவர்களும் தங்களுடைய ஆதி மேன்மையைக் காத்துக் கொள்ளாமல் சோதோம் கொமோரா பட்டணத்தாரைப் போல் அந்நிய மாமிசத்தை தொடர்ந்து விபச்சாரம் பண்ணினார்கள் (யூதா 6, 7) என்று வேதம் கூறுகிறது. இவர்களைக் குறித்துப் பேதுருவும் "பாவஞ் செய்த தூதர்களைத் தேவன் தப்பவிடாமல், அந்தகாரச் சங்கிலிகளினாலே கட்டி நரகத்திலே தள்ளி நியாயத் தீர்ப்புக்கு வைக்கப்பட்டவர்களாக ஒப்புக் கொடுத்தார்" (IIபேது 2 : 4) என்று வாசிக்கிறோம்.

ஆகையால் இந்த தேவ தூதர்கள் நியாயந்தீர்க்கப்படுவார்கள். சாத்தானுக்கும் அவனைச் சேர்ந்த வான மண்டலத்தின் ஆவிகளுக்கும் நியாயத் தீர்ப்பு கூறப்பட்டுள்ளது. அவர்களுக்காகவே நரகம் ஆயத்தம் செய்யப்பட்டுள்ளது. பிசாசுக்கும் அவன் தூதர்களுக்காகவும் ஆயத்தம் பண்ணப்பட்டிருக்கிற நித்திய அக்கினியிலே போங்கள் (மத் 25 : 41) என்று நமது இரட்சகராகிய இயேசு கிறிஸ்து கூறுகிறார். II பேது 2 : 4ல் கூறப்பட்ட மேற்கூறிய தூதர்கள் நியாயம் விசாரிக்கப் படுவார்கள். இதைப் பற்றி அப். பவுல் கூறும் பொழுது "தேவ தூதர்களையும் நியாயம் விசாரிப்போம் என்று அறியீர்களா?" (I கொரி 6 : 3) என்று கேட்கிறார்.

இன்னும் நாம் பார்க்கும் பொழுது இந்த தேவ தூதர்கள் பாவம் செய்தது போலவே ஆதாமின் சந்ததியாரும் பாவம் செய்து சாத்தானுக்கு அடிமைகளாகி விட்டார்கள் இப்படி பாவத்தின் அடிமைத்தனத்திற்குள்

விழுந்த யாவரையும் விடுதலையாக்கப் பூமியில் வந்த இரட்சகர் பெருமானும் இந்த தேவ தூதருக்கு உதவியாகக் கை கொடாமல் ஆபிரகாமின் சந்ததிக்கு உதவியாகக் கை கொடுத்தார்" (எபி 2 : 16) என்று வாசிக்கிறோம்.

அடுத்து இனி வரும் உலகத்தைக் குறித்து பேசுகிறோமே, அதை அவர் தூதர்களுக்கு கீழ்ப்படுத்தவில்லை'' (எபி 2 : 5) என்று நாம் வாசிக்கிறபடியால் முன்பு இருந்த உலகம் இந்த தூதர்களுக்கு கீழ்ப்பட்டிருந்தது என்று காண்கிறோம். ஆகையால் ஆதி 6 : 2, 4 ஆகிய வசனங்களில் காணப்படும் தேவ குமாரர், இராட்சதர் என்பவர்கள் முந்திய உலகத்தில் இருந்த தூதர்களே.

''நான் பூமியை அஸ்திபாரப்படுத்துகிற போது நீ எங்கேயிருந்தாய்?" யோபு 38 : 4.

கவிசேஷம்:

# நீங்கள் ஏன் இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்க வேண்டும்

ஒரு கிராமத்தில் செல்வந்தன் ஒருவன் இருந்தான். அவனுக்கு இரண்டு குமாரர்கள் இருந்தார்கள். மூத்தவன் தகப்பனுடைய வார்த்தைகளுக்கெல்லாம் கீழ்ப்படிந்து அவரோட இருந்தான். இளையவன் கெட்ட நண்பர்களோடே பழகி ஒரு துன்மார்க்கனாக ஜீவித்தான். தகப்பனார் எவ்வளவோ புத்தி சொல்லியும் கேட்க மனமற்றவனாய் இருந்தான். இப்படி இருக்கிற நாட்களில் செல்வந்தன் தன்னுடைய விளைச்சலின் பலனை விற்று மொத்த பணத்தையும் வீட்டிலே வைத்திருந்தான். இளையவன் தகப்பனுக்கு தெரியாமல் எல்லா பணத்தையும் எடுத்துக் கொண்டு கெட்ட நண்பர்களை கூட்டிக் கொண்டு தகப்பனை விட்டுப் பிரிந்து வெகு தூரம் சென்றுவிட்டான். வருஷங்கள் பல உருண்டோடின.

செல்வந்தனும் கிராமத்திலுள்ள தன் சம்பத்தையெல்லாம் விற்று பணத்தைக் கொண்டு வியாபாரம் செய்யும்படி வேறொரு பட்டணம் போய் அங்கே விருத்தியடைந்தான். தன்னுடைய ஆஸ்தியை அநுபவிக்க வேண்டிய மகன் தனக்கு துரோகம் செய்து தன்னை விட்டு போய்விட்டானே என்ற வருத்தம் அவனுள் இருந்தது. மகன்மீது கொண்ட பாசத்தால் அவன் எங்கே இருக்கிறான் என்று தேடிக்கொண்டும், தெரிந்தவர்களை விசாரித்துக் கொண்டும் இருந்தான்.

தகப்பனை விட்டு சென்ற கெட்ட குமாரனோ; தனது பணத்தையெல்லாம் பறி கொடுத்து தவித்தவனாகி, பசியைப் போக்கிக்கொள்ள ஒரு ஹோட்டலில் போய் மாவரைக்கும் வேலையில் சேர்ந்து, தன்னுடைய நெற்றி வேர்வைசிந்த உழைத்து சாப்பிட்டு வந்தான்.

தகப்பனை நினைவு கூர்ந்து வீட்டுக்கு லெட்டர் போட்டான். விலாசத்தார் இல்லை என்று அந்த லெட்டர் திரும்பி வந்தது. இனி தன்னுடைய அன்பான தகப்பனை எங்கே போய்க் காண்பேன் என ஏங்கினான். இப்படியாக தகப்பன் மகனை தேடிக்கொண்டும், மகன் தகப்பனை நினைத்து ஏங்கிக் கொண்டும் இருந்தனர்.

ஒருநாள் ஹோட்டலில் வருத்தத்தோட மாவரைத்து கொண்டிருந்தவனுக்கு ஒரு லெட்டர் வந்தது. அவசரமாய் பிரித்து படித்தான். அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. ஆனந்தமாகவும் இருந்தது. அந்தலெட்டரிலிருந்த விபரமாவது.

அன்புள்ள மகனுக்கு,

அன்பும் பாசமுமுள்ள அப்பா எழுதுவது என்னிடத்தில் வந்த வியாபாரி ஒருவனிடம் உன்னைப் பற்றி சொல்லிக் கொண்டிருந்தேன். என் கதையைக் கேட்ட அவன் உன்னுடைய விலாசத்தைக் கொடுத்தான். அவன் அந்த ஹோட்டலில் தங்கியிருக்கும்

போது உன்னைப்பற்றிய விவரத்தை நீ சொன்னதாகச் சொன்னான். இப்போதும் மகனே, நீ செய்த துரோகத்தை நான் மன்னிக்கிறேன். நீ கவலைப்படாதே. இதோ 1000 ரூD.D அனுப்பி இருக்கிறேன். உடனே புறப்பட்டு X பட்டணத்துக்கு டிக்கட் வாங்கி வந்து சேர். நான் வந்து வரவேற்கிறேன்.

இப்படிக்கு
அன்புள்ள அப்பா.

லெட்டரை படித்த மகன் அந்த லெட்டரை விசுவாசித்தான். அதாவது அதிலுள்ள வாசகத்தை விசுவாசித்தான். அதில் எழுதியிருந்தபடியே செய்தான். தகப்பனிடம் வந்து சேர்ந்தான்.

பிரியமானவர்களே, நம்முடைய ஆதி பிதாவாகிய ஆதாமுக்கும் சகல நன்மைகளையும் சம்பூரணமாய் தேவன் கொடுத்திருந்தும்; அவருடைய வார்த்தையை, அன்பை அசட்டை பண்ணி சாத்தானுடைய வார்த்தைக்கு செவிகொடுத்து, தேவனை விட்டு பிரிந்து போனான். மனித வர்க்கம் பெருகப் பெருக பாவமும் பெருகி தேவனுடைய முகம் மறைக்கப்பட்டு, மனுக்குலம் தெய்வீகத் தொடர்பை இழந்தது.

தேவனுடைய காணியாட்சிக்குப் புறம்பானவர்களும், நம்பிக்கையில்லாதவர்களும், தேவனற்றவர்களுமாயிருந்து, புத்தியிலே அந்தகாரப்பட்டு, இருதய கடினத்தினால் அறியாமையால் தேவனுடைய ஜீவனுக்கு அந்நியராயிருந்து, உணர்வில்லாதவர்களாய் சகலவித அசுத்தங்களையும் ஆவலோடே நடப்பிக்கிறவர்களாய் காம விகாரத்திற்கு ஒப்புக் கொடுத்தவர்களாய் மனுக்குலம் இருந்தது, இருக்கிறது (எபே 2:12;4:18,19).

மனிதர்கள் இறைவனைத் தேடியும், தலமிருந்தும் கண்டு கொள்ள முடியாமலும், சாயுச்சிய பதவியை (முக்தி, இறைவனோடே சேர்தல்) அடையும் வழியை அறியாமலும் தவித்தார்கள். ஆனால் இறைவன் மனிதன் எங்கே இருக்கிறான் என்று தேடிக்கண்டு பிடித்தார். தன்னிடத்திற்கு மனிதன் வந்து சேரும் வழியை அவனுக்குத் தெரியப்படுத்த சித்தம்கொண்டார். அவனுடைய அக்கிரமங்களை, பாவங்களை மன்னிக்க தயைகொண்டார்.

கெட்ட குமாரனுக்கு தகப்பன் தன்னுடைய வார்த்தையை லெட்டர்மூலம் தெரியப்படுத்தினது போல, இவரும் தன்னுடைய வார்த்தையை அனுப்பினார். அந்த வார்த்தையே சத்தியம், தன்னிடம் வரவேண்டிய மார்க்கத்தை தெரியப்படுத்தினார். அந்த மார்க்கமே வழி. அந்த வார்த்தைக்குக் கீழ்ப்படிந்து, அந்த மார்க்கத்தின்படி நடந்து வந்தால் தேவனை அடைவான். அந்த தேவனே மனிதனுக்கு ஜீவன். கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவே சத்தியமும், வழியும் ஜீவனுமாய் இருக்கிறார் (யோவா 14:6).

பரலோகத்திலிருக்கிற தேவன் மனிதன் மீது மிகவும் அன்பு கூர்ந்து, இயேசு கிறிஸ்துவை அனுப்பினார். கெட்ட குமாரனுக்கு தகப்பனிடம் இருந்து வந்த லெட்டர் போன்று இயேசுவானவரும், தேவனுடைய வார்த்தை அடங்கிய லெட்டர் போன்றிருக்கிறார். நாம் தாளினாலும் மையினாலும் நம்முடைய வார்த்தைகளைத் தெரிவிக்கிறோம், அல்லது டெலிபோன் மூலம், ரேடியோ, டெலிவிஷன் மூலமாக நம்முடைய வார்த்தையை-செய்தியை அறிவிக்கிறோம். அப்படியே தேவனும் நம்மைப்போல் மாம்சத்தையும் இரத்தத்தை யுமுடைய இயேசு கிறிஸ்து மூலம் தம்முடைய வார்த்தையை மனுக்குலத்துக்கு தெரியப்படுத்துகிறார். இயேசு கிறிஸ்துவே அந்த வார்த்தையாக இருக்கிறார் (யோவா 1:14). அந்த வார்த்தை ஆதியிலே இருந்தது. அந்தவார்த்தைதேவனிடத்திலிருந்தது, அந்த வார்த்தை தேவனாயிருந்தது (யோவா 1:1). அதாவது தேவன் நாம் காணக்கூடிய வகையில் மாம்சத்தில் வெளிப்பட்டார் (I தீமோ 3:16). மாம்சத்தில் வந்த இயேசுவானவர் தேவனால் மனிதனிடம் அனுப்பப்பட்ட லெட்டர் போலிருந்து, இவர் மூலம் மனிதன் தன்னிடம் வரும் வழியைத் தெரிவிக்கிறார் (யோவா 14:6). அவர் சுயமாய் பேசாமல் தேவன் சொல்லுகிறதெதுவோ அதையே நமக்கு சொல்கிறார்.

நாம் ஒருவரோடொருவர் டெலிபோனை நமக்கு தொடர்பு கருவியாய் உபயோகிப்

பதுபோல் இயேசுவும் தேவனுக்கும் மனிதனுக்கும் மத்தியஸ்தராயிருக்கிறார் (I தீமோ 2:5).

இயேசுவே தேவனிடம் சேரும் ஒரே வழியாய் இருக்கிறார். அவராலேயன்றி ஒருவனும் பிதாவிடம் போகமுடியாது. நாம் இரட்சிக்கப்படும்படி அவர் சொல்லும் வசனமே சத்தியம். நாம் இரட்சிக்கப்பட அவர் நாமமேயன்றி வேறொரு நாமமும் கட்டளையிடப்படவில்லை (அப் 4:12). தகப்பனிடமிருந்து லெட்டர் வரப்பெற்ற கெட்ட குமாரன் அது தகப்பனுடைய லெட்டர் என்று விசுவாசியாமல் போனால் தகப்பனை அறியவே மாட்டான். தேவனிடத்திலிருந்து வந்த இயேசுவை விசுவாசியாதவனும் இறைவனைக் காணாமல் கெட்டுப் போவான். லெட்டரை நம்பியும் அதன்படி செய்யாமல் போவானானால் தகப்பனைச் சேரமாட்டான். இயேசுவை தேவனுடைய குமாரன் என்று விசுவாசித்தும் அவருடைய வார்த்தையின்படி செய்யாமல் போகிற பெயர் கிறிஸ்தவர்களும் பரலோகம் போக மாட்டார்கள்.

இப்போதும் இயேசு கிறிஸ்துவை விசுவாசிக்க உங்களுக்கு மனமில்லையா? நீங்கள் ஏன் சபிக்க பட்டவர்களாக இருக்கவேண்டும் (I கொரி 16:22). நீங்கள் நித்திய ஜீவனுக்கு நியமிக்கப்பட்டவர்களானால் விசுவாசிப்பீர்கள் (அப் 13:48).

கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசியுங்கள், அப்பொழுது நீங்களும் உங்கள் வீட்டாரும் இரட்சிக்கப்படுவீர்கள் (அப் 16:31). மெய் கிறிஸ்தவர்களாகுங்கள்.

---

"ஒருவன் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினிடத்தில் அன்பு கூராமற்போனால், சபிக்கப்பட்டவனாயிருக்கக் கடவன்; கர்த்தர் வருகிறார்"—1 கொரி 16:22.

---

# வேதபாடம்

(தொடர்ச்சி)

யாத் 12:1-11 பஸ்காவைப் பற்றிய அறிவிப்பு.

யாத் 12:1-5 இஸ்ரவேல் குடும்பத்தார் ஒவ்வொருவரும் ஆபீப் மாதமாகிய இந்த மாதத்திலே 10 ஆம் தேதியன்று பழுதற்றதும் ஆணும் ஒரு வயதுமான ஒரு ஆட்டுக்குட்டியைத் தெரிந்து கொண்டு ஆயத்தப்படுத்த வேண்டும். இது நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவாகிய தேவ ஆட்டுக்குட்டிக்கு அடையாளம்.

யாத் 12:6-11 அந்த மாதம் 14ம் தேதி மாலையில் அந்த ஆட்டுக்குட்டியை அடித்து அதின் இரத்தத்தில் கொஞ்சம் எடுத்து தங்கள் வீட்டு நிலைக்கால்களிலும் நிலையின் மேற்சட்டத்திலும் தெளிக்கக் கடவர்கள். சாயங்காலம் என்றால் மாலை பலி நேரம். மாலை 3 மணி அல்லது சூரியன் அஸ்தமிக்கும் நேரமாகும். நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவும் மாலை 3 மணியளவிலே நமக்காகத் தம்முயிரை சிலுவையில் கொடுத்தார் (மத் 27:45 46). அதின் மாம்சத்தை சுட்டு புசிக்க வேண்டும். புளிப்பில்லா அப்பத்தோடும் கசப்பான கீரையோடும் புசிக்க வேண்டும். புளிப்பில்லா அப்பம் பரிசுத்த வாழ்க்கையைக் குறிப்பிடுகிறது. எகிப்தியரும் கானானியரும் புளித்த மாவிலேதான் அப்பம் சுடுவார்கள். இஸ்ரவேலர்கள் அப்படிச் செய்யக் கூடாது (ஆதி 18:6-8; 19:3. லேவி 3:4,11). பிரயாணத்துக்கு ஆயத்தப்பட்டவர்களாய் அதை தீவிரமாய் புசிக்க வேண்டும். அது கர்த்தருடைய பஸ்கா. பஸ்கா என்றால் கடந்து போதல் என்று அர்த்தம். எகிப்தியரின் தலைப்பிள்ளை சங்காரத்தின்போது இஸ்ரவேலரின் வீடுகளைக் கடந்து போனார் (வச 27).

யாத் 12:12-14 பஸ்கா நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய பஸ்காவுக்கு முன்னடையாளமாக இருக்கிறது. எகிப்தியரின் மனிதர் முதல் மிருக ஜீவன்களின் தலையீற்றுகளை தேவன் சங்கரிக்கும்போது பஸ்காவின் இரத்தம் இஸ்ரவேலருக்கு அவர்கள் வீடுகளின் வாசலிலே அடையாளமாக இருக்கும். அந்த இரத்தத்தை நான் கண்டு உங்களை கடந்து

போவேன் என்றார். இயேசுகிறிஸ்துவின் இரத்தமே நம்முடைய விடுதலைக்கு காரணமாயிருக்கிறது (I பேது. 1:2,18,19).

யாத் 12:15-20: புளிப்பில்லாத அப்பத்தைப்பற்றிய விளக்கம்: புளிப்பில்லா அப்பத்தை ஏழு நாளும் புசிக்கும்படி கர்த்தர் கட்டளையிட்டார். முதலாம் நாளில் தானே புளித்த மாவை உங்கள் வீட்டிலிருந்து நீக்க வேண்டும். முதல் நாள் தொடங்கி ஏழு நாளளவும் புளித்த அப்பம் புசிக்கிறவன் எவனோ அவன் ஜனப்புத்திரரில் இராதபடி அறுப்புண்டு போவான். முதலாம் நாளில் சபை கூட வேண்டும். ஏழாம் நாளிலும் சபை கூட வேண்டும் என்றார். முதல் நாள் தொடங்கி ஏழாம் நாள் மட்டும் நாம் பாவம் இல்லாமல் ஜீவித்து நம்முடைய பஸ்காவாகிய கிறிஸ்துவை (நற்கருணை) புசிக்க வேண்டும் என்று கர்த்தர் சொல்லுகிறார். புளிப்பில்லாத அப்பப்பண்டிகையை நித்தியமாய் ஆசரிக்கும் படியாகவும் கர்த்தர் கட்டளையிட்டார். புளிப்புள்ள யாதொன்றும் வீடுகளில் காணப்படக்கூடாது. இஸ்ரவேலின் வீடுகளில்-தேவ ஜனங்களின் வீடுகளில் பாவம் காணப்படக்கூடாது என்று கர்த்தர் சொல்லுகிறார்.

யாத் 12:21–28 தேவன் இஸ்ரவேலர்களுக்குச் சொன்ன பிரகாரம் இஸ்ரவேலர்கள் பஸ்காவை ஆசரித்தார்கள். கர்த்தர் மோசேக்கும் ஆரோனுக்கும் கட்டளையிட்டபடியே செய்தார்கள்.

யாத் 12:29-30 பத்தாவது அற்புதம் பத்தாவது வாதை: நடுராத்திரியிலே சிங்காசனத்தில் வீற்றிருக்கும் பார்வோனின் தலைப்பிள்ளை முதல் எகிப்தியர்களுடைய தலைப்பிள்ளைகளையும் மிருக ஜீவன்களின் தலையீற்றுகளையும் கர்த்தர் சங்கரித்தார்.

யாத் 12:31-34 நடுராத்திரியிலே பார்வோன் மோசேயையும் ஆரோனையும் அழைத்து நீங்களும், உங்கள் ஜனங்களும் எகிப்தை விட்டு புறப்பட்டு போங்கள். உங்கள் தேவனுக்கு ஆராதனை செய்யுங்கள். உங்கள் ஆடுமாடுகள் பொருள்கள் எல்லாவற்றையும் கொண்டு போங்கள் என்றான். எகிப்தியர்கள் எல்லாரும் இஸ்ரவேலரை தேசத்தை விட்டு உடனே புறப்பட்டுப் போகும்படி துரிதப்படுத்தினார்கள்.

யாத் 12:35-36 இஸ்ரவேல் ஜனங்கள் எகிப்தியரிடம் வெள்ளி உடைமைகளையும், பொன்னுடைமைகளையும் கேட்டு வாங்கினார்கள். கர்த்தர் இஸ்ரவேல் ஜனங்களுக்கு எகிப்தியரின் கண்களில் தயவு கிடைக்கும் படியாய் செய்ததால் எகிப்தியர் கேட்டதை அவர்களுக்குக் கொடுத்தார்கள். இவ்விதமாய் இஸ்ரவேலர்கள் எகிப்தியரை கொள்ளையிட்டார்கள்.

யாத் 12:37-42 இஸ்ரவேலர்கள் இரவோடே இரவாக எகிப்தைவிட்டு கால் நடையாய் பிரயாணப் பட்டார்கள். ஸ்திரீகள் குழந்தைகள் தவிர 6 லட்சம் காலாட்கள் இஸ்ரவேலில் இருந்தனர். இஸ்ரவேல் புத்திரர் எகிப்துக்குள் இருந்த காலம் 430 வருஷம்–அந்த 430 வருஷங்கள் முடிந்த அன்றைய தினத்தானே அவர்கள் எகிப்து தேசத்திலிருந்து புறப்பட்டார்கள். அது கர்த்தருக்கென்று ஆசரிக்கப்பட வேண்டிய ராத்திரியாயிற்று.

யாத் 12:43-52 பஸ்காவின் நியமம்: அந்நிய புத்திரன் ஒருவனும் அதில் சாப்பிடக்கூடாது. விருத்த சேதனம் இல்லாதவன் அதில் புசிக்கக்கூடாது. அதின் எலும்புகளில் ஒன்றையும் முறிக்கக்கூடாது. அந்நியன் ஒருவன் அதில் புசிக்க வேண்டுமென்றால் அவன் விருத்த சேதனம் பண்ணப்பட்டிருக்க வேண்டும். விருத்த சேதனமில்லாத ஒருவனும் அதில் புசிக்கக்கூடாது. மீட்கப்படாதவனும், பரிசுத்தாவியின் அபிஷேகம் பெறாதவனும் திருவிருந்தில் பங்கு பெறக் கூடாது. பரிசுத்தாவியின் அபிஷேகமே நம்மை ஆதி சபையாக்குகிறது (அப் 15:8,9; 10:44-48; 11:15; ரோம 8:9; 1 கொரி 12:13). அது அந்நிய பாஷை பரிபாஷை உதடு அடையாளத்தோடும் வல்லமையோடும் கூட இருக்கும் (ஏசா 28:10,11; அப் 2:1-4; I கொரி 14:21)

(தொடரும்)

"உங்கள்மேல் எகிப்தியர் சுமத்தின சுமைகளை நீக்கி ...உங்களை விடுவிக்கிற...தேவன் நானே"...யாத் 6:6,7.

# மோட்ச வழி

(55-ஆவது உரையாடல்) (தொடர்ச்சி)

**சிஷ்ய :** 7வது ஓய்வு நாள்காரர்களை (Seventh Day Adventists) பற்றி கொஞ்சம் தெளிவாக சொல்லும்படி கேட்டுக் கொள்கிறேன்.

**குரு :** ஏழாவது ஓய்வு நாள் காரர்கள் கூட்டம் (Seventh Day Adventists) 1843-ல் திரு. வில்லியம் மில்லர் (Mr. William Millar) என்பவரால் ஸ்தாபிக்கப்பட்டது. ஏழாவது நாள் தான் ஓய்வு நாள். அந்த நாளில் தான் கர்த்தரை தொழுது கொள்ள வேண்டும். ஓய்வு நாளை ஆசரிக்க வேண்டுமென்பது இவர்களுடைய பிடிவாதமான வாதமாகும். இவர்களுடைய உபதேசம் பார்க்கிறதற்கு நல்லதாகத் தோன்றின போதிலும், இது வேதாகமத்திற்கு விரோதமான உபதேசமாகும். இவர்கள் பரிசுத்த ஆவியைப் பெற்றுக்கொள்ளாதவர்களும் பரிசுத்த ஆவியினால் நடத்தப்படாதவர்களுமான தவறான கூட்டமாகும். இவர்கள் வேதாகமத்தை திரித்து போதிக்கிறார்கள். அநேக தவறான உபதேசங்கள் இவர்களில் உண்டு.

(1) இவர்கள் மனிதனுடைய ஆத்துமா நித்தியமாய் வாழக் கூடியது என்பதை நம்புவது கிடையாது. நித்திய மோட்சம், நித்திய நரகம் கிடையாது என்கிறார்கள். இந்த உலகத்தை அநுபவிக்கிறதே இவர்களுடைய நோக்கம். ஆனால் வேதாகமத்திலே லூக் 16ம் அதிகாரத்தில் லாசரு ஐசுவரியவான் சம்பவத்தில் இயேசு கிறிஸ்து மோட்சம் நரகத்தைப் பற்றி தெளிவாய்ச் சொல்லியிருக்கிறார்.

தேவ பக்தியில்லாமல் உலகப்பிரகாரமாய் ஜீவிக்கிறவர்கள் மரித்த உடனே அவர்களுடைய ஆத்துமா பாதாளத்தில் வேதனைப்படுகிறதைக் காண்பார்கள் என்றும் தேவ பக்தியுள்ளவர்கள் ஆறுதல் அநுபவிப்பார்கள் என்பதையும் மிகவும் தெளிவாக கூறியிருக்கிறார். மாற் 9 : 44-49ல் நித்திய நரகத்தைப்பற்றி தெளிவாக இயேசு கிறிஸ்து சொல்லியிருக்கிறார். ஆத்துமாவும், சரீரமும் நித்திய நரகத்திலே தள்ளப்படுவதைக் குறித்து இயேசு கிறிஸ்து சுட்டி காட்டியுள்ளார் (மத் 10 : 28).

2) இயேசு கிறிஸ்து நம்முடைய பாவங்களுக்காய் கல்வாரியில் இரத்தம் சிந்தி மரித்தபடியினால் நமக்கு பாவமன்னிப்பு உண்டாயிருக்கிறது. ஆதலால் ஆவிக்குரிய வாழ்க்கை (Spiritual Life) தேவையில்லை என்று போதிக்கிறார்கள். வேதாகமமோ நாம் ஆவிக்குரிய வாழ்க்கை பரிசுத்தாவியைப் பெற்று ஆவியில் நிறைந்து தேவனுடைய சாயலுக்கொப்பான பரிசுத்த வாழ்க்கை வாழ வேண்டுமென்று போதிக்கிறது (கொலோ 3 : 5-25).

(3) உணவைப் பற்றி இவர்களுடைய உபதேசம் :

சில உணவுகளை இவர்கள் சாப்பிடக் கூடாது என்கிறார்கள். (உ-ம்) டீ, காபி குடிக்கிறது பாவம் என்று சொல்லுகிறார்கள். லேவியராகமத்திலே புசிக்கத்தகாதவைகள் என்று இஸ்ரவேலர்களுக்கு விலக்கப்பட்ட உணவுகளை புசித்தல் பாவம் என்பது இவர்களுடைய உபதேசம். I கொரி 8 : 8லே போஜனமானது நம்மை தேவனுக்கு உகந்தவர்களாக்க மாட்டாது. என்னத்தினாலெனில் புசிப்பதினால் நமக்கொரு மேன்மையுமில்லை. புசியாதிருப்பதினால் நமக்கு ஒரு குறைவும் இல்லை என்று எழுதப்பட்டுள்ளது. விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டதை நாம் புசிக்கக் கூடாது. நெருக்குண்டு செத்ததை இரத்தத்தை நாம் புசிக்கக் கூடாது (அப் 15 : 28, 29). "தேவனுடைய இராஜ்யம் புசிப்பும் குடிப்புமல்ல, அது நீதியும் சமாதானமும் பரிசுத்தாவியினால் உண்டாகும் சந்தோஷமுமாயிருக்கிறது." "ஒரு பொருளும் தன்னிலே தீட்டுள்ளதல்லவென்று கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுக்குள் அறிந்து நிச்சயித்திருக்கிறேன். ஒரு பொருளை தீட்டுள்ளதென்று எண்ணிக் கொள்ளுகிறவனெவனோ அவனுக்கு அது தீட்டுள்ளதாயிருக்கும்" (ரோம 14 : 17, 14). ஆகையால்

போஜனத்தையும், பானத்தையும் குறித்தாவது பண்டிகை நாளையும், மாதப் பிறப்பையும், ஓய்வு நாட்களையும் குறித்தாவது ஒருவனும் உங்களை குற்றப்படுத்தாதிருப்பானாக (கொலோ 2 : 14).

4) ஏழாவது நாளைக் குறித்து இவர்களுடைய உபதேசம் சனிக்கிழமை தான் ஓய்வு நாள். அந்த நாளை ஆசரிக்க வேண்டும். அதை ஆசரிக்காதவர்கள் நரகத்திற்குப் போவார்கள் என்பது இவர்களுடைய வாதம். பழைய உடன்படிக்கையின் ஓய்வு நாள் சனிக்கிழமை நாள். உடன்படிக்கை மாற்றப்பட்ட போது மனிதன் தேவனை ஆராதிக்கிற நாளும் மாற்றப்பட்டது (சங் 118 : 22-24). மேலும் ஓய்வு நாள் என்பது நித்திய இளைப்பாறுதலுக்கு முன் அடையாளமாக இருக்கிறது. இதனுடைய பொருள் கிறிஸ்துவைப் பற்றினது (கொலோ 2 : 16, 17). நாம் நியாயப்பிரமாணத்திற்குக் கீழ்ப்பட்டவர்களல்ல (கலா 2 : 19, 20). இயேசு கிறிஸ்து நமக்காக சிலுவை மரத்தில் தூக்கப்பட்டு நியாயப் பிரமாணத்தின் சாபத்திற்கு நம்மை நீங்கலாக்கி மீட்டுக் கொண்டார் (கலா 3 : 1). (கொலோ 2:16). நியாயப் பிரமாணக்காரராகிய இந்த ஏழாவது ஓய்வு நாட்காரர்களும் ஓய்வு நாளை ஆசரிக்க முடியாது ஏனெனில்

(i) வாரத்தில் ஒரு நாள் ஓய்வு. அதற்கு ஓய்வு நாள் என்று பெயர். (ii) ஒரு வாரம் ஓய்வு (லேவி 23 : 34-44). (iii) 7 வருஷங்களில், ஒரு வருஷம் ஓய்ந்திருக்க வேண்டும். அதற்கு ஓய்வு வருஷம் என்று பெயர். அந்த வருஷத்தில் அறுப்போ விதைப்போ எவ்விதமான வேலையும் செய்யக் கூடாது (லேவி 25 : 1-5).

iv யூபிலி வருஷம் ஓய்வு.

ஓய்வு வருஷங்களுள்ள ஏழு ஏழு வருஷங்களை எண்ணுவாயாக. அந்த ஏழு ஓய்வு வருஷங்களும் 49 வருஷங்களாகும். அந்த 49 வருஷங்கள் முடிந்த பின்பு யூபிலி வருஷமாகும். 50வது வருஷத்தை பரிசுத்தமாக்கி அதில் விதை விதைக்காமலும் அறுக்காமலும் சேர்க்காமலும் இருப்பாயாக. உன் வேலைக்காரனையும், வேலைக்காரியையும் விடுதலையாக்கி விடுவாயாக என்று கர்த்தர் கட்டளையிட்டார் (லேவி 25 : 8-22).

(v) இஸ்ரவேலருடைய பாவத்தினிமித்தம் 70 ஆண்டுகள் சிறைகளாக அவர்கள் பாபிலோனுக்குக் கொண்டு போகப் பட்டார்கள். இந்த 70 வருஷங்களையும் ஓய்வு வருஷங்களென்று வேதாகமத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது (II நாளா 36 : 21).

(vi) 7ம் மாதம் முதலாம் தேதியும் ஓய்வு நாள். 10ம் தேதியும் ஓய்வு நாள் (லேவி 23 : 24-32). ஆனபடியால் ஓய்ந்திருக்கிற நாளெல்லாம் ஓய்வு நாள் தான்.

ஆதலால் ஓய்வு நாட்காரர்கள் அல்லது 7 வது நாட்காரர்கள் பழைய ஏற்பாட்டின் பிரமாணத்தின்படி ஓய்வு நாளையோ, ஓய்வு வாரத்தையோ, ஓய்வு வருஷத்தையோ, யூபிலி வருஷத்தையோ ஆசரிக்க முடியாது. எழுத்தின்படி ஆசரிக்கிறதுமில்லை. இவர்கள் ஓய்வு நாள், ஓய்வு நாள் என்று சொல்லித் திரிகிறதினால் குற்றவாளிகளாகி கிறிஸ்துவின் மீட்பிற்கு தூரமாக்கப்பட்டு நித்திய ஆக்கினையை அடைவார்கள்.

புதிய ஏற்பாட்டில் ஆதி அப்போஸ்தலர்களும், ஆதிச் சபையும் வாரத்தின் முதல் நாளையே கர்த்தருடைய நாளாகவும் ஆராதிக்கும் நாளாகவும் ஆசரித்தார்கள். நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந்தது வாரத்தின் முதல் நாளன்று (மாற் 16 : 9). கூடியிருந்த சீஷர்களுக்கு தரிசனமானதும், அவர்கள் கர்த்தரைத் தொழுது கொண்டதும் வாரத்தின் முதல் நாளிலேயாகும் (யோவா 20 : 19, 20, 26; அப் 20 : 7, I கொரி 16 : 2). பெந்தெகொஸ்தே என்னும் நாளிலே பரிசுத்தாவியானவர் பூமியில் இறங்கி வந்ததும் வாரத்தின் முதல் நாளேயாகும் (அப் 2 : 1-4). ஆனபடியினால் புதிய ஏற்பாட்டின் மக்கள் வாரத்தின் முதல் நாளாகிய ஞாயிற்றுக் கிழமையை கர்த்தருடைய

நாளாகவும், ஆராதனை நாளாகவும், பரிசுத்த நாளாகவும் தேவ ஜனங்கள் ஆசரித்தார்கள். இவை புதிய ஏற்பாட்டின் உபதேசம். ஏழாம் நாளும் சபை கூடும் நாள். முதலாம் நாளும் சபை கூடும் நாள்.

(7) 7 வது ஓய்வு நாட்காரர்கள் (Seventh-Day Adventists) ஸ்தாபகராகிய வில்லியம் மில்லர் (Mr William Millar) இயேசு கிறிஸ்துவினுடைய இரண்டாவது வருகையைக் குறித்து 1834 லே வரப் போகிறார் என்று திட்டமாய் அறிவித்தார். ஆனால் இயேசு கிறிஸ்து வரவில்லை. மறுபடியும் அவர் இயேசு கிறிஸ்து 1844ல் கண்டிப்பாய் வரப் போகிறார் என்று அறிவித்தார். ஆனால் இயேசு கிறிஸ்து வரவில்லை. மில்லர் தன்னுடைய குற்றத்தை வருத்தத்துடன் ஒப்புக் கொண்டார். இப்பவும் இவர்கள் இயேசு கிறிஸ்து வரும் நாளைக் குறித்து கணக்குப் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். அவைகளெல்லாம் தப்பிப் போகும். இவர்களை நம்புகிறவர்களும் ஏமாந்து போவார்கள். ஆனபடியால் கள்ளத்தீர்க்கதரிசிகளாகிய இவர்களுக்கு தேவ ஜனங்கள் எச்சரிக்கையாயிருந்து விலகியிருக்கவும்.

(தொடரும்)

"நியாயப் பிரமாணத்தினால் நீதிமான்களாக விரும்புகிற நீங்கள் யாவரும் கிறிஸ்துவை விட்டுப் பிரிந்து கிருபையினின்று விழுந்தீர்கள்" — கலா 5 : 4.

மாதர் பகுதி

# குடும்பம்

உலகில் ஒழுக்கம் சீர் கெட்டுப் போயிற்று. ஆதலால் கிறிஸ்தவ பெற்றோர் கவலையும் கரிசனையுமாக இருந்து உலகில் நல்ல குடும்பத்தை உருவாக்க இறை ஆசீருடனும், ஜெபத்துடனும் பிரயாசப்பட வேண்டும். அது இறைவனுடைய ஆணையும் கூட. பிள்ளைகள் வளர்ந்துவரும்போது மகன் மீது தகப்பனும், மகள் மீது தாயும் கவனம் செலுத்தி உலகத்தின் மாயைக்கும், பருவக் கிளர்ச்சிக்கும், கூடா நட்புக்கும், தீமைக்கும் அவர்களை விலக்கி காக்க அறிவுரை கூறி எச்சரித்து கண் காணிக்க வேண்டும். நாம் கர்த்தருக்கென்று பிள்ளைகளை வளர்த்திட கட்டளை பெற்றிருக்கிறோம்.

சில ஆலோசனைகள்:-

1. தகப்பன் மகன் மீதும், தாய் மகள் மீதும் கவனம் செலுத்த வேண்டும். மகன் (பையன்) 12 வயது தாண்டினதும் அவன் மனிதன் ஆகிறான் என்பதை தகப்பன் உணர்ந்து மகனுடைய சரீர வளர்ச்சியின் படியே அவனுடைய மனமும் வளர்கிறதென்பதை கவனத்தில் கொள்ள வேண்டும். பருவக் கிளர்ச்சிகள் தோன்றும் காலம் அதுவே. மகனுக்குத் தகப்பனைத் தவிர வேறு யாரும் உணர்ச்சிகளை அடக்கி ஆள வேண்டிய அவசியத்தைப் பற்றியும், ஒழுக்கத்தின் மேன்மை பற்றியும், எது வலிமை என்பதைப் பற்றியும் போதிக்க முடியாது. ஒரு ஆணின் உணர்ச்சிகள் என்ன என்பதை ஒரு ஆண்தான் சரியாக அறிய முடியும் தகப்பன் ஒரு ஆண். ஒரு பெண்ணின் உணர்ச்சிகள் என்ன என்பதை ஒரு பெண் தான் அறிய முடியும். தாயைக் காட்டிலும் தன் மகளுக்கு கரிசனையோடு போதனை செய்து, எச்சரிக்கக் கூடிய வேறொருவரும் இருக்க முடியாது. ஏனென்றால் தாய் ஒரு பெண். ஆனபடியினால் மகனுக்குத் தகப்பனும், மகளுக்குத் தாயும் பொறுப்பெடுக்க வேண்டும்.

(தொடரும்...)

"பிதாக்களே, நீங்கள் உங்கள் பிள்ளைகளைக் கோபப்படுத்தாமல் கர்த்தருக்கேற்ற சிட்சையிலும் போதனையிலும் அவர்களை வளர்ப்பீர்களாக" — எபே 6:4.

# விவாகம் செய்யாதே என்பது

விபச்சாரம் செய்யாதே என்பது தேவனுடைய உபதேசம் (கற்பனை) (யாத் 20:14). விவாகம் செய்யாதே என்பது சாத்தானுடைய உபதேசம். தேவனுடைய உபதேசத்திற்கும் கீழ்ப்படிவோன் நித்தியஜீவனை அடைவான். சாத்தானுடைய உபதேசம் வஞ்சகத்தால் நிறைந்து பாம்பின் வால்போல் இருந்து ஆதியிலே ஏவாளை வஞ்சித்ததுபோல் இந்தக் கடைசி நாட்களிலும் தேவனுடைய மக்களை வஞ்சிக்கிறது.

மனுஷனுக்கு தேவன் நன்மை, தீமை அறியத்தக்க விருட்சத்தின் கனியை புசிக்க வேண்டாம் என்று உபதேசித்திருந்தார் (ஆதி 2:17). சாத்தான், நீங்கள் இதை புசித்தால் உங்கள் கண்கள் திறக்கப்படும், நீங்கள் நன்மை தீமை அறிந்து தேவர்களைப் போல் இருப்பீர்கள் என்று உபதேசித்தான் (ஆதி 3:5). சாத்தானுடைய உபதேசம் மிகவும் மேன்மையுள்ளதாக மனுஷனுக்குத் தெரிந்தது. அதைக் கைக்கொண்டான். அதன் விளைவு தேவ கற்பனை மீறப்பட்டது மனிதன் செத்தான். இதே வஞ்சகத்தை சாத்தான் ஆவிக்குரிய அநேகரிடத்தில் புகுத்தி பக்தியுள்ளவர்களை கெடுத்துப் போடுகிறான்.

தேவன் சொன்னது விபச்சாரம் செய்யாதே என்றே. சாத்தான் சொல்லுகிறான் விவாகம் செய்யாதே என்று. இந்த சாத்தானுடைய உபதேசம் மெய்யானது போல் தான் தோற்றத்தின்படி தெரிகிறது. ஆனால் அவன் நோக்கமோ தேவ பக்தர்கள் தேவ கற்பனையை மீற வைக்க வேண்டுமென்பதே. இதை அறியாமல் சாத்தானுடைய உபதேசத்தை ஏற்றுக் கொண்டவர்கள் விவாகம் பண்ணாதிருந்து தங்களுடைய மாம்சத்தை வருத்தி, உபவாசம் போட்டு கட்டுப்படுத்தி. அடக்கி ஒடுக்கி இச்சையை கட்டுப்படுத்துகிறார்கள். பரத்திலிருந்து கொடுக்கப்பட்டாலொழிய ஒருவனும் பெற்றுக் கொள்ள முடியாது என்றபடி, ஒரு நாளிலே தங்கள் சரீர முயற்சி அற்பமானது என அறியும் வகையில் விபச்சாரம் செய்கிறார்கள். இப்பொழுது தேவ கற்பனை மீறப்பட்டாயிற்று. சாத்தான் அவர்களை தன்னுடைய வஞ்சகப் போதகத்தால் படுகுழிக்குள் தள்ளிவிட்டு வெற்றியோடே நடந்து செல்கிறான்.

இதை பரிசுத்தபவுலுக்கு ஆவியானவர் முன்னறிவித்து அவர் விசுவாசிகளை எச்சரிக்கிறார் (I தீமோ 4:1). இந்த வஞ்சகம் சிலர் நினைக்கிறபடி அவிசுவாசிகளிடையே அல்ல, பக்தியுள்ள விசுவாசிகளிடையே நடக்கிறது. வஞ்சகம் என்று சொல்லும்போதே உண்மையிலிருந்து மாறுபாடச் செய்யும் பொய்யாகும்.

I தீமோ 4:1ல் பிற்காலங்களில் மனசாட்சியில் சூடுண்ட பொய்யருடைய மாயத்தினாலே சிலர் பிசாசுகளின் உபதேசங்களுக்கு செவிகொடுத்து விசுவாசத்தை விட்டு விலகிப் போவார்கள். அந்த பொய்யர் விவாகம் பண்ணக்கூடாது என கட்டளையிடுவார்கள் என்று சொல்லியிருக்கிறபடியால் இது விசுவாசிகளிடையே நடக்கும் விழுகையாக இருக்கிறது.

விபச்சாரம் செய்யாதே என்பது தேவ கற்பனை. கற்பனையை கைக்கொள்வதே காரியம் (I கொரி 7:19). கற்பனையை மீறுவது பாவம். விவாகம் பண்ணுவது பாவமல்ல (I கொரி 7:28). தன் மகளுக்கு விவாகம் செய்து வைப்பது பாவமல்ல (I கொரி 7:36). வேகிறதைக் காட்டிலும் விவாகம் பண்ணுகிறது நலம் (I கொரி 7:9).

ஒருவன் மாம்சம் புசிக்கிறான். ஒருவன் மாம்சம் புசிக்கிறதில்லை. ஒருவன் ஒரு நாளை மற்ற நாளிலும் விசேஷமாய் எண்ணுகிறான், வேறொருவன் எல்லா நாட்களையும் சரியாக எண்ணுகிறான். இவர்களில் ஒருவரைக் காட்டிலும் மற்றொருவர் மேன்பட்டவரல்ல (ரோம 14: 2,5,3)

விவாகம் பண்ணுவதைப் பற்றியும், விவாகம் பண்ணாமலிருப்பதைப்பற்றியும் பரி. பவுல் I கொரி 7-ம் அதிகாரத்தில் தேவ ஆவியால் எழுதுகிறார். அதிலேதானே ஒருவன் விருத்த சேதனம் பெற்றவனாய்

(விவாகஸ்தனாய்) அழைக்கப்பட்டிருந்தால் விருத்தசேதனம் இல்லாதிருக்க (விரத்தனாயிருக்க) வகை தேடானாக. ஒருவன் விருத்தசேதனமில்லாதவனாய் (விரத்தனாய்) அழைக்கப்பட்டிருந்தால் விருத்த சேதனம் பெறாதிருப்பானாக (விவாகம் செய்யாதிருப்பானாக). விருத்த சேதனமும் ஒன்றுமில்லை விருத்த சேதனமில்லாமையும் ஒன்றுமில்லை(விவாகம் செய்வதும் ஒன்றுமில்லை விவாகம் செய்யாமலிருப்பதும் ஒன்றுமில்லை) என்ற அர்த்தத்தில் விருத்த சேதனத்தை விவாகத்தோடே ஒப்பிட்டு எழுதியுள்ளார். புதிதான (5) ஐந்து ரூபாய்க்கும் பழமையான ஐந்து ரூபாய்க்கும் மதிப்பு ஒன்றே. அதிலுள்ள முத்திரையே முக்கியம். கற்பனையை கைக்கொள்வதே காரியம் (1 கொரி 7:17-20).

மனிதன் முழுமையடைய தேவன் வைத்திருக்கிற இரட்சிப்பின் உபதேசம் நேற்று இன்றும் என்றும் மாறாதது (எபி 13:8). ஆனால் விவாகத்தைக் குறித்து பவுல் எழுதுகையில் இப்பொழுது உண்டாயிருக்கிற துன்பத்தினிமித்தம் விவாகமில்லாதிருக்கிறது மனுஷனுக்கு நல்லது என எழுதினார். ஆகையால் இந்த காலம் மாறும்போது இந்த ஆலோசனையும் மாறிப்போகும்.

விபச்சாரம் செய்யாதே என்கிற தேவ கற்பனையைக் கைக்கொள்ள வேண்டியது எல்லா மனுஷர் மேலும் விழுந்த கடமையாக இருக்கிறது. (பிர 12:13). எரேமியா தீர்க்கதரிசியிடம் கர்த்தர் ; நீ பெண்ணை விவாகம் பண்ண வேண்டாம் என்று சொன்னார் (எரே 16:2) அவர் அப்படியே செய்தார். ஓசியா தீர்க்கதரிசியிடம் கர்த்தர் நீ போய் ஒரு சோர ஸ்திரீயை உன்னிடமாய் சேர்த்துக் கொள் என்றார்; அதன்படி அவர் செய்தார் (ஓசியா 1:2, 3). எரேமியாவும், ஓசியாவும் கர்த்தருடைய சொல்லுக்குக் கீழ்ப்படிந்து தேவசித்தம் செய்தார்கள்.

கர்த்தர் சொல்வதை செய்வதே பரிசுத்தம். அவருடைய வசனமே சத்தியம். கர்த்தர் அவனவனை அழைத்ததெப்படியோ, அப்படியே அவனவன் நடக்கக்கடவன். அவனவன் தான் அழைக்கப்பட்ட நிலைமையிலே நிலைத்திருக்கக் கடவன் (1 கொரி 7:17, 20).

கற்பனையை கைக்கொள்வதே காரியம் (1 கொரி 7:19). அது உன்னை மேன்மைப்படுத்தும். ஏவாளைப் போல் வஞ்சகத்தால் வருகிற பொய்யான மேன்மையில் மயங்கி, மிஞ்சின நீதிமானாகாதே, கெட்டுப் போவாய் (பிர 7:16). அவசியமானால் விவாகம் செய். அது பாவமல்ல.

---

"பிற்காலத்திலே மனசாட்சியில் சூடுண்ட பொய்யருடைய மாயத்தினாலே சிலர் வஞ்சிக்கிற ஆவிகளுக்கும், பிசாசுகளின் உபதேசங்களுக்கும் செவி கொடுத்து விசுவாசத்தை விட்டு விலகிப் போவார்கள். விவாகம் பண்ணாதிருக்கவும்...அந்த பொய்யர் கட்டளையிடுவார்கள்"—தீமோ 4:1-3.

---

சிறுவர் பகுதி

## பெற்றோர்களுடைய ஆலோசனைக்குக் கீழ்ப்படி

ராஜா என்பவன் பெற்றோர்களுடைய ஆலோசனைக்குக் கீழ்ப்படியாத துன்மார்க்கமான பையன். அவனது தாயார் அவனுக்காக தினமும் காலை மாலை ஜெபங்களில் கண்ணீரோடு ஜெபிப்பதுண்டு.

ஒரு நாள் ராஜாவின் தாயாருக்கு உணர்த்துதல் கிடைத்தது. உடனே அச்சம்பவத்தை ராஜாவின் தகப்பனுக்கு அவனது தாய் அறிவித்து ராஜாவுக்கு தேர்வு சமயத்தில் விருந்து வீட்டுக்குப் போக புறப்பட்டனர். போகும் சமயத்தில் வீட்டில் உள்ள சாவி (Key)யை அவனிடத்தில் ஒப்படைத்து விட்டு ஓர் அறையைச் சுட்டிக் காட்டி அவ்வறையினுள் போகாதே என்று கூறிவிட்டு கடந்து சென்றனர்.

அந்த அறைக்குள் ஏன் போகக்கூடாது என்ற இறுமாப்புடன் ராஜா கதவை திறந்

தான். கதவைத் திறந்தபோது "பிள்ளைகளே உங்கள் பெற்றோருக்கு கர்த்தருக்குள் கீழ்ப்படியுங்கள்" என்று யாரோ ஒருவரின் சத்தம் கேட்டது. வெளியேபோய் பார்த்தான் ராஜூ யாருமே இல்லை.

அவ்வார்த்தையைப் பொருட்படுத்தாமல் அறையினுள் போய் ஒவ்வொரு பாத்திரங்களையும் திறந்து பார்த்தான். கடைசியாக மரப்பெட்டி ஒன்றைத் திறந்தான். அதனுள் வைக்கப்பட்டிருந்த ஓர் எலி பெட்டியினுள்ளிருந்து வெளியே கண்ணாடியிலான பாத்திரங்களினூடே ஓடினது. கண்ணாடி பாத்திரங்கள் உருண்டு கீழே விழுந்து நொறுங்கினது.

ராஜூ திடுக்கிட்டு அறையை விட்டு வெளியே போக முயற்சி செய்தான். கண்ணாடி துண்டுகளினூடே காலை வைத்து மெதுவாக வெளியேறும்போது கண்ணாடித் துண்டு காலில் புதைந்துவிட்டது. காலில் இரத்தம் வடிந்து கொண்டிருக்கையில் பயங்கரமான வேதனை உண்டானது. அச்சமயத்தில் ராஜூக்கு மயக்கநிலை உருவானது.

அப்போது ஒரு தரிசனம் கண்டான். பூமியிலிருந்து ஒரு ஏணி வைக்கப்பட்டிருந்தது. ஏணியில் அதிகமான ஆட்கள் ஏறுகிறதும் இறங்குகிறதுமாக இருந்தது. அப்போது ராஜூவும் அங்கு என்ன நடக்கிறது என்று பார்க்க ஏறினான். அங்கே போய் பார்க்கும்போது மோட்ஷம், நரகம் இருந்ததை பார்த்தான்.

நரகத்தில் வேதனைப் படுகிறவர்களைப் பார்த்தவுடனே ராஜூவுக்கு கண்களில் இருந்துகண்ணீர் வடிந்தது. அந்தவேதனையை அவனால் பார்த்து சகித்துக் கொள்ள முடியாமல் மோட்சத்தில் உள்ளவர்களோடு சேர்ந்து தேவனை மகிமைப்படுத்த விரும்பி உத்தமர் ஒருவரிடத்தில் நான் வரட்டுமா என்று கேட்டான். அந்த உத்தமர் நீ முதலாவது உன்பெற்றோருக்குக் கர்த்தருக்குள் கீழ்ப்படி. அப்படியானால் தேவனுக்குப் பிரியமாக நடக்கலாம். ஆவிக்குரிய உன்னத நிலையை அடைந்து பிறகு இங்கு உனக்கு இடம் கொடுக்கப்படும். இல்லையானால் நீ பார்த்த நரகத்துக்குத்தான் போவாய் என்று கூறிவிட்டார், உடனே ராஜூ ஏணி வழியாக கீழே இறங்கிவிட்டதாக தரிசனம் கண்டு விழித்தான்.

மறுபடியும் காலின் வேதனை அதிகமாகிக் கொண்டேயிருந்தது அத்தரிசனத்தை அவ்வேதனையினூடே சிந்தித்தான். அறையின் கதவை திறக்கும்போது கேட்ட சத்தத்தை அப்பொழுதுதான் உணர்ந்து கொண்டான். அப்பா அம்மாவின் வார்த்தைகளுக்கு கீழ்ப்படிந்திருந்தால் இவ்வித வேதனை நேரிட்டிருக்காதே என உணர்ந்து கொண்டிருக்கையில் ராஜூவின் பெற்றோர்கள் வந்துவிட்டனர்.

ராஜூ பெற்றோர்களிடம் இனி நீங்கள் சொல்லுகிற ஆலோசனைக்குக் கீழ்ப்படிவேன் என்று மன்னிப்புக் கேட்டுக் கொண்டான் அவனது பெற்றோருக்கு கவலையோடு கூட சந்தோஷமும் உண்டானது. ராஜூவின் தாய் தந்தை தேவனுக்கு நன்றிகூறி தேவனை மகிமைப் படுத்தினார்கள். அன்றைய தினத்திலிருந்து ராஜூ சிறுகாரியமானாலும் பெற்றோர்களிடம் ஆலோசனை கேட்டு நடந்துகொண்டான். அவன் எதைச் செய்தாலும் நன்மையாகவே முடியும். ஒழுங்காக ஞாயிறு பள்ளி சென்றான். பள்ளிக் கூடத்திற்குச் செல்லும்போதும், பள்ளியிலிருந்து வீட்டுக்கு வந்த போதும் வேதம் வாசித்து ஜெபிப்பது வழக்கமாகிவிட்டது. ராஜூவின் நல்லகுணங்களைக் கண்டு பெற்றோர்கள் அளவு கடந்த மகிழ்ச்சி அடைந்தனர். குடும்பம் மகிழ்ச்சியுடன் காணப்பட்டது.

கிறிஸ்துவுக்குள் அன்பு தம்பி, தங்கையரே மனம் மாறிய ராஜூவைப்போல் உங்கள் பெற்றோருக்கு கீழ்ப்படிந்து தேவனை மகிமைப் படுத்துங்கள். தேவனாகிய கர்த்தர் உங்களை ஆசீர்வதிப்பாராக!

---

"சாமுவேல் என்னும் பிள்ளையாண்டானோ பெரியவனாக வளர்ந்து கர்த்தருக்கும் மனுஷருக்கும் பிரியமாக நடந்து கொண்டான்"—1சாமு 2:26.

---

# அறிவிப்பு

பத்திரிக்கையின் ஆசிரியர் CHIEF PASTOR N. LAZAR அவர்கள் ஆரல்வாய்மொழி (கன்னியாகுமரி மாவட்டம்) ஆலயப் பிரதிஷ்டை கள் வேலைகள் முடிந்த பின் கிளை சபைகளை சந்திக்கச் சென்றுவிட்டபடியினால் ஜூலை மாத இதழ் வெளியிட முடியவில்லை. ஆனபடியினால் இந்த இதழ் ஜூலை - ஆகஸ்ட் இதழாக சேர்த்து வெளியிடப்படுகிறது. தொடர்ந்து வழக்கம் போல் புதிய எருசலேம் செய்தி வெளியாகும். யாவரும் ஜெபிக்கவும், உதவவும் கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்.

## நடந்த விவாகங்கள்

| Sl No. | மணமகன் | மணமகள் | மண நாள் | நடந்த இடம் |
|---|---|---|---|---|
| 1. | Bro. A.C ஞானராஜ் | Sis. தங்கமணி | 2-6-87 | ஆரல்வாய்மொழி |
| 2 | Eld. Bro ஞானக் கண்மணிராஜ் | Sis. [illegible] | 4-6-87 | தூத்துக்குடி |
| 3. | Pastor பிலிப்பு | Sis. விக்டோரியா ராணி | 17-6-87 | வள்ளியூர் |
| 4 | Bro அன்புதுரை | Sis. செல்வி | 8-7-87 | வெங்கடாசலபுரம் (கோவில்பட்டி) |

இந்த தம்பதிகளை கர்த்தர் ஆசீர்வதிக்கும்படி யாவரும் ஜெபிக்க வேண்டுகிறோம்.

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் - 45 ★ SEPTEMBER 1987



## "புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ரோ என்று நீங்கள் அறியீர்களே. விழித்திருங்கள். .உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள் ..."

மாற்கு 13 : 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY. INDIA.

# ஆசிரியர் உரை

காரியத்தின் கடைத்தொகையைக் கேட்போமாக, தேவனுக்குப் பயந்து, அவர் கற்பனைகளைக் கைக்கொள். எல்லா மனுஷர் மேலும் விழுந்த கடமை இதுவே, ஒவ்வொரு கிரியையும், அந்தரங்கமான ஒவ்வொரு காரியத்தையும் நன்மையானாலும், தீமையானாலும், தேவன் நியாயத்திலே கொண்டு வருவார் (பிர 12 : 13, 14).

மனிதன் ஈடேறவேண்டும். பாவத்திலிருந்தும், துர் பழக்க வழக்கங்களிலிருந்தும், சுய நலத்திலிருந்தும் விடுபடவேண்டும். தெய்வத்தோடு ஐக்கியமாகி இறையருள் பெற்று பிறர் நலம் நாட வேண்டும். கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினால் உண்டாகும் விடுதலையையும், தெய்வீக ஐக்கியத்தையும் விட்டுவிட்டு விதண்டாவாதம் பேசி தங்களைத் தாங்களே கெடுத்துக் கொள்ளுகிறதுமல்லாமல் பிறரையும் கெடுக்கிற வஞ்சிக்கிற கூட்டத்தாராய் கிறிஸ்துவுடைய நாமத்துக்கு இழுக்காய் ஜீவித்து, பிறர் கிறிஸ்துவைக் குறித்து இடறல் அடையும் படியாய் ஜீவித்து வருகிற அந்திக் கிறிஸ்தவர்களைக் குறித்து தேவ ஜனங்கள் எச்சரிக்கையாய் இருக்கவேண்டும்.

இவர்கள் வீணானவைகளைப் பேசி பொருளாசையும், காம விகாரமும் உடையவர்களாய், கெட்ட நடக்கையுடையவர்களாய் ஜீவித்து, தந்திரமான வார்த்தைகளினாலும், அகந்தையான வீண் வார்த்தைகளினாலும் மக்களை வஞ்சித்து தாங்களே கேட்டுக்குப் போகிறதுமல்லாமல் அநேகரை கேட்டுக்கு வழி நடத்துகிறார்கள். இவர்களுடைய கெட்ட நடக்கைகளை அநேகர் பின்பற்றுகிறார்கள். ஆகையால் தேவ ஜனங்கள் வீண் வார்த்தைகளுக்குச் செவி கொடுக்காமல் தங்களுடைய ஜீவிய அனுபவம் இன்னதென்று உற்று கவனித்து பூரண சுவிசேஷத்தை ஏற்றுக்கொண்டு, பூரண இரட்சிப்பு அடையும்படியாய், பூரண சத்தியத்தை ஏற்றுக்கொண்டு, விடுதலையையும், தெய்வீக ஐக்கியத்தையும் தேடி பெற்றுக்கொள்ளும்படி இயேசுவின் நாமத்தில் கேட்டுக்கொள்கிறேன்.

கிறிஸ்துவுக்குள்,

(Chief Pastor N. LAZAR.)

# பாவ மன்னிப்பு

(தொடர்ச்சி)

எந்த ஒரு சபையையும் தாக்குவதோ, தூற்றுவதோ எங்களுடைய வேலையில்லை. ஆனால்,... "இரவும், பகலும் நம்முடைய தேவனுக்கு முன்பாக நம்முடைய சகோதரர் மேல் குற்றஞ் சுமத்தும் பொருட்டு அவர்கள் மேல் குற்றஞ் சாட்டுகிறவன் தாழத்தள்ளப் பட்டுப் போனான்" (வெளி 12 : 10) என்ற வசனத்தின்படி வலுசர்ப்பமாகிய சாத்தானுடைய ஏஜெண்டுகளாய் செயல்படுகின்ற சிலருடைய வாயை சத்தியத்தின் நிமித்தம் அடைக்க கடமைப்பட்டுள்ளோம். இந்திய பெந்தெகொஸ்தே சபை (IPC) என்ற பெயரோடு தாறுமாறாய் ஒழுங்கற்று ஜீவித்தும் பேசியும், எழுதியும் வருகிற IPC சபையாருடைய கிரியைகளை பொதுஜனங்கள் அறிந்து கொள்ளும்படி இவைகளை முன் வைக்கின்றோம்.

'சுவிசேஷ பூரிகை' என்ற IPC பத்திரிக்கையின் (சுவிசேஷ பூரிகை 5th Sep. 1971, இதழ் 4, பக்கம் 5) "பாவங்களை மன்னிப்பது யார்" என்ற தலைப்பில் பாஸ்டர் S. சிரேஸ்டன் என்பவர் "புதிய எருசலேம் சபை" யையும் சபை உபதேசத்தையும், ஊழியர்களையும் பெயர் சொல்லி தாக்கி ஒரு கட்டுரை எழுதியிருந்தார். அதற்குப் பதில் எழுதி, எச்சரிப்பும் கொடுத்து பாவ மன்னிப்பின் உபதேசத்திற்கு விளக்கம் கொடுத்து மேற்படி பத்திரிக்கைக்கும், கட்டுரை எழுதிய பாஸ்டர் S. சிரேஸ்டன் என்பவருக்கும் அனுப்பி வைத்தோம். சபையினுடைய பெயரையும் குறிப்பிட்டு கீழ்த்தரமாக தாக்கி எழுதியிருந்தபடியால் பதில் கொடுக்க வேண்டியதாய் இருந்தது.

அதற்கு, எந்தவிதப் பதிலும் கொடுக்காத இந்த IPCக்காரர்கள், சீயோன் பூரிகை (பூரிகை 6, NOV. 1956, தொனி2) என்ற தங்கள் ஆதாரப் பூர்வமான பத்திரிக்கையில் பக்கம் 14-ல் "நவீன போதனைகள் புதிய எருசலேம் சபை" என்ற தலைப்பில் ஒரு கட்டுரை வெளியிட்டு உள்ளார்கள். அந்தக் கட்டுரைக்கு விளக்கம் கேட்டு ஓரிடத்தில் கூடி சத்தியத்தை பேசுவோம். ஒன்று நீங்கள் கூட்டுங்கள் நாங்கள் வருகிறோம். அல்லது நாங்கள் கூட்டுகின்றோம். நீங்கள் வாருங்கள். ஒரு நாள் குறிப்பிட்டு (அப் 25: 23) அந்த நாளில் சத்தியம் எது என்பதை பேசி முடிவு காண்போம் என்று அந்தப் பத்திரிக்கையின் எடிட்டர்களாகிய பாஸ்டர் P. ஆபிரகாம், பாஸ்டர் சாமுவேல் B.A., B.D , பாஸ்டர் A. செல்வன், பாஸ்டர் S. சிரேஸ்டன் ஆகியோருக்கு 15-12-1956-ல லட்டர் ஒன்று எழுதி அனுப்பியிருந்தோம்.

இந்நாள் வரை இந்த தூஷணக்காரர்களிடமிருந்து பதில் இல்லை. ஒரு உலகத்தான் கூட பெயர் சொல்லி மேடையில் சரியான ஆதாரமின்றி தூஷிக்கமாட்டான். ஆனால் கிறிஸ்தவர்கள் என்று சொல்லித்திரிகிற இந்த IPC-காரர்களுடைய செயல்களை கவனிக்கவும்.

1971-ல் சுவிசேஷ பூரிகையில் வெளியான செய்தியையும், அதற்கு கொடுக்கப்பட்ட விளக்கங்களும் அவசியமானபொழுது பின்னால் வெளியிடுகிறோம். இப்பொழுது IPC - சபையின் அதிகார ஏடான சீயோன் பூரிகையில் 1986-ல் வெளியான கட்டுரை பின்வருமாறு.

**"நவீன போதனைகள்" "புதிய எருசலேம் சபை"**

"மறுமைக் காலத்தில் கள்ளர்கள் தோன்றுவது போல புதிய புதிய சபை நிறுவனங்கள் எழும்பிக் கொண்டிருக்கின்றன. சபைகள் திரளாகப் பெருகுவதில் மகிழ்ச்சியடைகிறோம். என்றாலும், பலவித பிரிவுகள் எழும்பி தங்களையே நீதிமான்கள் என நிரூபிக்க முற்படுவது வரவேற்கத்தக்கது அல்ல. அண்மையில் அறியப்படுகிற ஒரு புதிய சபை நிறுவனமாகும். "புதிய எருசலேம் சபை"-அது பற்றிய சில கருத்துக்களை ஒரு விசுவாசி கேட்டிருக்கிறார். எனவே தமிழகத்து கிறிஸ்தவர்களை இது பற்றி எழுதி உணர்த்துவது அவசியமாகக் காணப்பட்டது.

முதலாவதாக, இந்த சபையின் பெயரே பிரச்சனைக்குரியதாகும். புதிய எருசலேம் என்பது எந்த ஒரு சபை நிறுவனத்துக்கும் சொந்தமானது அல்ல. அது ஆட்டுக் குட்டியானவருடைய மணவாட்டியின் வீடு ஆகும். எனவே, "ஆட்டுக்குட்டியானவருடைய... மனைவியாகிய மணவாட்டி என்றே அழைக்கப்படுகிறது. (வெளி 21:9,10). அந்த மணவாட்டி உலகம் முழுவதிலும் இருந்து எல்லா காலங்களிலுமாக தெரிந்துகொள்ளப் பட்டவர்களின் கூட்டமாகும். அந்த புதிய எருசலேம் என்பது எல்லா தேவஜனத்திற்கு முரியதாகையால் ஒரு தனி பிரிவினர் அதை சொந்தம் பாராட்டுவது ஆட்சேபனைக் குரியது ஆகும்.

இந்தப் பெயரைச் சூட்டிக்கொண்ட இப் பிரிவினர் தாங்கள் மட்டும்தான் புதிய எருச லேமுக்குரியவர்கள் என்று சொல்லாமல் சொல்வது போல் உள்ளது. அதுபோல தாங்கள்தான் 1,44,000 பேர் என்றும் மண வாட்டி என்றும் கூறிக் கொண்ட பலர் இப் பொது கற்றுக்கொண்டு எல்லோரையும் நேசிக்கத் துவங்கியுள்ளனர். இவர்களும் இந்தப் பெயரை சூட்டிக் கொண்டதின் தவறை உணரும் காலம் வருவதாக!

மேலும் புதிய எருசலேம் என்பது இது காறும் ஸ்தாபிக்கப்படவில்லை. அது சபை கால முடிவில் இரகசிய வருகைக்குப் பின்பு அந்திக் கிறிஸ்துவின் ஆட்சிக்குப் பின் இயே சுவின் 1000 ஆண்டாட்சிக்குப் பின் பூமியின் அக்கினி அழிவுக்குப் பின், புதிய வானம் பூமி தோன்றும் போது புதிய பூமியில் ஸ்தா பிக்கப்படும் தேவ இராஜ்யத்தின் தலை நகரமாகும். அதன் பெயரைப் பயன்படுத்தி ஒரு ஸ்தாபனத்தை நிறுவுதல் அகாலப்பிறவி போன்ற செயலாகும்.

தாங்கள் தான் புதிய எருசலேமுக்குரிய வர்கள் என இவர்கள் எண்ணுகிறார்களோ என்னமோ? அப்படியானால் பேதுருவும், பவுலும் பல கோடி பக்தர்களும் இவர்களது சபை நிறுவனத்தில் அங்கத்தினராக வில்லையே. அவர்களைக் காட்டிலும் நீதிமான் களாகி விட்டார்களா?

கலியாணமாகாதவர்கள் மட்டும் தான் புதிய எருசலேமில் இருப்பார்கள் என்று ஒரு சபையினர் கூறிவந்தனர். அப்படியானால் கலியாணமான, பேதுருவின் பெயரை மதி லின் அஸ்திபாரத்தில் எழுதியது எப்படியாம் (வெளி 21:14). ஆட்டுக்குட்டியானவரின் 12 அப்போஸ்தலரின் நாமங்களும் அங்கே எழுதப்பட்டுள்ளது.

சிலர் பழைய ஏற்பாட்டு பரிசுத்தவான் களுக்கு அதில் பங்கில்லை என்பார்கள். இது வும் அறிவு கெட்ட அறிவு ஆகும். அவர்க ளுக்கு அங்கே பங்கு இல்லாவிட்டால் அதன் வாசல்களில் இஸ்ரவேல் சந்ததியாகிய 12 கோத்திரத்தாருடைய நாமங்களும் எழுதப் பட்டிருப்பது ஏன்? வெளி (21:13). புதிய எருசலேம் இருப்பது என்பது ஏதோ ஒரு வகுப்பாருடைய குத்தகை அல்ல. புதிய ஏற்பாட்டு சபையாகிய மணவாட்டிக்கும் தோழமைத் தன்மையில் வருகின்ற பழைய ஏற்பாட்டுக் கால பரிசுத்தவான்களுக்கும் உரியதே ஆகும். எனவே இந்தப் பெயரை ஒரு தனி பிரிவினர் பயன்படுத்துவது நியாய மற்றதாகும்.

உபதேசம் : பாவமன்னிப்புக்காக ஊழியரி டம் பாவங்களை அறிக்கையிட வேண்டு மென்று இந்தச் சபையினர் போதிக்கின்றனர். இது துர் உபதேசமாகும். இது பற்றி காலஞ் சென்ற பாஸ்டர் S ஞானமுத்து அவர்கள் எழுதிய கட்டுரை ஒன்றை கீழே படித்து தெளிவடைவோமாக.

புதிய ஏற்பாட்டில் கூறப்படும் பாவ மன்னிப்புகள் நான்கு. அவை : ஒருவருக் கொருவர் மன்னித்தல் தேவ ஊழியர் மன் னித்தல், சபை மன்னித்தல், தேவன் மன் னித்தல் முதலியவையாகும். (மத் 18:21-22; யோவா 20:23; II யோவா 1:9...)

1. ஒருவருக்கொருவர் மன்னித்தல்:-

(...தொடரும்...)

---

"கிருபையினாலும் சத்தியத்தினாலும் பாவம் நிவிர்த்தியாகும்"... (நீதி16:6)

---

# ஆதியாகமத்தைப் பற்றி ஓர் ஆராய்ச்சி

(தொடர்ச்சி)

**1. முன்னே இருந்தவைகள் :**

ஆதியாகமம் 1 : 3 முதல் நாம் காண்பவைகளில் அநேகம் தேவனுடைய ஆதி சிருஷ்டிப்பல்ல. ஏற்கனவே தேவனால் சிருஷ்டிக்கப்பட்டு அழிந்தவைகளை சீர்ப்படுத்தி ஒழுங்குபடுத்தி முன்னிருந்த நிலைக்கு கொண்டு வந்ததும், அதோடு சிலவற்றைப் புதிதாக சிருஷ்டித்ததுமாகும்.

வெளிச்சம், வானம், தண்ணீர், பூமி, இருள் இவைகளும் இன்னும் அநேக பொருட்களும் முன்னே இருந்தவைகள் என்று அறிகிறோம். அழிவினால் ஒளி இழந்து பிரயோஜனமின்றி இருந்த அந்த முந்திய உலகத்தை தேவன் கட்டளையிட்டு மறுபடியும் இயங்கச் செய்தார். தேவன் தம்முடைய கிருபையினால் சூரியன் மறுபடியும் வெளிச்சம் கொடுக்கும்படி கட்டளையிட்டார். இவைகள் முந்திய உலகத்திலிருந்து, தேவனுடைய கோபத்தில் நிலை குலைந்தவைகளாகும் (எரே 4 : 23-26, 27).

**2. தேவன் வேறு பிரித்தவைகள் : (ஆதி 1 : 4, 7)**

I. இருள், வெளிச்சம் (ஆதி 1 : 4): தேவன் வெளிச்சத்தையும், இருளையும் வெவ்வேறாகப் பிரித்தார். ஆதி 1 . 14-18ல் தேவன் பகலுக்கும், இரவுக்கும் வித்தியாசம் உண்டாக்க சூரிய, சந்திர, நட்சத்திரங்களை கட்டளையிட்டார் என்று வாசிக்கிறோம்.

II. தண்ணீர் (ஆதி 1 : 2): ஆதி 1 : 7ல் தேவன் ஜலத்தின் மத்தியில் ஆகாய விரிவை உண்டு பண்ணி, ஆகாய விரிவுக்கு கீழே இருக்கிற ஜலத்திற்கும், ஆகாய விரிவுக்கு மேலே இருக்கிற ஜலத்திற்கும் பிரிவை உண்டு பண்ணினார் என்றுள்ளது. தேவன் சிருஷ்டிக்கவில்லை. பிரிவை உண்டாக்கினார் (எரே 4 : 23-27; சங் 104 : 6-9; II பேதுரு 3 : 5-5).

**3. ஆகாயவிரிவு, மேகங்கள் : ஏற்கனவே இருந்தது : (ஆதி 1 : 8)**

வானங்கள் : ஏசா 40 : 22; 44 : 24; எரே 10 : 12; 51 : 15. மேகங்கள்: யோபு 26 : 8, 9; சங் 77 : 17; நீதி 8 : 28. இந்த வானம், வானங்களில் மூன்றாகும். இப்பொழுது மறுபடியும் ஒழுங்கு படுத்தினார்.

**4. பூமி : முன்னமே இருந்தது (ஆதி 1 : 1; யோபு 38 : 1-7; சங் 104 : 5; பிரசங் 1 : 4; நீதி 8 : 22-31)**

அந்தப் பூமி ஜலப் பிரளயத்தினால் தண்ணீரால் மூடப்பட்டிருந்தது. ஆதி 1 : 9, 10ல் மூன்றாம் நாள் தேவன் தண்ணீரை ஓரிடம் சேரவும் வெட்டாந்தரை காணப்படவும் கட்டளையிட்டு, காய்ந்த வெட்டாந்தரைக்கு பூமி என்று பேரிட்டார். காண் : சங் 104 : 6-9.

**5. சூரியன், சந்திரன் :(ஆதி 1 : 14-18)**

நாலாம் நாள் சூரியன் உண்டானதாக இருப்பது முன் இருந்து ஒளி இழந்து வெறுமனே சுற்றிக் கொண்டிருந்த சூரியனை, சந்திரனை தேவன் பிரகாசிக்கும்படி செய்ததேயாகும். அல்லவென்றால், சாயங்காலமும், விடியற்காலமுமாகி முதலாம் நாள், இரண்டாம் நாள், மூன்றாம் நாள் ஆயிற்றென்று சொல்ல முடியாதே.

(தொடரும்)

"தேவன் ஆதிமுதல் அந்தம் மட்டும் செய்து வரும் கிரியையை மனுஷன் கண்டு பிடியான்" (பிர 3 : 11).

# அபாயம்! அபாயம்!!

கிறிஸ்துவுக்குள் அருமையானவர்களே! இன்றைய கிறிஸ்தவ மக்களுக்கு உண்டாயிருக்கிற ஒரு பயங்கரமான அபாயத்தை அல்லது ஆபத்தை எழுதி உணர்த்துவது கிறிஸ்துவுக்குள் நலமாய் தோன்றினபடியால் இதை எழுதுகிறோம்.

பொதுவாக மனித ஜனத்துக்கு ஆபத்தை (அபாயத்தை) உண்டு பண்ணக் கூடிய எவ்விடங்களிலும், அதற்குரிய அடையாளங்களைக் காண்பித்து' ஆபத்து (அபாயம்) தொடாதே; மெதுவாகச் செல், நின்று கவனித்துப் போ என்றெல்லாம் எச்சரிப்பு வார்த்தைகள் ஆங்காங்கு பொறிக்கப்பட்டிருப்பதை நாம் காணுகிறோம். இவ்விதமான அறிவிப்புகளைக் கவனித்து தங்களைக் காத்துக் கொள்ளுகிறவர்கள் மேற்படி ஆபத்துக்கு தங்களை தப்புவித்துக் கொள்ளுகிறார்கள். இவ்வித அறிவிப்புகளைக் கவனியாது மதியீனமாய் நடப்பவர்கள் மேல் ஆபத்துக்கள், விபத்துகள் வருகிறது.

இதுபோலவே கிறிஸ்துவை பின்பற்றிச் செல்லும் ஒவ்வொரு ஆத்துமாவிற்கும் வேதத்தில் ஆங்காங்கே சில எச்சரிப்பான அறிவிப்புகள் தரப்பட்டிருக்கிறது. இவைகளைக் கவனித்து கிறிஸ்துவின் பாதையில் செல்பவர்கள் தங்கள் ஆத்துமாவை காத்துக் கொள்ளுகிறார்கள். அப்படியில்லாதோர் வேதனைக்குள் அகப்படுகிறார்கள்.

கிறிஸ்தவர்கள் என்று அழைக்கப்படுகிற, எல்லோரும் கிறிஸ்தவர்கள் அல்ல. கிறிஸ்துவைப் பிரசங்கிக்கிற எல்லோரும் கிறிஸ்துவின் ஊழியரும் அல்ல. இந்த அபாயத்தை தேவனுடைய ஜனங்கள் கண்டு கொள்வது நல்லது. "கள்ளத் தீர்க்கதரிசிகளும் ஜனங்களுக்குள்ளே இருந்தார்கள். அப்படியே உங்களுக்குள்ளும் கள்ளப் போதகர்கள் இருப்பார்கள்" (II பேது 2 : 1) என்று பரிசுத்த ஆவியானவர் கூறுகிறார்.

அதுமாத்திரமல்ல, கடைசி நாட்களில் கிறிஸ்துவுக்கு எதிரியான ஒருவன் தோன்றுவான் என்றும் அவனுடைய ஆவியைப் பெற்றவர்கள் இப்பொழுதே கிரியை செய்கிறார்கள் என்றும் பரிசுத்தாவியானவர் கூறியிருக்கிறார். அவனை அந்திக் கிறிஸ்து (Anti Christ) என்று வேதம் அழைக்கிறது. இவனுடைய ஆவியைப் பெற்றவர்கள் எப்படியிருப்பார்கள்? இவர்களை எப்படி அறிந்து கொள்ளலாம் என்று தேவனுடைய பிள்ளைகள் புரிந்து கொள்ளாது போனால் இந்த அபாயத்துக்கு தப்பித்துக் கொள்வது கடினமாகும்.

இதைக் குறித்துப் பரிசுத்தாவியானவர் என்ன சொல்லுகிறார் என்று பார்ப்போமா? பிள்ளைகளே, இது கடைசி காலமென்று அறிய முடிகிறது. அந்திக் கிறிஸ்து வருகிறானென்று கேள்விப்பட்டபடி இப்பொழுதும் அநேக அந்திக் கிறிஸ்துக்கள் இருக்கிறார்கள். அதினாலே இது கடைசிக் காலம் என்று அறிகிறோம் (I யோவா 2 : 18)

பிக்பாக்கெட் அடிக்கிற திருடர்கள் ஒரு மனிதனிடமிருந்து பர்ஸைத் திருடி கொண்டு ஓடும் பொழுது பர்ஸைப் பறி கொடுத்தவன் மேற்படி திருடனைத் திருடன், திருடன் என்று கூறி துரத்திக் கொண்டே போவான். திருடன் வேகமாய் ஓடி ஜனக் கூட்டத்திற்குள் புகுந்து கொண்டு திருடன் போகிறான் பிடியுங்கள், பிடியுங்கள் என்று கூவிக் கொண்டே ஓடுவான். இவன் தான் திருடன் என்பதை அறியாத மக்கள் அவன் சொல்வதை நம்பி அவர்களும் இவனுடன் சேர்ந்து திருடனைப் பிடிக்க ஓடுவார்கள். இது போலவே இந்நாட்களின் கிறிஸ்தவ மண்டலம் காணப்படுகின்றது. அந்திக் கிறிஸ்து யார்? அவன் வேலை என்ன? அவனுடைய ஆவியைப் பெற்றவர்கள் என்ன செய்வார்கள் என்பதை அறிய வேதத்தின் மூலம் அறிந்து கொள்ளாதவர்கள் அந்திக் கிறிஸ்தவர்களை உண்மைக் கிறிஸ்தவர்கள் என்றும் உண்மைக் கிறிஸ்தவர்களை அந்திக் கிறிஸ்தவர்கள் என்றும் துணிகரமாய் கூற ஆரம்பித்து விட்டார்கள். இந்த அபாயத்தின் முடிவு என்னமாய் இருக்கும் என்

பதை தேவ ஜனங்கள் அறிந்து கொள்ள வேண்டும். "பரிசுத்தாவிக்கு விரோதமாய் சொல்லப்படும் தூஷணம் என்றென்றைக்கும் மன்னிக்கப்படமாட்டாது" (மாற் 3 : 29) என்று கர்த்தராகிய இயேசு கிறிஸ்து கூறுகிறார்.

**அந்திக் கிறிஸ்து எப்படி இருப்பான்?**

"மாம்சத்தில் வந்த இயேசு கிறிஸ்துவை அறிக்கை பண்ணாத எந்த ஆவியும் தேவனால் உண்டானதல்ல; வருமென்று நீங்கள் கேள்விப்பட்ட அந்திக் கிறிஸ்துவின் ஆவி அதுவே. அது இப்பொழுதும் உலகத்தில் இருக்கிறது" (1 யோவா 4 : 3) என்று பரிசுத்தாவியானவர் கூறுகிறார். சிலர் இந்த வசனத்தை தப்பிதமாய் புரிந்து கொண்டு கொடிய அபாயத்தை அணுகியிருக்கிறார்கள். அதாவது "இயேசு" என்று வாயினால் அறிக்கை பண்ணுகிற ஆவியெல்லாம் தேவனுடைய ஆவி தான் (1 யோவா 4 : 2) என்று நம்புகிறார்கள். அருமையான வாசகர்களே, வேதத்தை நீங்கள் ஆராய்ந்து பார்த்தால் இதற்குரிய விளக்கங்களை அறிந்து கொள்வீர்கள். சில பிசாசுகள் இயேசுவே! தாவீதின் குமாரனே! என்றெல்லாம் சொல்லியிருக்கிறது. பிசாசு பிடித்த அநேகர் இயேசுவை துதிப்பார்கள். இயேசுவின் இரத்தம் என்று சொல்வார்கள். அந்நிய பாஷையும் பேசுவார்கள். இவைகளைக் கண்டு அவரில் அசுத்த ஆவி இல்லையென்று கூறுவோரும் உண்டு.

ஒரு சம்பவத்தை மட்டும் குறிப்பிட விரும்புகிறேன். பம்பாயில் எனக்கு அறிமுகமான ஒரு கிறிஸ்தவ குடும்பம். இளந்தம்பதிகள். திருமணம் தேவாலயத்தில் குருவானவர் மூலந்தான் நடந்தது. ஒருநாள் இருவரும் குடும்ப ஜெபம் செய்து கொண்டிருந்த போது அந்தப் பெண்ணிடமிருந்து பயங்கரமான உறுமல் சத்தம் கேட்டது. கணவன் ஜெபத்தை நிறுத்திவிட்டு மனைவியின் முகத்தைப் பார்த்தார். முகம் பயங்கரமான தோற்றத்தில் காணப்பட்டது. திடீரென்று அந்த அம்மையார் வாய் திறந்து டேய்! நான் யார் தெரியுமா? நீ ஜெபமா பண்ணுகிறாய் உன்னை என்ன செய்கிறேன் பார்? என்று ஆவேசமாய் அவர் மேலே பாய்ந்தது. அந்த சகோதரன் அந்த ஆவிக்கு விலகி வெளியே ஓடி வந்து பக்கத்து வீட்டில் இருந்த நமது விசுவாசி ஒருவரிடம் விபரத்தைச் சொன்னார். இருவருமாக வீட்டினுள்போய் பார்க்கும் பொழுது அந்தச் சகோதரியின் நிலைமை பரிதாபமாய் இருந்தது. உடனே நமது சகோதரர் சகோதரனே, இது ஒரு பயங்கரமான ஆவியாய் காணப்படுகிறது. நீங்கள் எங்கள் ஊழியக்காரர்களிடம் அழைத்துப் போங்கள், அவர்கள் கர்த்தருடைய வல்லமையால் துரத்தி விடுவார்கள் என்று கூறியிருக்கிறார்.

மறுநாள் காலையில் அந்த சகோதரிக்கு சிறிது தெளிவு வந்தபின், நமது சகோதரர் சொன்ன விபரத்தை தன் மனைவியிடம் கூறியிருக்கிறார். அப்படியெல்லாம் நாம் வேறே சபைக்கு போகக் கூடாது. நமது ஊருக்குப் போய் அங்கே ஜெபம் பண்ணி வரலாம் என்று கணவனை அழைத்துக் கொண்டு தமிழ் நாட்டுக்குப் போனது. அங்கே ஒரு அம்மா ஜெபம் பண்ணுவார்கள். அவர்களிடம் போய் இருவரும் ஜெபம் பண்ணினார்கள். உடனே மேற்படி சகோதரி அந்நிய பாஷையில் பேசினது. இதைக்கண்ட ஜெபம் பண்ணுகிற அம்மா அந்த சகோதரியின் கணவனைப் பார்த்து தம்பி! கர்த்தர் உன்னை ரொம்ப நேசிக்கிறார். பார்! உன் மனைவியிடமிருந்த அசுத்த ஆவியைத் துரத்திவிட்டு பரிசுத்தாவியைக் கொடுத்து விட்டார். இனி அவளிடம் பிசாசு இருக்கிறது என்று கூறாதே, என்று புத்திமதியும் கூறி இருவரையும் அனுப்பி விட்டார்கள். மீண்டும் இருவரும் பம்பாய் வந்தார்கள். வந்ததும் நமது சகோதரனைப் பார்த்து: பிரதர் என் மனைவிக்கு அபிஷேகம் கிடைத்து விட்டது பிசாசு ஓடி விட்டது என்பதாகக் கூறினார்.

அப்படியா ரொம்ப சந்தோஷம் என்று அவர் கூறினார்.

சுமார் ஒரு வாரத்துக்குப் பின் ஒரு நாள் மேற்படி தம்பதிகள் இருவரும் குடும்ப ஜெபம் பண்ணினார்கள். டேய்! நீ பைபிளா வாசிக்கிறாய், நான் யார் தெரியுமா? என்று நாக்கையும் நீட்டிக்கொண்டு கோபாவேசமாய் காணப்பட்டது. அந்த சகோதரன் மிகவும் பயந்து நம்முடைய சகோதரரிடம் விபரத்தைக் கூறினார். என்ன சகோதரரே, உங்கள் மனைவிக்கு பரிசுத்தாவி கிடைத்து

விட்டதாகக் கூறினீர்களே, இப்பொழுது இப்படி என்னவென்று கேட்க, சகோதரனே, வஞ்சிக்கப்பட்டு போனேன், எனக்கு உதவி செய்யுங்கள் என்று கெஞ்சவே நமது சகோதரர் மூலமாய் அந்த குடும்பத்தை சபைக்கு அழைத்து வந்து, கர்த்தருடைய ஊழியக்காரர்கள் மூலமாய் அந்தப் பிசாசை துரத்தி அந்தக் குடும்பத்துக்கு ஆறுதல் அளித்தார்கள் ஆகையினால் அந்நிய பாஷை பேசி விட்டீர்கள் பரிசுத்தாவிதான் என்று நம்பி ஏமாந்துவிடாதீர்கள்.

இயேசுவை கிறிஸ்து அல்ல என்று கூறுவது அதாவது, அவர் தேவனுடைய குமாரன் அல்ல, தேவனால் அனுப்பப்பட்டவர் அல்ல, அவர் ஒரு தீர்க்கதரிசி, அவர் நம்மைப் போல் ஒரு மனிதன் என்று கூறி இயேசு கிறிஸ்துவை தேவனுடைய குமாரன் என்று அறிக்கை பண்ணாமல், மறுதலிப்பவர்களும், இயேசு கிறிஸ்து தான் பிதா அவர் குமாரன் அல்ல என்று மறுதலிக்கிறவர்களும் அந்திக் கிறிஸ்துக்கள் என்று பரிசுத்தாவியானவர் கூறுகிறார் (I யோவா 2:22, 23; II யோவா 7)

"மேலும் கிறிஸ்துவின் உபதேசத்திலே நிலைத்திராமல் மீறி நடக்கிற எவனும் தேவனுடையவனல்ல" (II யோவா 9). இப்படிப்பட்டவர்கள் அந்திக் கிறிஸ்துக்கள், அதாவது கிறிஸ்துவின் எதிரிகள் என்று பரிசுத்த ஆவியானவர் கூறுகிறார்.

கிறிஸ்துவின் உபதேசங்கள் என்னவென்று புதிய ஏற்பாட்டை ஆராய்ந்தால் விளங்கும். சிலவற்றை மட்டும் குறிப்பிடுகிறேன். தேவனுடைய வார்த்தைகளை ஆராய்ந்து யார் அந்திக் கிறிஸ்து என்பதைக் கண்டுபிடித்து உங்கள் ஆத்துமாக்களைக் காத்துக் கொள்ளுங்கள்.

(1) "விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான், விசுவாசியாதவன் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படுவான்" (மாற் 16:16), என்பது கிறிஸ்துவின் உபதேசம். விசுவாசியாத குழந்தைக்கு ஞானஸ்நானம் கொடுப்பது கிறிஸ்துவுக்கு எதிரான அந்திக் கிறிஸ்துவின் உபதேசம்.

(2) நீங்கள் பரிசுத்தாவியினாலே ஞானஸ்நானம் பெறுவீர்கள் என்னிடத்தில் கேள்விப்பட்ட பிதாவின் வாக்குத்தத்தம் நிறைவேறக் காத்திருங்கள் (அப் 1:4, 5) என்பது கிறிஸ்துவின் உபதேசம்.

அப்படியல்ல நீ இயேசுகிறிஸ்துவை விசுவாசித்த உடனேயே உனக்குள் பரிசுத்தாவி வந்துவிட்டார் என்பது அந்திக் கிறிஸ்துவின் உபதேசம்.

(3) "ஜலத்தினாலும், ஆவியினாலும் பிறவாவிட்டால் தேவனுடைய ராஜ்யத்தில் பிரவேசிக்க மாட்டான் என்று மெய்யாகவே, மெய்யாகவே சொல்லுகிறேன்" (யோவா 3:5) என்பது கிறிஸ்துவின் உபதேசம்.

அது பொய், பொய் ஞானஸ்நானமும் பரிசுத்தாவியும் வேண்டாம் சில நற்கிரியைகளைச் செய்துவிட்டால் போதும் பரலோகம் போகலாம் என்பது அந்திக் கிறிஸ்துவின் உபதேசம்.

(4) "ஆண்டவரும் போதகருமாகிய நானே உங்கள் கால்களைக் கழுவினதுண்டானால் நீங்களும் ஒருவருடைய கால்களை ஒருவர் கழுவக் கடவீர்கள்" (யோவா 13:14) என்பது கிறிஸ்துவின் உபதேசம்.

காலைக் கழுவித்தான் தாழ்மையைக் காண்பிக்க வேண்டுமா? உள்ளத்தில் தாழ்மையிருந்தால் போதுமே. ஆண்டவர் இருதயத்தை தானே பார்க்கிறார் என்பது அந்திக் கிறிஸ்துவின் போதனை.

(5) "அவர் அப்பத்தை எடுத்து ஸ்தோத்திரம் பண்ணி, அதைப் பிட்டு அவர்களுக்குக் கொடுத்து இது உங்களுக்காகக் கொடுக்கப்படுகிற என்னுடைய சரீரமாயிருக்கிறது. என்னை நினைவு கூரும்படி இதைச் செய்யுங்கள் என்றார். போஜனம் பண்ணின பின்பு, பாத்திரத்தையும் கொடுத்து இந்தப் பாத்திரம் உங்களுக்காக சிந்தப்படுகிற என்னுடைய இரத்தத்தினாலாகிய புதிய உடன்படிக்கையாயிருக்கிறது. என்னை நினைவு கூரும்படி இப்படிச் செய்யுங்கள்" (லூக் 22:19, 20; I கொரி 11:23-26) இது கிறிஸ்துவின் போதனை.

ஆனால் அப்பத்தை மாத்திரம் சபையாருக்கு கொடுத்துவிட்டு இரசத்தை குருவானவரே குடித்து விடுவது, இது அந்திக் கிறிஸ்துவின் உபதேசமாகும்.

(6) "தேவன் சுத்தமாக்கினவைகளைத் தீட்டாக எண்ணாதே" ஜாதி வித்தியாசம் பாராதே என்பது கிறிஸ்துவின் உபதேசம். நான் என்னுடைய பழைய ஜாதியில்தான் பெண் எடுப்பேன், கொடுப்பேன் என்பது அந்திக் கிறிஸ்துவின் உபதேசம்.

(7) "இந்தக் கல்லின் மேல் என் சபையைக் கட்டுவேன். பரலோக ராஜ்யத்தின் திறவுகோல்களை நான் உனக்குத் தருவேன். நீ பூலோகத்தில் கட்டுகிறது எதுவோ அது பரலோகத்திலும் கட்டப்பட்டிருக்கும்" (மத் 16: 18-19) என்பது கிறிஸ்துவின் உபதேசம்.

இந்நாட்களில் அப்போஸ்தலர்களும் கிடையாது. பரலோக இராஜ்யத்தின் திறவுகோல்களை தேவன் யாரிடமும் கொடுக்காமல் தானே வைத்துக் கொண்டார். காரணம் எல்லோரும் திருடர்கள். திறவுகோலைக் கொடுத்தால் பரலோகத்தை திறந்து எல்லாவற்றையும் எடுத்துக் கொள்வார்கள் என்பது அந்திக் கிறிஸ்துவின் உபதேசம்.

(8) "இந்தப் பூமியில் ஆயிரம் வருடம் அரசாட்சி செய்வார்கள் (வெளி 20:6; வெளி 5:9, 10) என்பது கிறிஸ்துவின் உபதேசம்.

இல்லவே இல்லை ஆயிர வருட அரசாட்சி பரலோகத்தில் தான் என்பது அந்திக் கிறிஸ்துவின் உபதேசம்.

(9) "கர்த்தர் தாமே ஆரவாரத்தோடும் பிரதான தூதனுடைய சத்தத்தோடும் தேவ எக்காளத்தோடும் வானத்திலிருந்து இறங்கி வருவார். அப்பொழுது கிறிஸ்துவுக்குள் மரித்தவர்கள் முதலாவது எழுந்திருப்பார்கள். பின்பு உயிரோடிருக்கும் நாமும் கர்த்தருக்கு எதிர்கொண்டு போக மேகங்கள் மேல் அவர்களோடே கூட ஆகாயத்தில் எடுத்துக் கொள்ளப்பட்டு இவ்விதமாய் எப்பொழுதும் கர்த்தருடனே கூட இருப்போம்" (I தெச 4:16, 17; மத் 24:30, 31) என்பது கிறிஸ்துவின் உபதேசம்.

அப்படியல்ல, கிறிஸ்து வந்துவிட்டார். மணவாட்டியைக் கூட்டிச் சேர்க்கிறார், மனுஷகுமாரன் மனுஜோதி ஆச்சிரமத்தின் அறைக்குள் இருக்கிறார் (மத் 24:26) என்பது அந்திக் கிறிஸ்துவின் உபதேசம்.

பிரியமானவர்களே! எழுதிக் கொண்டே போனால் ஏடு தாங்காது. ஆனால் இந்த நாட்களில் கிறிஸ்துவைப் பின்பற்றுகிற மக்கள், கிறிஸ்துவின் உபதேசத்தை அறிந்து கொள்ள விரும்பாமல் அற்புத அடையாளங்களைக் காணவே விரும்புகின்றனர். இதுவே அந்த அபாயம் என்பதை அறிவிக்க விரும்புகிறோம். சிலர் என்னுகிறார்கள். கிறிஸ்துவின் ஆவி இல்லாது போனால் இப்படிப்பட்ட அற்புதங்களைச் செய்ய முடியாதே என்று.

கர்த்தராகிய இயேசுகிறிஸ்து கூறுவதைக் கவனியுங்கள். ஏனெனில் கள்ளக் கிறிஸ்துக்களும், கள்ளத் தீர்க்கதரிசிகளும் எழும்பி கூடுமானால் தெரிந்து கொள்ளப்பட்டவர்களையும் வஞ்சிக்கத்தக்கதாய் பெரிய அடையாளங்களையும், அற்புதங்களையும் செய்வார்கள் இதோ முன்னதாக உங்களுக்கு அறிவித்திருக்கிறேன் என்கிறார் (மத் 24: 24, 25.)

அருமையான வாசகர்களே! முதலாவது நரகத்துக்குச் செல்பவன் அந்திக்கிறிஸ்துவே (வெளி 19:20). ஆகையால் கிறிஸ்துவின் உபதேசத்தில் நிலைத்து நிற்காத யாவரும் இந்த அந்திக் கிறிஸ்துவுடன் அக்கினிக் கடலில் தள்ளப்படுவார்கள். இந்த அபாயத்துக்கு விலகி நீங்கள் கிறிஸ்துவின் வருகையில் அவருடைய ராஜ்யத்துக்குள் பிரவேசிக்க கிறிஸ்துவின் உபதேசத்தை அறிந்து அதிலே நிலை நிற்பீர்களாக. கர்த்தராகிய இயேசு கிறிஸ்து வருகிறார் (II தெச 1:7, 8)

"மலையிலே உனக்குக் காண்பிக்கப்பட்ட மாதிரியின் படியே நீ எல்லாவற்றையும் செய்ய எச்சரிக்கையாயிரு"—எபி 8:5.

# பரிசுத்த நகரமாகிய புதிய எருசலேம்

எருசலேம் மகாராஜாவுடைய நகரம் (மத் 5:35). எருசலேம் இசைவிணைப்பாய் கட்டப்பட்ட நகரமாய் காணப்படுகிறது. கர்த்தருடைய ஆலயத்திற்கு பெயர் எருசலேம் (சங் 122:1-3).

தேவனுடைய ஆலயம் என்பது தேவனுடைய வாசஸ்தலமாக இருக்கிறது. தேவ ஜனங்களே தேவனுடைய வாசஸ்தலமாக இருக்கிறார்கள் (I கொரி 3:16, II கொரி 6:16). தேவன் வாசமாயிருக்கிற இடமே அவருடைய ஆலயம். அவருடைய ஜனக்கூட்டமே சபை என்றழைக்கப்படுகிறது. இந்த ஜனங்கள் ஒரே சரீரத்தின் அவயவங்களாக இசைவாய் இணைக்கப்பட்டு கட்டப்படுகிறார்கள் (I பேது 2:5).

ஆபிரகாமுக்கு இரண்டு மனைவிகள் இருந்தார்கள். ஒருத்தி பெயர் ஆகார். இவள் அடிமையானவள். இவளும் பிள்ளை பெற்றாள். இன்னொரு மனைவி பெயர் சாராள் இவள் சுயாதீனமுள்ளவள். இவளுக்கு பிறந்தவன் வாக்குத் தத்தத்தின்படி பிறந்தான். இவைகள் ஞான அர்த்தமுள்ளவைகள். ஆகார் என்பது அரபித் தேசத்திலுள்ள சீனாய் மலை. சீனாய் மலையிலே நியாயப்பிரமாணம் கொடுக்கப்பட்டது. நியாயப்பிரமாணத்திற்கு உட்பட்டவர்கள் அடிமைகளாக இருக்கிறார்கள். இவர்கள் பழைய ஏற்பாட்டின் சபையார். இந்த சபை ரோம சாம்ராஜ்யத்திற்கு இப்போது (பவுல் காலம்) அடிமைப்பட்டிருக்கிற எருசலேமிற்கு சரி.

ஆனால் கிறிஸ்துவுக்குட்பட்ட நமக்கு இவள் தாய் அல்ல. நம்முடைய தாயோ புதிய ஏற்பாட்டின் சபை. அவளுக்குப் பெயரோ மேலான எருசலேம் (Heavenly Jerusalem) (பூமியில் அடிமைப்பட்டுள்ள எருசலேம் அல்ல) (கலா 4:22-26).

மேலும் எபிரேய நிருப கர்த்தா "நீங்களோ சீயோன் மலையினிடத்திற்கும் ஜீவனுள்ள தேவனுடைய நகரமாகிய பரம எருசலேமினிடத்திற்கும் ... வந்து சேர்ந்தீர்கள்" (எபி 12:22-24) என்று எழுதினார். வந்து சேர்வீர்கள் என்று சொல்லாமல் சேர்ந்தீர்கள் என்று சொல்லியுள்ளார். இரட்சிக்கப்படுகிறவர்களை கர்த்தர் அனுதினமும் சபையிலே சேர்த்துக் கொண்டு வந்தார் (அப் 2:47) என்ற வண்ணம் ஆதியிலே ஏற்பட்ட சபைக்குப் பெயர் பரம எருசலேம் அல்லது மேலான எருசலேம் (Heavenly Jerusalem) என்பதாகும்.

காரியம் இப்படி இருக்க ரோமாபுரியில் ஏற்பட்ட இயக்கத்திற்கு 'ரோமன் கத்தோலிக்' என்றும்; அமெரிக்காவில் வந்ததால் 'அமெரிக்கன் அட்வென்ட்' என்றும், இலங்கையில் உருவானதால் 'இலங்கை பெந்தெகொஸ்தே' என்றும், அதை காப்பி அடித்து 'இந்தியன் பெந்தெகொஸ்தே' என்றும், சென்னையில் உருவானதால் 'சென்னை பெந்தெகொஸ்தே' என்றும், தென் இந்தியாவில் ஆளுகை உள்ளதால் 'தென் இந்திய திருச்சபை' என்றும் வட இந்திய திருச்சபை' என்றும், இப்படி திருநெல்வேலி அல்வா ஸ்டால்; பெங்களூர் பிரியாணி ஹோட்டல், சைனீஸ் ரெஸ்டரெண்ட் என்பது போல் சபைகள் பெயர் இருப்பது வேதத்துக்குப் புறம்பானதாகும். இன்றும் வேதத்தை படித்த சிலர் ஓ தேவனுடைய சபை என்று எழுதியிருக்கிறது (1 தீமோ 3:5). ஆகவே அதன் பெயரை Church of God என்றும், ஆ தேவனுடைய வீடு என்று எழுதியிருக்கிறது (1 தீமோ 3:15). ஆகையால் அதன் பெயர் House of God என்றும், ஜீவனுள்ள தேவனுடைய சபை என்றுள்ளது (1 தீமோ 3:15) ஆகவே Church of Livrng God என்றும், கிறிஸ்துவின் சபை என்று எழுதியுள்ளது (ரோம 16:16). ஆகவே Church of Christ என்றும் கண்கள் கண்டபடி, காதுகள் கேட்டபடி சபைக்கு பெயர் சூட்டி ஆராதிக்கிறார்கள். ஆனால் கிறிஸ்துவின் மணவாட்டிக்குரிய பெயரோ மறைக்கப்பட்டு போயிற்று. இப்பொழுதோ தேவனாகிய கர்த்தர் வெளிப்படுத்தியுள்ளார். ஆட்டுக்குட்டியானவரின் கல்யாணம் வந்தது. அவருடைய மனைவி தன்னை ஆயத்தம் பண்ணினாள் (வெளி 19:7). சபை ஆயத்தப் படுதல் இந்தப் பூமியில் தானே அல்லாமல் பரலோகில் அல்ல. கல்யாணத்திற்கு ஆயத்த

மாகிற ஆட்டுக் குட்டியானவரின் மனைவி பெயரென்ன? நீ இங்கே வா, ஆட்டுக்குட்டியானவருடைய மனைவியாகிய மணவாட்டியை உனக்கு காண்பிக்கிறேன் என்று சொல்லி...தேவனுடைய மகிமையை அடைந்த எருசலேமாகிய பரிசுத்தநகரத்தை எனக்கு காண்பித்தான் (வெளி 21:9). இதன்படி ஆட்டுக்குட்டியானவரின் மனைவியின் பெயர் எருசலேமே. அந்த எருசலேம் பரிசுத்த நகரமே. அந்த பரிசுத்த நகரமே புதிய எருசலேம் (வெளி 21:2). இவளே மணவாட்டி.

இந்தப் புதிய எருசலேமை ஸ்திரப்படுத்தி பூமியிலே அதைப் புகழ்ச்சியாக்கும் வரைக்கும், அதன் மதில்கள் மேல் உள்ள ஜாமக்காரர்கள், கர்த்தரை அமர்ந்திருக்க விடமாட்டார்கள் (ஏசா 62:6,7). இதோ இந்த எருசலேமை நீங்கள் நேசித்து அவளோடே பாடு அனுபவிப்பீர்களானால், நீங்கள் அவளுடைய ஆறுதல்களின் முலைப்பாலை உண்டு, திருப்தியாகி, நீங்கள் துப்பிக் குடித்து அவளுடைய மகிமையின் பிரகாசத்தினால் மன மகிழ்ச்சியாவீர்கள். இடுப்பில் வைத்து சுமக்கப்படுவீர்கள், முழங்காலில் வைத்து தாலாட்டப்படுவீர்கள். ஒருவனை அவன் தாய் தேற்றுவது போல் நீங்கள் தேற்றப்படுவீர்கள். நீங்கள் எருசலேமிலே தேற்றப்படுவீர்கள் (ஏசா 66:10-13).

ஆதிச் சபைக்குப் பின் இத்தனை ஆண்டுகளுக்குள் எத்தனையோ சபைகள் எழும்பினதுண்டு. அவைகளில் ஒன்றும் புதிய எருசலேம் என்று பெயர் பெறவில்லை. காரணம் அவைகள் மணவாட்டி அந்தஸ்துக்குரியதல்ல. இந்நாட்களிலோ தேவன் தம்முடைய மனைவியாகிய மணவாட்டியை ஆயத்தப்படுத்துகிறார். ஆகவே அவளுடைய பெயரும் வெளியாகியுள்ளது. ராஜஸ்திரீகள் அறுபது பேரும், மறுமனையாட்டிகள் எண்பது பேருமுண்டு; கன்னியருக்குத் தொகையில்லை, என் புறாவோ என் உத்தமியோ ஒருத்தியே (உன்ன 6:8,9). அவள் பெயர் புதிய எருசலேம். நியமிக்கப்பட்ட யாவரும் அவளோடே சேர்வார்கள்.

---

"மேலான எருசலேமோ சுயாதீனமுள்ளவள், அவளே நம்மெல்லாருக்கும் தாயானவள்" (கலா 4:26).

---

# வேத பாடம்

(தொடர்ச்சி)

யாத் 13 : 1, 2 பரிசுத்தப்படுத்தல்; மனிதரிலும், மிருகங்களிலும் தலையீற்றை எனக்கு பரிசுத்தப்படுத்து. அவை என்னுடையவைகள் என்றார்.

யாத் 13 : 3-7. பஸ்காவின் பிரமாணம், நீ எகிப்திலிருந்து புறப்பட்ட நாளை நினைவு கூற வேண்டும். நீ கானானுக்குள் பிரவேசிக்கும் போது இந்த ஆராதனையைச் செய்ய வேண்டும் புளிப்பில்லாத அப்பம் புசிக்க வேண்டும் என்றார். புளிப்பு பாவத்தைக் குறிப்பிடுகிறது. (கானானியர், எகிப்தியர், வீடுகளில் புளிப்புள்ள அப்பம் சாப்பிட்டனர்.) கிறிஸ்தவர்கள் பாவத்தோடு திருவிருந்து, நற்கருணை ஆசரிக்கக் கூடாது.

யாத் 13 : 8-10 பஸ்கா இஸ்ரவேலர் எகிப்திலிருந்து விடுதலையானதற்கு இது வெளிப்படையான அடையாளமாகும். இது என்னவென்று புத்திரனுக்கும் மற்றவர்களுக்கும் விளக்கிச் சொல்ல வேண்டும். இது அடையாளம்.

யாத் 13 : 11-13 முதற் பேறனைத்தையும் கர்த்தருக்கு ஒப்புக் கொடுக்க வேண்டும். கழுதையின் தலையீற்றை ஒரு ஆட்டுக் குட்டியால் மீட்டுக் கொள்வாயாக.

யாத் 13 : 13-16 இது என்ன என்று உன் புத்திரன் கேட்டால் எகிப்திலிருந்து விடுதலையான போது தேவன் நம்மைக் காத்ததற்கு அடையாளம் என்று சொல் என்றார்.

யாத் 13 : 17, 18 தேவன் இஸ்ரவேலரை வழி நடத்தின நோக்கம், அவர்களுக்கு இரட்சிப்பருளும் படிக்கே. யுத்தத்தைக் கண்டால் பயப்பட்டு, திடனற்றும் போவார்கள் என்று தேவன் அறிந்து அவர்களை சிவந்த சமுத்திர வழியாய் சுற்றிப் போகப் பண்ணினார்.

யாத் 13 : 19 இஸ்ரவேல் புத்திரர் யோசேப்பின் எலும்புகளையும் தங்களுடன் எடுத்துச் சென்றனர்.

யாத் 13 : 20 சுக்கோத்திலிருந்து ஏத்தாமுக்கு பிரயாணம் பண்ணினார்கள். யாத் 13 : 21, 22 பகலிலே மேகஸ்தம்பத்தினாலும், இரவில் அக்கினி ஸ்தம்பத்தினாலும் தேவன் இஸ்ரவேல் புத்திரரை வழி நடத்தினார். நாம் அனுதினம் கர்த்தரால் வழி நடத்தப்பட வேண்டும்.

யாத் 14 : 1, 2 இஸ்ரவேலர் ஏத்தாமிலிருந்து மிக்தோலுக்கு பிரயாணம் பண்ணினார்கள்.

யாத் 14 : 3-9 பார்வோன் மறுபடியும் இஸ்ரவேல் புத்திரரை சிறைப் பிடித்து அடிமைகளாக்கும்படி தன் படைகளுடன் பின் தொடருகிறான். சாத்தானும் தன் பிடியிலிருந்து விடுதலையான மக்களை மறுபடியும் அடிமைகளாக்க பின் தொடருவான், போர் செய்வான்.

யாத் 14 : 10-12 இஸ்ரவேலர் பார்வோனின் சேனையைக் கண்டு பயந்து மோசே ஆரோனைப் பார்த்து முறையிடுகிறார்கள்.

யாத் 14 : 13-18 தேவன் இஸ்ரவேலை இரட்சிப்போம் என்று வாக்களிக்கிறார். யுத்தம் கர்த்தருடையது.

யாத் 14 : 19-20 இஸ்ரவேலின் சேனைக்கு முன்னாக நடந்த தேவதூதனும், மேக ஸ்தம்பமும் பின்னால் போய் பார்வோனின் சேனைக்கும் இஸ்ரவேல் புத்திரருக்கும் நடுவே வர, பார்வோனின் சேனை இஸ்ரவேலரை நெருங்க முடியாமற் போயிற்று.

யாத் 14 : 21-25 பார்வோனின் கையினின்றும், சிவந்த சமுத்திரத்தினின்றும் இஸ்ரவேல் புத்திரர்கள் இரட்சிக்கப்பட்டார்கள். மோசே சமுத்திரத்திற்கு நேரே தன் கோலை நீட்ட சமுத்திரம் இரண்டாகப் பிளந்து இஸ்ரவேலுக்கு வழி விட்டது. பின் தொடர்ந்து வந்த பார்வோனின் சேனையையோ சமுத்திரம் மூட ஆரம்பித்தது. இஸ்ரவேலர்கள் சமுத்திரத்தினின்று கரையேறினார்கள்.

யாத் 14 : 26-31 மோசேயின் கட்டளைப்படி சமுத்திரம் எகிப்தியர் மேல் புரள பார்வோனின் சேனை மாண்டது. இஸ்ரவேல் தேவனிடமும், மோசேயிடமும் விசுவாசம் வைத்தார்கள்.

(தொடரும்)

> "ஜலம் பிளந்து பிரிந்து போயிற்று. இஸ்ரவேல் புத்திரர் சமுத்திரத்தின் நடுவாக வெட்டாந்தரையிலே நடந்து போனார்கள்" யாத் 14 : 21, 22.

# மோட்ச வழி

## குரு-சிஷ்ய உரையாடல்

(தொடர்ச்சி)

சிஷ்ய : ஐயா, மர்மோனியன்ஸ் (Marmons) என்றால் யார்? அவர்களைப் பற்றி அறிந்து கொள்ள விரும்புகின்றேன்.

குரு : மர்மோனியன்ஸ் (Mormons) ஜோசப் ஸ்மித் (Joseph Smith) என்பவரால் கி. பி. 1830ல் ஆரம்பிக்கப்பட்டது. இவர்கள் பரிசுத்த வேதத்துக்குப் புறம்பான அநேக காரியங்களைப் போதிக்கின்றனர். இவர்கள் உள்ளான நிலையில் கடவுளை நம்புவதில்லை. மேற்புறம்பாக தேவனை நம்புகிறார்கள்.

நம்முடைய தேவன் திரியேக தேவனாயிருக்கிறார். தேவனென்றால் பிதா, குமாரன், பரிசுத்த ஆவி என்று அர்த்தம். இதற்கு அநேக ஒத்த வாக்கியங்கள் வேதாகமத்தில் உண்டு. தேவன் ஒருவரே. பிதா, குமாரன், பரிசுத்த ஆவியே அவர். இஸ்ரவேலே கேள், நம்முடைய தேவனாகிய கர்த்தர் ஒருவரே கர்த்தர் (மாற் 12 : 29).

பிதாவையும் அவரால் அனுப்பப்பட்ட இயேசு கிறிஸ்துவையும் அறிவதே நித்திய ஜீவன். தேவன் ஒருவரே (யோவா 17 : 3; I தீமோ 2 : 5). தேவன் ஒருவரே என்று வேதம் சொல்லியிருக்க, மர்மோனியர்கள் மூன்று கடவுள்கள் இருக்கிறார்கள் என்று போதிக்கின்றனர்.

1. பிதாவாகிய தேவன் : மர்மோனியர்கள் ஆதாமை பிதாவாகிய தேவன் என்று சொல்லுகிறார்கள். வேதாகமம் ஆதாம் தேவனால் உண்டாக்கப்பட்டான் என்று சொல்லியிருக்க, இவர்களோ, ஆதாமையே பிதாவாகிய தேவன் என்று சொல்லுகிறார்கள்.

2. குமாரன் : மர்மோனியர்கள் இயேசு கிறிஸ்துவை தேவனுடைய குமாரன் என்று நம்புகிறது கிடையாது. மர்மோனியர்கள் இருதார (இரண்டு மனைவிகள்) கொள்கையை நம்புகிறார்கள். ஆபிரகாமுக்கு இரண்டு மனைவிகள் இருந்தது போல ஆதாமுக்கும் இரண்டு மனைவிகள் உண்டு. ஆதாமின் இரண்டாவது மனைவியின் பெயர் மரியாள். ஆதாமுக்கும், மரியாளுக்கும் பிறந்தவரே இயேசு கிறிஸ்து என்கிறார்கள். கானாவூர் கல்யாணத்தில் இயேசு கிறிஸ்து, மார்த்தாள், மகதலேனா மரியாள் ஆகிய இரண்டு பெண்களையும் விவாகம் முடித்ததாக இவர்கள் கூறுகின்றனர். இவர்கள் இருதாரக் கொள்கையைக் கடைபிடிக்கின்றனர். வேதாகமம், "இதோ ஒரு கன்னிகை கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப் பெறுவாள். அவருக்கு இம்மானுவேல் என்று பேரிடுவார்கள்", (ஏசா 7 : 14; மத் 1 : 18-23) என்று தெளிவாக கிறிஸ்துவினுடைய பரிசுத்த பிறப்பைப் பற்றிக் கூறியுள்ளது.

இயேசு கிறிஸ்து மிகவும் தெளிவாக இருதாரக் கொள்கையை எதிர்த்துள்ளார் (மத் 19 : 5, 6, 9). இந்த வேதப் புரட்டர்களாகிய மர்மோனியர்கள் பரிசுத்தரும், தேவ குமாரனுமாகிய இயேசு கிறிஸ்துவை தூஷித்து அவர் இரண்டு மனைவிகளை விவாகம் முடித்தார் என்று சொல்லுகிறார்கள். பிசாசுகள் கூட நீர் தேவனுடைய பரிசுத்தர் என்று இயேசு கிறிஸ்துவை அறிக்கை செய்துள்ளன.

3. பரிசுத்தாவி : மனுஷனில் உள்ள ஆவியேயன்றி மனுஷரில் எவன் மனுஷனுக்குரியவை களை அறிவான். அப்படிப் போல தேவனுடைய ஆவி...(I கொரி 2 : 11). அழிந்து போகிற மனிதனைப் போலவே பரிசுத்தாவி இருக்கிறது. நித்தியமானதல்ல அழிந்து போகிற மனிதனைப் போலவே அழிந்து போகும் என்று போதிக்கின்றனர்.

கடைசியாக மர்மோனியர்கள் மர்மோனிசம் (Mormonism) என்கிற பெயரையுடைய ஒரு புஸ்தகத்தை எழுதியுள்ளனர். பைபிளைக் காட்டிலும் இதையே அதிகமாக நம்புகிறார்கள். இவர்கள் கிறிஸ்துவினால் உண்டாகிற இரட்சிப்பு வீண் என்று கூறுகின்றார்கள். இயேசு கிறிஸ்துவினுடைய பாடு மரணங்களை இவர்கள் நம்புகிறதில்லை. மர்மோனியர்கள் குருக்கள் எவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்கிறார்களோ எவர்கள் மேல் கை வைக்கிறார்களோ அவர்கள் இரட்சிக்கப்படுகிறார்கள் என்றும், இறந்த பிரேதத்தின் மேல் கை வைத்தாலும் அவர்களும் ஞானஸ்நானம் பெற்றதாக அர்த்தம் என்றும் போதிக்கிறார்கள்.

இவர்களுடைய மதத்தில் சேருகிறவர்களை நரகத்தின் பிள்ளைகளாக மாற்றி நரகத்துக்கு நேராக வழி நடத்துகிறார்கள். மர்மோனியர்கள் என்பவர்கள் அமெரிக்காவில் உள்ள

ஒரு தவறான கிறிஸ்தவக் கூட்டமாகும். இவர்களுடைய கொள்கை ஒரு புருஷன் ஒன்றுக்கு அதிகமான மனைவிமார்களை வைத்துக் கொள்ளலாம் என்பதே.

> தாங்களே கேட்டுக்கு அடிமைகளாயிருந்தும் அவர்களுக்கும் சுயாதீனத்தை வாக்குத்தத்தம் பண்ணுகிறார்கள். எதினால் ஒருவன் ஜெயிக்கப்பட்டிருக்கிறானோ அதற்கு அவன் அடிமைப்பட்டிருக்கிறானே" II பேது 2:19

**மாதர் பகுதி**

# குடும்பம்

(தொடர்ச்சி)

1. மகன் மீது தந்தையின் கடமை:-

பிள்ளை ஒருவன் தெருவில் குறும்பு செய்து கொண்டிருந்தான். அவ்வழி வந்த அறிஞன் ஒருவன் அந்தச் சிறுவனை ஒன்றும் சொல்லவில்லை. அச் சிறுவனின் வீடு சென்று தகப்பனை திருத்தினான். தந்தையின் தன்மையே குழந்தையிடம் காணப்படுகிறது. தந்தையைத் திருத்திவிட்டால் பிள்ளைத் திருந்திவிடும் என்று கருதித்தான் அந்த அறிவு மேதை அவ்விதம் செய்தான்.

எனவே பெற்றோர் தம் மக்களை நன்மக்களாக வளர்க்க வேண்டுமென்றால் தங்களிடமுள்ள தீய பழக்கவழக்கங்களை தங்கள் பிள்ளைகளின் நல்வாழ்வுக்காக களைந்து விடுவது அவசியம். தாமும் திருந்துவதுடன் பிள்ளைகளையும் திருத்துவது பெற்றோர்களின் தலையாய கடமையாகும் (எபே 6:4).

தந்தை மகன் மீது கவனம் செலுத்த வேண்டும் என்று சொன்னோம். ஒரு தந்தை முதல் ஆசிரியன் என்றும், ஓர் ஆசிரியனை இரண்டாம் தந்தை என்றும்கூறுவர் அறிஞர். குழந்தை பிறந்தது முதல் தாய்க்கு அடுத்த படியாக நெருங்கி இருப்பவர் தந்தை. ஆரம்ப பாடத்தை குழந்தை தந்தையிடமிருந்தே கற்றுக் கொள்ளுகிறது. குழந்தையை ஓர் ஆசிரியன் கையில் பிடித்துக் கொடுத்ததும் தந்தையின் பொறுப்பு முடிந்து விடுகிறதில்லை. ஆசிரியர் போதிக்காத பலவற்றை தந்தை தன் மகனுக்குப் போதிக்க வேண்டும்.

ஒரு தந்தை மட்டுமே கூறத்தகுந்த செய்திகள் சில இருக்கத்தான் செய்கின்றன. அவற்றை தந்தைதான் கூறவேண்டும். தன் மகன் தன்னிடம் மரியாதையாக நடந்து கொள்ளுவது போல் தந்தையும் நடந்து கொள்வது அவசியம். தந்தையிடம் மகனுக்கு, ஒரு மதிப்பு இல்லாவிடில் தந்தையின் சொல் மகனிடம் செல்லாமற் போய்விடும். அதற்குத் தக்கபடி தகப்பன் தன் மகன் தன்னிடம் நெருங்கி மனம் விட்டு பேசவும் அதேசமயம் தன்னை அசட்டை செய்யாதபடியும் கவனமாய் இருக்க வேண்டும். மகன் தனக்கேற்படும் ஐயங்களை தெளிவு பெறத்தகுந்தவர் தந்தையினும் சிறந்தவர் வேறு எவர் இருக்கிறார்கள்? பார்த்து பரிகசிக்காதபடி பரிவுடன் அவன் தவறுகளைக் கேட்டுத் திருத்துவதற்குத் தந்தையினும் சிறந்தவர் வேறு எவர் இருக்கிறார்கள்.

இளமையிலிருந்தே தந்தை ஒழுக்கத்தின் உயர்வைப்பற்றி தன் மகனிடம் எடுத்துரைத்து அவன் நன் மகனாக, உயர் பண்பாளனாக உத்தம கிறிஸ்தவனாக ஆவதற்கான வழி செய்ய வேண்டும். தூய்மைதான் வலிமை என்றும், பரிசுத்தத்தை இழப்பது உயிர் நீப்பதற்கு ஒப்பாகுமென்றும் அவனுடைய உள்ளத்தில் ஆழமாய்ப்பதியும் வண்ணம் எடுத்துரைக்க வேண்டும்.

ஓர் இளைஞனின் தூய்மை கெடுவதும், ஒழுக்கத்தில் அவனை இழிந்தவனாக ஆக்குவதும் பருவக்கிளர்ச்சிதான். எனவே தந்தை பருவக்கிளர்ச்சி ஏற்படும் பருவத்தைக் கவனித்து அதற்கு பலியாவதால் ஏற்படும் இழிவை தகுந்த சான்றுகளுடன் எடுத்துக் கூறி அவனை எச்சரித்து வைத்திருக்க வேண்டும். அவ்வாறு செய்வது படுகுழிபக்கம் ஓடிக் கொண்டிருக்கும் ஒருவனைப் பற்றிப் பிடித்து அவனுடைய வழியில் இருக்கும் அபாயத்தை எடுத்துரைத்து எச்சரிப்பதற்கு ஒப்பாகும்.

தன் மகனுக்கு உணவு கொடுத்து, உடை கொடுத்து அவனுடைய உடல் நலனைப் பேணிக் காத்துவரும் தந்தை, அவனது ஆத்தும நிலையைக் குறித்து எச்சரிக்கைகளும் வழி காட்டுதல்களும், செய்யாத தந்தையை கப்பல் ஒன்றை தன் மகனுக்கென்றே கட்டி அதன் அமைப்பு விபரம் அனைத்தும் அவனிடம் கூறி பயணத்திற்கு வேண்டிய உணவுப் பொருட்கள் அனைத்தும் சேகரித்து வைத்து இறுதியாக சுக்கானை அக் கப்பலில் பொருத்தாத தந்தைக்கே ஒப்பிடலாம். தந்தை அளித்த சுக்கானில்லாத கப்பலில் அலைகடலில் அலைக்கழிக்கப்படும் இளைஞனின் கதியே அம்மகனின் கதியும் ஆகும் என்பதில் சிறிதேனும் ஐயமில்லை.

(தொடரும்)

---

"வழியைவிட்டு விலகுகிறவனுக்குப் புத்திமதி விசனமாயிருக்கும்; கடிந்து கொள்ளுதலை வெறுக்கிறவன் சாவான்"

நீதி 15 : 10

---

# முறுமுறுக்காதே

ஒரு சிற்றூரில் திரளான ஆஸ்தியுள்ள பிரபு ஒருவர் இருந்தார். அவர் மிகவும் இரக்க சுபாவமுள்ளவரும், ஏழைகளுக்கு தாராளமாய் உதவுகிற தயாளனுமாயிருந்தார். அவருடைய தோட்டத்திற்கு அருகில் ஒரு குடியானவன் இருந்தான். அவன் பரம ஏழையாக இருந்தான். அவனுக்கு திடீரென வியாதி வந்து, வேலை செய்ய முடியாமல் மிகவும் நெருக்கப்பட்டான். இதைக் கவனித்த பிரபு அவனுக்கு அநுதினமும் பிழைப்புக்கு உதவி செய்து கொண்டு வந்தான். பிரபுவினுடைய பெருந்தன்மையைப் பற்றி பேசிற வருகிறவர்களிடமெல்லாம் குடியானவன் புகழ்ந்து பேசிக் கொண்டிருந்தான். இவனுடைய வியாதி நீங்கி, குடியானவன் மிகவும் சந்தோஷப்பட்டான். பிரபுவிடமிருந்து தான் பெற்றுக் கொண்ட எல்லா நன்மைக்காகவும் மிகவும் நன்றி உள்ளவனாக இருந்தான்.

தேசத்தில் மழையில்லாததினாலும், பிரபுவினுடைய வீட்டில் ஏற்பட்ட பிரச்சனைகளினாலும், பிரபு குடியானவனுக்கு அதிகமாக உதவி செய்ய இயலவில்லை. இவ்வளவு நாள் பிரபுவினிடத்தில் மகிழ்ச்சியாயிருந்த குடியானவன் முகநாடி மாறுபட்டது. சில நாட்களில் பிரபுவுக்கு உதவி செய்யும் திராணி அற்று போயிற்று. இவ்வளவு நாள் தான் பெற்று வந்த தான தன்மைகளை குடியானவன் மறந்தான். ஏதோ பிரபுவை தன்னுடைய கடமையை செய்ய தவறி விட்டவரைப் போல் பார்த்தான் பிரபுவைத் தூஷிக்க ஆரம்பித்தான். இந்த நன்றி கெட்ட மதியினனைப் போலவே இறைவனை அநேகர் தூஷிக்கிறவர்களாகவும், அவரிடம் முறுமுறுக்கிறவர்களாகவும் காணப்படுகிறார்கள்.

நாம் யார் என்பதை நன்கு உணர வேண்டும். நாம் அவருக்கென்று உருவாக்கப்பட்ட சிருஷ்டிகளாக இருக்கிறோம். நாம் நம்முடைய வீட்டில் வைத்திருக்கிற நாற்காலியை (Chair) நாம் இஷ்டப்பட்ட இடத்தில் போடுகிறோம். என்னை ஏன் இங்கே போடுகிறாய், உனக்கு அறிவிருக்கிறதா என்று கேட்டால் நமக்கு எப்படி இருக்கும். அதற்கு பேசும்படி வாயில்லை. நமக்கு இருக்கிறது. ஆகையால் வாயில் வந்த படி இறைவனை பேசுகிறோம்.

நாம் எதையாகிலும் பெற்றிருக்கிறோம் என்றால் இறைவன் நமக்கு கிருபையாய் இரங்கி கொடுத்திருக்கிறார் என்று அர்த்தம்.

நாம் யார் என்றால் தேவனுக்கு விரோதமாய் பெருமை பாராட்டிய தேவபகைஞர்கள், பாவியான ஆதாமின் சந்ததியார். நாம் சாகாதபடி காக்கப்படுகிறோமென்றால் பகைவனின் ஆபத்தில் அவனுக்கு உதவுகிற பெருந் தன்மையான மனிதன் போல் இறைவன் இருக்கிறார்.

நாம் அநுபவிக்கிற எந்த நன்மையும் இறைவனிடமிருந்தே பெறுகிறோம். பெற்ற நன்மைகள் ஏராளம். இப்போதும் நாம் எதிர் பார்க்கிற ஒரு நன்மை கிடைக்கவில்லை என்பதற்காக கர்த்தரிடம் குறைவுபடுவதும், கசந்து கொள்வதும், முறுமுறுப்பதும், எனக்கு ஏன் இந்த நன்மையைத் தரவில்லை என்று மற்றவர்களிடம் கேள்வி கேட்பதும் நம்முடைய அறியாமையாகும். இப்படிச் செய்வது பாவமான காரியம். இப்படி குறைவுபடுகிறவர்கள் தெய்வத்தை அறிய வேண்டிய பிரகாரம் அறியவில்லை.

தெய்வத்தை அறிய வேண்டிய பிரகாரம் அறிந்தவர்கள் உயர்விலும், தாழ்விலும் மனரம்மியமாயிருப்பார் (பிலி 4 : 11, 12). எப்பேர்ப்பட்ட நஷ்டம் வந்தாலும் கர்த்தரை ஸ்தோத்தரிப்பார்கள். தேவனைப்பற்றி குறை சொல்லவோ தூஷிக்கவோ மாட்டார்கள் (யோபு 1 : 21, 22 ; 2 : 10). கர்த்தருக்குள் மகிழ்ச்சியாய் இருப்பார்கள் (ஆபகூக்3 : 17).

புருஷன் மனைவியை போஷித்துக் காப்பாற்ற கடமைப்பட்டிருக்கிறதுபோல கிறிஸ்துவும் நம்மை போஷித்துக் காப்பாற்ற கடமைப்பட்டிருக்கிறார் என்பது உண்மை தான் (எபே 5 : 29). ஆனால் அவர் எப்படிப் பட்டவர்? நம்மைப்போல் அவர் பலவீனர் அல்ல. எல்லாவற்றையும் செய்ய திராணியுள்ளவர். நாம் கடமைகளைச் செய்ய தவறியோ, மறந்தோ போவதுபோல் அவர் தவறியோ, மறந்தோ தவறு செய்யாத பரிசுத்தர்.

அவர் நம்மைப்போல் குணங்கெட்டவரல்ல. அவர் பூரண சற்குணர். இப்படிப் பட்டவரிடம் முறுமுறுக்கிறவனே, குறைவுபடுகிறவனே தேவனைவிட தன்னை ஞானியாக்குகிறான். தராசிலே தன்னையும் தேவனையும் நிறுத்துப்பார்த்து அவரை குறை உள்ளவராகக் கண்டு அவரைக் குற்றவாளியாக்குகிறான். இப்படிப்பட்டவன் பெற்ற இரட்சிப்பையும் இழந்து வழியிலே அழிந்து போவான் (1கொரி 10 : 10).

நமக்கு நன்மைவர வொட்டாமல் நமது பாவம் தடைசெய்யலாம் (எரே 5 : 25). அல்லது சாத்தான் தடை செய்யலாம் (தானி 10 : 13). அல்லது அதைப் பெற்றுக்கொள்ள காலம் வராமலிருக்கலாம் (யோவா 2 : 4).

ஆகவே தேவனுடைய பிள்ளைகளே, முறுமுறுக்காதீர்கள். கணவன் வேலையிழந்து பணம் கொண்டுவராததால் அவனை விட்டு விட்டு வேறொருவனிடம் செல்லும் மனைவி எப்படிப்பட்டவளோ அப்படியே எனக்கு அது கிடைக்கவில்லை இது கிடைக்கவில்லை என்று இயேசுவைவிட்டுப் பின் வாங்கிப் போகிறவனும் இருக்கிறான். ஆகையால் உத்தமமாயிருங்கள்.

---

"கர்த்தர் கொடுத்தார்; கர்த்தர் எடுத்தார், கர்த்தருடைய நாமத்துக்கு ஸ்தோத்திரம் என்றான்" (யோபு 1 : 21)

---

(மார்ச் மாத தொடர்ச்சி)

# "புதிய எருசலேம்" நடபடிகளில் சில

நாங்கள் சங்கரன் கோயிலிருந்து ராஜபாளையம் செல்லும் பஸ்ரூட்டில் கரிவலம் வந்த நல்லூர் அதாவது யானை ஊர்வலமாக வந்த ஊர் என்று கூறுவார்கள். இந்த ஊரிலிருந்து மேற்கே இராஜகிரிக்குச் செல்லும் ரஸ்தாவில் துரைச்சாமிபுரம் என்றொரு ஊர் இருக்கிறது. இந்த ஊருக்கும் கரிவலத்திற்கும் சுமார் 10 கிலோ மீட்டர் தூரம் உண்டு. நாங்கள் வள்ளியூரிலிருந்து கரிவலம் வந்த நல்லூர் வரையிலும் பஸ்ஸில் வருவோம். இங்கிருந்து துரைச்சாமிபுரத்திற்கு கால் நடையாகவே செல்லுவோம். அநேகமாக இரவு 10-மணியளவில்தான் இந்தக் கரிவலம் வந்த நல்லூர் வந்து சேருவோம்

அங்கு வழக்கமாக ஒரு டீக்கடையில் டீ குடித்துவிட்டு அங்கிருந்து இரவில் மேற்படி துரைச்சாமி புரத்திற்கு நடந்து செல்லுவோம் ஒருநாள் அந்த டீக்கடைக்காரர்: ஐயா, நாங்களே இரவு 10-மணிக்கு மேல் இந்த ரோட்டிலே நடந்து செல்ல மாட்டோமே, நீங்கள் அயலூர்க்காரர்கள் நீங்கள் இப்படி இரவில் செல்வது நல்லதல்ல என்று கூறினார். அவரிடம், 'எங்கள் தேவன் எங்களை தனிமையாகப் போக விடமாட்டார். அவர் எங்களுடனே வருகிறார், ஆகையால்தான் நாங்கள் தைரியமாய் செல்கிறோம் என்று கூறிவிட்டுக் கடந்து சென்றோம்.

இந்த துரைச்சாமிபுரத்தைச் சேர்ந்த சகோதரர் இராஜசுந்தர் என்பவர். இவர் நெல்லை மாவட்டத்தில் நாங்குநேரி என்ற ஊரில் சர்வேடிபார்ட்மெண்டில் வேலை பார்த்து வந்தார். இவரை நாங்கள் ஏற்கனவே சந்தித்து கர்த்தருடைய சத்தியத்திற்குள் வழி நடத்தியிருந்தோம். இவர் ஒருநாள் எங்களைத் தன்னுடைய சொந்த ஊராகிய துரைச்சாமிபுரத்திற்கு அழைத்துச் சென்றார். இவருடைய தாயார் பெயர் இரஞ்சிதம். அந்த அம்மா எங்களை ரொம்ப அன்புடன் ஏற்றுக் கொண்டு கர்த்தருடைய வார்த்தைக்கு முற்றிலும் தன்னை ஒப்புக் கொடுத்தார்கள். லீதியாளை போன்று தேவன் இந்த அம்மாவின் இருதயத்தையும் திறந்தார். அவருக்கே மகிமையுண்டாவதாக.

இந்த அம்மாவின் கணவர் ஏழுகோவில்களுக்கு பூஜை செய்வார். இவர் ஒரு பேர் பெற்ற மந்திரவாதியும் கூட. இவர் பெயர் சர்க்கரைப் புலவர் என்பது. இவரும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை தன்னுடைய சொந்த இரட்சகராக ஏற்றுக் கொண்டார். இவர்கள் தங்களுடைய ஊரில் ஒரு கன்வென்ஷன் வைக்கவேண்டும். அதற்கான எல்லாச் செலவுகளையும் நாங்கள் ஏற்றுக் கொள்கிறோம் என்று கூறினார்கள். அதன்படி பம்பாயிலிருந்து புதிய எருசலேமின் தலைமை மேய்ப்பர் அவர்களை வரவழைத்தோம்.

முதலாம் நாள் கன்வென்ஷனில் மனந்திரும்புதலைக் குறித்து ஐயா அவர்கள் பேசினார்கள். பாவிகளுடைய சாவைத் தேவன் விரும்புகிறதில்லை அவன் மனந்திரும்பி பிழைக்க வேண்டுமென்பதையே தேவன் விரும்புகிறார். ஆகையால் சாகவேண்டுமென்று விரும்புகிற சகோதரனே! சகோதரியே! உன்னைக் கர்த்தர் அழைக்கிறார் நீ சாகவேண்டாம். நீ மனந்திரும்பு. கர்த்தரிடத்துக்கு உன் மனதை திருப்பு அவர் உன்னை மன்னிப்பார். உன் கவலைகள் எது வாயிருந்தாலும் அவர் தீர்ப்பார், என்று வல்லமையோடு கர்த்தருடைய வார்த்தையைக் கூறினார்கள் ஏராளமான மக்கள் கர்த்தரிடமாக சேர்க்கப்பட்டார்கள்.

சில விநாடிகளுக்குப் பின்பு நாங்கள் கூட்டத்தை முடித்துவிட்டு நாங்கள் தங்கியிருந்த இடத்திற்குச் சென்றோம். சிறித நேரத்தில்பக்கத்திலுள்ள மீனாட்சிபுரம் என்ற ஊரைச் சேர்ந்த ஒரு வாலிபன் வந்தார். இவர் பெயர் செல்வராஜ். C.S.I.சபையைச் சேர்ந்தவர், நல்ல வசதியுள்ள குடும்பத்தைச் சேர்ந்தவருங்கூட. கையில் ஒரு விஷப் பாட்டிலுடன் கண்ணீர் சிந்திக் கொண்டே ஓடிவந்து பெரிய ஐயாவின் கால்மாட்டில் விழுந்தார். ஐயா! நீங்கள் இன்று எங்கள் ஊரில் வந்து கர்த்தருடைய வார்த்தையைக் கூறாது போனால் நான் இப்பொழுதுபிணமாகியிருப்பேன். என் கையிலிருக்கும் இந்த விஷப்பாட்டில் என் உயிரைக் குடித்திருக்கும். என்னைப் பிழைக்க வைப்பதற்காகவே கர்த்தர் உங்களை இந்த ஊருக்கு அனுப்பியிருக்கிறார் என்று விம்மி, விம்மி அழுது கொண்டே கூறினார். சகோதரனே, அழாமல், என்ன நடந்ததென்று தெளிவாக கூறுங்கள் என்று ஐயா கேட்டார்கள்.

ஐயா! நான் ஒரு கொடிய பாவி. என் வாழ்க்கையில் அமைதி இல்லை. எனக்கு மனைவி, பிள்ளைகள் உண்டு. எனக்குப் போதிய வசதிகளும் உண்டு. என்றாலும் அவைகள் எனக்குச் சமாதானம் அருளவில்லை. ஆகையால் இனி இந்த உலகத்தில் சமாதானமின்றி வாழக் கூடாது. எனஎண்ணி என் வாழ்க்கையை முடித்துக் கொள்வதற்காக இந்த விஷப்பாட்டிலை வாங்கிக் கொண்டு என்னுடைய தோட்டத்திற்குச் சென்று, பாட்டிலைத் திறந்து விஷத்தைக் குடிக்க வேண்டுமென்று தீர்மானித்து பாட்டிலை திறக்கும் வேளையில் நீங்கள் மைக்கில் பேசிய தேவனுடைய வார்த்தை ஒலி பெருக்

கியின் மூலம் சுமார் ஒரு மைல்தூரத்திலிருந்த என் காதில் வந்து விழுந்தது. அந்த வார்த்தை என்னைப் பார்த்தே சொன்னதாக நான் உணர்ந்தேன். பாவியே, நீ ஏன் சாக வேண்டும்? பாவியினுடைய சாவைத் தேவன் விரும்பவில்லை என்ற வார்த்தை என் உள்ளத்தை உடைத்தது. ஆண்டவரே! நான் சாக வேண்டாமா? என்னை மன்னிப்பீரா? நான் இனி சாகமாட்டேன். உம் மன்றாட வருகிறேன் என்னை ஏற்றுக் கொள்ளும் என்று புலம்பிக் கொண்டே வந்தேன். ஐயா! எனக்காக என் பாவங்கள் மன்னிக்கப்படுவதற்காக ஜெபியுங்கள். நான் சாக மாட்டேன், தற்கொலை செய்ய மாட்டேன் என்று சொல்லி மீண்டும் கதறினார். ஐயா அவர்கள் இந்த சகோதரனுக்காக ஜெபித்தார்கள். கர்த்தர் இவருக்கு சமாதானம் அருளினார். தேவன் தம்முடைய பரிசுத்த ஆவியினால் இவரை அபிஷேகம் செய்தார். மன வேதனையோடு வந்த சகோதரன், மன மகிழ்ச்சியை அடைந்தார். தேவன் அருளிய சொல்லி முடியாத ஈவுக்காக தேவனை ஸ்துதிக்கிறேன்.

இரண்டாவது நாள் நற்செய்தி கூட்டம் முடிந்ததும் (சனி இரவு) ஞானஸ்நானத்திற்கு ஒப்புக் கொடுத்தவர்களுக்கு ஆலோசனை கொடுக்கும் படியாக ஒரு கூட்டம் நடந்தது. அக் கூட்டத்தில் சகோதரன் செல்வராஜ் கடந்த நாளில் தான் அடைந்த ஆசீர்வாதங்களைக் குறித்தும், தனக்கு தேவன் அனுப்பிய வார்த்தைகளைக் குறித்தும் சாட்சி கூறினார். இவருடைய துணைவியும் அந்தக் கூட்டத்தில் கலந்திருந்தார்கள். இவர் விஷம் குடிக்கச் சென்றதும், இப்பொழுது மனந்திரும்பி இருப்பதும் அந்த சகோதரிக்குத் தெரியாது. இவர் தன்னுடைய அனுபவங்களைக் கண்ணீரோடு கூறினதும் அவருடைய மனைவி மிகவும் உணர்த்தப்பட்டார்கள். நேற்று என் கணவர் விஷம் குடித்து மரித்திருந்தால் என் வாழ்வு எப்படியிருக்கும்? என் பிள்ளைகளுடைய எதிர்காலம் எப்படியிருக்கும்? என் ஆடம்பரங்கள் எப்படியிருக்கும்? என்று சிந்தனை செய்தார்கள்! உடனே தன்னுடைய ஆபரணங்களைக் கழற்றிவிட்டு, என் கணவனுடைய ஜீவனை பாதுகாத்த தேவனுக்கு நன்றி கூறி நானும் என் கணவரோடே ஞானஸ்நானம் பெறப் போகிறேன் என்று அந்த சகோதரியும் கண்ணீரோடு சாட்சி அளித்தார்கள். இந்த சம்பவம் கூடிவந்த யாவருடைய உள்ளத்தையும் உருக்கியது. தேவனுடைய அடிமைகளாகிய நாங்கள் தேவனை மகிமைப்படுத்தினோம்.

மூன்று நாள் காலையில் சுமார் பன்னிரெண்டு பேர்கள் மனந்திரும்பி; பாவ மன்னிப்புக் கென்று ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டார்கள். இவ்விதமாய் கர்த்தருடைய சபை அந்த பிரதேசத்தில் உருவாக்கப்பட்டதற்காக கர்த்தரை ஸ்துதிக்கிறேன்.

(தொடரும்)

PASTOR S. சுந்தர்ராஜ்
வள்ளியூர்

---

"மாயவித்தைக் காரரயிருந்தவர்களில் அநேகர் தங்கள் புஸ்தகங்களைக் கொண்டு வந்து எல்லாருக்கும் முன்பாக சுட்டெரித்தார்கள். இவ்வளவு பலமாய் கர்த்தருடைய வசனம் விருத்தி அடைந்தது.

(அப் 19:19, 20)

---



# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் - 46 ★ OCTOBER 1987




...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவா(ர்)ரோ என்று நீங்கள் அறியீர்கள் விழித்திருங்கள் உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன், விழித்திருங்கள் -

மாற்கு 13 : 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY. INDIA.

# ஆசிரியர் உரை

உலகமெங்கும் அந்தகாரம் பெருகிவருகிறது. வெள்ளம்போல் சத்துரு தேசத்தை மூடிவருகின்றான். பரிசுத்தாவியானவர் அவனுக்கு விரோதமாய் கொடியேற்ற ஆயத்தமாயிருக்கின்றார். தேவஜனங்கள் தங்களைப் பரிசுத்தப்படுத்திக்கொண்டு, தேவனுடைய வல்லமையைத் தரித்துக்கொண்டு ஜெபம்பண்ண, தேவனுடைய சித்தம் செய்ய ஆயத்தமாயிருக்க வேண்டும். ஒற்றுமை எங்கு உண்டோ அங்கு ஐக்கியம் உண்டாயிருக்கும். எங்கு ஐக்கியம் உண்டோ அங்கு பெலன் உண்டாயிருக்கும். ஒற்றுமையுண்டாயிருக்கும். தேவ ஆவியானவர் உதவியின்றி நாம் ஒரு நல்ல ஜெபம்கூட செய்ய முடியாது. தேவ ஆவியைப் பெற்றுக்கொள்வதும் அவரால் நிறைந்தோரும் நிரப்பப்படுவதும், ஆட்கொள்ளப்படுவதும் அவசியம்.

தேவன் தமக்குக் கீழ்ப்படிகிறவர்களுக்கு பரிசுத்த ஆவியைக் கொடுக்கிறார் (அப் 5:32). தொடர்ந்து கீழ்ப்படிகிறவர்களுக்குக் கொடுத்துக் கொண்டே இருக்கிறார். அல்லது நிரப்பிக் கொண்டேயிருக்கிறார். கர்த்தருக்கும் அவருடைய வசனத்திற்கும் கீழ்ப்படிவதே நிறைவுக்கும் வெற்றிக்கும் வழி.

அசுத்த ஆவிகளின் சேனையை எதிர்த்துப் போர் செய்வோமாக. மாம்சத்தோடும் இரத்தத்தோடும் இன்னும் இழுபறியிலிருக்கிறவர்கள், துரைத்தனங்களோடும், அதிகாரங்களோடும், வானமண்டலங்களிலுள்ள பொல்லாத ஆவிகளின் சேனைகளோடும் போராட முடியாது.

முதலாவது மாம்சத்தோடும் இரத்தத்தோடுமுள்ள போராட்டத்தில் ஜெயங் கொள்வீர்களாக, கர்த்தருடைய பட்சத்தில் எங்களோடு கூட சேர்ந்து நிற்கும்படி இயேசுவின் நாமத்தில் அழைக்கிறோம்.

கிறிஸ்துவுக்குள்,

N. Lazar

(Chief Pastor N. LAZAR.)

(தொடர்ச்சி)

# பாவ மன்னிப்பு

I. P. C. சபையின் பத்திரிக்கையான 'சீயோன் பூரிகை' (பூரிகை 6 நவம்பர் 1986 தொனி-2) யில் வெளியான நவீன போதனைகள்—'புதிய எருசலேம் சபை' என்ற தலைப்பில் பாவமன்னிப்புப் பற்றி வெளியிடப்பட்ட காலஞ்சென்ற பாஸ்டர் S. ஞானமுத்து அவர்கள் எழுதிய கட்டுரை:

உபதேசம்: புதிய ஏற்பாட்டில் கூறப்படும் பாவ மன்னிப்புகள் நான்கு. அவை ஒருவருக்கொருவர் மன்னித்தல், தேவ ஊழியர் மன்னித்தல், சபை மன்னித்தல், தேவன் மன்னித்தல் முதலியவையாகும். (மத். 18:21, 22; யோவா 20:23; 1 யோவா 1:9)

1. ஒருவருக்கொருவர் மன்னித்தல்

உனக்கு விரோதமாக உன் சகோதரன் குற்றம் செய்து மன்னிப்பு கேட்க வந்தால் அவனுக்கு மன்னிப்பு கொடுக்க உனக்கு தாராளமான மனமிருக்க வேண்டுமென்ற கருத்தில் 7×70 தடவை மன்னிப்பாயாக என்றார். (மத் 18:21, 22). இதனால் 7×70 தடவை தவறலாம் என்பது கருத்தல்ல. தவறினவன் சீர்பட்டு, சமாதானத்தை நாடி முன்வந்தால், நீ அவனுக்கு மன்னிக்க, தாராளமனதாயிரு என்பதைக் குறிக்கும். பாவ மன்னிப்பு கேட்பவனும் கொடுப்பவனும் பாவிகள். இவன் அவனுக்கு இரங்கி மன்னித்தது போல, அவனும் இவனுக்கு மன்னிக்க தருணம் நேரிடக் கூடும். இந்த பாவமன்னிப்பு, உன்னைப் போல் பிறனையும் நேசி என்ற பிரமாணத்தை நிறைவேற்ற வழியாம்.

நீ கர்த்தருக்கு காணிக்கை செலுத்தப் போனால் உன் சகோதரனுக்கு உன் பேரில் வருத்தம் உண்டென்று நினைவு கூருவாயாகில், அங்குதானே உன் காணிக்கையை வைத்துவிட்டு முன்பு போய் உன் சகோதரனோடு ஒப்புரவாகு. பிறகு வந்து உன் காணிக்கையை செலுத்து என்றார். (மத் 5: 23-26). கர்த்தரிடத்தில் உனக்கு மன்னிப்பு வேண்டுமானால் "என் கடன்காரனுக்கு நான் மன்னித்தது போல தேவரீர் என் பாவங்களை மன்னித்தருளும்." என்று விண்ணப்பிக்க வேண்டும் (மத் 6:11). கிராம அதிகாரியின் அத்தாட்சியின்றி தாசில்தாரிடமிருந்து கிராமத்தார் சலுகை பெற முடியாதது போல நமது சகோதரர்க்கு நாம் மன்னித்ததும் நாம் மன்னிப்பு கேட்டதுமான நல் மனசாட்சியின்றி நம் இருதயத்தை அறிகிற தேவனிடமிருந்து நாம பாவமன்னிப்பைப் பெறுவது குதிரைக் கொம்பு.

மேலும் யார் யாரிடத்தில் நீ தவறு செய்தாயோ அவர்களிடத்திலேதான் போய் சமாதானப்பட வேண்டும். பாவம் ஓரிடத்திலும் பழி மற்றொரு இடத்திலும் மறைந்திருந்து வளரும்போது, நீ சண்டைக்காரனிடத்தில் போய் மன்னிப்பு கேளாமல், சாமியாரிடத்திலும், சபையோரிடத்திலும், கடவுளிடத்திலும், போவானேன்? உன் எதிராளியோடு முன்பு ஒப்புரவாகாமல், உன் குருவை நம்பி அவரிடம் பாவமன்னிப்பு கேட்பது இலவு காத்த கிளிக்கு சமமாம். யூதர் தங்கள் பெற்றோர்களுக்குச் செய்ய வேண்டிய கடமையை கொர்பான் காணிக்கையாகவும் புற ஜாதிகள் அநியாயமாய் சம்பாதித்த பணத்தை கோவில் வகைக்கும் எழுதிவைத்து மோட்சம் போக நாடுவது போல, நீயும் சாமியாருக்கு பாவ மன்னிப்பு கொடுக்க அதிகாரம் உண்டென்று துணிவது, மண் குதிரையிலேறி ஆற்றைக் கடப்பதற்கு சரி. குற்றம் செய்தவர்கள் ஒருவருக்கொருவர் கேட்பதும் கொடுப்பதுமான இந்த மகிமையான பாவ மன்னிப்பு, இரு வகுப்பினர்க்கும் நன்மைக்குக் காரணமாயும், இவ்வுலக அன்புக்கும் ஐக்கியத்துக்கும் ஆதாரவாயுமிருப்பதால், இது கர்த்தரால் 7×70 ஆக நீட்டப்பட்டது. உன் மரண பரியந்தம் மாறி மாறி செய்வதும் மன்னிப்பு கேட்பதும் ஒரு கிறிஸ்தவனுக்கு வேலையாயிருந்தால் உன்னைவிட ஒரு அஞ்ஞானி பரவாயில்லையென்று கூற காரியமுண்டு.

## 2. தேவ ஊழியர் மன்னித்தல்

இயேசு சீஷர்களை ஊழியத்திற்கு அனுப்பும் போது அவர்கள் மேல் ஊதி பரிசுத்தாவியைப் பெற்றுக் கொள்ளுங்கள்; என் பிதா என்னை அனுப்பினது போல நானும் உங்களை அனுப்புகிறேன்; நீங்கள் எவர்களுடைய பாவங்களை மன்னிக்கிறீர்களோ அது அவர்களுக்கு மன்னிக்கப்படும்; நீங்கள் எவர்களுக்கு மன்னியாதிருக்கிறீர்களோ அவை அவர்களுக்கு மன்னிக்கப்படாதிருக்கும் என்றார் (யோவா 20:20-23). இங்கு இயேசு சீஷர்களை சபையை கண்காணிக்கவோ, சபையாருக்கு பாவ மன்னிப்பருளவோ அனுப்பவில்லையென நாம் அறிய வேண்டும். அப்போது சபை உண்டாயிருந்ததில்லை. சுவிசேஷத்தை யூதர் புற ஜாதிகள் நடுவில் பிரசங்கிக்கவே அனுப்பினார். தமது ஆட்டுக் குட்டிகளை படுத்துக் கிழிக்கிற ஓநாய்கள் நடுவில் அனுப்பினார். சரீரத்தை கொல்லுகிறவர்களுக்கு பயப்படாதிருங்கள். ஒரு கன்னத்தில் அறைந்தால் மறு கன்னத்தையும் காட்டிக் கொடு எனச் சொல்லி சுவிசேஷத்திற்காக தங்கள் ஜீவனையும் கொடுக்கவே அவர்களை அனுப்பினார். சர்வாயுத வர்க்க மணிந்து போர் புரியும் இந்த சுவிசேஷ சேவையின் பலனாக கொடிய எதிர்ப்புகள் உண்டாகும். அடி, கல்லெறி, கட்டுகள், காவல்கள், அவமானங்கள், மரணம் முதலியவை சீஷர்களுக்கு நேரிடும். அப்பொழுது உங்களுக்கு எதிராக தீமை செய்கிற அவர்களுக்கு நீங்கள் மன்னித்தால் நானும் மன்னிப்பேன் நீங்கள் மன்னியாதிருந்தால் நானும் மன்னியாதிருப்பேன் என்றார். உங்கள் கால்களில் படிந்த தூசியை அவர்களுக்கு எதிராக நீங்கள் உதறிவிட்டால் நியாயத் தீர்ப்பு நாளில் நீங்கள் உதறிய தூசிகளே அவர்களுக்கு எதிராக எழும்பி சாட்சி சொல்லும். (லூக் 10:10-12; அப் 13:50, 15). தூசியை உதறவிட்டால் அப்படி ஆவதில்லை என்றார். சுவிசேஷ பிரயாண போராட்டத்தில் பிசாசினால் ஏவப்பட்டு எதிர்க்கும் உலக மக்களுக்கு மன்னிப்பதும், மன்னியாதிருப்பதும் அப்போராட்டத்தில் ஈடுபட்டு கஷ்ட, நஷ்டம் அனுபவிக்கும் ஊழியரின் மனப்பான்மைக்கு விட்டுக் கொடுத்தார் என்பதே கருத்து.

கிறிஸ்தவர்களில் அநேகர் வஞ்சிக்கப்படுகிறார்கள். இயேசு மரண வேளையில் பிதாவே இவர்களுக்கு மன்னியும் என்றதால் இயேசுவும் அவர்களுக்கு மன்னித்திருப்பதை காட்டினார். ஸ்தேவானும் சுவிசேஷ போராட்டத்தின் முடிவில் முழங்காற்படியிட்டு கர்த்தாவே இந்தக் குற்றத்தை இவர்கள் மேல் சுமத்தாதிரும் என்று விண்ணப்பித்ததில் தானும் தன் ஜனங்களுக்கு மன்னித்திருப்பதை விளங்கச் செய்தார்.

இவ்விருவரது ஜெபத்தை தேவன் கேட்டு அவர்கள் மன்னித்தது போல தானும் மன்னித்தார் என்பதற்கு அத்தாட்சியாக, இயேசுவை தூஷித்தவர்களில் ஒரு கள்ளனும் ஸ்தேவானை கொலை செய்த சவுலும் குணப்பட ஏதுவானது. இவர்கள் இருவரும் அளித்த பாவ மன்னிப்பு சபைக்குள் அல்ல; சபைக்கு வெளியே சுவிசேஷ போராட்டத்தில், புறஜனங்கள் நடுவிலுள்ள இடையூறுகள் என்பதை நன்றாய் அறிந்து கொள்ளுங்கள். ஆபேலும், தாவீதும் எதிரிகளுக்கு மன்னிப்புக் கொடாமல் ஆண்டவரே நீதியை சரிக்கட்டி பழிக்குப்பழி வாங்கும் என்று விண்ணப்பித்தார்கள். கர்த்தரும் இவர்களது மனப்பான்மைக்கு இணங்கி அப்படியே சரிக்கட்டிவிட்டார். சுவிசேஷ போராட்ட நடுவில் மனிதர் அல்ல; அவர்களுக்குள் தங்கி இருந்து கிரியை நடப்பிக்கிற பரிசுத்தாவியானவரே, சிலருக்கு மன்னிக்கவும், சிலருக்கு மன்னியாதிருக்கவும் ஏவுதல் அளித்து கிரியை நடத்தியிருக்கிறார். திருச்சபை விசுவாசிகளுக்கு குருவானவர் பாவங்களை மன்னிக்கவும், சிலருடைய பாவங்களை மன்னியாதிருக்கவும் கவேட்டையான அதிகாரத்தை சாமியாருக்கு வரமாகவும், குத்தகையாகவும் கொடுத்துவிட்டார் என்று இனி சொல்லாதிருங்கள் வேதத்தை சரியா படித்தவன் சொல்ல மாட்டான்;

"வேதத்தை படியாதே! வேதம் படித்தினால் மார்ட்டின் லூத்தர் கெட்டுப் போய

பதிதனாகிவிட்டார்; பூஜை மந்திர புத்தகங்களை மட்டும் படி" என்று தூண்டுகிற குருக்களும் அதைக் கேட்டு தூண்டுகிற பக்தர்களும் இதை ஒத்துக் கொள்ள மாட்டார்கள். வேதத்தை அறியாத இவர்கள் சபிக்கப்பட்டவர்கள் என்று பரிசேயர் கூறினது சரியாய் இருக்கிறது. சபைக்கு வெளியே வைத்து மனந்திரும்புதலும், பாவ மன்னிப்பும் பெற்று, ஞானஸ்நானத்தினால் சபைக்குள்ளானவன் பாவி அல்ல. அவன் ஜென்ம, கரும பாவங்களை கர்த்தர் தீர்த்து விட்டார். இனி அவன் பாவம் செய்யாதிருக்க அவனுக்கு தேவ ஆவியும், தேவ பெலனும், ஞானமும், வரமும் அருளப்படுவதால், தேவனால் பிறந்த இவன் தன்னைக் காக்கிறான். பரிசுத்தவானாகும்படி இவன் கடந்து போகவே சபையில் பயிற்சிக்கப்படுகிறான். சபையில் அங்கமான ஒருவன் மரணத்துக்கு ஏதுவான பாவத்தை செய்தால் அவனுக்கு சாமியார் பாவமன்னிப்பு கொடுக்க அல்ல. அவனை சபையைவிட்டுத் தள்ளிப் போடவும், அவனுக்காக விண்ணப்பம் பண்ணாதிருக்கவும், பவுலும், யோவானும் கூறுகிறார்கள் (I கொரி 5:1-13; I யோவா 5:16-18.)

மரணத்துக்கு ஏதுவல்லாத குற்றத்தை ஒருவன் செய்தால் அவன் சாமியாரிடத்தில் அல்ல கர்த்தரிடத்தில் விண்ணப்பம் பண்ணக் கடவன். அவர் அவனுக்கு மன்னித்து ஜீவனை கொடுப்பார் (I யோவா 5:16). தலையாகிய இயேசுவோடு இணைக்கப்பட்ட சரீரமாகிய திருச்சபையில் பாவம் செய்ய விசுவாசிக்கு உத்திரவு இல்லை; சபையில் பாவ மன்னிப்பு கொடுக்க கலி சேனை போராட்டத்தின் நடுவில், பதிரிகளான உலக மக்களுக்கு ஊழியர் மன்னிப்பதும், மன்னியாததுமான பாவ மன்னிப்பை சபைக்குள்ளே, குருக்கள் நடத்தவும் சபை ஜனங்கள் மாறி, மாறி பாவங்களைச் செய்து பாவ மன்னிப்பை வாயளவில் சாமியாரிடம் பெறவும் சாத்தான் பழக்கிவிட்டான். ஊருக்குள் கொடுக்கல், வாங்கல் புழங்குவது போல கோவிலுக்குள்ளே சாமியாரிடத்தில் பாவங்களை கொடுத்து மன்னிப்பை வாங்கி, இப்படி தினமும் கூடிப் பிரிகிற பலசரக்கு சந்தைக் கடையாக பீடாக மாற்றிவிட்டான்.

வேதம் படித்தறியாத பலர் செலவுடன் மெட்ருனியார் போப்பாண்டவரிடமிருந்து பாவ மன்னிப்பைப் பெற அலைகிறார்கள்.

3. சபை மன்னித்தல்

(1) ஒரு பாவி, மனிதனோடும் ஒப்புரவாகி, பாவமன்னிப்பு பெற்று, தான் அடைந்த பாவ மன்னிப்பை சபையில் சாட்சியாக கூறும்போது: கிறிஸ்துவின் சரீரமாகிய சபை, அவன் பெற்ற பாவ மன்னிப்பை ஆமோதிக்கிறது.

(2) சபையை விட்டு,மரண தண்டனைக்குரிய, பாவத்திலிருந்தும் தள்ளப்பட்டவன் கர்த்தரால் இரட்சிக்கப்பட்டு, சாத்தானால் புடமிடப்பட்டு, மாம்சத்தின் அழிவைக் கண்டு, அவன் ஆவியில் உயிர் மீட்சியடைந்து சரியான மாறுதல் உடனும், புது ஜீவனுடனும் மறுபடியும் சபையில் வந்து பக்தர்களின் ஐக்கியத்தை நாடினால் சபை அவனை ஆதரித்து கிறிஸ்துவின் அன்பைக் காட்ட வேண்டும்; அவனுக்கு மன்னிக்க வேண்டும் நீங்கள் எவைகளை மன்னித்தீர்களோ அதை நானும் மன்னித்திருக்கிறேன் நாம் எவைகளை மன்னித்தோமோ அவை கிறிஸ்துவின் சமுகத்திலும் மன்னிக்கப்பட்டிருக்குமென்று பவுல் எழுதுகிறார். (II கொரி 2:10, 11). இங்கேயும் சாமியாருக்கு தனி அதிகாரமில்லை."

மேலே நாம் பார்த்தபடி சபையில் விசுவாசியின் பாவங்களை மன்னிக்க போதகருக்கு அதிகாரமில்லை. பாவஞ் செய்தவன் உணர்வடைந்து தேவனிடம் மன்னிப்புப் பெற அவனுக்கு போதனை செய்ய மட்டும் தான் ஊழியருக்கு அனுமதி உண்டு. தேவைப்பட்டால் கண்டனம் பண்ணி கடிந்து கொள்ளலாம். (தீத்து 1:14; I தீமோ 5:20).

ஆனால் விசுவாசியின் பாவ மன்னிப்பு தேவ அதிகாரத்திற்குட்பட்டதாகும். தவறுதலான போதனைகளுள்ள சபைகளுக்கு விலகி உங்களைக் காத்துக் கொள்ளுங்கள்...

(தொடரும்)

---

"தன் பாவங்களை மறைக்கிறவன் வாழ்வடைய மாட்டான், அவைகளை அறிக்கை செய்துவிட்டு விடுகிறவனே இரக்கம் பெறுவான்"

நீதி 28 : 13

---

## அல்லேலூயா (சங்104 : 35)

அல்லேலூயா என்றால் தேவனுக்கு மகிமை என்று அர்த்தம்.

வேதாகமத்தில் பழைய ஏற்பாட்டில் காணப்படும் முதலாவது அல்லேலூயா (சங் 104:35) இதுவாகும். புதிய ஏற்பாட்டில் முதலாவது அல்லேலூயா வெளி 19:1 ல் காணப்படுகிறது. தேவன் துன்மார்க்கரை தண்டித்து நியாயம் தீர்க்கப் போகிறார் என்கிற இடத்தில் அல்லேலூயா முதலாவது வருகிறது. ஆனபடியால் துன்மார்க்கருக்கு துன்மார்க்கத் தனத்துக்கு நிச்சயமாக தண்டனை உண்டு என்பதை தேவ ஜனங்கள் அறிந்து கொள்ளவும்.

வேறு அல்லேலூயா காணப்படும் இடங்கள் :

சங் 105 : 45; 106 : 1, 48; 111 : 1; 112 : 1.
113 : 1,9; 115 : 18; 116 : 19; 117 : 2; 135 : 1,21;
146 : 1,10; 147 : 20; 148 : 1,14; 149 : 1,9;
150 : 1,6; வெளி 19 : 3,4

"ஆமென் அல்லேலூயா ..."
(வெளி 19 )

## நீங்கள் என்ன ஜாதி?

தேவனாகிய கர்த்தர் நம்முடைய மகிமைக்காக மனுஷனை சிருஷ்டித்தார். மனிதன் தேவனிடம் நன்மை பெற்று அவரை ஸ்தோத்தரிக்கும் போது அவர் மகிமைப்படுகிறார் (சங் 50:15, 23). தேவனுடைய மகத்துவமான செய்கைகளை மனிதன் கண்டு அவரைத் துதிக்கும்போது அவர் மகிமைப்படுகிறார் (ரோம 1:20,21). இப்படி தெய்வத்தை மகிமைப்படுத்துகிறவர்கள் அவருக்கு ஏற்றவர்களாகவும் கீழ்ப்படிகிறவர்களாகவும் பரிசுத்தர்களாகவும் இருப்பார்கள்.

துன்மார்க்கருடைய (ஸ்தோத்திர) பலியும், வேதத்தைக் கேளாதபடி தன் செவியை விலக்குகிறவனுடைய ஜெபமும் கர்த்தருக்கு அருவருப்பானது (நீதி 21:2 ; 28 9). ஆனபடியால் கர்த்தர் மகிமைப்படார். தேவனை மகிமைப்படுத்தி அவரைச் சேவிக்கும் ஜனங்கள் (சந்ததி) தலைமுறை தலைமுறையாக ஆண்டவருடைய ஜனங்கள் (சந்ததி) எனப்படுவார்கள் (சங் 22:30).

தேவன் ஆபிரகாமின் குமாரனாகிய ஈசாக்கின் குமாரனாகிய இஸ்ரவேலின் சந்ததி

யாரை தமக்கு சொந்த ஜனமாக தெரிந்து கொண்டு, அவர்களாலே மகிமைப்பட்டார். அவர்கள் தேவ ஜனங்கள், அவர்கள் தேவனுடைய பிள்ளைகள். (அந்நாட்களில் இஸ்ரவேலரல்லாத மற்ற யாவரும் புறஜாதிகள் எனப்பட்டார்கள்). இவர்களுக்குத் தேவன் தம்முடைய பிரமாணத்தைக் கொடுத்து, அதிலே அவர்கள் நடந்து, தேவாசீர்வாதம் பெற்று, தேவனுக்கு நன்றி செலுத்தி, ஆராதித்து அவர்கள் தேவனை மகிமைப்படுத்தும்படி அவர்களைத் தமக்கென்று தெரிந்து கொண்டார்.

இந்த இஸ்ரவேலர் தேவனுடைய வழியில் நடக்கும்போது மாத்திரமே, கர்த்தர் அவர்களுக்குப் பிதாவாகவும், தேவனாகவும் இருக்கிறார் (II கொரி 6:17, 18) இவர்கள் வழிவிலகிப் போகும் போது, அவர்கள் பெயரளவில் இஸ்ரவேலர் எனப்பட்டாலும் தேவனுடைய பிள்ளைகள் என்று அழைக்கப்படாமல் பிசாசின் பிள்ளைகளாக மாறிப் போகிறார்கள் (யோவான் 8:44).

தேவன் தம்மை பரிசுத்தமாய் சேவிக்கிறவர்களை தமது ஜனம் என்றும் மற்றவர்களை புறஜாதிகள் என்றும் மனுக்குலத்தை இரண்டு ஜாதிகளாக (வெளிச்சத்தையும் இருளையும் வேறு பிரித்ததுபோல) பிரித்திருக்கிறார். இஸ்ரவேலரல்லாதவர்களாக இருந்தாலும், கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்தினாலே தேவனுடைய புத்திரராகிறார்கள். ஏனெனில் பழைய மனுஷன் செத்து ஞானஸ்நானத்தினால் அடக்கம் பண்ணப்பட்டு, புதுசிருஷ்டியாகிற புதிய மனுஷன் கிறிஸ்துவை தரித்துக் கொண்டவனாக இருக்கிறான் (கலா 3:26,27).

இப்பொழுது தேவன் பிரித்த இரண்டு ஜாதிகளுக்கு பெயர் (1) விசுவாசிகள் (2) அவிசுவாசிகள் (II கொரி 6:15). இப்படியாக தேவனுடைய பார்வையில் இரண்டே ஜாதிகள் இருக்கிறார்கள். இந்த இரண்டு ஜாதிகளும் சம்பந்தம் கலக்கக்கூடாது. பெண் கொடுப்பதோ எடுப்பதோ கூடாது என்று தேவன் கட்டளையிட்டுள்ளார் (II கொரி 6:14—18). விசுவாசிகளுக்குள்ளாக தேவன் பல ஜாதிகளைப் பிரித்து கலகம் உண்டாக்கவே இல்லை. நான் உங்களுக்குப் பிதா, நீங்கள் எல்லாரும் ஒருவருக்கொருவர் சகோதரர்கள் என்றே கர்த்தர் சொன்னார். இப்படி விசுவாசிகள் எல்லாரும் ஒன்றாயிருக்க வேண்டுமென்று தேவன் சித்தமுடையவராயிருக்கிறார். ஒன்றாயிருப்பார்களானால் பலத்த ஜாதியாக இருப்பார்கள். முப்புரி நூல் அறாது என்ற பிரசங்கியின் வாக்கியத்தை அறிந்த பிசாசு, விசுவாசிகள் பலமற்று போகும்படியாக அவர்களை சின்னபின்னமாக பிரித்துவிட்டான். சாத்தானுடைய சித்தத்தின்படி இந்நாட்களில் ஜனங்கள் கிறிஸ்தவ பறையர் என்றும், கிறிஸ்தவ நாடார் என்றும், கிறிஸ்தவ சக்கிலி என்றும் இப்படி நார் நாராக பிரிந்து கிடக்கிறார்கள்.

இவர்களுக்கு தேவ வெளிப்படுத்தல் கிடையாது. தேவ தொடர்பு கிடையாது என்பது திட்டமான காரியமாகும். தேவ வெளிப்படுத்தல் பெற்ற ஒரு மனுஷன் சொல்வதைப் பாருங்கள்: பேதுரு அவர்களை நோக்கி, அந்நிய ஜாதியானோடே கலந்து அவனிடத்தில் போக்குவரவாயிருப்பது யூதனானவனுக்கு விலக்கப்பட்டிருக்கிறதென்று நீங்கள் அறிந்திருக்கிறீர்கள்; அப்படியிருந்தும் எந்த மனுஷனையும் தீட்டுள்ளவனென்றும், அசுத்தனென்றும் நான் சொல்லாதபடிக்கு தேவன் எனக்கு காண்பித்திருக்கிறார். ஆதலால் நீங்கள் என்னை அழைப்பித்தபோது நான் எதிர் பேசாமல் வந்தேன் (அப் 10:28,29). மனுஷ ஜாதியான சகல ஜனங்களையும் அவர் ஒரே இரத்தத்தினாலே தோன்றப் பண்ணி, பூமியின் மீதெங்கும் குடியிருக்கச் செய்திருக்கிறார் (அப் 17:26). தேவ தொடர்புள்ளவர்கள் வெளிப்படுத்தலுள்ளவர்கள், ஞானத் தெளிவுள்ளவர்கள், மனுக்குலமெல்லாம் ஆதாம் என்னும் ஒரே மனுஷனிலிருந்து வந்தது என்று சத்திய வேதம் சொல்வதை விசுவாசிக்கிறவர்கள் இன்னொரு மனிதனை தாழ்ந்த ஜாதிக்காரன் வேறே ஜாதிக்காரன், அவன் நம்ம ஜாதிக்காரனல்ல என்றெல்லாம் சொல்ல மாட்டார்கள்.

ஒரு சின்ன பட்டணத்தில் வாழ்கிற ஒரு பெண்மணி கவுன்போட்டு பழகினவள், அவளை சுற்றிலுமிருக்கிற பெண்களும் அப்

படியே பழகினவர்கள் இந்தப் பழக்கமானது அவள் உதிரத்தோடே ஊறிப்போனதாக இருக்கிறது. இந்தப் பெண்ணை இப்போது கிராமப்புற பழக்கவழக்கமுடைய பெண்கள் மத்தியில் கொண்டு போய்விட்டு அவர்கள் போடுகிற சேலை, ரவிக்கை போடச் சொன்னால் அவளுக்கு தர்ம சங்கடமாக இருக்கும். ஏதோ அசுத்தம்போல் தோன்றும் இந்த எண்ணம் இவளுக்குள் மட்டுமே இருக்கிறது. இவள் கஷ்டப்பட்டு தன்னுடைய பழக்கத்தை மாற்றி சேலை, ரவிக்கை போட்டு பழக ஆரம்பிக்கும் போது புது மனுஷியாக மாறிப் போகிறாள். கொஞ்ச நாட்களில் சேலை, ரவிக்கை போடுவது இவளுக்கு சங்கடத்தை உண்டாக்காது. இவளுடைய பிள்ளைகள் சிறுவயது முதல் பாவாடை, சட்டை போட ஆரம்பிக்கிறார்கள். பின் சேலை, ரவிக்கை போடுகிறார்கள். அவர்களுக்கு அதைப்பற்றி ஒன்றுமே தெரிவதில்லை. இது நாம் நடை முறையில் காண்கிற காரியம்.

அப்படியே ஜாதிப் பற்றும் பழக்கத்தினால் ஊறிப்போன காரியமாக இருப்பதால், அநேகருக்கு அதிலிருந்து விடுபடுவது கஷ்டமான காரியமாக இருக்கிறது. தவிர இன, ஜன பந்துக்களின் மாம்சீக உறவு தடை செய்கிறது. ஒரு மனிதன் மெய்க் கிறிஸ்தவனாக மாறும்போது பழைய பாவ மனுஷனை சிலுவையில் அறைந்து கொலை செய்து, கிறிஸ்துவுக்குள் புதிய சிருஷ்டியாக புதிய மனிதனாகிறான். இப்படியே கிறிஸ்துவுக்குட்பட்டு விசுவாசிகளாகிறவர்கள், நான் இன்ன ஜாதியான் என்கிற பழைய பாவ மனுஷனை அழித்து அப்புறப்படுத்தும் போதே அவர்கள் புது சிருஷ்டிகளாகிறார்கள்.

இவர்களுடைய சந்ததிகளுக்கோ பிரச்சனையே இல்லை. அவர்கள் மெய்க் கிறிஸ்தவர்களாகவே வளர்கிறார்கள். பல தலைமுறைகளாக கிறிஸ்தவர்களாக இருந்தும் ஜாதியை விடாமல் பிடித்து வருகிறவர்களின் குடும்பத்தில் மெய்க் கிறிஸ்தவன் எழும்பினது இல்லை போலும்.

"புதிய எருசலேம் சபை" மாம்சீக ஜாதிப் பிரிவினையை தீவிரமாக எதிர்க்கிறது. இங்கே ஜாதிப் பாகுபாடு கிடையாது என்பதை சபைக்குட்படுகிறவர்கள் அறிய முடியும். இது மணவாட்டியாக ஆயத்தப்படுகிறபடியால் தன் குலத்தையும், பூர்வோத்திரத்தையும் அறிவிப்பதில்லை (எஸ்தர் 2:10,20). யாரும் கேட்டால் கிறிஸ்தவள், கிறிஸ்தவன், விசுவாசி என்றே சொல்லும் புதிய எருசலேம் சபைக்குட்படுங்கள் விசுவாச ஜாதியாகுங்கள். ஒருமித்து தேவ ஜனமாய் தேவனை மகிமைப் படுத்துவோம்.

"...நாம் அவருடைய சந்ததியாரே..."
(அப் 17:28)

# மோட்ச வழி

(குரு-சிஷ்ய உரையாடல்)

(தொடர்ச்சி)

சிஷ்ய : ஐயா, ரோமன் கத்தோலிக் (Roman Catholics) காரர்களைப் பற்றி அறிந்து கொள்ள விரும்புகின்றேன்.

குரு : ரோமன் கத்தோலிக் என்ற பெயர் கி. பி. 300க்குப் பின் தோன்றியதாகும். கத்தோலிக் சபை (Catholic Church) என்றால் பரிசுத்த சபை என்று அர்த்தம். அதோடு கூட ரோமன் என்ற வார்த்தையை கி. பி. 400க்குப் பின் சேர்த்துக் கொண்டு ரோமன் கத்தோலிக் என்று அப்பொழுது இருந்த கிறிஸ்தவர்கள் தங்களை அழைத்துக் கொண்டார்கள். கி. பி. 300ல் ரோம இராயனாகிய கான்ஸ்டான்டின் கிறிஸ்தவனானார். "அரசன் எவ்வழியோ அவ்வழி குடிகள்" என்பது போல ரோம அரசாட்சியின் பெரும் பகுதி மக்கள் பெருக்கு கிறிஸ்தவரானார்கள்.

உலக ஞானவியமும், சடங்குகளும் அரசனும் கிறிஸ்தவ மதத்துக்கு வழங்கப் பட்டது. 6ம் (ஆறும்) நூற்றாண்டில் இருந்த கிரகரி I (Gragory I) என்ற ரோமபுரியில் இருந்த குரு, 'The Pope' என்ற பட்டத்தை தனக்குத் தரித்துக் கொண்டார். தானே திருச்சபையின் தலை என்று அறிவித்தார். முதலாவது போப் அப். பேதுரு ரோமபுரியில் இருந்து அரசாட்சி செய்தார் என்றும் ரோமபுரியில் அந்தப் பதவிக்கு வருகிறவர்களை 'Pope' என்றும் ரோமன் மார்க்கத்தார் சொல்லிக் கொள்ளுகிறார்கள்.

அப். பேதுரு ரோமபுரியில் சபை ஆரம்பித்ததாகவோ, அங்கு இருந்ததாகவோ நாம் வேதத்தில் காண்பதில்லை. திருச்சபையானது கி. பி. 33ல் பெந்தெகொஸ்தே நாளில் எழும்பிற்று. இதுவே தாய் சபை. ரோமன் கத்தோலிக் அல்ல தாய் சபை. ரோமன் கத்தோலிக் ஒரு மனுஷீக மதமாகும். பிற மதங்களின் ஆச்சாரங்களையும் வேதாகமத்தில் உள்ள சில கொள்கைகளையும், மனுஷீக அபிப்பிராயங்களையும் கொண்டதாகும். அங்கே அநேக தவறான கொள்கைகளும், நடைமுறைகளும் காணப்படுகின்றன.

(1) ரோமபுரியில் உள்ள Pope (போப்) கிறிஸ்தவ மதத்தின் தலைவர். கிறிஸ்தவர்கள் எல்லாரும் அவருக்குக் கட்டுப்பட்டவர்கள் என்று கி. பி. 6ம் (ஆறும்) நூற்றாண்டு முதற் கொண்டு சொல்லுகிறார்கள்.

திருச்சபையின் தலைவர் கர்த்தராகிய இயேசு கிறிஸ்து (எபே. 1:21-23; 4:15). ஆறும் நூற்றாண்டில் எழும்பிய போப் கிரகரி I (Gragory I) ஆனாலும் சரி, அதற்குப் பின் எழும்பின போப்புகளாயிருந்தாலும் சரி, அவர்களுக்குத் திருச்சபையின் தலைவராகிய இயேசு கிறிஸ்து தரிசனமாகி, அப்போஸ்தல அதிகாரத்தை கொடுக்கவில்லை. ஆனபடியினால் அவர்கள் காணப்படுகிற திருச்சபையின் தலைவர்கள் அல்ல.

(2) மரியாள் வணக்கம் : இயேசு கிறிஸ்துவின் தாயாகிய மரியாளை இரட்சகி என்றும், இயேசு கிறிஸ்துவுக்கு கட்டளையிடுகிறவள் என்றும், நாம் மரியாளை நோக்கி வேண்டிக் கொண்டால் மரியாள் இயேசுகிறிஸ்துவிடம் சொல்லி, நம்முடைய காரியம் நடக்கும்படி செய்வாள் என்றும்; மரியாள் மரித்து உயிர்த்தெழுந்து பரலோகத்துக்கு ஏறிப் போயிருக்கிறாள் என்றும், மரியாள் கடவுளின் தாய் என்றும், இன்னும் பல விதத்தில் மரியாளைப் பற்றி போதிக்கப்படுகிறது.

மரியாள் மனுஷனாகிய இயேசுவின் தாயேயொழிய இறைவனாகிய இயேசு கிறிஸ்துவின் தாய் அல்ல (மத் 12:46-50). மரியாளை யோசேப்பின் மனைவி என்று வேதத்தில் திட்டமாக குறிப்பிடப்பட்டுள்ளது (மத் 1:20, 21, 25). மரியாள் இயேசு கிறிஸ்துவை மூன்று நாள் இழந்துவிட்டு தேடித் திரிந்ததாக வேதாகமத்தில் எழுதப்பட்டுள்ளது (லூக் 2:42-49). இயேசுவை நோக்கி பரிசுத்த ஆவிக்காக காத்திருந்து வேண்டிக்கொண்டு பரிசுத்தாவி பெற்ற ஸ்திரீகளில் மரியாளும் ஒருவராகும் (அப் 1:12-14; 2:1-4, 33). மரியாளை கடவுளுக்குச் சமமான கடவுளாக்கி தொழுது கொண்டதாக வேதாகமத்தில் எங்கும் ஆதாரம் கிடையாது. மரியாள் அல்ல, இயேசுகிறிஸ்துவே நமக்காக சிலுவையில் இரத்தம் சிந்தி மரித்தவர். நம்முடைய பாவங்களுக்காக பரிந்து மன்றாடுகிறவரும் அவரே (கொலோ 1:14; எபே 2:13, 14; I யோவா 2:1, 2). மரியாள், இரட்சகர் இயேசு இந்த உலகத்தில் தோன்றுவதற்கு ஒரு விசேஷித்த கருவியாக இருந்தாள். அவளுக்கென்று தனி கனமும் ஆசீர்வாதமும் உண்டு. ஆனால், மரியாளை கடவுளுக்குச் சமமான கடவுளாக்கி கும்பிடுகிறது விக்கிரக ஆராதனையும் கொடிய தூஷணமுமாகும்.

(3) ரோம மார்க்கத்தார் சிலை வணக்கம், அர்ச்சிஷ்டபண்ட (மரித்துப் போன பரிசுத்தவான்களுடைய அவயவங்கள்) வணக்கம் உடையவர்களாகும். சிருஷ்டிகர் ஒருவரைத் தவிர வேறு எவரையும் எதையும் தொழுது கொள்வது, சிலைகளையோ, படத்தையோ, பொருட்களையோ வணங்குவது விக்கிரக ஆராதனையும் தேவ தூஷணமுமாகும் (யாத் 20:3-5; உபா 5:15-19; 4:15-19; ரோம 1:18-32).

(4) ஊழியம் செய்யும் குருக்களும், ஸ்திரீகளும் விவாகம் செய்யக் கூடாது என்ற சட்டம் இவர்களுக்கு உண்டு.

தேவன் ஆதியிலே மனிதனை ஆணும், பெண்ணுமாய் படைத்தார். விவாகம் யாவருக்குள்ளும் கனமுள்ளதாயும், விவாக மஞ்சம் அசுசிப்படாததாயும் இருப்பதாக. வேசிக்கள்ளரையும், விபச்சாரக் காரரையும் தேவன் நியாயம் விசாரிப்பார். விரத்தராயிருக்கிற வரம் பெற்றவர்கள் விரத்தராயிருக்கலாம். மற்றவர்கள் வேகிறதைப் பார்க்கிலும் விவாகம் பண்ணுவது நல்லது (1 கொரி 7:9). கடைசி காலத்தில் சாத்தான் விவாகம் பண்ணக் கூடாது என்று போதிப்பான் (1 தீமோ 4 : 1-3).

(5) குழந்தைகளுக்கு தெளிப்பு ஞானஸ்நானம் கொடுப்பது இவர்கள் வழக்கம்.

விசுவாசமுள்ளவராகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான் (மாற் 16 : 16). ஞானஸ்நானம் தெளிப்பு அல்ல முழுக்கு (எபே 5 : 26; தீத்து 3:5).

(6) கர்த்தருடைய பந்தி : முதலாவது கர்த்தராகிய இயேசு கிறிஸ்து கர்த்தருடைய பந்தியை ஸ்தாபித்தார். இதனுடைய அர்த்தத்தை உணராத சிறுவர்களுக்கு தெளிப்பு ஞானஸ்நானம் கொடுத்து, திருவிருந்தில் பங்கெடுக்கச் செய்வது மூடப் பழக்கமும் தவறானதுமாகும்.

(7) உத்தரிக்கும் ஸ்தலம் : ஆத்துமாக்கள் மரித்தபின்பு உத்தரிக்கும் ஸ்தலத்தில் இருக்கிறார்கள். அங்கே இருக்கிறவர்களுக்காக கீழே இருக்கிற குருக்கள், உறவினர்கள் ஜெபித்தால் அவர்கள் பாவம் மன்னிக்கப்பட்டு பரலோகம் போவார்கள் என்பது இவர்களது கொள்கை.

உத்தரிக்கும் ஸ்தலம் சாத்தானுடைய பெரிய தந்திரமாகும். இரட்சிப்பு இந்த பூமியில் நாம் உயிரோடிருக்கும் பொழுதே, பெறுக்கொள்ள வேண்டியதாகும் (எபி 2 : 3). இயேசுகிறிஸ்துவை மனந்திரும்பி விசுவாசித்து இரட்சிப்பை பெற்றுக்கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் தேவ கோபம் அவன்மேல் நிலை நிற்கும். மரித்தபின் பாவ மன்னிப்பைப் பெற்றுக் கொள்ள எந்தச் சந்தர்ப்பமும் கிடையாது (யோவா 3 : 36, 16, 18).

மனுஷீக ரோமன் மார்க்கத்தில் அவ்வப் பொழுது உண்டான கொள்கைகளின் விவரப் பட்டியல் பின்வருமாறு.

(தொடரும்)

மகா பாபிலோன் விழுந்தது! அது பேய்களுடைய குடியிருப்பும், சகலவித அசுத்த ஆவிகளுடைய காவல் வீடும், அசுத்தமும் அருவருப்புமுள்ள சகலவித பறவைகளுடைய கூடு மாயிற்று (வெளி 18 : 2).

(தொடர்ச்சி)

# வேத பாடம்

யாத் 15:1—19 மோசேயின் பாட்டு : கர்த்தர் சிவந்த சமுத்திரத்தில் வெற்றி சிறந்தார். பார்வோனையும் அவனுடைய சேனைகளையும் சமுத்திரத்தில் அமிழ்த்துப்போட்டு தம்முடைய ஜனமாகிய இஸ்ரவேலரை சமுத்திரத்திலிருந்து கரையேறச் செய்து இரட்சித்தார் என்று மோசேயும் அவரோடுகூட இருந்தவர்களும் பாட்டுப் பாடினார்கள். இந்த பாட்டிற்கு மோசேயின் பாட்டு என்று பெயர். வெளி 15:3 காண்க.

யாத் 15:20, 21 மிரியாமும், ஸ்திரீகளும் பாட்டுபாடி நடனமாடினார்கள்.

யாத் 15:23-26 'மாரா' என்னுமிடத்தில் குடிக்க தண்ணீர் இல்லாமல் இஸ்ரவேலர்கள் முறுமுறுத்தார்கள். அங்கேயுள்ள தண்ணீர் குடிக்கக் கூடாதபடி கசப்பாயிருந்தது. மோசே கர்த்தரை நோக்கி கூப்பிட்டார். கர்த்தர் மோசேயிக்கு ஒரு மரத்தைக் காண்பிக்க அதை வெட்டி தண்ணீரில் போட்டப் பொழுது அந்த தண்ணீர் தித்திப்பாயிற்று. தெய்வீக சுகத்தைப் பற்றி தேவன் வாக்குத்தத்தம் அருளுகிறார். நீ என் வாக்கை உள்ளபடிக் கேட்டு அதின்படியெல்லாம் செய்வாயானால் எகிப்தியருக்கு நான் வரவிட்ட வியாதிகளில் ஒன்றையும் வரப்பண்ணேன். நானே உன் பரிகாரியாகிய கர்த்தர் என்றார்.

யாத் 15:27 இஸ்ரவேல் புத்திரர் 'மாரா'விலிருந்து ஏலிமுக்குப் பிரயாணம் பண்ணுகிறார்கள்.

யாத் 16:1-21 சீன் வனாந்திரத்தில் இஸ்ரவேலர்கள் மோசேயிக்கும் ஆரோனுக்கும் விரோதமாய் முறுமுறுத்து இறைச்சி கேட்டு வாக்குவாதம் பண்ணினார்கள். மோசேயின் ஜெபத்தைக் கேட்டு தேவன் பாளயத்தைச் சுற்றிலும் காடைகள் வந்து விழவும், மன்னா பொழியவும் செய்தார். இரவில் பெய்யும் பனியில் மன்னா விழுந்தது. அதிகாலையில் ஒவ்வொருவரும் மன்னாவைச் சேர்க்க வேண்டும். வெயில் ஏறிவிட்டால் உருகிப் போய்விடும். அதிகாலையில் ஒவ்வொருவரும் ஒரு ஓமர் மன்னா தங்களுக்காகச் சேர்த்துக் கொள்ள வேண்டும். மறுநாளைக்கு வைக்கக்கூடாது. பூச்சிபிடிக்கும்.

யாத் 16:22-36 ஆறும் நாளில் தலைக்கு இரண்டு ஓமர் அளவு சேர்த்துக் கொள்ள வேண்டும். ஏழாம் நாள் ஓய்வு நாள். அதில் மன்னா பெய்யாது. இந்த மன்னா கொத்தமல்லி அளவாயும் வெள்ளை நிறமாயும், இதன் ருசி தேனிட்ட பணியாரம் போலுமிருந்தது. இது தூதர்களின் அப்பம் என்றழைக்கப்படுகிறது. இதில் கொஞ்சம் எடுத்து ஒரு கலயத்தில் போட்டு தேவ சந்நிதானத்தில் வைக்கும்படி தேவன் ஆரோனுக்கு கட்டளையிட்டார். இஸ்ரவேல் புத்திரர்கள் வனாந்தரத்தில் சுற்றி திரிந்த 40 ஆண்டுகளாய் தினந்தோறும் அற்புதம் நிகழ்த்தியது இந்த காலங்களில்தான்.

(தொடரும்)

"தூதர்களின் அப்பத்தை மனுஷன் சாப்பிட்டான் அவர்களுக்கு ஆகாரத்தைப் பூரணமாய் அனுப்பினார்" (சங் 78 : 25).

மாதர் பகுதி

(தொடர்ச்சி)

# குடும்பம்

## 2. மகள் மீது தாயின் கடமை

தாயானவள் தன் மகள் ஒழுக்கமுள்ளவளாய் பண்பில் உயர்ந்தவளாய், கடமையில் கருத்துள்ளவளாயிருக்க போதிக்க வேண்டும். மகள் நன்மை, தீமை அறியும் அறிவை அடையுமுன்பே அவளுக்கு தீமையினின்று விலகியிருக்க படிப்பிக்கவேண்டும். பெண்கள் பூப்படைந்ததும் பருவக்கிளர்ச்சி பலமாக இருக்கும். தாய் பரிவுடன் மகளை அணுகி கற்பைப் பற்றி போதிக்கவேண்டும். ஓர் பெண்ணுக்கு கற்பே செல்வமென்றும், கன்னிமையே மானம் என்றும் போதிக்க வேண்டும். கற்பை இழப்பது ஆண்களைப் போல அல்ல பெண்களின் நிலை. பெண் தன்னைத்தான் காத்துக் கொள்ள வேண்டுமென்றும் போதிக்க வேண்டும். ஆண்களின் வஞ்சகத்துக்கு இடங்கொடாமலிருக்க கண்டிப்பான ஆலோசனை கொடுக்க வேண்டும். வீணாய் இப்பொழுதே ஏன் சொல்ல வேண்டும் காலாகாலங்களில் அவளே தெரிந்து கொள்ளுவாள் என்று எண்ணி தாய் அவளுடைய பேதமை உள்ளத்தை ஏன் கலக்க வேண்டும் என்று எண்ணி அமைதியாயிருக்கக்கூடாது. முறையாக தாய் இந்த காரியத்

தை குறித்து அறிவுரை கூறவிட்டால் மகள் வேறு தவறான வழியில் அறிந்து கொள்ள முற்படுவாள்.

நாம் நம்முடைய பிள்ளைகளுக்கு அறிவிக்க வேண்டியவைகளை அறிவிக்கவில்லையென்றால், உலகில் தீயோர்கள் அதை அறிவிக்க ஆயத்தமாக இருக்கிறார்கள். தீய புத்தகங்கள், தீயநண்பர்கள், தீயபடக்காட்சிகள் இவைகளின் மூலமாக மகள் தவறான முறையில் தன்னுடைய பருவக்கிளர்ச்சிகளைப் பற்றி அறிந்து கொள்ளவும் அதை திருப்தி படுத்தவும் முற்படுவாள். அல்லது, ஆண்களின் முகஸ்துதியில் சிக்குண்டு வஞ்சிக்கப் படுவாள். (பெண்கள் தங்களை யாராவது புகழ்ந்து பேசினால் உளக்கிளர்ச்சியடைந்து இணங்கிப் போகும் தன்மையுடையவர்கள்) "சோலியின் குடுமி சும்மா ஆடாது." சிறு பிள்ளைகளின் பக்கத்திலே பாம்பு இருக்கும் பெட்டியை வைத்துவிட்டு, அதற்குள்ளாக என்ன இருக்கிறதென்பதையும் அதனால் என்ன தீமை என்பதையும் அறிவியாதிருந் தால்தையும் திறந்து பார்க்கும் மனித இயல் பின்படி அந்தப் பிள்ளை பெட்டியை திறந்து பார்க்கவே செய்யும். பெண்களில் அநேகர் நல்லொழுக்கமும், பண்புடையவர்களாக ஜீவிக்கவே விரும்புகின்றனர். ஆனால், உலகில் ஆயிரக்கணக்கான பெண்கள் கெட்டு சீரழிகின்றனர். அதற்கு காரணம் அது என்னது என்று அறியாமல் சிக்குண்டு இக்கதி ஆனேன் என்றும், எங்கள் தாய் மாத்திரம் இதைக் குறித்து முன்னே எச்சரித்திருந்தால் போதித்திருந்தால், எனக்கு இப்படி ஆகியிருக்காதென்று பெண்களில் அநேகர் தங்கள் தாய்மார்களைத் திட்டுகிறார்கள்.

இந்நாட்களில் பள்ளி மாணவர்களின் ஒழுக்கம் மிகவும் சீர் கெட்டுப் போயிருக்கிறது. அதற்குக் காரணம் பள்ளிகளில் அறிவுரை போதிக்கப்படாததே என்பதை கல்வி நிபுணர்கள் அறிந்திருக்கிறார்கள். கிறிஸ்தவ பள்ளிகளில் படிக்கும் மாணவ, மாணவிகள் நல்லொழுக்கத்தில் சிறந்தவர்களாயிருப்பதற்குக் காரணம், அங்கு நற்போதனை அருளப்படுகிறது என்பதாகும்.

பெண்ணினம் பாதுகாக்கப் படவேண்டும். மேன்மையாய் மதிக்கப்பட வேண்டும் ஒரு பெண்ணின் கற்புக்கு பங்கம் விளைவதைத் தடுப்பதே ஆண்மைக்கு அழகு. அவசியம் ஏற்பட்டால் 'அடலேறு' போன்று எதிர்நின்று பெண்ணின் கற்பை காப்பாற்றுக. ஏனெனில் நம்மை ஈன்றவள் ஒரு பெண் நம்மோடு பிறந்தவள் ஒரு பெண், நமது கையைப் பிடிப்பவளும் ஒரு பெண், நமக்கு பிறப்பவளும் ஒரு பெண்.

பெண் ஒரு பெலவீனமான பாண்டம். அவளுக்கு பாதுகாப்பு தேவை. நம்மிடத்தில் பிங்காளால் செய்யப்பட்ட விலையேறப்பெற்ற ஒரு பொருள் ஒப்படைக்கப் பட்டிருக்கிற தென்றால் அதை எப்படி பாதுகாப்போமோ அவ்விதமாக பெண்ணினத்தை மதித்து பாதுகாக்க வேண்டும். எங்கே எந்த நாட்டில் பெண்கள் மதிக்கப் படுகிறார்களோ அந்த நாடே உயர்ந்த நாகரீகம் உடையதாகும். பெண்கள் வீட்டிலே அடைந்திருக்கிறவர்கள் அல்ல. வெளியேயும் போய் வர வேண்டியவர்களாய் இருக்கிறார்கள். பள்ளிக்கு, கடைத்தெருவுக்கு, அலுவலகங்களுக்கு இன்னும் பற்பல காரியங்களுக்கு போக, வர வேண்டியதாக இருக்கும்.

உலகமெங்கும் மனித மிருகங்கள் நடமாடித் திரிகின்றன. எங்கே (அரவம்) பாம்பு இருக்கிறதென்று தெரியாது. அநேக பெண்கள் சிறு வயதில் கெடுக்கப்படுவது நெருங்கிய உறவினர்களாலேயே. (சித்தப்பா, தாத்தா, ஒன்றுவிட்ட சகோதரர்கள், தீய தகப்பன்மார்கள், நெருங்கிய உறவினர்கள்) ஆனபடியினால் பெண்கள் வெளியே போனால் தகுந்த பாதுகாப்புடன் செல்ல வேண்டும். இருட்டுகிறதற்கு முன்பாகவே வீடு திரும்பிவிட வேண்டும். பொது இடங்களில் அதிகம் தரித்திருக்கக்கூடாது சரியான ஆண் துணையின்றி பொதுச் சேவையில் ஈடுபடுவது அபாயம். தன்னுடைய கற்பைக் காப்பாற்றித் தரும்படியும், விவாகம் முடிக்க வேண்டும் என்றால் நம் வாழ்க்கையை தேவன் அமைத்துத் தரும்படியும், ஓயாமல் இறைவனை நோக்கி வேண்டிக் கொள்ள வேண்டும்.

கர்த்தராகிய இயேசு கிறிஸ்து உனக்கு உதவி செய்வார். (தொடரும்)

---

"தீனாள் தேசத்துப் பெண்களைப் பார்க்க புறப்பட்டாள்" (ஆதி 34:1)

# எல்லோரும் சகோதரர்களா?

நீங்களோ ரபீ என்றழைக்கப்படாதிருங்கள்; கிறிஸ்து ஒருவரே உங்களுக்குப் போதகராயிருக்கிறார். நீங்கள் எல்லாரும் சகோதரர்களாயிருக்கிறீர்கள். பூமியிலே ஒருவனையும் உங்கள் பிதா என்று சொல்லாதிருங்கள்; பரலோகத்திலிருக்கிற ஒருவரே உங்களுக்குப் பிதாவாயிருக்கிறார். நீங்கள் குருக்கள் என்று அழைக்கப்படாதிருங்கள்; கிறிஸ்து ஒருவரே உங்களுக்குக் குருவாயிருக்கிறார் (மத் 23:8-10).

இந்த வேதவாக்கியங்களை சிலர் ஆதாரமாகக் காண்பித்து எல்லாரும் சகோதரர்கள் என்றே அழைக்கப்படவேண்டும். அப்போஸ்தலர் என்றோ, தீர்க்கதரிசி என்றோ, சுவிசேஷகன் என்றோ, பாஸ்டர் (மேய்ப்பர்) என்றோ, போதகர் (Teacher) என்றோ அழைக்கப்படக் கூடாது என்று வாதிக்கின்றனர். வேதாகமத்தைக் கவனிக்கையில் இந்த விளக்கம் தவறெனக் காணலாம். “சபையிலே தேவன் சிலரை அப்போஸ்தலராகவும், சிலரை தீர்க்கதரிசிகளாகவும், சிலரைச் சுவிசேஷகராகவும், சிலரை மேய்ப்பராகவும், போதகராகவும் ஏற்படுத்தினார் (எபே 4:13).

மேலும் சபையை மேய்ப்பதற்கு பரிசுத்த ஆவியானவர் கண்காணிகளை ஏற்படுத்தியிருக்கிறார். அவர்கள் மூப்பர்கள் என அழைக்கப்படுகிறார்கள் (அப் 20:28, 17). தேவனும் என்ன ஊழியத்திற்காய் ஊழியர்கள் ஏற்படுத்தப்பட்டனரோ அந்த ஊழியத்தின் பெயராலே அவர்களும் அழைக்கப்படுகிறார்கள். பவுல், யாக்கோபு, பேதுரு, யோவான், யூதா இவர்களெல்லாம் அப்போஸ்தலர் என்று அழைக்கப்பட்டார்கள் (ஒவ்வொரு நிருபங்களின் தலைப்புகளை வாசிக்கவும்). தான் அப்போஸ்தலன் என்று பவுல் சொல்லுகிறார் (I கொரி 9:1). அகபு என்பவர் தீர்க்கதரிசி என்று அழைக்கப்பட்டார் (அப் 21 : 10). பிலிப்பு என்பவர் சுவிசேஷகன் என்று அழைக்கப்பட்டார் (அப் 21:8). பரி. பவுல் அப்போஸ்தலனாவதற்கு முன் தீர்க்கதரிசி என்றும் போதகன் என்றும் அழைக்கப்பட்டார் (அப் 13 : 1). இப்படி இவர்கள் அழைக்கப்பட்ட போதிலும் ஒருவருக்கொருவர் சகோதரர்களே (II பேது 3:15) ஒரு காரில் பிரயாணம் செய்கிறவர்கள் எல்லோரும் காரோடே செல்கிறார்கள். டிரைவரும் பிரயாணம் செய்கிறவரே. அதனால் அவரை பிரயாணி என்றே அழைக்க வேண்டும், டிரைவர் என்று அழைக்கக் கூடாது என்பது மதியீனம்.

இப்படியிருக்க நீங்கள் எல்லாரும் சகோதரர்களாயிருக்கிறீர்கள் என்று இயேசு கிறிஸ்து சொன்னதின் கருத்து என்ன?

இஸ்ரவேலருக்காக தேவன் மோசேயோடே முகமுகமாய்ப் பேசி பிரமாணங்களைக் கொடுத்தார். அந்த பிரமாணங்கள் மோசேயினுடைய நியாயப்பிரமாணம் என்று அழைக்கப்படுகிறது (யோவா 7 : 2[illegible]) இந்த பிரமாணத்தை ஏற்றுக் கொண்டவர்கள் மோசேயினுடைய சீஷர்கள் எனப்பட்டார்கள் (யோவா 9:2-). மோசே இவர்களுக்கு போதகனாயிருந்தான். வேதபாரகரும் பரிசேயரும் மோசேயினுடைய ஆசனத்தில் இருந்துகொண்டு (மத் 23:2) தகாதவைகளைச் செய்துகொண்டு, மனிதர்களால் ரபீ, ரபீ என்று அழைக்கப்படுவதை விரும்பினார்கள் (மத் 23 : 7). ரபீ என்றால் போதகர் என்று அர்த்தம்.

கர்த்தர் மோசேயிடம், “உன்னைப் போல் ஒரு தீர்க்கதரிசியை நான் அவர்களுக்காக அவர்கள் சகோதரரிலிருந்து எழும்பப்பண்ணி என் வார்த்தைகளை அவர் வாயில் அருளுவேன்; நான் அவருக்குக் கற்பிப்பதையெல்லாம் அவர்களுக்குச் சொல்லுவார்” (உபா 18 : 18) என்று இயேசு கிறிஸ்துவைக் குறித்து தீர்க்கதரிசனமாக சொன்னார்.

மோசேக்குப் பின் இயேசுவுக்கு முன் அநேக தீர்க்கதரிசிகள் எழும்பினார்கள். தேவன் அவர்களிடத்தில் தம்முடைய வார்த்தைகளைக் கொடுத்து அனுப்பினார். அவர்கள் ஜனங்களின் சீர்கேட்டை வெளிப்படுத்தி கடிந்து கொண்டார்கள். ஜனங்களுக்கு தேவாலோசனை கொடுத்து வழி

நடத்தினார்கள். வருங்காரியங்களை அறிவித்தார்கள். ஆனால் அவர்கள் மோசேயைப் போல் ஜனங்களுக்காய் தேவனிடமிருந்து புதிய பிரமாணங்களையோ கற்பனைகளையோ பெறவில்லை. நாங்கள் எலியாவின் சீஷர்கள் ஏசாயாவின் சீஷர்கள், மல்கியாவின் சீஷர்கள் என்று யாரும் சொல்லவில்லை. காரணம் இவர்கள் புதிய மார்க்கத்தை உண்டாக்கவில்லை.

ஆனால் நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவோ, மோசேயின் தீர்க்கதரிசன வாக்கின்படி மோசேயைப் போல் தேவனுடைய வார்த்தையைப் பெற்று, நான் உங்களுக்குச் சொல்கிறேன் என்று புதிதும் ஜீவனுமான மார்க்கத்தை உபதேசித்தார்.

புதிய ஏற்பாட்டின் உபதேசம் இயேசு கிறிஸ்துவினுடைய உபதேசம் எனப்படும் இவருடைய உபதேசத்தை ஏற்றுக்கொண்டவர்கள் இயேசு கிறிஸ்துவின் சீஷர்கள் என்று அழைக்கப்படுகிறார்கள். இயேசுவானவர் தம்முடைய வேலையைச் செய்ய அப்போஸ்தலர்களை, தீர்க்கதரிசிகளை ஊழியர்களை ஏற்படுத்தினார். அவர்கள் பரிசுத்த ஆவியைப் பெற்றுக் கொண்டார்கள். அவர்கள் மூலம் தேவஜனங்கள் உபதேசம் பெற்றார்கள் (அப் 2 : 42).

ஆனால் அவர்கள் மோசேயைப் போலவோ, இயேசு கிறிஸ்துவைப் போலவோ புதிதான பிரமாணத்தைப் பெற்று போதிக்கும் போதகர்கள் அல்ல. "என் நாமத்தினாலே பிதா அனுப்பப் போகிற பரிசுத்த ஆவியாகிய தேற்றரவாளனே எல்லாவற்றையும் உங்களுக்குப் போதித்து, நான் உங்களுக்குச் சொன்ன எல்லாவற்றையும் உங்களுக்கு நினைப்பூட்டுவார்" (யோவா 14 : 26) என்று இயேசுவானவர் சொன்னபடி அப்போஸ்தலர்கள் பரிசுத்த ஆவியானவரால் போதிக்கப்பட்டு ஜனங்களுக்கு உபதேசித்தார்கள். ஆகவே அவர்கள் போதித்தது இயேசு கிறிஸ்துவின் உபதேசத்தையே. ஆகவே இவர்களுக்கும் இவர்கள் வார்த்தையைக் கேட்டவர்களுக்கும் போதகர் இயேசு கிறிஸ்துவே.

வேதபாரகரும், பரிசேயரும் மோசேயினுடைய ஆசனத்திலிருந்தபடியால், தங்களை மோசேயைப் போல் போதகர்களாகக் காண்பித்து ரபீ, ரபீ என்றழைக்கப்படுவதை விரும்பினார்கள். இதைக் கவனித்த இயேசுவானவர் தம்முடைய சீஷர்களைப் பார்த்து "இவர்கள் மேன்மைப்பாராட்டுவது போல் நீங்கள் மோசேயைப் போல், என்னைப் போல் போதகர்கள் என்று அழைக்கப்படாதிருங்கள், கிறிஸ்து ஒருவரே உங்களுக்குப் போதகராக குருவாக இருக்கிறார். நீங்கள் எல்லாரும் என்னிடம் உபதேசம் பெறும் சீஷர்களாக, ஒருவருக்கொருவர் சகோதரர்களாக இருக்கிறீர்கள் என்றே இயேசு கிறிஸ்து சொன்னார் (மத் 23 : 8-10).

"என்னையல்லாமல் வேறே தேவன் உண்டாயிருக்க வேண்டாம் என்று தேவன் சொன்னபடி, பரமண்டலங்களிலிருக்கிற நம்முடைய தேவனே நமக்குப் பிதா. அவரையல்லாமல் வானத்திலும், பூமியிலேயும் சிவன் என்றும், விஷ்ணு என்றும், சாயி பாபா என்றும், சங்கராச்சாரி என்றும் அநேக கர்த்தாக்கள் உண்டு (1கொரி 8 : 5, 6). இப்படி யாரையாவது பிதா என்று அழைக்காதீர்கள்.

வானத்தையும், பூமியையும் உண்டாக்காதவைகள் எல்லாம் தெய்வங்கள் அல்ல என்ற அர்த்தத்தில் தான் இயேசு கிறிஸ்து. "பூமியில் ஒருவனையும் உங்கள் பிதா என்று சொல்லாதிருங்கள்" (மத் 23 : 9) என்று சொன்னார். நம்முடைய தகப்பனை அப்பா என்று தான் சொல்ல வேண்டும், சொல்கிறோம். Brother (சகோதரர்) என்று சொன்னால் அது சுபாவத்தின் படி தவறாகும். பரி. பவுலும் தீமோத்தேயுவை சுவிசேஷத்தால் பெற்ற படியால் அவனை மகன் என்று அழைக்கிறார் (1தீமோ 1 : 2).

பிரியமானவர்களே, வேத வாக்கியங்களை நலமாக விளங்கிக் கொண்டு, வயதில் பெரியவர்களையும், தேவனால் ஏற்படுத்தப்பட்ட ஊழியர்களையும் சகோதரர் (Brother) என்று அழைத்து மரியாதை இல்லாமல் நடந்து கொள்ளாதீர்கள். அழைக்க வேண்டிய முறையில் மற்றவர்களை மதித்து அழையுங்கள். வேத புரட்டர்களின் கொள்கைகளுக்கு விலகி இருங்கள்.

---

"நரைத்தவனுக்கு முன்பாக எழுந்து முதிர் வயதுள்ளவன் முகத்தை கனம்பண்ணி உன் தேவனுக்கு முன் பயப்படுவாயாக; நான் கர்த்தர்."

(லேவி 19 : 3)

---

# சாட்சி

என்னுடைய பெயர் P. ஏசுவடியான் பொன்னுத்துரை. என்னுடைய சொந்த ஊர் நெல்லை மாவட்டத்தில் உள்ள கலந்தபனை. நான் C. S. I. குடும்பத்தில் பிறந்தேன். ஆனால் எனக்கு தேவ பக்தி கிடையாது. கடவுள் மேல் பற்றும் கிடையாது. ஜெபம் செய்வதும் கிடையாது. என்னுடைய வீட்டார்கள் எல்லாரும் ஒழுங்காக ஆலயத்திற்கு செல்வார்கள். நான் செல்வது கிடையாது. எம்மதமும் சம்மதம் என்ற கோட்பாட்டின் படி வாழ்ந்து வந்தேன். எனது இளவயது நண்பர்களோ இந்துக்கள். மேல் நிலை பள்ளி படிப்பை வள்ளியூரில் முடித்துவிட்டு நாகர் கோவிலில் உள்ள ஸ்காட் கிறிஸ்டியான் கல்லூரியில் சேர்ந்து 4 ஆண்டுகள் படித்தேன். அப்பொழுது எனக்குப் படிக்க முடியாதபடி இருதய படபடப்பு போன்ற வியாதிகள் ஆரம்பமாயின.

1969-ல் மிகவும் கஷ்டப்பட்டு M.Sc ல் தேர்ச்சியடைந்தேன். எனக்குப் பலவிதமான வியாதிகள் உண்டாயிருந்தது (Blood Pressure) இரத்த அழுத்தமும் இருந்தது. வேலூர் ஆஸ்பத்திரி முதல் மிகப் பெரிய ஆஸ்பத்திரிகளிலேயும், பெரிய, பெரிய டாக்டர்களிடமும் (நாகர் கோவில், மார்த்தாண்டம்) சென்று ஆலோசனைப் பெற்றும், மருந்துகள் சாப்பிட்டும் பார்த்தேன். என்னுடைய வியாதிகளோ தீர்ந்தபாடில்லை. அதிகரித்துக்கொண்டே போயின, பல வியாதிகள் எனது சரீரத்தில் இருந்தது.

வள்ளியூரில் தங்கியிருந்தேன். வீட்டிற்கு வந்தால் ஒரே பயம், தீயில் என்னை ஆட்கொள்ளும். இதுவரை கடவுளைப் பற்றியே சிந்திக்காமல் இருந்த எனக்கு இப்பொழுது தான் கடவுளைப் பற்றி சிந்திக்கும் வேளை வந்தது. என் மனைவியின் சகோதரர் சிமோன் பெந்தெகொஸ்தே சபையின் பாஸ்டரை அழைத்து வந்து ஜெபித்தார்கள். ஆனால் எனக்கு விசுவாசமோ சுகமோ கிடைக்கவில்லை.

அச் சமயங்களில் நெரிஞ்சியிலை என்கிற ஊரில் என் உறவினர் வீட்டில் தங்கியிருந்தேன். அந்த உறவினர் பல வருடங்களுக்கு முன்னால் "புதிய எருசலேம் சபை"க்கு வந்து பில்லிசூனியத்தால் ஏற்பட்ட நோயிலிருந்து விடுதலையானவர்கள். அவர்தான் செய்வினை பில்லிசூனியம் போன்றவற்றிலிருந்து விடுதலை பெற சரியான இடம் "புதிய எருசலேம் சபை" என்று கூறினார்கள். நாங்கள் வள்ளியூருக்கு வந்த பின்பு ஒருநாள் இரவு என்னை, கால்களை யாரோ இழுத்து கொண்டு போவது போல் இருந்தது. மரண பயம் என்னைப் பிடித்தது. நான் என் மனைவியை அழைத்து "புதிய எருசலேம் சபை" பாஸ்டர்களை அழைத்து வரும்படி சொன்னேன்.

நல்லவேளையாக தமிழ்நாடு அப்போஸ்தலர் அவர்களும், தீர்க்கதரிசி ஐயா அவர்களும் வள்ளியூரில் இருந்தார்கள். அவர்கள் வந்து எனக்காக ஜெபித்து ஆறுதல் கூறி, சகோதரரே! பல விதமான பில்லி சூனியங்கள் உங்களுக்கு விரோதமாக செய்யப்பட்டிருக்கிறது. நீங்கள் இரட்சிக்கப்பட வேண்டும் என்று ஆலோசனைக் கூறி எனக்காக ஜெபித்தார்கள். அதைத் தொடர்ந்து புதிய

எருசலேம் சபைக்குப் போனேன். எனக்கு விடுதலையுண்டாயிற்று. இன்று நாங்கள் குடும்பமாக புதிய எருசலேம் சபையில் இரட்சிக்கப்பட்டு, விசுவாசிகளாக இருக்கிறோம். நான் மார்த்தாண்டம் கிறிஸ்தவக் கல்லூரியில் பேராசிரியராக வேலை பார்த்து வருகிறேன்.

எனக்கு விடுதலை கொடுத்த கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுக்கு ஸ்தோத்திரம். எனக்காக ஜெபித்து விடுதலை வாங்கிக் கொடுத்த புதிய எருசலேம் சபைக்காக கர்த்தருக்கு ஸ்தோத்திரம்.

தேவனை விசுவாசியுங்கள் அவருடைய சுவிசேஷத்தை ஏற்றுக்கொள்ளுங்கள். எங்களைப் போலவே உங்களுக்கும் சமாதானமும், விடுதலையும் உண்டாகும். கர்த்தரே, இரட்சியும்... இத்துடன் என் சாட்சியை முடிக்கிறேன்.

Prof. P. ஏசுவடியான்
பொன்னுத்துரை
வள்ளியூர்.

---

"அவராலேயன்றி (கர்த்தராகிய இயேசு கிறிஸ்து) வேறொருவராலும் இரட்சிப்பு இல்லை; நாம் இரட்சிக்கப்படும்படிக்கு வானத்தின் கீழ் எங்கும் மனுஷர்களுக்குள்ளே அவருடைய நாமமேயல்லாமல் வேறொரு நாமம் கட்டளையிடப்படவும் இல்லை." (அப் 4 : 12.)

---

## புதிய எருசலேம் நடபடிகளில் சில

பொய்யுரையாத தேவனுடைய வாயிலிருந்து புறப்பட்ட வார்த்தைகளெல்லாம் ஜீவனுள்ளவைகளாய் இன்றும் செயல்பட்டு வருவதற்காக என் தேவனை ஸ்துதிக்கிறேன். 'அவர் தம்முடைய எல்லா வார்த்தைகளிலும் ஒன்றாகிலும் தரையிலே விழுந்து போக விடவில்லை' (I சாமு 3:19) என்று வேதம் கூறுகிறது. தேவன் தம்முடைய வார்த்தைகளை நிறைவேற்றுவதில் வாஞ்சையும் வைராக்கியமுமாய் இருக்கிறார் என்பதை அறிந்து அனுபவித்து கர்த்தரை ஸ்துதிக்கிறேன்.

போன மாத இதழில் சங்கரன் கோயில் தாலுகாவிலுள்ள துரைசாமியாபுரம் என்ற ஊரில் 'புதிய எருசலேம் சபை' உருவான விபரத்தை சுருக்கமாய் அறிந்தீர்கள். அடுத்த தடவை நாங்கள் துரைசாமியாபுரத்திற்குச் சென்றிருந்த பொழுது சகோதரர் செல்வராஜ், தன்னுடைய ஊராகிய மீனாட்சிபுரத்திற்கு எங்களை அழைத்துப் போனார்.

மாலை சுமார் 1 மணியளவில் நாங்கள் அந்த ஊருக்குச்சென்று அங்குள்ள C.S.I ஆலயத்தில் தங்கியிருந்தோம். ஊரிலுள்ள மக்களில் அநேகர் வயல் வேலைகளுக்குச் சென்றிருந்தார்கள். சில நோயாளிகள் வந்து ஜெபித்து விடுதலை பெற்றுப் போனார்கள். மாலை 6 மணி அளவில் ஊரிலுள்ள ஆண்களும், பெண்களும் ஆலயத்திற்கு வந்தார்கள். எல்லோரையும் வைத்து கர்த்தருக்கு ஆராதனை செய்தோம். அன்றுபேதுருவின் வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டிருந்த கொர்நேலியுவின் வீட்டார் அனைவர் மேலும் பரிசுத்த ஆவியானவர் இறங்கினது போல் (அப் 10:44) இந்த ஆராதனையில் கலந்து கர்த்தரை ஸ்துதித்து மகிமைப்படுத்தின எல்லார் மேலும் கர்த்தருடைய ஆவியானவர் வல்லமையாய் இறங்கினார். கர்த்தருடைய வல்லமை ஆலயத்தை அதிரச் செய்தது. மந்திரவாதியாகிய சக்கரைப் புலவரும் பரிசுத்த ஆவியினால் அந்நிய பாஷை அடையாளத்துடன் அபிஷேகிக்கப்பட்டார். கர்த்தருக்கே மகிமையுண்டாவதாக.

மறுநாளில் மந்திரவாதியானவர் நான் இனி என்ன செய்ய வேண்டும். எனக்கு ஆலோசனை கூறுங்கள் என்று கேட்டுக் கொண்டார். நீங்கள் உங்களுடைய மந்திரவாத தொழிலை முற்றிலுமாய் விட்டுவிட வேண்டும். மந்திரவாத தொழிலுக்காய்

பயன்படுத்திய பொருட்களையும், படித்த ஏடுகளையும், புத்தகங்களையும் தீயிலிட்டு எரித்துவிட்டு இதுவரையிலும் செய்த பாவங்களைத் தேவ சமுகத்தில் அறிக்கையிட்டுப் பாவ மன்னிப்பிற்கென்று ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ள வேண்டும் என்று ஆலோசனை கூறினேன்.

அவர் ஞானஸ்நானம் எடுப்பதற்கு ஒப்புக் கொண்டார். ஆனால் தன்னுடைய மந்திரவாத நூல்களை எரிப்பதற்கு அவர் விரும்பவில்லை. அவைகளை ஒரு பெரிய மரப்பெட்டிக்குள் அடைத்து கிணற்றிக்குள் போட்டு விடுகிறேன். இல்லையேல் வேறு யாருக்கும் விலைக்குக் கொடுத்து விடுகிறேன் என்றார். அப்படிச் செய்யக் கூடாது வேதவாக்கியம் இப்படித்தான் கூறுகிறது "மாய வித்தைக்காரர்கள் தங்கள் புத்தகங்களைக் கொண்டு வந்து எல்லோருக்கும் முன்பாகச் சுட்டெரித்தார்கள்" (அப் 19:18,19) என்ற வசனத்தை வாசித்துக் காண்பித்ததும் ஒத்துக் கொண்டார். நாங்கள் தங்கியிருந்த அறைக்கு எல்லா ஏடுகளையும், புத்தகங்களையும் கொண்டு வந்து கட்டுக்கட்டாக போட்டார். அவைகள் ஒரு பெரிய அம்பாரமாக குவிந்து கிடந்தது. அன்று நாங்கள் ஒரு இரகசியத்தைக் கண்கூடாக கண்டோம்.

மேற்படி புத்தகங்களையும், ஏடுகளையும், வெளியே கொண்டுபோய் நெருப்புக் கொளுத்த வேண்டும். அதற்கு முன்னால் அந்த புத்தக அம்பாரத்தின் மேல் கைகளை வைத்து ஜெபித்து அவைகளில் அடங்கியிருக்கிற அசுத்த ஆவிகளைத் துரத்திவிட்டு அவைகளைத் தீக்கொளுத்த வேண்டும் என்று கர்த்தருடைய ஆவியானவர் பேசினார். சர்க்கரைப் புலவர் எங்கள் அருகாமையில் அறையில் நின்று கொண்டிருந்தார். நானும் உடன் ஊழியருமாக மேற்படி புத்தக அம்பாரத்தின் மீது எங்கள் கைகளை வைத்து கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் அதிலுள்ள அசுத்த ஆவிகளை அகட்டினோம். அந்த ஆவிகள் இந்தப் புத்தகங்களை விட்டு வெளியேறி சர்க்கரைப் புலவரை தாக்கினது. அவர் ஒரே அலறலாக அலறிவிட்டார். பின்னர் அந்த ஏடுகளையும், புத்தகங்களையும் கொண்டு போய் தீயிலிட்டு எரித்தோம்.

பரிசுத்த ஆவியானவர் பரிசுத்தவான்களைக் கொண்டு எழுதிய வார்த்தைகளில் ஆவியையும், ஜீவனையும் இருக்கிறது. பரிசுத்த ஆவியினால் ஏவப்பட்டு எழுதிய புத்தகங்களையோ, வேதாகமத்தையோ வாசிக்கும் பொழுது நம்முடைய உள்ளங்களிலே பரிசுத்த ஆவியின உணர்வையும், நிறைவையும் நாம் பெறுகிறோம்.

அதுபோலவே, அசுத்த ஆவியினால் ஏவப்பட்டு, எழுதிய ஏடுகளையும், நூல்களையும் ஒரு மனிதன் படிக்கும் பொழுது, தீய சிந்தனைகளும், தீய பார்வைகளும் உண்டாகி தீமை செய்ய பெலனுமுண்டாகி விடுகிறது. "எழுத்து கொல்லுகிறது, ஆவியோ உயிர்ப்பிக்கிறது" (II கொரி 3:16).

இவருடைய எல்லாப் புத்தகங்களையும், ஏடுகளையும் இரண்டு சகோதரர்கள் கொண்டு போய், பல மணி நேரங்களைத் தீயிலிட்டு கொளுத்தி சாம்பலாக்கிவிட்டு வந்தார்கள். அன்று மாலை வழக்கம் போலுள்ள வாரத்தின் இடைநாள் கூட்டத்தை நடத்தினோம். மக்கள் ஏராளமாய் கர்த்தரிடத்தில் மனம் திரும்பினார்கள். சர்க்கரைப் புலவருடைய பள்ளிக் கூடத்திலேயே ஆராதனை நடந்து வந்தது. அன்றைய ஆராதனையில் கர்த்தர் ஒரு சகோதரனைக் கொண்டு பேசினார். சர்க்கரைப் புலவர் எல்லா ஏடுகளையும் தந்துவிட்டு தன்னுடைய பழுகாலுக்கென்று ஒரு சின்ன ஏட்டை வைத்துக் கொண்டார் என்பதாகக் கூறினார். ஆராதனை முடிந்ததும் சர்க்கரைப் புலவர் மிகவும் வருத்தப்பட்டார். எல்லாப் புத்தகங்களையும் நான் உங்களிடம் தந்து விட்டேனே இன்னும் ஒரு புத்தகத்தை மறைத்து வைத்திருப்பதாக இவர் எப்படிக் கூறலாம் என்று கேட்டார். அது அவர் சொன்னது அல்ல, பரிசுத்தாவியானவர் பேசியிருக்கிறார். ஆகையால் எங்காவது மறைந்து கிடக்கும், அமைதியாகப் பார்த்து எடுத்துக் கொடுங்கள் என்று கூறினேன்.

இவன் இரட்சிப்புக்கு காரணமானவன். ஏனெனில் ஞானஸ்நானமானது மாம்ச அழுக்கை நீக்குகிறதாயிராமல் தேவனைப் பற்றும் நல்மனச்சாட்சியின் உடன்படிக்கையாயிருந்து இப்போது நம்மையும் இயேசுகிறிஸ்துவினுடைய உயிர்த்தெழுதலினால் இரட்சிக்கிறது (1பேது 3:21) என்று வேதம் சொல்லுகிறது. அதாவது ஞானஸ்நானம் பெறுவதாலே அநேகர் பாவமன்னிப்பாகிய இரட்சிப்பை (லூக் 1:77) பெற்றுக் கொள்கிறார்கள். ஆகவே இரட்சிக்கப்பட்டவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்க வேண்டாம். வேதவாக்கியங்களின்படி இரட்சிக்கப்படும்படி ஞானஸ்நானம் கொடுங்கள்

இது தேவ ஆலோசனை. ஏற்றுக் கொண்டு கேட்டுக்குத் தப்புங்கள். இது பைத்தியமான விருதா காரியமாகத் தோன்றலாம். 'எப்படியெனில் தேவ ஞானத்துக்கேற்றபடி உலகமானது சுய ஞானத்தினாலே தேவனை அறியாதிருக்கையில் பைத்தியமாகத் தோன்றுகிற பிரசங்கத்தினாலே விசுவாசிகளை இரட்சிக்கத் தேவனுக்குப் பிரியமாயிற்று (1கொரி 1:21).

---

"இப்பொழுது நீ தாமதிக்கிறதென்ன நீ எழுந்து கர்த்தருடைய நாமத்தைத் தொழுது கொண்டு, ஞானஸ்நானம் பெற்று, உன் பாவங்கள் போகக் கழுவப்படு"—அப 22:16.

---

திருநெல்வேலி ஜில்லா, நாங்குநேரி தாலுகா, இராஜாக்கள்மங்கலம் என்ற ஊரின் அருகிலுள்ள புதிய எருசலேம் ஆலயத்தை ஆசீர்வதித்து உதவி செய்கிறவர்கள் தங்கள் உதவிகளை Chief Pastor N. Lazar, "New Jerusalem Church", 7 Triloksingh Chawl, Jerimeri, Sakinaka Post, Bombay - 400 072, India என்ற விலாசத்திற்கு அனுப்பும்படி கேட்டுக் கொள்ளுகிறோம்.

13 டிசம்பர் 1986 சனிக்கிழமையன்று பம்பாய் தலைமை சபையில் 14 பேர்களும், 1.1.1987 வியாழக்கிழமையன்று வள்ளியூர் கிளை சபையில் 51 பேர்களும் கிறிஸ்துவுக்குள்ளாக்கும் ஞானஸ்நானத்தினால் ஞானஸ்நானம் பெற்று திருச்சபையோடு சேர்க்கப்பட்டார்கள்.

# ஆசிரியர் உரை

'சத்தியத்தையும் அறிவீர்கள், சத்தியம் உங்களை விடுதலையாக்கும்' 'குமாரன் உங்களை விடுதலையாக்கினால் மெய்யாகவே விடுதலையாவீர்கள்' என்று இயேசு கிறிஸ்து சொன்னார். மனிதனுக்கு அவசியம் தேவை விடுதலையாகும். விடுதலையாக்கும் உபதேசத்தைக் கொண்டு இயேசு கிறிஸ்து விடுதலையாக்குகிறார், ஒப்புரவாக்குகிறார், சமாதானமருளுகிறார். ஆனால் இந்நாட்களில் அநேகர் விடுதலையாக்கும் உபதேசம் வேண்டாம் என்று வைராக்கியமாயிருக்கிறார்கள். அதனால் யாருக்கும் எந்த லாபமும் கிடையாது. 'மோசேயின் நியாயப்பிரமாணத்தினாலே நீங்கள் எவைகளிலின்று விடுதலையாகி நீதிமான்களாக்கப்படக் கூடாதிருந்ததோ, விசுவாசிக்கிறவன் எவனும் அவைகளிலின்று இவராலே (இயேசு கிறிஸ்து) விடுதலையாகி நீதிமானாக்கப்படுகிறான்' என்று அப்போஸ்தலன் யூதரைப் பார்த்து சொன்னது போல (அப். 13:39), சிலுவையின் உபதேசம் கெட்டுப் போகிறவர்களுக்கு பைத்தியமாகத்தான் தோன்றும். இரட்சிக்கப்படுகிற நமக்கோ அது ஜீவனுள்ளதாயிருக்கிறது. தேவன் தமது கிருபையுள்ள வசனத்துக்கு சாட்சியாக அற்புதங்களையும், அடையாளங்களையும் நடப்பித்து பாவத்தில் சிக்குண்டிருக்கிற மக்களை விடுதலையாக்கி பரிசுத்தத்துக்கு நேராக வழி நடத்துகிறார். எல்லாம் தேவனால் ஆகிறது. 'அவர் இயேசு கிறிஸ்துவைக் கொண்டு மனிதனை தம்மோடு ஒப்புரவாக்கி ஒப்புரவாக்குதலின் உபதேசத்தை எங்களுக்கு ஒப்புக் கொடுத்தார்' என்ற திருவசனத்தின்படி திருச்சபையானது கிறிஸ்துவுக்கு ஸ்தானாபதியாயிருந்து ஜனங்களை தேவனோடு ஒப்புரவாக்கி வருகிறது. அநேக ஜனங்கள் பாவ, சாப, ரோகங்களிலிருந்து விடுதலையாகி கர்த்தருக்குள் களி கூருகிறார்கள். அதற்காக நாம் கிறிஸ்துவுக்குள் சந்தோஷப்படுகிறோம். கீழ்ப்படியாதவர்கள் இடறிவிழுந்து தங்களுக்குரிய ஆக்கினையை அடைகிறார்கள். ஆனபடியினால் தேவ ஜனங்கள் விடுதலையாக்கும் சத்தியத்தை அறிந்து அதை உண்மையாய்க் கைக்கொண்டு பரிசுத்தத்தின் மேல் பரிசுத்தம் அடைந்து நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்துவினுடைய வருகைக்கு ஆயத்தப்படுவீர்களாக!

கிறிஸ்துவுக்குள,

N. Lazar

(CHIEF PASTOR N. LAZAR)

(தொடர்ச்சி)

# பாவ மன்னிப்பு

I. P. C. சபையின் பத்திரிக்கையான சீயோன் புரிகை (புரிகை:6 1986 தொனி: 2) யில் வெளியான நவீன போதனைகள் புதிய எருசலேம் சபை என்ற தலைப்பில் பாவ மன்னிப்புப்பற்றி வெளியிடப் பட்ட காலஞ் சென்ற பாஸ்டர் S. ஞானமுத்து அவர்கள் எழுதிய கட்டுரையை எடுத்தெழுதியதில் சீயோன் புரிகையாளர்கள். 2. தேவ ஊழியர் மன்னித்தல் பகுதியில் ஒரு பகுதியை விட்டு விட்டார்கள். அது மாத்திர மல்ல. 4. தேவன் மன்னித்தல் என்ற பகுதியை முழுவதுமாக விட்டுவிட்டார்கள்.

புராட்டஸ்டன்ட் (Protestant) காரர்களில் அநேகர் மார்ட்டின் லூத்தரைப் (Martin Luther) பற்றி பாவ மன்னிப்பின் உப தேசத்தை, எதிர்த்தார் என்று திரித்து எழுது வதுபோல, (மார்ட்டின் லூத்தர் பாவமன்னிப் பின் உபதேசத்தை, பாவ மன்னிப்பின் அதி காரத்தை எதிர்க்கவில்லை. பாவ மன்னிப் புச் சீட்டு பணத்திற்கு விற்கப்படுவதையே எதிர்த்தார் என்பதை தேவ ஜனங்கள் அறிந்து கொள்ள வேண்டும்) பாஸ்டர் S. ஞானமுத்து எழுதிய தேவன் மன்னித்தல்' என்ற பகுதி I.P.C. சபையாருக்கு சாட்டையடியாய் (உதைப்பதாய்) இருக்கிற படியால் அதை விட்டு விட்டார்கள். காலஞ் சென்ற I. P. C. பாஸ்டர் S. ஞானமுத்து எழுதிய பாவமன்னிப்பு பகுதி யில் சீயோன் புரிகையாளர் விட்டுவிட்ட பகுதியை இதோ தருகிறோம்.

4. தேவன் அருளும் பாவமன்னிப்பு :-

தேவன் அருளும் பாவமன்னிப்பு மகா பெரிது. "நாம் நமது பாவங்களை அவரிடம் அறிக்கையிட்டால் நமது பாவங்களை நமக்கு மன்னித்து எல்லா அநியாயங்களையும் நம்மை விட்டகற்றி நம்மை சுத்திகரிப் பதற்கு அவர் உண்மையும் நீதியுமுள்ள வராக இருக்கிறார்" I யோவா 1 : 9. எங்கள் கடன்காரர்களுக்கு நாங்கள் மன்னிப்பது போல எங்கள் பாவக்கடன்களை எங்களுக்கு மன்னியும் என்ற ஒழுங்குபடி விண்ணப் பிக்க மறந்துபோக வேண்டாம். ஒரு பாவிக்கு 7 × 70 தடவை மன்னிப்பதுபோல பரிசுத்தமுள்ள தேவன் ஒரு விசுவாசிக்கு 7 × 70 தடவை மன்னிப்பதில்லை: அப்படி எழுதப்படவுமில்லை.

பாவமன்னிப்பு பெற்றவனுக்கு இனி பாவம் செய்யாதிருக்க பரிசுத்தாவியும், தேவ வல்லமையும், தேவஞானமும் வரங் களும், திருவசன வெளிச்சமும் கொடுத்து, தேற்றரவாளனாகிய பரிசுத்தாவியின் மூல மாக அவனை ஆண்டு நடத்தி உலக மாமிச பிசாசின் மேலும், சகல சத்துருக்கள் மேலும் அவர் ஜெயம் கொடுக்க அவர் அவனை பாவ மன்னிப்பிலிருந்து அடுத்த அநுபவத்திற்கு கடந்து போ என்று கூறும்போது அவன் அதை அசட்டை செய்து, பாவ மன்னிப்பிலே மரணபரியந்தம் நிலைத்திருந்து காலமெல்லாம் பாவ மன்னிப்பு கேட்டு நிற்கும் போர் கிறிஸ்தவப் பழக்க வழக்கத்திற்கு, தேவன் உத்திர வாதி அல்ல. மனிதன் பாவமன்னிப்பும் பரி சுத்த ஆவியும் பெற்றும் கர்த்தரை குசிந் தறிந்தும், திரும்பவும் பாவம் செய்வானானால் அவன் செய்த பாவங்களினிமித்தம் செலுத்த தக்க வேறுபலி, இனி இல்லை என எழுதப்பட்டிருக்கிறது. நூறடி உயர முள்ள ஒரு கோபுரத்திலேற துணிபவன் முத லாவது காலடி வைக்கும் முதல்படிதான் பாவ மன்னிப்பு. பாவமன்னிப்பு பெற்ற நாம் மறுபடியும் பாவத்தில் விழாதிருக்க பாவத்திலிருந்து விடுதலையாகி தேவனுக்கு அடிமைகளாக்கப்பட்டு, பரிசுத்தத்தை அடைய கடந்து போவோமாக. அப்போது நித்திய ஜீவனை பெறுவீர்கள் என்பதே.

மேற்படி I. P. C. சபையார் வெளியிட்ட கட்டுரையின்படி. 1. ஒருவருக்கொருவர் மன் னித்தல் என்ற பகுதியில் ஒரு பாவி இன் னொரு பாவிக்கு மன்னிக்கலாம். யார் யாரி டத்தில் நீ தவறு செய்தாயோ, அவர்களிடத் தில் போய் தான் நீ சமாதானப்பட வேண் டும். சாமியாரோ, சபையோ, கடவுளோ தேவையில்லை என்றுள்ளது.

2. சுவிசேஷ ஊழியத்தில் இடையூறு செய்தவர்களுக்கு தேவ ஊழியர்கள் மன்னித்தால் நானும் மன்னிப்பேன். அவர்கள் மன்னிக்காவிட்டால் நானும் மன்னிக்க மாட்டேன் என்று தேவன் சொல்லியிருக்கிறார். சபைக்கு வெளியே வைத்து மனந்திரும்புதலும் பாவ மன்னிப்பும் பெற்று ஞானஸ்நானத்தினால் சபைக்குள்ளானவன பாவி அல்ல. அவன் ஜென்ம கரும பாவங்களைக் கர்த்தர் தீர்த்து விட்டார். இனி அவன் பாவம் செய்யாதிருக்க அவனுக்கு தேவ ஆவியும் தேவ பலமும் ஞானமும் வரமும் அருளப்பட்டுள்ளது. சபையில் அங்கமான ஒருவன் மரணத்திற்கேதுவான பாவம் செய்தால் அவனை சாமியார் சபையை விட்டு வெளியே தள்ள வேண்டும். அவனுக்காக ஜெபம் பண்ணக் கூடாது. மரணத்திற்கேதுவல்லாத குற்றத்தை செய்தால் அவன் சாமியாரிடத்தில் அல்ல கர்த்தரிடத்தில் விண்ணப்பம் பண்ணக்கடவன்.

3. ஒரு பாவி மனிதனோடும், தேவனோடும் ஒப்புரவாகி பாவ மன்னிப்பு பெற்று தான் அடைந்த பாவ மன்னிப்பை சபையில் சாட்சி கூறும் போது கிறிஸ்துவின் சரீரமாகிய சபை அவன் பெற்ற பாவ மன்னிப்பை ஆமோதிக்கிறது. சபையை விட்டு தள்ளப்பட்டவன் கர்த்தரால் இரட்சிக்கப்பட்டு மறுபடியும் சபைக்கு வந்தால் சபை மன்னிக்க வேண்டும். சபை மன்னிக்கிறதை அப்போஸ்தலன் மன்னிக்கிறார். இங்கேயும் சாமியாரு தனிப்பட்ட அதிகாரம் இல்லையென்றும் (II கொரி 2 : 10)

4. தேவன் ஒரு பாவிக்கு 7×70 தடவை மன்னிப்பது போல ஒரு விசுவாசிக்கு 7×70 தடவை மன்னிப்பதில்லை. பாவமன்னிப்புப் பெற்றவன் திரும்ப பாவம் செய்யக் கூடாது. திரும்ப பாவம் செய்தானானால் அவன் செய்த பாவத்திற்காக செலுத்தத்தக்க வேறொரு பலி இனி இல்லை. நூறு அடி உள்ள கோபுரத்தில் ஏற துணிபவன் முதலாவது காலடி வைக்கும் முதற்படி தான் பாவமன்னிப்பு. பாவமன்னிப்பு பெற்ற நாம் மறுபடியும் பாவத்தில் விழாதிருக்க, பாவத்திலிருந்து விடுதலையாக தேவனுக்கு அடிமையாகி நித்திய ஜீவனைப் பெறுவான் என்பதாம்.

மேற்படி கட்டுரையில் பல தவறுகளும், முன்னுக்குப் பின் முரண்பாடுகளும் காணப்படுகின்றன.

1. ஒருவருக்கொருவர் மன்னிக்கிறதில் பாதிக்கப்பட்ட எல்லோரிடத்திலும் போய் மன்னிப்பு கேட்க முடியாது. அதில் சிலர் மரித்துப் போயிருப்பார்கள். விபச்சாரம் போன்ற பாவஞ் செய்தவர்கள் சம்பந்தப்பட்டவரிடத்தில் மன்னிப்புக் கேட்டு ஒருவருக்கொருவர் மன்னித்து விட்டால் அது மன்னிக்கப்படுமோ? யாரிடத்தில் நீ தவறு செய்தாயோ அவரிடத்தில் போய் நீ மன்னிப்புக் கேட்டு சமாதானப்பட்டு விட்டால் அது முடிந்து விட்டதா? தேவனிடத்தில் மன்னிப்புக் கேட்க வேண்டாமா? தேவனிடத்திலும் மன்னிப்புக் கேட்க வேண்டும்.

2. யோவான் 20 : 20-23. சுவிசேஷ ஊழியத்தில் தேவ ஊழியர்கள் தங்களுக்கு இடையூறு செய்தவர்களுக்கு மன்னித்தால் தேவன் மன்னிப்பார் என்றும் தேவ ஊழியர்கள் மன்னிக்காவிட்டால் மன்னிக்க மாட்டார் என்றும் வியாக்கியானம் எழுதி; அப்பொழுது சபை கிடையாதென்றும் யூதர்கள் நடுவில் பிரசங்கிக்க அனுப்பும் போது இந்த வசனத்தை சொன்னார் என்றும் எழுதியிருக்கிறார்கள். இயேசு உயிர்த்தெழுந்த அன்று மாலையில் அப்போஸ்தலர்களுக்கு கொடுத்த கட்டளையாகும் (யோவான் 20 : 20-23). சுவிசேஷ ஊழியப் போராட்டத்தில் ஊழியர்களை எதிர்க்கும், மனிதர்களுக்கு மன்னிப்பதும், மன்னியாதிருப்பதும் ஊழியரின் மனப்பான்மைக்கு தேவன் விட்டு விட்டார் என்று எழுதியிருக்கிறார்கள். சபைக்குள்ளே பாவ மன்னிப்பு கிடையாது தலையாகிய இயேசுவுடன் இணைக்கப்பட்ட சரீரமாகிய திருச்சபையில் பாவம் செய்ய விசுவாசிக்கு உத்தரவில்லை. சுவிசேஷ ஊழியத்தில் பாவங்களை மன்னிக்க அதிகாரம் உண்டு என்று எழுதியிருக்கிறார்கள். அதாவது சபைக்கு வெளியே சுவிசேஷ ஊழியத்தின் எதிரிகளுக்கு மன்னிப்பு கொடுக்க மன்னிப்பு வாங்க நியமிக்கப்பட்டிருக்கிறது என்று எழுதியிருக்கிறார்கள். இவர்கள் மன்னித்தாலும் மன்னிக்காவிட்டாலும் சுவிசேஷத்திற்கு இடையூறு செய்தவன் மனந்திரும்பி

இயேசு கிறிஸ்துவை விசுவாசித்தால் அவனுக்கு பாவ மன்னிப்பு உண்டு.

3. ஒரு பாவி தேவனோடும், மனிதரோடும் ஒப்புரவாகி பாவ மன்னிப்பைப் பெற்று சபையில் வந்து கூறும்போது சபை அவன் பெற்ற பாவ மன்னிப்பை ஆமோதிக்கிறது என்று எழுதியிருக்கிறார்கள். அதாவது ஞானஸ்நானத்துக்கு முன்பே சபைக்கு வெளியே பாவமன்னிப்பு பெற்றுவிட்டது என்று சொல்லுகிறார்கள். அதே சமயம் சபைக்கு பாவத்தை மன்னிக்க அதிகாரம் உண்டு என்றும் எழுதியிருக்கிறார்கள். இது மாறுபாடான உபதேசமாகும்.

பாவமன்னிப்பின் அதிகாரம் திருச்சபையின் திறவுகோல் அதிகாரமாகும். ஒருவன் வெளியே மனந்திரும்பி கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை சொந்த இரட்சகராக விசுவாசித்து ஏற்றுக் கொண்டாலும் அவன் திருச்சபையினிடம் வந்து திருமுழுக்கு பெறும் பொழுதே பாவ மன்னிப்பை முதலாவது பெறுகிறான் (அப் 2 : 38; 22 : 16). விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான் (மாற் 16 : 16). இதுவே புதிய ஏற்பாட்டின் உபதேசமாகும்.

4. தேவன் அருளும் பாவமன்னிப்பு : நம்முடைய பாவங்களை நாம் அறிக்கையிட்டால் பாவங்களை நமக்கு மன்னித்து எல்லா அநியாயத்தையும் நீக்கி நம்மை சுத்திகரிப்பதற்கு அவர் உண்மையும் நீதியுமுள்ளவராயிருக்கிறார் யோவா 1 : 9 வசனம் விசுவாசிகளுக்கு எழுதப்பட்டதாகும் காண். I யோவா 2 : 12. ஒரு தடவை பாவமன்னிப்பைப் பெற்றவர்கள் திரும்ப பாவம் செய்யக் கூடாது. செய்தால் வேறொரு பலி இல்லை என்று எழுதியிருக்கிறார்கள். அதே சமயத்தில் பாவம் செய்தால் சாமியாரிடத்தில் அறிக்கை செய்யாமல் கர்த்தரிடத்தில் அறிக்கை செய்யுங்கள் என்றும் எழுதியிருக்கிறார்கள். இது முரண்பட்ட கருத்துகளாகும். கொடிய பாவிகளையும் துரோகிகளையும் ஜீவிக்கிற இவ்வகை கிறிஸ்தவர்களுக்கு விமோசனமே இல்லை. பாவத்திலிருந்து விடுதலையாக, ஒப்புரவாக வேண்டியவர்களிடத்தில் ஒப்புரவாகுவதும்; தேவ சந்நிதானத்தில் அதிகாரம் பெற்ற ஊழியர்கள் முன்பு அறிக்கை செய்து பாவத்தை விட்டு விடுவதும் தேவ ஆலோசனை பெற்றுக் கொள்வதும் வெற்றி வாழ்க்கைக்கு மிக மிக அவசியம்.

தெளிவில்லாமலும், பாவத்திலிருந்து விடுதலையாகாமலும் இருக்கிற கள்ள ஊழியர்கள் பிதற்றுகிற மாய்மாலமான பிரசங்கங்களுக்கும், செய்திகளுக்கும் தேவ ஜனங்கள் எச்சரிக்கையாயிருக்கவும். இவர்கள் ஜனங்களை வஞ்சிக்கும் படியாய் முன்னால் தாங்கள் எழுதிய கட்டுரைகளையே திரும்ப எடுத்து எழுதும்போது கூட்டியும் குறைத்தும் தங்களை பாதிக்கும் சில பாகங்களை விட்டு விட்டும் எழுதுகிற கள்ள ஊழியர்களாகும். இவ்விதமான வஞ்சகங்களுக்கு ஜனங்கள் செவி கொடாமல் பாவத்திலிருந்து விடுதலையாக பூரணமான சத்தியத்தை தேடி விடுதலையாகும்படி இயேசுவின் நாமத்தில் கேட்டுக் கொள்கிறோம்.

(தொடரும்)

---

"நம்முடைய பாவங்களை நாம் அறிக்கையிட்டால், பாவங்களை நமக்கு மன்னித்து எல்லா அநியாயத்தையும் நீக்கி நம்மைச் சுத்திகரிப்பதற்கு அவர் உண்மையும் நீதியும் உள்ளவராயிருக்கிறார்." —I யோவா 1 : 9

---

(தொடர்ச்சி)

# ஆதியாகமத்தைப் பற்றி ஓர் ஆராய்ச்சி

மனிதனுடைய சித்தாந்தம் (ஆள் தத்துவம்):

மனிதன் என்ற வார்த்தை வேதத்திலே 2,576 தடவைகள் வருகின்றது. இருபத்தெட்டு எபிரேய கிரேக்க வார்த்தைகள் ஆதாம், ஆண், புருஷன், அழியக் கூடியவன், பெரிய மனிதன், மனிதனாயிருப்பவன் என்று மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

**I. மனிதனுடைய சிருஷ்டிப்பு:-**

1. உள்ளான மனிதன் சிருஷ்டிக்கப்பட்டான் (ஆதி 1 : 26, 27, 5 : 1, 2).

2. சரீரம் மண்ணினால் உண்டாக்கப்பட்டது (ஆதி 2 : 7; 3 : 19).

3. சரீரப்பிரகாரமாக தேவனுடைய சாயலின்படி உண்டாக்கப்பட்டவன். எபிரேய வார்த்தை இட்செலம்-வடிவம், உருவம், சரீரத்தோற்றம் என்று பொருள் (ஆதி 1:27;5:3; 9:6; யாத் 20:4; லேவி 26:1; சங் 73:20; 106:19; ஏசா 40:19,20; 44:9-17; 45:20; 48:5; எரே 10:14; 51:17)

4. சரீரப்பிரகாரமாகவே தேவசாயலாகவே உண்டாக்கப்பட்டான். டிமுத் என்று சொல்லப்படும் எபிரேய வார்த்தைக்கு மாதிரி, வடிவம், ஒரே சாயல் என்று அர்த்தம். சரீரப்பிரகாரமான உருவம் தன்மை என்பதை ஈய்க்கோன் என்ற கிரேக்கபதம் உறுதிப்படுத்துகிறது (மத் 22:20, அப் 19:35; ரோம 1:23, I கொரி 11:7; 15:49; கொலோ 1:15; வெளி 13:14,15). தேவன் தங்களோடு பேசும்போது இஸ்ரவேல் புத்திரர் எந்த ஒரு தோற்றத்தையும் காணாதபடியால் அவர் சரீரம் இல்லாதவர், எந்த ஒரு தோற்றமும் இல்லாதவர் என்பதற்கு ஆதாரமில்லை. தேவனைப் பார்க்க முடியாது என்பதல்ல. இஸ்ரவேல் ஜனங்களில் அநேகர் தேவனுடைய சரீரத்தையே கண்டார்கள் (ஆதி 18:32; யாத் 24:9-11; யோசுவா 5:13-15; நியா 6:11-23; 13:13-23; I நாளா 21:16-17; யோபு 42:5 ஏசா 6. எசே 1:26; தானி 7:9-14; 10:5,6; அப் 7:56-59; வெளி 5:1-7, 4:2-5)

மனிதன் ஆவியிலேயும், ஆத்துமாவிலேயும் தேவசாயலாகவே உருவாக்கப்பட்டான். இதைப்பற்றிய கேள்வியே இல்லை (எபே 4:22-24; கொலோ 3:10). ஆனால் இது சரீர உருவத்தையோ, தேவனுடைய தன்மையையோ அழித்துப் போடுவதில்லை. மேற்சொல்லப்பட்டவைகளின் படியே உள்ளது. எல்லா தேவ தூதர்களுக்கும், ஆவி வடிவங்களுக்கும், சரீரங்கள், ஆத்துமாக்கள், ஆவிகள் என்று உண்டு. உயிர்த்தெழுந்த மனித சரீரங்களும்கூட ஆவிக்குரியவைகள் என்று அழைக்கப்படுகின்றன (I கொரி 15:42-44). என்ற போதிலும் அவைகள் உடல் சம்பந்தமானவைகளே (லூக் 24:39; பிலிப் 3:21).

5. சரீரம் அற்புதமாக உண்டாக்கப்பட்டது (சங் 139:14). சரீரம் கீழ்க் கண்ட வெவ்வேறு இரசாயனப் பொருள்களையுடையது. அவை இரும்பு, சக்கரை, உப்பு, கரி அயோடின், பாஸ்வரம், சுண்ணும்பு, கால்சியம் இன்னும்பல பல பொருள்கள் சுமாராக 98 செண்ட் மதிப்புடையது. சரீரத்தில் 263 எலும்புகளும், 600 தசைகளும், 970 மைல் நீளமுள்ள இரத்த நாளங்களும், கண்களை அறிய நாக்கில் 400 கிண்ணங்களும், சப்தங்களைக் கிரகிக்க காதில் 20,000 முடிகளும், 40 Lb தாடை எலும்புத் துடிப்பும், நரம்புகளும், கிளைகளும் 10,000,000 உடையதாயும், ஒரு சதுர இஞ்சுக்கு தோலில் 3,500 வேர்வைக் குழாய்களும், இல்லையென்றால் மொத்தத்தில் 40 மைல் நீளத்திற்கு வேர்வைக் குழாய்களும், உணவு உடலின் உள்ளுறுப்புகளுக்குச் சென்றவுடன் உணவை உறிஞ்சக்கூடிய 20,000,000 வாய்களும், நுரையீரலில் ஒரு நாளைக்கு 2,400 காலன்கள் காற்றை உள்ளிழுக்கக் கூடிய 600, 000, 000 காற்று உயிரணுக்களும் (காற்று செல்கள்) மேலும் எந்த ஒரு தெரிந்த சத்தத்திற்கும், ருசிக்கும், பார்வைக்கும் தொடுதலுக்கும் இல்லையென்றால் மனதுக்கும், உடனுக்குடன் மூளைக்குப் பதில் செல்லக் கூடிய டெலிபோன் போன்ற அமைப்பும் உடையதாயும் இருக்கிறது. மனிதனுடைய இருதயமானது ஒரு மணிக்கு 4200 தடவை, அடிக்கக் கூடியதாயும், ஒரு நாளைக்கு 12 டன் இரத்தத்தை இறைக்கிறதாயும் இருக்கிறது.

6. மனஎழுச்சி, தீவிர உணர்ச்சிகள், விருப்பங்கள், பசி இன்னும் பல உணர்ச்சிகளின் இருப்பிடமாய் ஆத்துமா விளங்குகின்றது.

7. மனிதனுடைய ஆவியானது புரிந்து கொள்ளும் சக்தியுடையதாயும் மனவுறுதி, மனச்சாட்சி என்பவைகளின் இருப்பிடமாயும் இருக்கிறது.

8. ஆத்துமாவையும் ஆவியையும் உடைய உள்ளான மனிதன் நித்தியமானவன்.

9. மனிதன் தேவதூதரிலும் சற்று சிறியவனாக உண்டாக்கப்பட்டிருக்கிறான் (சங் 8:5; எபி 2:7).

10. பாவமில்லாதவனாய்; விரும்பினால் பாவம் செய்யக்கூடியவனாய் சிருஷ்டிக்கப்பட்டுள்ளான் (ஆதி 2:17; ரோம 5:12-21; I யோவா 3:4).

11. அவன் ஆத்துமா, ஆவி, சரீரம் என்ற மூன்று தன்மை உடையவனாய் உண்டாக்கப்பட்டுள்ளான் (I தெச 5:23; எபி 4:12).

12. எல்லாச் சிருஷ்டிகளினின்றும் அவனுடைய மாமிசம் வேறுபடுகிறது (I கொரி 15:39).

13. மனிதன் ஆணும், பெண்ணும் ஒருங்கிணைந்தவனாய் வர்ணிக்கப்பட்டுள்ளான் (ஆதி 1:26-28; 5:2; மத் 19:4).

14. மனிதனுடைய உடல் சம்பந்தமான நியதிகளும், ஆவிக்குரிய நியதிகளும் வேதாகமத்தில் கீழ் கண்டவாறு வேறுபடுத்தப்பட்டுள்ளன.

(a) ஆவியும் ஆத்துமாவும் மண்ணல்ல (ஆதி 2:7).

(b) மரணத்தில் ஆவி சரீரத்தை விட்டுப் பிரிகிறது (யாக் 2:26; லூக் 8:49-56, 16:22, 23:43; அப் 5:10; II கொரி 5:8, 12:3,4; பிலி 1:21-24, எபி 12:23; IIபேது 1:13-15; வெளி 6:9-11; I இராஜா 17:20-22; யோபு 14:10; II சாமு 12:19-23; பிர 12:7).

(c) ஆவியும், ஆத்துமாவும் சரீரத்திலிருக்கின்றன. ஆனால் சரீர தன்மையுடையவை அல்ல (நீதி 20:27; யோபு 14:22; 32:8; சக 12:1; I கொரி 2:11, 7:34).

(d) சரீரம் அழியக்கூடியது. ஆனால் ஆத்துமா அப்படியல்ல (அழியாதது) (மத் 12:28 லூக் 12:5).

(e) ஆவி விருப்பமுடையதாயிருக்கிறது. மாமிசமோ அதைச் செயல்படுத்த முடியாததாயிருக்கிறது (மத் 26:38-41)

(f) மாமிசமும், ஆவியும் தேவனை மகிமைப்படுத்த வேண்டியதாயுள்ளது (I கொரி 6:20).

(g) ஆவியும் சரீரமும் பரிசுத்தமுள்ளதாய், இல்லையென்றால் அசுத்தமாய் இருக்கிறது.

(h) உள்ளான மனுஷன் நிலையானவன் (நித்தியமானவன்). சரீரம் அழியக்கூடியது (II கொரி. 4:16, 18).

(i) சரீரத்தைவிட்டு உள்ளான மனிதன் பிரிந்த உடன் அது முழுவதும் உணர்வுள்ளதாய் அதாவது தன் நினைவுள்ளதாய் விளங்குகிறது (மத். 10:28; 17:3; லூக் 16:19-31; 20:38; யோவா 11:25, 26; அப் 2:27; எபே 3.15; 4:8-10; 2 கொரி 5:8; 12:1-4; பிலி 1:21 24; எபி 2:14,15; 12:23; I பேது 3:4; வெளி 6.9,11).

(j) ஆவியும் ஆத்துமாவும் சுவாசமல்ல (யோபு 34:14, 15). இதை நிரூபிக்க வேதத்திலே ஆவிக்கும் ஆத்துமாவுக்கும் பதிலாக சுவாசம் என்று போட்டு பார்த்தால் தெரியும். மேலும் இது எவ்வளவு அபத்தம் என்றும் பாருங்கள் (சங்கீதம் 19:7; 106:15; லூக். 12:19; அப் 23:8,9; ரோம. 2:29; Iகொரி 2:11; 5:5; 6:20, II கொரி. 7:1; கலா. 5:25; I தெச. 5:23; எபி 4:12; 10:38 39; வெளி 6:9,11)

(k) சரீரங்கள் உயிரோடிருக்கும்போதே ஆத்துமாக்கள் மரித்திருக்க முடியும் (மத் 8:22; எபே 2:1-9; I தீமோ 5:6 வெளி. 3:1).

(l) நீதிமான்களுடைய சரீரம் மரித்த பின்பும் ஆத்துமா நித்திய ஜீவனை உடையதாயிருக்கிறது. (யோவா. 3:16;5:24; 6:47, 53, 63;11:25, 26; 14:19).

(m) துன்மார்க்கருடைய ஆத்துமாவும் அவர்கள் சரீரமும் மரித்த பின்பும் உணர்வுடையதாயிருக்கிறது.

(n) மரித்தோரின் உயிர்த்தெழுதல் மறுபடியும் சரீரம் உயிரடைந்து வாழ்க்கைக்கு வருவதையே குறிப்பிடுகிறது. ஆத்துமா அல்ல(தானி. 12:2; யோ. 5:28,29;1 கொரி 15:35-54; வெளி. 20:11-15.

(o) நீதிமான்களுடைய ஆத்துமாக்கள் அவர்கள் மரிக்கும்போது பரலோகம் செல்லுகிறது (II கொரி 5:8; எபே. 3:14, 15 ;பிலி 1:21—24; எபி. 12:23; வெளி 6:9-11). அவர்களுடைய சரீரங்கள் கல்லறைக்கு செல்கின்றது (யோவா 5:28,29, தானி. 12:2).

(p) துன்மார்க்கள் மரிக்கும்போது அவர்கள் ஆத்துமாக்கள் நரகத்திற்கும், அவர்கள் சரீரங்கள் கல்லறைக்கும் செல்லுகின்றது (லூக். 16:19-21; I சாமு 14:9; வெளி. 20:11-15).

(q) சரீரம் உள்ளான மனிதன் வசிக்கும் வீடாய் விளங்குகின்றது (I கொரி 2:11; II கொரி 5:1-8; பிலி. 1:21-24; II பேது 1:13-15; யோபு 4:19; 14:22;32:8; சகரி. 12:1) ஆவியும் ஆத்துமாவும் வடிவமைக்கிறது. சரீரம் நடை முறைப்படுத்துகிறது (செயல்படுத்துகிறது). மனிதன் சரீரத்தின் மூலமாய் தன் மனசாட்சியுடையவனையும், ஆவியின் மூலமாய் தேவனுடைய மனசாட்சியுடையவனையும் விளங்குகிறான்.

(r) மனிதன் ஒரு ஆவியை உடையவனாயிருக்கிறான். ஆனால் அவன் ஒரு ஆவியல்ல ஒரு ஆத்துமாவை உடையவனாய் இருக்கிறான். ஆனால் அவன் ஒரு ஆத்துமாவல்ல. ஒரு சரீரத்தை உடையவனாயிருக்கிறான், ஆனால் அவன் ஒரு சரீரம் அல்ல (I தெச. 5:23).

(s) மனிதன் ஒரு மனசாட்சியுடையவனாய் ஒவ்வொரு வேளையும் சுயாதீன நீதி சம்பந்தமான பிரதிநிதியாயும் பொறுப்புள்ளவனாயும் இருக்கிறான் (யோவா 3:16;7:17; ரோம 7:18; I கொரி 7:36, 37;9:17, II பேது. 1:21; வெளி 22:17).

(t) சரீரம் கிழிந்துபோடக்கூடியதாயும் மறுபடியும் உடையதாயிருக்கக் கூடிய தன்மையிலுள்ளது (II கொரி 5:1-8; II பேது 1:14). அதற்கு சரீரத்திலிருந்து தனிப்பட்ட ஒரு உள்ளான மனிதன் தேவைப்படுகிறது.

(u) ஆத்துமாக்கள் நிலையானது (நித்தியமானது அழியாதது) (I பேது 3:4). சரீரங்கள் அப்படியல்ல இன்னும் அநேக விசேஷங்கள் உடையவராய் மனிதன் சிருஷ்டிக்கப்பட்டுள்ளான் அதற்காக கர்த்தருக்கு ஸ்தோத்திரம்!

(தொடரும்)

"நான் பிரமிக்கத்தக்க அதிசயமாய் உண்டாக்கப் பட்டபடியால் உம்மைத் துதிப்பேன்"

—சங் 139:14

# மிகாவேல் (வெளி 12:7) மனிதனு? தேவதூதனு?

மிகாவேல், காபிரியேல் என்ற பெயரைக் கேட்டவுடன் தேவ தூதர்கள் என்ற முடிவுக்கே எல்லாரும் வந்து விடுகின்றனர். சகரியா தேவாலயத்தில் தூபங் காட்டுகிற வேளையில் கர்த்தருடைய தூதன் ஒருவர் (லூக் 1:10,11) அவனுக்குத் தரிசனமானர் இந்த தூதன் பெயர் காபிரியேல். இவர் தேவ சந்நிதானத்தில் நிற்கிறவர். தேவன் இவர் மூலமாக செய்தியை பிரதானமானவர்களுக்கு அனுப்புகிறர். மரியாளுக்கும், செய்தி கொண்டு வந்தவர் இந்த தூதனே (லூக் 1:19, 26, 27). இந்த தூதன் செய்திகளை, அல்லது வரப்போகிற பிரதானமான காரியங்களை கொண்டு வருகிற தூதனக இருக்கிறர். தானியேலுக்கு செய்தி கொண்டு வந்த தூதன் சாத்தானல் தடை செய்யப்பட்டிருந்தான். அச்சமயம் பிரதான அதிபதிகளில் ஒருவனுகிய மிகாவேல் அந்த தூதனுக்கு உதவியாக வந்து அவனை விடுவித்தான் (தானி 10:13) இங்கே பிரதான அதிபதிகளில் ஒருவனுகிய (One of the Chief Princes) மிகாவேல் என்று எழுதியுள்ளதால், தூதர்களில் பல தலைவர்கள் உண்டென்றும், அவர்களும், அவர்களைச் சேர்ந்த ஒரு கூட்டம் தூதர்களும் உண்டென்றும் அறிகிறேம்.

இந்த தலைவர்கள் தூதர்களுக்கு அதிபதியாக இருக்கிறர்கள். இந்தப் பிரதான தூதனுகிய மிகாவேல் மோசேயினுடைய சரீரத்தைக் குறித்து பிசாசுடன் தர்க்கித்த போதும் கர்த்தர் உன்னை கடிந்து கொள்வாராக என்று பிசாசிடம் சொல்லி பிசாசை அப்புறப்படுத்தினுர் (யூதா 9) இந்த மிகாவேல் தூதன். இப்படிப்பட்ட யுத்தங்களை நடத்துகிற தூதர்களின் தலைவனுக இருக்கிறர் எனத் தெரிகிறது.

தேவ தூதர்களாகிய இந்த மிகாவேலோ, காபிரியேலோ, மற்றெந்த தேவ தூதர்களோ நமக்கு அதிபதிகள் அல்ல, தேவ தூதர்கள் இரட்சிப்பைச் சுதந்தரிக்க போகிறவர்களினிமித்தமாக ஊழியம் செய்யும்படிக்கு அவர்களெல்லாரும் அனுப்பப்படும் பணிவிடை ஆவிகளாயிருக்கிறர்கள் (எபி 1:14).

இப்படியிருக்க தானியேலை நோக்கி தேவ தூதன் உங்கள் அதிபதியாகிய மிகாவேலைத் தவிர என்னேடேகூட அவர்களுக்கு விரோதமாய் பலங் கொள்ளுகிற வேறொருவருமில்லை என்று சொல்கிறன் (தானி 10:21). இங்கே உங்கள் அதிபதி (தேவ ஜனங்களின் அதிபதி) என்று சொல்லப்பட்டிருக்கிறபடியால் இது பிரதான தேவ தூதனுகிய மிகாவேலைக் குறிக்காமல் ஒரு ஜனத்தின் அதிபதியையே குறிப்பிடுகிறது எனக் காணலாம்.

மேலும், தானியேல் 12ம் அதி 1ம் வசனத்தில் உன் ஜனத்தின் புத்திரருக்காக நிற்கிற பெரிய அதிபதியாகிய மிகாவேல் அக்காலத்தில் எழும்புவான். அக்காலத்தில் புஸ்தகத்தில் எழுதியிருக்கிறவர்களாகக் காணப்படுகிற உன் ஜனங்கள் அனைவரும் விடுவிக்கப்படுவார்கள் என்று எழுதப்பட்டுள்ளது இங்கே சொல்லப்பட்ட மிகாவேல் தேவ தூதனைக் குறிக்காமல் ஜனத்தின் அதிபதியையே குறிப்பிடுகிறது. எப்படியெனில் "அக்காலத்தில் எழும்புவான்" என்று சொல்லப்பட்டிருக்கிறபடியால் பூமியில் ஜனங்களில் இருந்து வருகிற ஒரு மனிதனையே குறிப்பிடுகின்றது. கர்த்தர் மோசேயிடம் "உன்னைப் போல் ஒரு தீர்க்கதரிசியை நான் அவர்களுக்காக அவர்கள் சகோதரரிலிருந்து எழும்பப்பண்ணுவேன்." என்று இயேசு கிறிஸ்து பூமியிலே மனிதனுய் வெளிப்பட்டு எழும்புவதைக் குறித்து தீர்க்கதரிசனமாய் முன்னறிவித்தார். அப்படியே இயேசுவும் எழும்பி ஜனங்களுக்குப் போதித்தார். ஆகவே, கர்த்தர் தானியேலிடம் சொன்னது பிற்காலத்தில் எழும்பப் போகிற ஜனத்தின் அதிபதியைக் குறித்தேயாகும். சிலர் எண்ணுகிறபடி இந்த மிகாவேல் இயேசு கிறிஸ்துவை குறிக்காது. காரணம் ஆட்டுக் குட்டியின் இரத்தத்தால் மிகாவேல் வலுசர்ப்பத்தை ஜெயித்ததாக வாசிக்கிறேம் (வெளி 12:11).

தானியேலில் சொன்னபடி மிகாவேல் எழும்பி புஸ்தகத்தில் எழுதியிருக்கிறவர்களாகக் காணப்படுகிற ஜனங்கள் அனைவரையும் விடுவிக்க வேண்டும் (தானி 12 :1). இதோ, பாவத்தில் சிக்கி சாத்தானின்

இச்சையின்படி செய்ய அவனால் பிடிபட்டிருக்கிறவர்கள் இயேசு கிறிஸ்துவினுடைய உபதேசத்தாலே விடுவிக்கப்படவேண்டும் (II தீமோ 2:26) பிசாசிடமிருந்து விடுவித்து இயேசு கிறிஸ்துவைக் கொண்டுதேவனோடே ஒப்புரவாகும் உபதேசம். தேவ ஜனத்தை அன்புடன் ஆளுகை செய்யும் அப்போஸ்தலனிடமே ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்கிறது (II கொரி 5:18, 19)

ஆகவே, வெளி 12:7ல் சொல்லப்பட்ட மிகாவேல் தேவஜனங்களை (தெரிந்து கொள்ளப்பட்டவர்களை) உபதேசத்தைக் கொண்டு சாத்தானின் அடிமைத் தனத்தினின்று விடுவிக்கிற தேவனால் ஏற்படுத்தப்பட்ட அப்போஸ்தலனே என்று தேவஜனங்கள் அறிந்து கொள்ளவும்.

பரி. பவுல் பிரதான ஆசாரியனை ஜனத்தின் அதிபதி என்று சொல்கிறார் (அப் 23:5). வானத்திலே யுத்தமுண்டாயிற்று. மிகாவேலும் அவனைச் சேர்ந்த தூதர்களும் வலுசர்ப்பத்தோடே யுத்தம் பண்ணினார்கள். வலுசர்ப்பமும், அதைச் சேர்ந்த தூதரும் யுத்தம் பண்ணியும் ஜெயங்கொள்ளவில்லை. வானத்திலே அவர்கள் இருந்த இடமும் காணப்படாமல் போயிற்று (வெளி 12:7,8). இங்கே இரண்டு கோஷ்டிகளிடையே யுத்தம். ஒரு பக்கம் மிகாவேலும், அவனைச் சேர்ந்த தூதர்களும், இன்னொரு பக்கம் வலுசர்ப்பமும் அவனைச் சேர்ந்த தூதர்களும். வலுசர்ப்பத்தின் கோஷ்டி ஜெயம் பெறவில்லை. தோற்கடிக்கப்பட்டு, ஸ்தானத்தை விட்டு கீழே தள்ளுண்டு போகிறான். ஜெயம் பெற்ற கோஷ்டி மிகாவேலும் அவனைச் சேர்ந்தவர்களும். உடனே வானத்தில் சத்தம் உண்டாகி அவர்களைப் பாராட்டுகிற விதத்தைப் பாருங்கள், மரணம் நேரிடுகிறதாயிருந்தாலும் அதற்குத் தப்பும்படி தங்கள் ஜீவனையும் பாராமல் ஆட்டுக்குட்டியின் இரத்தத்தினாலும் தங்கள் சாட்சியின் வசனத்தினாலும் அவனைச் ஜெயித்தார்கள்." (வெளி 12:11)

ஜெயம் பெற்றது மிகாவேல் கோஷ்டி. மிகாவேல் தேவ தூதனானால் மரணம் எற்படவாய்ப்பில்லையே. ஒரு தேவ தூதனுக்கும், ஆட்டுக்குட்டியின் இரத்தத்திற்கும் சம்பந்தம் கிடையாதே? இரட்சிக்கப்பட்ட தேவ மனிதனே ஆட்டுக்குட்டியின் இரத்தத்தால் மீட்கப்பட்டவன். ஆகவே வெளி 12:7ல் சொல்லப்பட்ட மிகாவேல் தேவ தூதன் அல்ல. ஜனத்தின் அதிபதியாகிய தேவ ஜனங்களுக்காக் கடைசி காலத்தில் நிற்கிற தேவனுடைய மனிதனே.

---

"உன் ஜனத்தின் புத்திரருக்காக நிற்கிற பெரிய அதிபதியாகிய மிகாவேல் அக்காலத்திலே எழும்புவான்..." தானி 12:1

---

# மோட்ச வழி

(தொடர்ச்சி)

## குரு—சிஷ்ய உரையாடல்

குரு : ரோமன் கத்தோலிக்க மறுவிக சபை தோற்றங்கள்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | இறந்தவர்களுக்காக ஜெபம் செய்தல் | கி. பி. | 310ம் | ஆண்டு |
| 2. | மெழுகுவர்த்திகளை உபயோகிப்பது | ,, | 320 | ,, |
| 3. | அர்ச்சிய சிஷ்டர்களையும், சம்மனசுகளையும் வணங்குவது | ,, | 375 | ,, |
| 4. | பூஜை பலி முதலில் ஏற்படுத்தியது | ,, | 394 | ,, |
| 5. | மரியாளின் ஆராதனை | ,, | 432 | ,, |
| 6. | குருவானவர் அங்கி அணிவது | ,, | 500 | ,, |
| 7. | உத்தரிக்கும் ஸ்தலத்தைப் பற்றிய போதனை | ,, | 593 | ,, |
| 8. | புரியாத மொழியில் ஆராதனை துவங்கியது | ,, | 600 | ,, |
| 9. | போப்பின் எதேச்சதிகாரம், போனிபாஸ் III 'உலக ஏக பிஷப்' என்ற பட்டம் சூட்டிக் கொண்டு முதலாவது போப்பாக முடி சூட்டியது | ,, | 606 | ,, |

| | | | | |
|---|---|---|---|---|
| 10. | மரியாளுக்கு திருவிழா ஏற்பட்டது | ,, | 650 | ,, |
| 11. | போப்புவின் பாதங்களை முத்தமிடுவது | ,, | 709 | ,, |
| 12. | அர்ச்சிஷ்ட பண்ட வணக்கம் | ,, | 788 | ,, |
| 13. | தீர்த்தம் (உப்பும், தண்ணீரும் கலந்தது) | ,, | 850 | ,, |
| 14. | சூசையப்பர் வணக்க ஆராதனை | ,, | 890 | ,, |
| 15. | மணிகளை ஞானஸ்நானம் பண்ணுவது | ,, | 965 | ,, |
| 16 | அர்ச்சிய சிஷ்டர்களை உண்டாக்கியது | ,, | 993 | ,, |
| 17. | இறந்தவர்களுக்காக திருவிழா ஏற்படுத்தியது | ,, | 1003 | ,, |
| 18. | குருவானவர் விவாகமில்லாமல் இருப்பது | ,, | 1074 | ,, |
| 19. | ரோமன் சபை தவறாத வரம் பெற்றது என்று போதித்தது | ,, | 1076 | ,, |
| 20. | ஜெபமாலை தோன்றியது | ,, | 1090 | ,, |
| 21. | ஏழு தேவ திரவிய அனுமான போதனை | ,, | 1140 | ,, |
| 22. | தனக்கு மாறுபட்ட உபதேசங்களை தண்டிப்பதற்காக விசேஷ வழக்கு மன்றம் ஏற்படுத்தியது | ,, | 1184 | ,, |
| 23. | கர்த்தருடைய பந்தியில் ஒஸ்தியை உபயோகித்தது | ,, | 1200 | ,, |
| 24. | அப்பத்தில் யேசு ஆத்ம சரீரத்துடன் பிரசன்னமாயிருப்பதாகக் கொண்டது | ,, | 1215 | ,, |
| 25. | பாவ சங்கீர்த்தனம் ஏற்படுத்தியது | ,, | 1215 | ,, |
| 26. | ஒஸ்தியை ஆராதிப்பது | ,, | 1220 | ,, |
| 27 | மூன்று நேரத்தில் மணி அடிப்பது | ,, | 1227 | ,, |
| 28. | கார்டினல்மார் சிவப்பு தொப்பி அணிய உத்தரவு பிறப்பித்தது | ,, | 1245 | ,, |
| 29. | நற்கருணை விழா ஆரம்பித்தது | ,, | 1264 | ,, |
| 30 | உத்தரிக்கும் ஸ்தலம் தோன்றியது | ,, | 1287 | ,, |
| 31. | 'ஆவே மரியா மரியே வாழ்க' | ,, | 1316 | ,, |
| 32. | நற்கருணையின் பவனி | ,, | 1336 | ,, |
| 33. | திராட்சரசம் கொடாமை | ,, | 1415 | ,, |
| 34. | உத்தரிக்கிற ஸ்தல போதனை | ,, | 1439 | ,, |
| 35 | வேதத்தோடு பாரம்பரியத்தை இணைத்தது | ,, | 1546 | ,, |
| 36 | தள்ளுபடி ஆகமங்களை வேதத்தோடு இணைத்தது | ,, | 1546 | ,, |
| 37 | ஏழு திரவிய அனுமானம் விசுவாச சத்தியமாக கட்டாயப்படுத்தியது | ,, | 1547 | ,, |
| 38. | ஜென்ம பாவமில்லாமல் மரியாள் பிறந்தது என்ற போதனை | ,, | 1854 | ,, |
| 39. | போப்புவின் லௌகீக பேரதிகாரம் பிரகடனப்படுத்துதல் | ,, | 1864 | ,, |
| 40. | தேவ விரோதிகளைத் தாக்கி 9ம் பத்தி நாதர் விட்ட அறிக்கையை வாத்திக்கன் பொது சங்கம் அங்கீகரித்தது | ,, | 1570 | ,, |
| 41 | போப்பு தவறாத வரம் உடையவர் என்று பிரகடனப்படுத்தியது | ,, | 1870 | ,, |
| 42. | போப்பு தமக்குப் பிரியமில்லாத ஆராய்ச்சிகளைக் கண்டித்தது | ,, | 1907 | ,, |
| 43 | ரோமன் குருவானவரால் நடத்தப்படாத எல்லா விவாகங்களையும் ஒழுங்கற்றது என 10-ம் போப்பு அறிக்கைவிடுதல் | ,, | 1905 | ,, |
| 44. | மரியாள் சரீரத்துடன பரலோகத்தில் இருக்கும் போதனை | ,, | 1925 | ,, |
| 45. | மரியாளின் உயிர்த்தெழுதல் | ,, | 1950 | ,, |
| 46. | பேதுருவின் எலும்புகள் | ,, | 1950 | ,, |
| 47. | கண்ணீர் விடும் சுரூபம் | ,, | 1950 | ,, |
| 48. | பாத்திமா | ,, | 1950 | ,, |
| 49. | மரியாள் 'பரலோக ராக்கினி' என்ற பட்டம் சூட்டியது | ,, | 1954 | ,, |
| 50. | அர்ச்சிஷ்டவர்கள் பட்டியலிலிருந்து பிலோமினாளையும், கிறிஸ்தோபரையும் நீக்கி விட்டது | ,, | 1961 | ,, |

இதிலே விசேஷம் என்னவென்றால், சத்தியசபைப் பிரேமினுள் ஆட்கள் எசேக்கியேல் இருந்ததில்லை என்று கண்டு பிடிக்கப்பட்டதாகும்.

(தொடரும்)

> மகா பாபிலோன்...அது பேய்களுடைய குடியிருப்பும், சகலவித அசுத்த ஆவிகளுடைய காவல் வீடும், அசுத்தமும் அருவருப்புமுள்ள சகலவித பறவைகளுடைய கூடுமாயிற்று
>
> (வெளி 18 : 2)

(தொடர்ச்சி)

# வேதபாடம்

யாத். 17 : 1-7 இஸ்ரவேல் புத்திரர் சீன் வனாந்தரத்திலிருந்து ரெவிதீமிற்கு பிரயாணம் செய்து வந்தனர். ரெவிதீமில் அவர்களுக்கு குடிக்கத் தண்ணீர் இல்லாமல் இருந்தது இதினிமித்தம் அவர்கள் மோசேயோடு வாக்குவாதம் பண்ணி எங்களையும் எங்கள் பிள்ளைகளையும், எங்கள் ஆடுமாடுகளையும் தண்ணீர் தாகத்தினால் கொன்றுபோட ஏன் எகிப்திலிருந்து கொண்டு வந்தீர் என்று வாக்குவாதம் பண்ணினார்கள். மோசே கர்த்தரிடத்தில் விண்ணப்பம் பண்ணினார். அப்பொழுது கர்த்தர் ஒரு கன்மலையைக் காண்பித்து அதின்மேல் நான் நிற்பேன் உன் கையிலிருக்கிற கோலினால் அதை அடி. அங்கேயிருந்து தண்ணீர் புறப்படும் என்றார். மோசே கன்மலையை அடித்தபோது அதிலிருந்து ஏராளமான தண்ணீர் புறப்பட்டது; அவர்கள் குடித்து தாகம் தீர்த்தார்கள். இஸ்ரவேல் புத்திரர்கள் கர்த்தரை பரீட்சை பார்த்ததினிமித்தம் அந்த இடத்திற்கு 'மாசா' என்றும் பெயரிடப்பட்டது.

யாத். 17 : 8-13 அமலேக்கியர் வந்து ரெவிதீமிலே இஸ்ரவேலரோடே யுத்தம் பண்ணினார்கள். இது இஸ்ரவேலர்களுக்கு உண்டான முதலாவது யுத்தம். மோசே யோசுவாவை சேனாதிபதியாக நியமித்து அமலேக்கியருக்கு விரோதமாக போர் செய்யும்படி அனுப்பினார். மோசேயோ மலையின்மேல் ஏறி தன் கரங்களை உயர்த்தி அமலேக்கியருக்கு விரோதமாக ஜெபம் பண்ணினார். மோசேயினுடைய கரம் உயர்த்தப்பட்டிருக்கும்போது இஸ்ரவேலர்கள் மேற்கொண்டார்கள். மோசேயினுடைய கரம் தாழும்போது அமலேக்கியர் மேற்கொண்டார்கள். இதைக் கண்ட ஆரோனும், ஊரும் ஒரு பெரிய பாறைக்கல்லை கொண்டு வந்துபோட்டு மோசேயை அதின்மேல் அமரச் செய்து இருவரும் இருபக்கத்திலிருந்து மோசேயினுடைய கைகளை தாங்கினார்கள். அப்பொழுது யோசுவா அமலேக்கியரைப் பட்டயக் கருக்கினால் சங்கரித்தான். இந்த ஜெயம் தேவனால் உண்டாயிற்றென்றும் ஜெபத்தினால் உண்டான அற்புதம் என்றும் இஸ்ரவேலர்கள் கண்டார்கள்.

யாத். 17 : 14-16 தேவனுடைய புதிய வெளிப்படுத்தல். அமலேக்குக்கு விரோதமாக கர்த்தரின் யுத்தம் நடக்கும். அமலேக்கியர் வானத்தின் கீழெங்கும் இராதபடிக்கு சங்கரிப்பேன் என்று கர்த்தர் சொன்னார். இந்த யுத்தம் தலைமுறை தலைமுறையாக நடக்கும் என்றார். மோசே அந்த இடத்தில் ஒரு பலிபீடத்தைக் கட்டி அதற்கு 'யேகோவா நிசி' என்று பெயரிட்டார். அதற்கு கர்த்தர் என் கொடி' என்று அர்த்தம்

யாத். 18 : 1-7 மோசே தன்னுடைய குடும்பத்தை திரும்ப அழைத்துக் கொள்ளுதல்: மோசேயினுடைய மனைவி சிப்போராள், அவருடைய பிள்ளைகள் கெர்சோம், எலியேசர் இருவரையும், அவருடைய மாமனாகிய எத்திரோ அழைத்துக்கொண்டு மோசேயினிடம் வந்து சேர்த்தார்.

யாத். 18 : 8-12 மோசே, தேவன் இஸ்ரவேல் ஜனங்களை எகிப்திலிருந்து அற்புதமாய் விடுவித்துக் கொண்டுவந்த விதத்தை விவரித்து சொன்னார். எத்திரோ கர்த்தரை ஸ்தோத்தரித்து அவரைத் தொழுதுகொண்டு கர்த்தருக்கு பலி செலுத்தினார். பின்பு இஸ்ரவேலின் மூப்பரோடே கூட எத்திரோ விருந்துண்டார்.

யாத் 18 : 13-27 ஜனங்கள் காலமே தொடங்கி சாயங்காலமட்டும் மோசேக்கு முன்பாக நியாயம் விசாரிக்கப்பட நின்றார்கள். இதைக்கண்ட எத்திரோ மோசேக்கு இவ்விதமான ஆலோசனை சொன்னார். நீர் இவ்விதமாய் ஒருவராய் நியாயம் விசாரிக்கிறது ஜனங்களுக்கு கஷ்டம். தேவனுக்கு பயந்தவர்களும், உண்மையுள்ளவர்களுமான சிறிய அதிபதிகளை நியமியும். அவர்கள் ஜனங்களின் சிறிய காரியங்களை விசாரிக்கட்டும். பெரிய காரியங்களை நீர் விசாரித்து தேவனுடைய உத்தரவை அவர்களுக்கு தெரிவியும். பெரிய காரியங்களை உம்மிடத்தில் கொண்டு வரட்டும். இப்படி செய்தால் நல்லது என்று ஆலோசனை சொன்னார். மோசே தன் மாமன் சொன்னபடியெல்லாம் செய்தார். இஸ்ரவேல் புத்திரரில் எல்லாரிலும் திறமையான மனிதர்களை தெரிந்துகொண்டு அவர்களை ஆயிரம் பேர்களுக்கு அதிபதிகளாகவும், நூறு பேருக்கு அதிபதிகளாகவும், ஐம்பது பேருக்கு அதிபதிகளாகவும், பத்து பேருக்கு அதிபதிகளாகவும் நியமித்தார். மோசேயின் மாமன் திரும்ப தன் தேசத்துக்கு போய் சேர்ந்தார். அதிகாரங்கள் தேவனால் உண்டாயிருக்கிறது. அதிகாரங்களுக்கு அடங்கி நடக்க வேண்டும் என்று தேவன் சொல்லுகிறார்.

(தொடரும்)

> "சோதனையை சகிக்கிற மனுஷன் பாக்கியவான் அவன் உத்தமனென்று விளங்கின பின்பு கர்த்தர் தம்மிடத்தில் அன்பு கூருகிறவர்களுக்கு வாக்குத்தத்தம் பண்ணின ஜீவ கிரீடத்தைப் பெறுவான்"
> (யாக். 1 : 12).

# இயேசு அருளும் சமாதானம்

இயேசு கிறிஸ்து அருளும் சமாதானம், எது என்பதையே விளங்கிக் கொள்ளாமல் அநேக கிறிஸ்தவப் பிரசங்கிகள் சமாதானத்தைக் குறித்து பிரசங்கிக்கிறார்கள். உனக்கு வியாதி இருக்கிறதா, இயேசுவை நோக்கி கூப்பிடு. உன் வியாதியை நீக்கி உனக்கு சமாதானம் தருவார். உன் பிள்ளைக்கு வேலை இல்லையா? இயேசுவண்டை வா, உன் பிள்ளைக்கு வேலை கிடைக்கும். உனக்கு ஆறுதல் உண்டாகும். உன் மகளுக்கு திருமணமாகவில்லையா? இயேசுவின் பாதப்படியில் விழுந்துவிட திருமணம் நடக்கும், கர்த்தர் உனக்கு சமாதானம் அருள்வார், என்றெல்லாம் பிரசங்கிக்கிறார்கள். இவர்கள் உலகத்துக்குரியவர்கள், ஆகையால் உலகத்துக்குரியவைகளைப் பேசுகிறார்கள், உலகமும் அவர்களுக்குச் செவி கொடுக்கும் (1 யோ 4:5) என்றபடி மக்களும் அதை ஆவலாய்க் கேட்டு, இப்படிப்பட்ட பிரசங்கிகளைப் பின் தொடர்ந்து திரளாய் செல்கிறார்கள். அரைகுறைகள் அநேகர்: நான் இயேசுவை விசுவாசித்து ஏற்றுக் கொண்டேன் எனக்கு சமாதானம் உண்டாயிற்று. எங்கள் குழப்பங்கள் தீர்ந்துவிட்டது, வியாதி போய்விட்டது. வறுமை நீங்கிற்று, ஒரே மகிழ்ச்சி, சாமி செய்த காரியங்கள் எவ்வளவு பெரியதாய் இருக்கிறது பாருங்கள். கர்த்தர் எங்களை நேசிக்காவிட்டால் இப்படியெல்லாம் செய்வாரா? நாங்கள் சமாதானமாய் இருக்கிறோம் என்கிறார்கள். இப்படியாக கிறிஸ்தவ மக்களில் பெரும் பகுதியினர் தங்களுக்குண்டான உலகப்பிரகாரமான ஆசீர்வாதங்களினால் திருப்தி அடைந்து, இயேசுவை வழிபட்டதால் இந்த சமாதானம் கிடைத்தது என்று

தங்களையே ஏமாற்றிக் கொண்டிருக்கிறார்கள்.

உலக மனிதர்களைப் பாருங்கள். மரணபரியந்தம் அவர்களுக்கு இடுக்கண்களில்லை அவர்களுடைய பெலன் உறுதியாயிருக்கிறது. நரர் படும் வருத்தத்தில் அகப்படார்கள், மனுஷர் அடையும் உபாதியை அடையார்கள். ஆகையால் பெருமை சரப்பணியைப் போல் அவர்களை சுற்றிக் கொள்கிறது. அவர்கள் இருதயம் விருப்பங்களிலும் அதிகமாய் நடந்தேறுகிறது. இதோ இவர்கள் துன்மார்க்கர், சுக ஜீவிகளாயிருந்து ஆஸ்தியைப் பெருகப் பண்ணுகிறார்கள் (சங் 73:3-12). இவைகளை எல்லாம் பெற்றிருந்தும் இவர்கள் சமாதானம் பெற்றிருக்கிறார்களா? இவர்கள் பெற்றுள்ள நன்மைகளைப்போல கிறிஸ்தவர்கள் பெற்றிருப்பதால் இவர்கள் சமாதானம் பெற்றிருக்கிறார்கள் என்று அர்த்தமா? கர்த்தராகிய இயேசு கிறிஸ்து அருளும் சமாதானம் எது என்பதை வேத வெளிச்சத்தில் காணலாம்:-

ஆதாமையும், ஏவாளையும் கர்த்தர் ஏதேன் தோட்டத்தில் வைத்து அவர்களுக்கு தேவையான சகலவற்றையும் சம்பூரணமாய்க் கொடுத்திருந்தார். அதோடு அவர் அவர்களோடே உலாவி அவர்கள் தேவனுமாயிருந்தார். மனிதனுக்கும் தேவனுக்கும் நல்லுறவு இருந்தது. அவர்கள் சமாதானத்தோடே இருந்தார்கள். சாத்தான் இடைபட்டான், தேவ கற்பனையை மீறும்படி துர்போதனை கொடுத்தான். தேவ கட்டளை மனிதனால் மீறப்பட்டது. அது முதற்கொண்டு பாவம் மனிதனையும் தேவனையும் பிரித்தது. மனிதன் சமாதானத்தை இழந்தான், பாவம் பெருகப் பெருக தேவனை விட்டு தூரப்பட்டு போய் கொண்டே இருந்தான். சஞ்சலமும் தவிப்பும் பெருகிற்று. நாம் தேவனற்றவர்களானோம் (எபே 2:12). தேவனில்லாமல் நம்முடைய சமாதானமும் கெட்டுப் போயிற்று.

பண்டிகைக்கு தகப்பனோடு தேவாலயம் சென்ற சிறுவன் கூட்டத்தை வேடிக்கைப் பார்த்துக் கொண்டு தகப்பனுடைய கையை விட்டு, பிரிந்து ஜனக்கூட்டத்தில் சிக்குண்டு தகப்பனை தேடி பரிதவித்து, சமாதானமற்று இளைப்பாறுதலற்று அலைவது போல், சாத்தானால் வஞ்சிக்கப்பட்டு உலகத்தின் மாயையில் சிக்கி பரமபிதாவைவிட்டு தூரப்பட்டு, மறுபடியும் அவரைக் காணும் வழிதெரியாமல், பாரம் சுமந்து இளைப்பாறுதலற்று மனுக்குலம் காடுகளிலும் குகைகளிலும் உட்கார்ந்து சரீரத்தை ஒடுக்கி தவமிருந்து எப்படியாவது இறைவனைக் காண வேண்டுமே, முக்தியடையவேண்டுமே என தவிக்கிறார்கள். அவர்கள் செய்த பிரயாசத்தினால் அவர்களுடைய தவிப்பு நீங்கி சமாதானம் அடையவில்லை. பாதை தெரியாத ஆட்டைப்போல் வழி தப்பிப்போன நமக்கு பிதாவிடம் செல்லும் பாதையை காண்பிக்க கர்த்தராகிய இயேசு கிறிஸ்து வந்தார். அவர் வந்து வருத்தப்பட்டு பாரம் சுமக்கிறவர்களே (பிதாவைக் காணக் கூடாமல் தவிக்கிறவர்களே) நீங்கள் எல்லாரும் என்னிடத்தில் வாருங்கள் நான் உங்களுக்கு இளைப்பாறுதல் (சமாதானம்) தருவேன். நான் பிதாவை அறிந்திருக்கிறேன்.

யாருக்கு பிதாவை நான் வெளிப்படுத்த சித்தங்கொள்கிறேனோ அவர்களுக்கு வெளிப்படுத்துவேன். பிதாவை அறியும் வழி ஞானிகளுக்கும் கல்வி மான்களுக்கும் மறைக்கப்பட்டுள்ளது(மத் 11:23,27,25); பிதாவை கண்டடையும் மார்க்கத்தை காண்பிக்க எனக்கு மட்டுமே சகலமும் ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகவே நீங்கள் வந்து அந்த மார்க்கத்தைக் கற்றுக் கொண்டு அதன்படி செய்யுங்கள். அப்போது தேவனை அறியும் அறிவடைந்து அவரோடே என் மூலமாய் ஐக்கியப்பட்டு இளைப்பாறுதல் (சமாதானம்) பெறுவீர்கள் என்றார் இறைவன் இயேசு (மத் 11:27, 29).

இயேசுவானவர் உலகத்தில் வந்ததால், உன்னதத்திலிருக்கிற தேவனுக்கு மகிமையும், தேவனுக்கும் மனிதனுக்கும் உண்டான பிளவு நீங்கி சமாதானமும், தேவபகைஞனாகிய மனிதன் மீது தேவனுக்கு பிரியமும் உண்டாயிற்று (லூக் 2:14). இப்படி தேவனோடு ஐக்கியப்படுவதால் உண்டாகும் சமாதானத்தை இயேசு தம்முடைய சீஷர்களுக்கு சொல்லிக் கொடுக்க ஆரம்பித்தார். இன்னும் அநேகக் காரியங்களை சொல்ல வேண்டியது இருக்கையில் அவர் எடுத்துக் கொள்ளப்படும் வேளை வந்த

போது சீஷர்களை நோக்கி, இன்னும் அநேக காரியங்களை நான் உங்களுக்குச் சொல்ல வேண்டியதாயிருக்கிறது. அவைகளை நீங்கள் இப்பொழுது தாங்கமாட்டீர்கள். சத்திய ஆவியாகிய தேற்றரவாளன் வந்து சகல சத்தியத்திற்குள்ளும் உங்களை நடத்துவார். அவர் என்னுடையதில் எடுத்து உங்களுக்கு அறிவிப்பார் (யோவா 16:12-14). நான் சொன்ன எல்லாவற்றையும் உங்களுக்கு நினைப்பூட்டுவார். அதன்படி செய்யுங்கள். சமாதானத்தை உங்களுக்கு வைத்துப் போகிறேன் (யோவா 14:26,27) என்றார் இயேசு. அதன்படி சீஷர்கள் பரிசுத்தாவியைப் பெற்றார்கள்.

வாக்குத்தத்தத்தின்படி அவர் போதிக்க ஆரம்பித்தார். அந்த வார்த்தைகளை அப்போஸ்தலர்கள் பெற்றார்கள், அதை சபைக்கு உபதேசித்தார்கள் (அப் 2:42). சபையார் அந்த உபதேசத்தில் நிலைத்திருந்தார்கள், சமாதானம் பெற்றிருந்தார்கள். ஒரு தேவனுடைய பிள்ளை தேவனுடைய உபதேசத்தில் நிலைநிற்கும் வரை அவன் சமாதானம் பெற்றிருப்பான். இயேசுவோடு இணைந்திருப்பதினால் தேவனோடே சஞ்சரிப்பான். தேவ சத்தம் கேட்பான். அவர் சித்தம் செய்வான். பஞ்சம் வரலாம், பட்டினி வரலாம், நிர்வாணம் வரலாம், வியாதி வரலாம், எத்திசை வந்தாலும், வெள்ளம் புரண்டு வந்தாலும், அவன் சமாதானமாய் இருப்பான். அதாவது தெய்வத்தையுடையவனாக இருப்பான். இதுவே இறைவன் இயேசு அருளும் சமாதானம்.

---

அவர்களுக்கு தானியமும் திராட்சை ரசமும் பெருகியிருக்கிற காலத்தின் சந்தோஷத்தைப் பார்க்கிலும் அதிக சந்தோஷத்தை என் இருதயத்தில் தந்தீர் (சங் 4:7).

---

சிறுவர் பகுதி

# இயேசுவின் அன்பு

வில்சனும், குமாரும் ஒரே அலுவலகத்தில் பணியாற்றி வந்தனர். இருவரும் இணைபிரியா நண்பர்கள். வில்சன் ஒரு தேவ பக்திக்குரியவர். குமார் ஒரு சன்மார்க்கவாதி. வில்சன் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் மெய் வழி சீஷராவார். கிறிஸ்துவின் அன்பை அதிகமாக ருசித்தவர். கர்த்தராகிய இயேசு கிறிஸ்து என்னுடைய பாவங்களுக்காய் மரித்து அடக்கம் பண்ணப்பட்டு உயிர்த்தெழுந்தவர் என்று விசுவாசித்து எனக்காய் அவர் தமது ஜீவனைக் கொடுத்தார் என்று அறிக்கை செய்து நடக்கும் ஒரு மெய் பக்தராவார்.

இவர் கிறிஸ்துவின் மூலம் பெற்ற இரட்சிப்பின் சந்தோஷத்தை தனது உற்ற நண்பராகிய குமாரிடம் சொல்லி வந்தார். ஆனால் குமார் அதை ஏற்றுக் கொள்ளவில்லை; மட்டுமல்லாது அது எப்படி ஒருவர் எல்லா மனுக்குலத்திற்காகவும் தனது ஜீவனைக் கொடுத்து மனிதனை மீட்டுக் கொள்ள முடியும் என்ற கேள்வியைக் கேட்பவர். இதை நான் எப்படி ஏற்றுக் கொள்ள முடியும் என பதில் கொடுத்து வந்தார்.

வில்சன் திருமணமாகாதவர். குமார் திருமணமாகி ஒரு பையனுக்கு தகப்பனாவார். வில்சன் அநேக முறை அநேக விளக்கங்கள் கொடுத்தும் குமார் அந்தக் கேள்விக்கான பதில்களை ஒத்துக் கொள்ளவில்லை. ஆனாலும் வில்சன் குமாருக்காக தொடர்ந்து, கர்த்தரிடத்தில் ஜெபித்து வந்தார்.

நாட்கள் சில கடந்து விட்டன. ஆனால் வில்சன் தொடர்ந்து குமாருக்காக ஜெபித்துக் கொண்டிருந்தார். ஒரு நாள் அலுவலகத்திற்கு, குமாருக்கு ஒரு தொலைபேசி செய்தி ஒன்று வந்தது. அந்த செய்தியை கேட்ட மாத்திரத்தில் குமார் அப்படியே இடிந்து போய் அமர்ந்து விட்டார்.

வில்சன் குமாரிடத்தில் விசாரித்தார் நடந்த சம்பவம் என்ன என்று? அதற்கு குமார் எனது மகன் சேகர் விளையாடிக் கொண்டிருக்கும் பொழுது வாகனம் ஒன்று அவன் மீது மோதி விட்டது எனவும், சேகரை இப்பொழுது மருத்துவமனையில் அவசர வார்டில் சேர்த்திருக்கின்றனர் என

வும் கூறினர். அப்பொழுது வில்சன் குமாரை நோக்கி நீங்கள் ஒன்றுக்கும் கவலைப் படாதீர்கள்; கர்த்தராகிய இயேசு கிறிஸ்து உங்கள் மகன் சேகரை பாதுகாத்துக் கொள்வார் என தைரிய மூட்டினர்.

இருவரும் அலுவலகத்தில் அனுமதி பெற்றுக் கொண்டு குறிக்கப்பட்ட மருத்துவ மனையை நோக்கி விரைந்தனர். மருத்துவ மனையில் அமர்ந்திருந்த குமாரின் மனைவிக்கும் வில்சன் திடமான வார்த்தைகளைச் சொல்லி பலப்படுத்தினர்.

சேகரின் உடலில் இருந்து ஏராளமான இரத்தம் வெளியே போய் விட்டபடியால் அவனை அவசர வார்டில் வைத்திருந்தனர். அங்கு வேகமாக சென்றனர் குமாரும், வில்சனும். டாக்டர் இவர்களிடம் சேகருக்கு இரத்தம் செலுத்த வேண்டும். எங்களது இரத்த சேமிப்பு வங்கியில் சேகரின் Blood group இல்லை. எனவே யாராவது இரத்த தானம் செய்தால், சேகர் அபாயக் கட்டத்திலிருந்து மீண்டு விடலாம் என்றார். குமார் தனது இரத்தத்தைக் கொடுக்க முன் வந்தார். ஆனால் அவரது இரத்தம் சேகரின் Blood group ஐ சேர்ந்தது அல்ல என டாக்டர் சொல்லி விட்டார்.

இப்பொழுது வில்சன் தனது இரத்தத்தை கொடுக்க முன் வந்தார். வில்சனின் இரத்தத்தை டாக்டர் சோதித்தார். என்ன ஆச்சரியம்! வில்சனின் இரத்தமும், சேகரின் இரத்தமும் ஒரே Group ஐ சேர்ந்ததாக இருந்தது. வில்சன் சேகருக்குத் தேவையான இரத்தத்தை தனது உடலிலிருந்து எடுத்துக் கொள்ளும் படியாக டாக்டரிடம் கூறினர். அப்படியே சேகருக்கு இரத்தம் செலுத்தப் பட்டது. இதன் பின்னர் சேகர் தனது அபாயக் கட்டத்தை தாண்டிவிட்டான் என டாக்டர் அறிவித்தார். இப்போது தான் குமாருக்கும் அவரது மனைவிக்கும் சந்தோஷம் ஏற்பட்டது. வில்சனிடத்தில் அவர்கள் தங்கள் நன்றியை தெரிவித்தனர். நீங்கள் செய்த இந்த உதவிக்கு நாங்கள் என்னத்தை ஈடாக செலுத்த முடியும் எனச் சொல்லி ஆனந்த கண்ணீர் வடித்தனர்.

இதுவே தக்க சமயம் என உணர்ந்த வில்சன் இப்பொழுது இயேசு கிறிஸ்துவைக் குறித்து குமாருக்கு அறிவித்தார். குமார் நான் உன்னையும் உனது குடும்பத்தையும் நேசித்தேன். உங்களது மீதுள்ள அன்பின் நிமித்தமாக உங்களது மகனுக்கு எனது இரத்தத்தை கொடுக்க தூண்டியது. இப்படியே நமது கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவும் மனுக்குலத்தின் மீது வைத்த அன்பின் காரணத்தால் நம்மை பாவத்திலிருந்து மீட்டுக் கொள்ள தனது இரத்தத்தைக் கொடுத்து நம்மை மீட்டுக் கொண்டார்; இது தேவன் நம்மீது வைத்த, வைத்திருக்கின்ற அன்பை வெளிப்படுத்தி; தேவன் நம் எல்லோரையும் நேசிக்கின்றார் என வெளிப்படுத்தினர்.

இப்பொழுது குமார், தனது அறியாமையை நன்றாக உணர்ந்து தனது தவறை ஒத்துக் கொண்டார். மெய்யாகவே கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தமது ஜீவனை எல்லா மனுவுக்காகவும் கொடுத்துள்ளார் என நான் ஒப்புக் கொள்கின்றேன். விசுவாசிக்கின்றேன் என தனது விசுவாசத்தை அறிக்கை செய்து ஞானஸ்நானம் பெற்றுக் கொண்டு, அது முதற்கொண்டு குமாரும் கிறிஸ்துவின் பக்தராக நடக்க ஆரம்பித்தார்.

பின்னையே, கர்த்தராகிய இயேசு கிறிஸ்து, நாம் பாவிகளாக இருக்கையில் நமக்காக மரித்ததினாலே தேவன் நம்மேல் வைத்த தமது அன்பை விளங்கப் பண்ணினார். நம்மீது அன்பு செலுத்தி, அன்பை வெளிப்படுத்திய கர்த்தரிடத்தில் நாமும் அன்பு செலுத்துவோமாக. அவர் மீது நாம் வைத்திருக்கும் அன்பை அவரது கற்பனைகளையும், கட்டளைகளையும் கைக்கொண்டு நடப்பதின் மூலம் வெளிப்படுத்துவோம், அவருக்கு சாட்சியாக ஜீவிப்போமாக.

## (தொடர்ச்சி) புதிய எருசலேம் சபையின் நடபடிகளில் சில

நம்முடைய தேவனாகிய கர்த்தர், இந்த சங்கரன் கோவில் தாலுகாவில் நம்முடைய நாமத்தை மகிமைப்படுத்தினர். இப்பொழுதும் மகிமைப்படுத்திக் கொண்டிருக்கிறார். இந்த துரைசாமியாபுரம் ஊழியத்தில் சந்திக்கப்பட்ட ஒரு சகோதரருடைய ஊர் மயி

வாடிப்பட்டி என்ற ஒரு கிராமம். இது கரிவலம் வந்த நல்லூருக்குகிழக்கே சுமார் ஐந்துகிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. மேற்படிசகோதரர் தன்னுடைய ஊருக்கு வரவேண்டும் என்றுஎங்களை அழைத்திருந்தார். நாங்கள் கர்த்தருடைய உத்திரவின்படி ஓர் நாள் அங்கு சென்றிருந்தோம். அவ்வூரில் பிரதரன் மிஷனைச் சேர்ந்த கிறிஸ்தவர்கள் கொஞ்ச பேர்கள் உண்டு. ஒரு பள்ளிக்கூடத்தில் ஆராதனை செய்துகொண்டு வந்தார்கள். இந்தப் பள்ளியின் தலைமை ஆசிரியரும் மானேஜருமானவரே இந்த சபையின் போதகராயிருந்தார். இந்தப் போதகரின் மகன் ஒருவர் M. A. பட்டதாரி. இவர் எங்களுடன் பேச வேண்டுமென்று விரும்பி மேற்படி பள்ளிக்கூடத்துக்கு எங்களை அழைத்துப் போனார்.

வேதத்திலுள்ள அநேக சத்தியங்களைக் குறித்துப் பேசினோம். இறுதியில் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசித்த உடனே ஒரு ஆத்துமா பரிசுத்தாவியினால் முத்திரை போடப் பட்டாகி விட்டது. ஆகையால் கர்த்தரை விசுவாசிக்கிற ஒருவரை மீண்டும் பரிசுத்தாவி பெற்றுக்கொள்ளுங்கள் என்று சொல்லக்கூடாது என்று கூறி எபே 1:13 ல் உள்ள வசனத்தை வாசித்துக் காண்பித்தார். அவருக்கு பிரதியுத்தரமாக அப்படியல்ல சகோதரனே, இந்த எபேசு சபையின் விசுவாசிகளின் ஆரம்ப அநுபவத்தை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும், இவர்கள் ஞானஸ்நானத்தை மாத்திரம் பெற்று பரிசுத்தாவியின் அபிஷேகம் பெறாதவர்களாயிருந்தார்கள். இவர்கள் பரிசுத்தாவி உண்டென்று கேள்விப்படவேயில்லை, காரணம் இவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்தவர் பரிசுத்தாவி பெறாதவர். ஆகையால் அப்போஸ்தலனாகிய பவுல், பரிசுத்தாவி உண்டென்றும், அதைப் பெற்றுக் கொள்ள வேண்டுமென்றும் இவர்களுக்குப் பிரசங்கித்து இவர்களுக்கு மீண்டும் ஞானஸ்நானம் கொடுத்து இவர்களுக்காக ஜெபித்தபொழுது இவர்கள் பரிசுத்தாவியைப் பெற்று அந்நிய பாஷைகளைப் பேசி தீர்க்கதரிசனம் உரைத்தார்கள் (அப் 19:1-7) என்று கூறியிருக்கிறதே என்று வேத வசனங்களை விளக்கிக் காண்பித்தோம்.

அதுமட்டுமல்ல, சுவிசேஷகனாகிய பிலிப்பு சமாரியாவில் சுவிசேஷம் அறிவித்தபொழுது ஏராளமான ஜனங்கள் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து ஞானஸ்நானம் பெற்றுக்கொண்டார்கள். ஆனால் அவர்களில் ஒருவரும் பரிசுத்தாவியைப் பெற்றுக் கொள்ளவில்லை என்பதை அப்போஸ்தலனாகிய பேதுருவும், யோவானும் கண்டு அவர்கள் பரிசுத்த ஆவியைப் பெறும்படி அவர்கள் தலை மேல் கைகளை வைத்து ஜெபித்தபொழுது பரிசுத்தாவியானவர் அவர்கள் மேல் இறங்கினார் (அப் 8:12-17) என்று எழுதியிருக்கிறதே என்று விளக்கியபொழுது அவர் ஒத்துக் கொண்டார்.

நானும் பரிசுத்தாவியைப் பெற்றுக் கொள்ள விரும்பி அநேக கன்வென்ஷன்களுக்கும், ஆவிக்குரிய கூட்டங்களுக்கும் சென்றேன். எனக்கு ஏன் பரிசுத்தாவி கிடைக்கவில்லை? என்று கூறினார். நீர், தாகத்தோடு தேவனிடம் கேட்டால் கட்டாயம் அவர் உங்கள் தாகத்தைத் தீர்ப்பார் என்று கூறினோம். எனக்கு பரிசுத்தாவி வேண்டும், எனக்காக நீங்கள் ஜெபியுங்கள் என்று கேட்டுக் கொண்டு முழங்காலில் நின்றார். நாங்கள் அவருக்காக தலையில் கைவைத்து ஜெபம் பண்ணினோம். பரிசுத்தாவியானவர் அவர் மேல் இறங்குகிற வேளை நெருங்கி விட்டது. திடீரென்று ஒரு பலத்த கரம் எங்கள் கரங்களை அவருடைய தலையிலிருந்து பிடித்து இழுத்து விட்டது. எழுந்திருடா முட்டாள் படித்தும் மூளை இல்லையே என்று பலத்த குரலில் உறுமினது. நாங்கள் கண் விழித்துப் பார்த்தோம்.

ஒரு பெரிய உருவம் நின்று கொண்டிருந்தது. அடுத்து என்ன நடக்குமோ என்று எதிர்பார்த்தோம். இவர்தான் இந்தப் பள்ளியின் உரிமையாளர், மேற்படி சபையின் போதகர், முழங்காலில் நின்ற பையனின் தகப்பனார். தகப்பனாரின் கோப முகத்தைக் கண்ட பையன் ஒன்றும் பேசாமல் எழுந்து போய் விட்டார். எங்களுக்கு மிகுந்த துக்கமாகி விட்டது. ஒரு சகோதரன் கர்த்தருடைய அன்பைப் பெற்றுக் கொள்ளும் வேளையில் சாத்தான் மனித உருவில் வந்து தடை செய்து விட்டானே என்று

# புதிய எருசலேம் செய்தி

# PUDHIYA YERUSALEM CHEIDHI

எக்காளசத்தம் - 48 ★ DECEMBER 1987

"புதிய எருசலேம் சபை"

"...வீட்டெஜமான் (இயேசு கிறிஸ்து) சாயங்காலத்திலோ, நடுராத்திரியிலோ, சேவல்கூவும் நேரத்திலோ, காலையிலோ, எப்பொழுது வருவார்(ா)ன் என்று நீங்கள் அறியீர்கள் விழித்திருங்கள் உங்களுக்குச் சொல்லுகிறதை எல்லாருக்கும் சொல்லுகிறேன் விழித்திருங்கள் .."

மாற்கு 13 : 35-37

**EDITOR : CHIEF PASTOR N. LAZAR**

BOMBAY. INDIA.

# ஆசிரியர் உரை

ஆண்டு முடியப்போகிறது. செய்ய வேண்டிய வேலையோ ஏராளமாக பாக்கியிருக்கிறது. அழிந்து போகிற ஆத்துமாக்களுக்கு கணக்கில்லை. விலையேறப் பெற்ற ஒவ்வொரு ஆத்துமாவின் விலைமதிப்பு முழு உலகத்தையும் விட அதிகம் (மாற் 8:36). அவர்களுடைய இரட்சிப்புக்காக நாம் செய்தது என்ன? மார்க்கம் தப்பி அலைகிற நட்சத்திரங்களாக அலைகிற மக்களுக்கு நாம் செய்த சேவை எச்சரிப்பு என்ன? நித்தியமான மோட்சம், நரகம் உண்டு என்பதை நாம் நிச்சயமாக நம்பினால் அழிவுக்குட்படப்போகிற மக்களை எச்சரிக்காமல் இருக்கமாட்டோம். நம்முடைய வாழ்க்கை ஒரு கலங்கரை விளக்காக இருக்கட்டும். வருகிற ஆண்டு ஆரம்பத்திலிருந்தே இறைவன் இயேசுவைப் பற்றி சாட்சி கொடுப்போமாக, அறிக்கை செய்வோமாக, சாட்சியாய் நிற்போமாக, தியாகம் செய்வோமாக. இவ்வுலக வேஷம் கடந்து போகிறது. நாம் இயேசுவுக்காக எதைச் செய்திருப்போமோ அது நிலைக்கும். மிகுதியான பலனைக் கொண்டுவரும். புத்தாண்டில் புது உற்சாகத்துடன் ஆரம்பிப்போம், செயல்படுவோம், பலனையும் எதிர்பார்ப்போமாக. நம்முடைய தேவனாகிய கர்த்தர் நம்மை சந்தித்து ஆசீர்வதிப்பார். பழைய கணக்கை வேகமாய் முடித்துவிட்டு புத்தாண்டை புது உற்சாகத்துடன் ஆரம்பியுங்கள்.

இயேசுகிறிஸ்து உங்களை ஆசீர்வதிப்பாராக

கிறிஸ்துவுக்குள்,

CHIEF PASTOR N. LAZAR

(தொடர்ச்சி)

# பாவ மன்னிப்பு

"இவர்கள் தங்களுக்குத் தெரியாதவை களைத் தூஷிக்கிறார்கள்; புத்தியில்லாத மிருகங்களைப்போல சுபாவப்படி தங்களுக்குத் தெரிந்திருக்கிறவைகளாலே தங்களைக் கெடுத்துக் கொள்ளுகிறார்கள்" (யூதா 10) என்ற வேத வாக்கியத்தின்படி அநேகர் ஒருவருக்கு ஒருவர் விரோதமாக கோள் சொல்லுகிறதும் தூஷிக்கிறதும் பொய்சொல்கிறதுமாகிய பாவத்தை செய்து அவதூறு பண்ணித்திரிந்த போதிலும் (சங் 50:19-22) ஒருவருக்கு விரோதமாய்ப் பேசுவதும், அவதூறு செய்வதும் ஒருவருடைய மதிப்பைக் கெடுக்கும்படி கோள் குண்டணி செய்தாலோ, இப்படி செய்து அது சம்பந்தபட்டவருக்கு தெரிந்து மனத்தாங்கல் உண்டானாலோ தெரியாவிட்டாலும் சம்பந்தபட்டவரிடம் போய்மன்னிப்புக் கேட்டு ஒப்புரவாகாமலும் (மத் 5:23-25) தான் யார் யாரிடம் துர்ச்சாட்சி பரப்பினதுண்டோ அவர்களிடமும் போய் தாங்கள் செய்தது தவறு என்று மன்னிப்பு கேட்காமல் சரி செய்யாமல் தாங்கள் தெரிந்த சத்தியத்தைக் கூட கைக் கொள்ளாமல் தங்களுக்குத் தெரியாத பாவ மன்னிப்பின் உபதேசத்தை தூஷித்து வருகிறார்கள். இவர்கள் எல்லாரும் மேற்கண்ட வசனத்தின் படியான (யூதா 10) தூஷணைக் காரர்களாகும். இவர்கள் முதலாவது தங்களுக்குத் தெரிந்த சத்தியமாகிய "யாருக்கு விரோதமாய்க் குற்றம் செய்தார்களோ அவர்களிடம் போய் மன்னிப்பு கேட்டு ஒப்புரவாகட்டும்." அப்படிச்செய்யாமல் கடவுளிடம் போய் மன்னிப்புக் கேட்டால் எப்படி பாவமன்னிப்பு உண்டாகும்? கர்த்தர் மன்னியார்.

பாவமன்னிப்பு,ஒருவன் ஞானஸ்நானம் பெற்று திருச்சபையில் சேருமுன் நடை பெறும் காடு வெட்டி வேலையாகும். ஒருவன் திருச்சபை அங்கமாக சேர்ந்தபின் பாவம் செய்யவோ பாவ மன்னிப்பு பெறவோ இடமில்லை என்று போதிக்கும் மிஞ்சின நீதிமான்களைக் குறித்து தேவ ஜனங்கள் எச்சரிக்கையாய் இருக்கவேண்டும். இவர்கள்போதிப்பது கிறிஸ்தவமார்க்கமில்லை; முகமதியமார்க்கத்தில்தான். ஒருவன் தான் பாவி என்று உணர்ந்து ஒரு தடவை பாவ அறிக்கை செய்து விட்டுவிட வேண்டும். பின்பு பாவம் செய்யவோ, பாவ அறிக்கை செய்யவோ, மன்னிப்பு கேட்கவோ முடியாது என்று கூறுகிறது.

ஆனால் சத்திய வேதம் என்ன சொல்லுகிறது என்றால் "முழுகினவன் கால்களை மாத்திரம் கழுவ வேண்டும்" (யோவா 13:10). நாம் இரட்சிக்கப்பட்டு பாவ மன்னிப்பு பெற்று திருச்சபை அங்கமான பின்பும் இந்த உலக வாழ்க்கையின் ஜீவியத்தில் பஞ்சமா பாதகங்கள் உண்டாகாவிட்டாலும் நம்முடைய நடக்கையில், குணத்தில், கோபங்கள், தாபங்கள், பொய் புரட்டுகள், மனம் பதறி பேசல், இழிவான இச்சைகள், கீழ்ப்படியாமைகள் காணப்படலாம். உடனுக்குடன் அப்பாவங்களை வெறுத்தொதுக்கி சபையின் மத்தியிலோ, தேவ ஊழியர் (அதிகாரம் பெற்றவர்கள்) முன்னிலையிலோ பாவ அறிக்கை செய்து ஜெபித்து மன்னிப்பு பெற்று அப்பாவங்களை விட்டு விட வேண்டும்.

இயேசுவின் இரத்தத்தை விசுவாசத்துடன் உபயோகித்து சுத்திகரித்துக் கொண்டு திருப்பந்தியில் பங்கு பெற்று தேவ ஐக்யத்தை நாட வேண்டும் (I யோவா 1:9;7; I கொரி 11:23-26). இதுவே பாவத்திலிருந்து விடுதலையாவதற்கு, சுத்திகரிக்கப் படுவதற்கு வழி. இல்லேயெனில் தேவன் ஊழியர்கள் மூலம் கொடுக்கும் ஆலோசனைகளை, பரிகாரங்களைக் கைக் கொள்ள வேண்டும். நீ கடவுளிடம் பாவ அறிக்கை செய்தால் கடவுள் உனக்கு ஆலோசனை கொடுக்கவோ எதை எப்படி சரி செய்ய வேண்டும் என்று கூறவோ மாட்டார். ஏனெனில் உன்னை மேய்க்கும் பொறுப்பைக் கர்த்தர் மேய்ப்பனிடம் ஒப்படைத்துள்ளார் (ஆளுகை) (யோவா 21:15-17; எபி 13:7,17) போலி மேய்ப்பர்களைப் பின்பற்றி போகிறவர்களுக்கு ஐயோ! கர்த்தரே மெய்யான பிரதான மேய்ப்பராயிருந்த போதிலும் அவருக்குக் கீழான மேய்ப்பர்களை நியமித்துள்ளார் (எபி

13:20; I பேது 5:4; I தீமோ 5:17; Iதெச 2:15, 13). அவர் பிரதான ஆசாரியராயிருக்கிறார். அவருக்குக்கீழ் ஆசாரியர்கள் உண்டு (எபி 3:1, 5:1, 4). அவர்கள் மூலமாய்க் கர்த்தர் தம் மந்தையை மேய்க்கிறார், நடத்துகிறார், போதிக்கிறார்.

என் நாமம் தரிக்கப்பட்ட என் ஜனங்கள் தங்களைத் தாழ்த்தி ஜெபம் பண்ணி என் முகத்தைத் தேடி தங்கள் பொல்லாத வழிகளை விட்டுத் திரும்பினால் அப்பொழுது பரலோகத்தில் இருக்கிற நான் கேட்டு அவர்கள் பாவத்தை மன்னித்து அவர்கள் தேசத்துக்கு சேமத்தைக் கொடுப்பேன் (IIநாளா 7:14) என்ற பழைய ஏற்பாட்டு வசனத்தின்படி கிறிஸ்தவர்களில் பெரும் பகுதியினர் தேவனிடத்தில் அறிக்கை செய்து ஜெபம் பண்ணி வருகிறார்கள். ஆனாலும் பாவமன்னிப்போ, பாவத்திலிருந்து விடுதலையோ அவர்களுக்கு கிடைக்கவில்லை. அதனால் இன்னொரு வழியை பரிசுத்தாவியானவர் போதிக்கிறார். "தன் பாவங்களை மறைக்கிறவன் வாழ்வடைய மாட்டான். அவைகளை அறிக்கை செய்து விட்டு விடுகிறவனோ இரக்கம் பெறுவான்" (நீதி 28:13).

"நம்முடைய பாவங்களை நாம் அறிக்கையிட்டால் பாவங்களை நமக்கு மன்னித்து எல்லா அநியாயத்தையும் நீக்கி நம்மை சுத்திகரிப்பதற்கு அவர் உண்மையும் நீதியுமுள்ளவராய் இருக்கிறார்" (I யோவா 1:9) என்ற வசனத்தின்படி தேவ ஜனங்கள் தங்கள் பாவங்களை தேவ சந்நிதானத்தில் சபையில் எழுந்து நின்று அறிக்கை செய்தோ (அப் 19:18) அல்லது சபையில் மூப்பர்களுக்கு முன்னாலோ (யாக் 5:13-16) அறிக்கை செய்து பாவ மன்னிப்பையும், சுத்திகரத்தையும், விடுதலையையும் பெற்றுக் கொள்ளலாம். தங்கள் பாரம்பரிய போதனைகளால் விடுதலை பெறாதவர்கள் இந்த சத்தியத்தினால் விடுதலையாகி பரிசுத்தமடையலாம்.

பரிசுத்தமடைகிறவர்கள் இன்னும் பரிசுத்தமடையட்டும். அசுத்தமாயிருக்கிறவர்கள் இன்னும் அசுத்தமாயிருக்கட்டும். இதோ கர்த்தர் வருகிறார் (வெளி 22:11,12). நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந்த அன்று சீஷர்களுக்குத் தரிசனமாகி கொடுத்த அதிகாரமும், கட்டளையும் பாவ மன்னிப்பாகும் (யோவா 20:19-23) தங்களிடத்தில் பாவ அறிக்கை செய்கிற மக்களுடைய பாவங்களை இயேசுவின் நாமத்தினால் மன்னிக்க மெய்யான அப்போஸ்தலர்களுக்கு, திருச்சபைக்கு அதிகாரம் உண்டு. இது கட்டவும், கட்டவிழ்க்கவும் கொடுக்கப்பட்ட அதிகாரமாகும் (மத் 16:18; 19:15).

(தொடரும்...)

...இவர்கள் தங்கள் அங்கிகளை ஆட்டுக்குட்டியானவருடைய இரத்தத்திலே தோய்த்து வெளுத்தவர்கள் (வெளி 7:14).

## பரிசுத்த விவாகம்

| மணமகன் | மணமகள் | மணநாள் | இடம் |
|---|---|---|---|
| 1. ஞான செல்வம் | ஞானக்கனி கிரேசு | 20-3-87 | வள்ளியூர் |
| 2. ஜேக்கப் | விமலா | 12-11-87 | ஒச்சவிளை |

# ஆதியாகமத்தைப் பற்றி ஓர் ஆராய்ச்சி

## தேவனுடைய ஓய்வு (ஆதி2:2)

(தொடர்ச்சி)

தேவனுடைய ஓய்வு நாள். அதை மனிதனுடைய ஓய்வு நாள் என்று சொல்ல முடியாது. ஏனென்றால் ஆதாம் 6-ம் நாள் சிருஷ்டிக்கப்பட்டான். அவன் ஒரேயொரு நாள் தான் ஜீவ ஜந்துக்களுக்கு பெயரிடும் வேலையைச் செய்தான் (ஆதி 1:24-31: 2:7, 19-25) தேவன் ஏழாம் நாள் ஓய்ந்திருந்து 2513 ஆண்டுகள் வரை மனிதனுக்கு ஓய்வுநாள் இருந்ததாக குறிப்புகள் எதுவும் இல்லை. மனிதனுக்கு முதலாம் ஓய்வு நாள் யாத் 16:23-29ல் குறிப்பிடப்படுகிறது. அந்த ஓய்வு நாள் இஸ்ரவேல் மக்களுக்காக மாத்திரம். தேவனுக்கும், அவர்களுக்கும் நடுவில் ஒரு அடையாளமாய் இருந்தது (யாத் 31:12-18, எசே 20:12-24) இஸ்ரவேலர் எகிப்திலிருந்து விடுதலை ஆக்கப்பட்டதற்காக ஞாபகார்த்தமாகக் கொண்டாடப்பட்டது. தேவனுடைய ஓய்வு நாளாகிய 2,513 ஆண்டுகளுக்கு முன் உள்ளதை ஞாபகப் படுத்துவதற்கு இல்லை (உபா 5:15)

SHEBII-ஏழாவது (ஆதி 2:2) :-எபிரேய பாஷையில் (Shebii) என்றால் 'ஏழாவது' என்ற அர்த்தம் சிருஷ்டிப்பின் மறுவாரத்தில் தேவன் இந்த நாளில் வேலை செய்யாமல் தாம் இவைகளை சிருஷ்டித்து முடித்த பின்பு, (சோர்வினால் அல்ல) அவர் தம்முடைய வேலையை நிறைவேற்றின பிறகு புசித்தார் (ஆதி 2:2,3; யாத்31:17) அப்படியே மனிதர்களும் 6ம் நாள் வரை வேலை செய்த பின்பு ஏழாம் நாளில் ஓய்ந்திருந்து புசிக்கும்படி, கட்டளைகொடுக்கப் பட்டது (யாத் 20:8-11;23:12;34:21). இது நித்திய இளைப்பாறுதலின் ஒரு சாதாரண நிழல் அல்லது தற்காலிகமான படமாய் இருந்தது (கொலோ 2:14-17; எபி 4:1-11).

தேவனுடைய ஓய்வு, (ஆதி 2:3) :-ஓய்ந்திருந்தார் தேவன் அந்த ஒரு நாள் மாத்திரமேயன்றி ஒவ்வொரு 7-ம் நாளும் ஓய்ந்திருக்கவில்லை. அன்றைய தினத்திலிருந்து இதுவரை ஓய்ந்திருக்கவில்லை. மனிதன் பாவம் செய்ததினிமித்தம் அவர் வேலை செய்ய நேரிட்டது. அதுவும் வாரத்தில் 6 நாள் மாத்திரமல்ல. விடுதலையின் நிகழ்ச்சி, வாரத்தின் ஏழுநாள் வரை வேலை நடந்து கொண்டிருந்தது. அதினிமித்தம் நீண்ட நாட்களாய் ஏழாவது நாள் தேவனுடைய ஓய்வு நாளாய் அநுசரிக்கப்படவில்லை. மேலும் மனிதன் இங்கும், எங்கும் ஓய்வு எடுப்பதற்கு கட்டளை கொடுக்கப்பட்டதாக ஆதியாகமத்தில் பார்க்க முடிவதில்லை. அவன் எல்லா ஏழாம் நாளும் ஓய்ந்திருந்தான் என்கிற குறிப்பும் இல்லை. ஒரு மனிதனுக்கும் ஏழாம் நாளிலே ஓய்ந்திருக்கும்படி 2513 ஆண்டுகள் வரையிலும் கட்டளை கொடுக்கப்படவில்லை. ஓய்வு நாட்களைக் குறித்து 22 குறிப்புகள்:

1. ஓய்வு மற்றும் ஏழாவது என்கிற வார்த்தைகள் ஒரே ஆரம்ப வார்த்தையிலிருந்து உண்டாகவில்லை. ஏனென்றால் ஓய்வு (Sabbath) என்றால் வேலையிலிருந்து நின்று விடுவது என்று அர்த்தமாகும். இளைப்பாறுதல், உழைப்பிலிருந்து நின்று விடுதல், ஓய்வெடுப்பது என்றும் அர்த்தம் கொள்ளலாம். இந்த விதமான ஓய்வு ஏழாம் நாளில் தான் இருக்க வேண்டும் என்று கட்டாயமில்லை.

2. ஓய்வு நாட்கள் வெவ்வேறு தினங்களில் வெவ்வேறு கால அளவில் காணப்படும்.
   a) வெவ்வேறு தினங்களில் ஓய்வு நாட்கள்
   1) முதலாம் நாளில் (லேவி 23:39)
   2) ஏழாம் நாளில் (யாத் 20:8-11)
   3) எட்டாம் நாளில் (லேவி 23:39,40)

   b) வெவ்வேறு காலங்களில், வெவ்வேறு கால அளவில் ஓய்வு நாட்கள்:
   1.) ஒரு நாள் முழுவதும் (யாத் 16:23-29)
   2) இரண்டு நாட்கள் முழுவதும் (லேவி 23:6-8;15:22)

3) ஒரு வருடம் முழுவதும் (லேவி 25:4)
4) எழுபது வருடங்கள் முழுவதும் (IIநாளா 36:21)
5) என்றென்றைக்கும் (எபி 4:9.)

3 இஸ்ரவேலரின் ஏழாம் நாள் ஓய்வு, மாறுகின்ற ஓய்வு நாளைய் ஒவ்வொரு வருடமும் இரண்டு வெவ்வேறு நாட்களில் காணப்பட்டது. எனென்றும் கூடுதலாய் ஒரு ஓய்வு நாள் பெந்தேகொஸ்தே தினத்தில் ஆசரிக்கப்பட்டது. பொதுவாக நாம் ஆபிப் மாதம் 15ம் நாள் (இஸ்ரவேலர் எகிப்தை விட்டு புறப்பட்ட நாள்) ஓய்வு நாளில் சனிக்கிழமையன்று ஏழு வாரங்கள் அல்லது 49 நாட்கள் காணப்படும். ஐம்பதாம் நாள் அதாவது ஞாயிற்றுக் கிழமை பெந்தேகொஸ்தே நாளாய் இருந்திருக்கும். மறுபடியும் பெந்தேகொஸ்தே நாளுக்குப் பின் ஏழாம் நாள் ஓய்வு ஞாயிற்றுக்கிழமைகளில் வரும். மேலும் ஓய்வு நாள் அதே வருடத்தில் பெந்தேகொஸ்தே தினத்திலிருந்து ஏழாவது நாளை மறுபடியும் மாற்றும். இந்த வேலை அது மறு பெந்தேகொஸ்துவரை திங்கட்கிழமைகளில் வரும். அந்த பெந்தேகொஸ்தே 50 நாட்களுக்குப்பின் குறிப்பிட்டபடி ஆபிப் மாதத்தின் முதல் 15 புது வருடத்தில் 65-ம் நாளில் வரும். அந்தப்படியே இதைப் போல் ஓய்வு நாள்வருடத்தில் சனிக்கிழமைகளில் நிரந்தரமாகக் காணப்பட்டிருக்காது. மாறி மாறி வரும்.

4. ஓய்வு நாட்கள் கனமானப் பார்க்கிலும், மன மகிழ்ச்சியின் நாளாய் இருக்கிறது. பின்னும் நியாயப் பிரமாணத்தின் படியும் இயற்கையின் உண்மையின் படியும் இளைப்பாறுதலுடன் தொழுது கொள்ளப்படவேண்டும். (ஏசா 58:13)

5. ஓய்வு நாட்கள் இஸ்ரவேலருக்கு மாத்திரமே இருந்தது (யாத் 16:29; 31:14; எசே 20:12) அந்நியன் ஒருவன் அவர்களிடத்தில் தங்கி இஸ்ரவேலனாக விரும்பினால், அவன் செய்ய வேண்டிய காரியங்கள் விருத்தசேதனம்செய்து விட்டு பஸ்காவையும், ஓய்வு நாளையும் அநுசரிக்கலாம் (யாத் 12:48,49; எண் 15:16)

6. ஓய்வு நாட்கள் பரிசுத்தமாக ஆசரிக்கப் படவேண்டும் (யாத் 16:23; 20:8,35:2 ஏசா 58:12)

7. ஓய்வு நாட்கள் தேவனுக்கென்று ஆசரிக்கப்பட வேண்டும்(யாத் 16:26)

8. ஓய்வு நாட்கள் கர்த்தருடையது அல்லது அவைகள் கர்த்தருடைய ஓய்வு நாள் (யாத் 20:10, 35:2; லேவி 23:3; உபா 5:14).

9. அவைகள் ஆசரிக்கப்பட வேண்டும் (யாத் 31:14).

10. ஓய்வு நாட்களில் எந்தவித காரியமும் செய்யப்படலாகாது (யாத் 20:8-11, 31:15, 35:13; எண் 15:32). இந்தக் கற்பனையைக் கைக் கொள்ளாதவர் கொலை செய்யப்பட வேண்டும் (எண் 15:30-36).

11. ஓய்வு நாட்கள் ஓய்ந்திருக்கும் நேரமாய் ஆசரிக்கப்பட வேண்டும் (யாத் 35:2; லேவி 16:31, 23:3 & 32).

12. அதை இஸ்ரவேலர் பரிசுத்தப்படுத்த வேண்டும் (உபா 5:12).

13. ஓய்வு நாட்கள் கட்டளையிடப்பட்டது (யாத் 20:8-11; உபா 5:15)

14. இஸ்ரவேலருக்கு ஏழாம் நாள் ஓய்வு தேவன் தம்முடைய வேலையிலிருந்து ஓய்ந்திருந்ததற்கு ஞாபகார்த்தமாய் இல்லாது இஸ்ரவேலர்கள் பார்வோனின் அடிமைத்தனத்திலிருந்து விடுதலை படுத்தியதின் நினைவாக இருக்கிறது. (உபா 5:15). நம்பத் தகுந்த காரியம் என்னவென்றால் மனிதனுடைய ஓய்வு தேவன் ஓய்ந்திருந்த அதே நாளாய் இருக்க முடியாது என்னவெனில் மனிதன் தேவன் ஓய்ந்திருந்த முந்தின நாளில் சிருஷ்டிக்கப்பட்டான். அவன் ஒரு நாளுக்கு மேல் வேலை செய்திருக்க முடியாது. மேலும் ஓய்வு நாளுக்கு 6 நாட்

கள் வேலை செய்வது அவசியமாயிருந்தது. (யாத் 20:8-11). அது ஒரு விடுதலையின் நினைவு நாளாய் இருந்தபடியால் சபை இந்த பழைய யூத ஓய்வு நாளை ஞாபகப்படுத்த அர்த்தமற்றதாக இருக்கும். அது பார்வோனிடத்திலிருந்து விடுதலை பெற்ற நாளே. இங்கிலாந்தின் அடிமைதனத்திலிருந்து அமெரிக்காக்கு சுதந்திரம், 4வது ஜுலையில் கிடைத்தது, இந்தியர்களுக்கு ஆகஸ்டு 15-ம் தேதியில் விடுதலை கிடைத்ததை ஞாபகப்படுத்துவதுபோல் இருக்கும்.

15. ஓய்வு நாட்கள் ஆயிரவருஷத்திலும், புதிய பூமியிலேயும் ஆசரிக்கப்பட வேண்டும். இவ்வாறு மாம்சமான யாவரும் தேவனுக்கு முன்பாக வந்து தொழுது கொள்வார்கள் (ஏசா 66:22-24, எசே 44:24, 45:17; 46:3) வரப்போகிற காலத்தில் குறிப்பிட்ட நாளில் ஆசரிக்க வேண்டுமென்று வேதாகமம் வெளிப்படுத்துவதில்லை. எந்த நாள் இருந்தாலும் அந்த நாளை ஒதுக்கி வைத்து அதைப் பூமி முழுவதும் வெவ்வேறு நேரத்தில் ஆசரிக்கப்படும் (உலகம் முழுவதும் இந்த ஆசரிப்பு தேவைப்பட்டால்). பூமியைச் சுற்றிலும் இரண்டு நாள் வித்தியாசம் வருகிறது. வருகிற ஓய்வு நாட்கள் பூமியில் ஒரே பகுதியில் ஒரே சமயத்தில் ஆசரிக்கப்பட எருசலேமிற்கு மனிதர்கள் பிரதிநிதிகளை அனுப்ப வேண்டியதிருக்கும். இந்த உலகக் கூட்டம் தொழுது கொள்வதை சகரியா 14:16-21ல் குறிப்பிடப்பட்டுள்ளது.

16. ஓய்வு நாட்களில் நன்மை செய்வது நியாயம் தான். (மத் 12:2,12; மாற் 2:27,28, 3:4; லூக் 6:9)

17. மனிதன் ஓய்வு நாளுக்கு பிரபுவாய் இருக்கிறான். அவைகள் மனிதன் மேல் அதிகாரம் செலுத்துவதற்கென்று அல்ல, மனிதன் அவைகளுக்கென்று படைக்கப்படவில்லை, ஆனால் அவைகள் மனிதனுக்கு என்று படைக்கப்பட்டது (மத் 12:8, மாற் 2:27,28 லூக்கா 6:5) அதினிமித்தம் மனிதன் எதையும் எப்பொழுதும் அவனுக்கு நலமாய்த் தோன்றுகிறதை மற்ற மனிதர்களிடத்தில் எந்த நாட்களிலும் செய்ய விடுதலையாயிருக்கிறான்.

18. தேவன் ஓய்ந்திருந்து பரிசுத்தமாக்கப்பட்ட ஏழாவது நாளை மனிதனுடைய ஆரம்ப காலத்தில் அந்த நாளை ஆசரிக்க தேவைப்படவில்லை. தேவன் இளைப்பாறுதலின் நாளை. தொடர்ந்து ஆசரிக்கவில்லை. காரணம் மனிதன் தீயசெய்து பாவம் செய்தான். ஆனபடியினால் தேவன் இரட்சிப்பின் வேலையை ஆரம்பித்தார் (ஆதி 3:8-21). இதனால் தேவன் வாரத்தின் எல்லா நாட்களிலும் வேலை செய்ய நேரிட்டது. பாவிகள் எந்த வேளையிலும் இரட்சிக்கப்பட்டு தேவனை கண்டு கொண்டு அவரிடத்தில் வரலாம். 2513 வருடங்களுக்குப் பிறகு தேவனுடைய ஏழாம் நாள் ஓய்வை ஒரு குறிப்பிட்ட நாளை இஸ்ரவேலர் ஆசரிக்க கட்டளையிடப்பட்டது. இளைப்பாறுதலின் உதாரணமாக இருந்தது (யாத் 16:23-29, 20:8-11).

19. யூதர்கள் நல்ல காரியங்களையும், தேவையான வேலைகளையும் ஓய்வு நாளில் செய்து நிரூபித்தார்கள். அது எப்படி என்றால் :-

a. பலிகளை செலுத்துதல் (எண் 28:9,10; 1 நாளா 9:32)
b. மிருகங்களின் ஜீவனைக் காப்பது (மத் 12:11; மாற் 2:27 28,3:4).
c. பிள்ளைகளை விருத்தசேதனம் பண்ணுதல் (யோவா 7:22,23).
d. மற்ற தேவையான வேலைகளை செய்வது (மத் 12:5)

20. ஓய்வு நாட்கள் நித்திய இளைப்பாறுதலுக்கு உதாரணமாக இருக்கிறது (கொலோ 2:14-17; எபி 4:1-11, 10:1)

21. மோசேயின் நியாய பிரமாணத்துடன் எல்லா யூதர்களின் ஓய்வு நாட்களும் ரத்துச் செய்யப்பட்டது.

22. நியாயப் பிரமாணமும், ஓய்வு நாளும் அப்போஸ்தலர்கள் கைக்கொள்ள வேண்டியதில்லை (ரோம 14:5,6; கலா 4:9-11; அப் 15: 5-29; கொலே 2:14-17).

---

... அறிவு உன் ஆத்துமாவுக்கு இன்பமாயிருக்கும். — நீதி 2:10

# இறைவனாகிய இயேசுகிறிஸ்து

இந்த பொல்லாத உலகத்திலே, பொய்யையும், திருட்டையும் முதலீடாய்க்கொண்டு வியாபாரம் செய்து அநியாயமாய் பொருளீட்டுகிற தீய மனிதர்களை நாம் எங்கும் காணமுடிகிறது. இவர்கள் செய்யும் தந்திரங்களில் ஒன்று, மார்க்கெட்டில் மக்களால் அதிகமாய் விரும்பி வாங்கப்படுகிற தரமான பொருள் எது என்று கவனிக்கின்றனர். உடனே அதேப் போல் போலியானதை இவர்களே செய்து வர்ணம் பூசி, வெளித்தோற்றத்தில் அசலும் போலியும் ஒன்றாக இருக்குமாப் போல் பெயரையும், அடையாளங்களையும் பொறித்து குறைந்த விலையில் வியாபார ஸ்தலத்திற்குள் புகுத்திவிடுகிறார்கள். ஜனங்களும் ஏமாந்து போய் வாங்கிவிடுகிறார்கள் 'கெட்டிக்காரன் புளுகு எட்டு நாளைக்குத்தான்' என்ற பழமொழிப்படி கொஞ்சநாளில் அதின் வேஷம் கலைகிறது. இப்படி ஏமாற்றமடைந்த மக்கள் உண்மையான பொருளையும் வாங்கப் பயப்படுகிறார்கள். இப்படிப்பட்ட தந்திரத்தையே சாத்தானும்ஆதி முதலாய் கையாண்டு வருகிறான்.

இறைவன் (மேசியா) யூத சமுதாயத்தில் வருவார் என்பதை அறிந்து, இயேசுவானவர் வருமுன்னே, தெயுதாஸ் என்பவனை எழுப்பி விட்டான். அவன் தன்னை பெரியவனாகப் பாராட்டினான், அவனை நானூறு பேர்கள் பின்பற்றினார்கள். அவன் மடிந்தான் அவனோடே இருந்தவர்கள்சிதறிப் போனார்கள். அதற்குப் பின்பு கலிலேயனாகிய யூதாஸ் என்பவனை சாத்தான் எழுப்பிவிட்டான். அவனை அநேகர் பின்பற்றினார்கள். அவனும் அழிந்தான். அவனைச்சேர்ந்தவர்கள் சிதறடிக்கப்பட்டார்கள் (அப் 5:36,37). சாத்தான் இப்படி செய்த தன் நோக்கம்: இயேசுவானவரையும் அப்படிப் பட்ட போலி என எண்ணி அவரை மக்கள் தள்ளி விடும் படியாகவே. மேலும் இயேசுவானவர் முழு உலகுக்கும் இரட்சகராக, இறைவனாக அறியப்படுவார் என்பதை அவன் அறிந்து உலகமுழுவதிலும் அநேக மதத்தலைவர்களை எழுப்பி விட்டு பல மதங்கள் உலகில் உருவாகச் செய்தான், காரணம் யாதெனில், கிறிஸ்தவ மார்க்கமும் அவைகளில் ஒன்று என எண்ணி அதற்கு முக்கியத்துவம் கொடுக்காமல் போகும் படிக்கே.

இன்றைக்கு உலகில் அநேகர் இயேசுவை ஒரு மதத் தலைவராகவும், சிலர் தீர்க்கதரிசியாகவும், சிலர் சாதாரணமனிதராகவும் மதிக்கின்றனர். அவர் இறைவன் என்பதை நிரூபிக்கும் சில காரியங்களை இங்கே காணலாம்.

இறைவனுடைய எல்லா சிருஷ்டிகளிலும்மேலான தன்மையுடையவன்மனிதனே. மனிதனே விசேஷித்தவன். மனிதனே சகல மிருகங்களையும், பறவைகளையும், ஆறுகளையும் காற்றையும் கட்டுப்படுத்தும் ஆற்றல் உடையவன். இப்பேர்பட்ட மனித ஆன்மத்துவத்திற்கும், வல்லமைக்கும் மேற்பட்ட ஒருவர் உண்டானால் அவர் இறைவனே. கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை நோக்கிப் பாருங்கள்:

1. மனிதன் (குழந்தை) ஒருவன் இந்த பூமியில் பிறக்கவேண்டுமானால் ஒரு ஆணும், ஒரு பெண்ணும் தேவை. இருவருடைய சேர்க்கையாலே குழந்தை உருவாகி பிறக்கிறது. இது மனித பிறப்பின் இயற்கை. ஆனால் இயேசுவினுடைய பிறப்போ மனிதப் பிறப்பின் இயற்கைக்கு அப்பாற்பட்டு, ஒரு கன்னிகை கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப் பெறுவாள் என்று பல நூறு ஆண்டுகளுக்கு முன் உரைக்கப்பட்ட தீர்க்கதரிசனப்படி மரியாள் என்ற கன்னிகை யோசேப்பு என்ற புருஷனுக்கு நியமிக்கப்பட்டிருக்கையில், அவர்கள் கூடி வருமுன்னே, இந்த கன்னிகையின் மேல் பரிசுத்த ஆவி நிழலிட்டதால், அவள் கர்ப்பம் தரித்து ஒரு குமாரனைப் பெற்றாள். அவரே இயேசுவானவர் (மத் 1:18-23).

2. இந்த உலகில் தோன்றிய மற்ற மதக் கர்த்தாக்களுடைய வாழ்க்கைக் குறிப்பை நோக்குகையில், அவர்கள் சாதாரண மனிதர்களாக இருந்து, அறிவு வந்த

பின்பு தெய்வத்தினுடைய அருள் பெற்றுக் கொண்டதாகவும், அல்லது ஞானோதயம் வந்ததாகவும், அல்லது இன்னொருவர் மூலம் கற்றவர்களாக இருக்கிறார்கள் என்றும் அவர்களுடைய வாழ்க்கை சரித்திரம் அறிவிக்கிறது. ஆனால் இயேசுகிறிஸ்துவைப் பற்றி, அவர் பிறப்பதற்கு முன்னமே, தேவ தூதன் "அவர் தமது ஜனங்களின் பாவங்களை நீக்கி அவர்களை இரட்சிப்பாராகையால் அவருக்கு இயேசு என்று பெயரிட வேண்டும்" என்று முன்னறிவித்தான் (மத் 1:21). இப்படி அவர் ஒரு குறிப்பிட்ட நோக்கத்தோடே பிறந்தார். அவர் சிறு பிராயம் முதற்கொண்டு தாம் இன்னார் என்பதை அறிந்தார் (லூக் 2:49; யோவா 13:1) வந்த காரியத்தை நிறைவேற்றி பின்பு, வந்த இடத்திற்கே சென்றார்.

3. அவர் சர்வ லோகத்தின் ஆண்டவர் என்பதற்கு அத்தாட்சியாக உலகத்தின் காலக் குறிப்புகள் அவருடைய காலத்திலிருந்தே கிறிஸ்துவுக்கு முன் (கி. மு.—BC) கிறிஸ்துவுக்குப் பின் (கி.பி.—A.D) என்று குறிக்கப்படுகிறது. இந்த உலகத்திலே எத்தனையோ சக்கரவர்த்திகள் தோன்றியிருந்த போதிலும், ஒருவரேனும் இந்த ஸ்தானத்தைப் பெற்றதில்லை.

4. தான் கடவுளின் அவதாரம் என்றும், கடவுளின் தூதன் என்றும், தான்தான் பிரம்மன் என்றும் தன்னைக் குறித்துச் சொல்லிக் கொண்டு மக்கள் பிரமிக்கத்தக்க அற்புத அடையாளங்கள் பல செய்திருக்கலாம். ஆனால் தான் பரிசுத்தர் என்று சொல்வதற்கு தகுதி பெற்றிருந்ததில்லை. தகாததை செய்து விட்டு சகலமும் அவன் செயல் என்று ஏமாற்றித் தப்பித்துக் கொள்ளப் பார்க்கிறார்கள். இயேசு சொன்னார்: என்னிடத்தில் பாவம் உண்டென்று உங்களில் யாராவது என்னைக் குற்றப்படுத்தக் கூடுமா? என்று சவால் விட்டார் (யோவா 8:46) அவரை யாரும் எந்தக்காரியத்திலும் குற்றம் பிடிக்கமுடியவில்லை. அவர் பாவமற்ற பரிசுத்தர் (யோ 8:46, I யோ 3:5).

5. இயேசுவானவர் இந்த உலகில் இருந்த நாட்களில் மனிதர்களுக்கு நன்மை செய்கிறவராய் எங்கும் சுற்றித் திரிந்தார். குருடர்களை அவர் சுகமாக்கினவுடன் பார்வையடைந்தார்கள். தாயின் கர்ப்பத்திலிருந்து முடமாய் பிறந்தவன் அவர் ஒரு வார்த்தை சொன்னவுடன் அவன் எழுந்து நடந்தான். அவர் வார்த்தையால் குஷ்டரோகிகள் சுகமானார்கள், பிசாசுகள் ஓடின. காற்றும் கடலும் அமைதலாயிற்று. அவரால் செய்ய முடியாதது எதுவுமே இருந்ததில்லை. அவர் சர்வவல்லமையுள்ளவராக இருந்தார். இந்நாட்களிலும் சாத்தானுடைய வல்லமையினால் சில காரியங்களை மந்திரவாதிகளும் கடவுளின் அவதாரம் என்று சொல்லிக் கொள்ளுகிறவர்களும் செய்ய முடியும். ஆனால் எல்லா காரியங்களையும் செய்ய இயலாது. ஒரு உண்மையான கிறிஸ்தவனை எந்த ஒரு மந்திரவாதியோ, மதகர்த்தாவோ தன்னுடைய வல்லமையால் கீழ்ப்படுத்த முடியாது. இறைவனாகிய இயேசு சர்வ வல்லமையுள்ளவராக இருக்கிறார்.

6. அவருடைய பெற்றோரென எண்ணப்பட்ட யோசேப்பும், மரியாளும் பரம ஏழைகளாய் இருந்தனர். தேவாலயத்தில் ஆடுகளை பலிசெலுத்த முடியாத ஏழைகளாய் புறாக்குஞ்சுகளை கொண்டு வந்து பலி செலுத்தினார்கள் (லேவி 12:8; லூக் 2:21-24). இயேசுவானவர் கல்லாதவராக இருந்தார் (மாற் 6:1-3). அவருடைய சகோதரர்கள்கூட ஏற்றுக் கொள்ளக்கூடாத வகையில் மனித ஆதரவற்றிருந்தார் (யோவா 7:3-5) இந்நிலையில் அவர் தமது உபதேசத்தைப் பேசினார். அவருடைய கிரியைகள் உலகெங்கும் பரவும் என முன்னறிவித்தார். அவர் சொன்னபடியே இயேசுவானவர் உலக முழுவதும் பிரசங்கிக்கப்பட்டு வருகிறார். இவருடைய மார்க்கம் எவராலும் கட்டுப்படுத்த இயலாமல் உலக முழுமையும் ஆட்கொண்டிருக்கிறது. இது வளர்ந்துகொண்டே போகிறது. வேறு எந்தமதமோ மனிதனுடைய கொள்கைகளோ வளர்ந்துகொண்டு போனது கிடையாது. அப்படியாவதுமில்லை. சத்தியமே நிலைக்கும். ஜீவனுள்ளதேவனும்.

7. எல்லாவற்றிற்கும் மேலாக இயேசுவானவர் மரித்தோரிலிருந்து உயிர்த்தெழுந்தார். மரித்த எந்த மனிதனும் திரும்ப உயிர்த்தெழுந்ததில்லை. இவர் மட்டுமே மரணத்தை ஜெயித்து, மனிதனின் இயற்கை தன்மைக்கு வேறுபட்டவராய் சாவாமை உள்ளவராய் இன்றும் ஜீவிக்கிறார்.

அவர் ஜீவிக்கிறார் என்பதற்கு நாங்கள் சாட்சிகள்.

இயேசு கிறிஸ்து இறைவன், மனிதனாய் வந்தார். இது இயேசு கிறிஸ்துவின் பிறப்பு பண்டிகையாயிருக்கிறது. இறைவனை விசுவாசியுங்கள் அவர் பெயர் இயேசு.

"...இவரே மெய்யான தேவனும் நித்திய ஜீவனுமாயிருக்கிறார்" I யோவான் 5:20.

# மோட்சவழி

தொடர்ச்சி)

## குரு - சிஷ்ய உரையாடல்

**சிஷ்யன் :** இன்னும் வெளிப்படுத்தல், கண்டுபிடிப்பு என்று புதிய புதிய உபதேசங்க உண்டாகலாமல்லவா ?

**குரு :** உண்டாகலாம். அவை சரிதானா இல்லையா என்று வேத வசன வெளிச்சத்திலேயே கண்டுணர வேண்டும். எந்த வெளிப்படுத்தல் யார் மூலமாக உண்டானாலும் சரி வேத வசனமாகிய உரை கல்லினால் உரசிப்பார்க்க வேண்டும். நிலைத்தால் சரி இல்லாவிட்டால் தள்ளிப் போடலாம்.

**சிஷ்யன் :** தவறான உபதேசங்கள் உண்டாவதற்கு காரணம் என்ன ?

**குரு :** சாத்தானே, உலகத்தில் எத்தனையோ ஆவிகளுண்டு அவைகள் தேவனால் உண்டானவைகளோ என்று பகுத்தறிய வேண்டும் (II பேது 2 : 1; I யோவான் 4 : 1). மேலும் அவர்களுடைய கிரியைகளினாலே அவர்களை அறிவீர்கள் என்று கர்த்தரும் சொல்லியிருக்கிறார் (மத் 7 : 15 – 20).

**சிஷ்யன் :** சிலர் சபை வேண்டாம். இயேசு கிறிஸ்துவை விசுவாசித்து உண்மையாய் நடந்தால் போதும் மோட்சம் போகலாம் என்கின்றனரே, அப்படிச் செய்யலாமா?

**குரு :** கூடாது, சபை கூடி வருதலை சிலர் விட்டு விடுகிறது போல நீங்களும் விட்டு விடாதிருங்கள் என்று வேதம் சொல்லுகிறது (எபி 10 : 25), சபை ஐக்கியம் மிக முக்கியம் மனிதன் பூரணப்பட சபை அவசியம். திருச்சபைதான் கர்த்தருடைய வசனத்தைப் பாதுகாக்கும். தேவ வசனத்தை நடைமுறைப் படுத்தும். பிரசித்தப்படுத்தும். சபையின்றேல் இரட்சிப்பு முழுமை அடையாது.

**சிஷ்யன் :** ஒரு சபை மெய்யான சபை என்று எப்படி அறிந்து கொள்ளலாம்.

**குரு :** அந்த சபை அப்போஸ்தலரால் எழுப்பப்பட்டிருக்கும் (அப் 2 : 37 - 47, I கொரி 3 : 10) கிறிஸ்துவுக்குள்ளான எல்லா உபதேசமும், அறிவும், கிருபையும், ஆவிக்குரிய எல்லா வரங்களும் நிரம்பியதாயிருக்கும் (I கொரி 1 : 5 – 7 ; 12 : 8 – 11). அப்போஸ்தலர் தீர்க்கதரிசி, மேய்ப்பர், போதகர், சுவிசேஷகர் என்ற ஐந்து வகை ஊழியர்களுடையதாயும் (எபேசி 4 : 11 - 13) ; தெய்வீக வெளிப் படுத்தல் உள்ளதாயும் இருக்கும் (I கொரி 14 : 22 – 25), அங்கே கர்த்தர் கிரியை செய்வார்.

**சிஷ்யன் :** அப்போ நான், இரட்சிப்பை ஏற்றுக்கொண்டு மெய்யான திருச்சபையில் அங்கமாகி நித்திய மோட்சமடைய இயேசு கிறிஸ்துவினுடைய வருகைக்கு ஆயத்தப் படுவேன்.

**குரு :** அப்படியே செய்க. இறைவன் உம்மை ஆசீர்வதிப்பார்.

"அது ஆச்சரியமல்ல, சாத்தானும்
ஒளியின் தூதனுடைய வேஷத்தைத்
தரித்துக் கொள்வானே." II கொரி 11 : 14

# வேதபாடம்

(தொடர்ச்சி)

யாத் 19 : 1, 2 : இஸ்ரவேல் ஜனங்கள் ரெவிதீமிலிருந்து புறப்பட்டு சீனாய் வந்து சேர்கிறார்கள்.

யாத் 19 : 3 - 6 : மோசேயின் உடன்படிக்கை, இதுவே முதலாம் உடன்படிக்கை யென்றும், பழைய ஏற்பாடு என்றும் பொதுவாகச் சொல்லப்படுகிறது. யாத் 19 : 3 முதல் 24 : 18 முடிய இந்த உடன்படிக்கை காணப்படுகிறது. இந்த உடன்படிக்கையில் 55 சட்டங்கள் உண்டு. மோசே உடன்படிக்கையின் முகவுரையை ஜனங்களுக்குச் சொல்லுகிறார்.

யாத் 19 : 7, 8 : ஜனங்கள் கர்த்தர் சொல்லுகிற வார்த்தைகளுக்கெல்லாம் கீழ்ப்படிந்து நடப்போம் என்று வாக்களிக்கிறார்கள்.

யாத் 19 : 9 – 15 : கர்த்தர் இஸ்ரவேல் ஜனங்களைச் சந்திக்க சில நிபந்தனைகளைக் கட்டளையிடுகிறார். ஜனங்கள் தங்களை சுத்திகரித்துக் கொண்டு ஆயத்தப்படுகிறார்கள்.

யாத் 19 : 16 – 19 : தேவனும், தேவ ஜனங்களும் சந்தித்துக் கொள்ளுதல்.

யாத் 19 : 20 – 25 : மோசே மலைக்குப் போய் மறுபடியும் இறங்கி வந்து ஜனங்களுக்கு ஆலோசனை கொடுத்து விட்டு மறுபடியும் மோசேயும், ஆரோனும் சீனாய் மலைக்கு ஏறிச் செல்கிறார்கள்.

யாத் 20 : 1 – 17 : பத்துக் கற்பனைகள் (உபா 5 : 6 – 21).

யாத் 20 : 1 - 3 : முதலாம் கற்பனை, போலித் தெய்வங்களுக்கு விரோதமானது. கர்த்தர் சொல்கிறார் "நானே தேவன் உன்னை எகிப்திலிருந்து விடுதலையாக்கினவர் நானே என்னையன்றி உனக்கு வேறே தேவர்கள் உண்டாயிருக்க வேண்டாம் (யாத் 20 : 22, 22 : 20, லேவி 19 : 4 ; உபா 5 : 7 ; 12 ; 30 ; 13 6, 13 : 17 : 3).

யாத் 20 : 4 - 6 : விக்கிரக ஆராதனைக்கு விரோதமானது (யாத் 22 : 20 ; 23 : 24 ; லேவி 26 : 1 ; உபா 5 : 8 ; 12 : 29 ; ஏசா 2 : 20 ; 40 : 18) மேலே வானத்திலும், கீழே பூமியிலும், பூமியின் கீழ் தண்ணீரிலும் உண்டாயிருக்கிறவைகளுக்கு ஒப்பான ஒரு சொரூபத்தையாகிலும், யாதொரு விக்கிரகத்தையாகிலும் நீ உனக்கு உண்டாக்க வேண்டாம். நீ அவைகளை நமஸ்கரிக்கவும் சேவிக்கவும் வேண்டாம்.

யாத் 20 : 7 : லேவி 18 : 21 ; 19 : 12 ; உபா 5 : 11 தேவனுடைய நாமத்தை வீணிலே வழங்காதிருப்பாயாக. தேவனுடைய நாமத்தை பரிசுத்த குலைச்சலாக்குகிறதும், தேவனுடைய நாமத்தைக்கொண்டு பொய்யாணையிடுகிறதையும் இந்தக் கற்பனை தடுக்கிறது.

யாத் 20 : 8 – 11 : ஓய்வு நாளை பரிசுத்தமாய் ஆசரிக்க ஞாபகப் படுத்துகிறார். இது யாத் 16-ஆம் அதிகாரம் 1-முதல் 30 முடிய தேவன் புதிதாக ஏற்படுத்திய ஓய்வு நாளுக்கடுத்த கட்டளையை நினைக்கும்படி கட்டளையிடுவதாகும். ஆதி 2-ம் அதிகாரம் 2, 3 வசனங்களில் 7-வது நாளை மனிதன் ஆசரிக்கும்படியாய் கட்டளையிடவில்லை. ஓய்வு நாள் கட்டளை இஸ்ரவேலருக்கு தேவன் புதிதாக கட்டளையிடுகிறார். ஓய்வு நாளை ஆசரிக்கும்படி நினைவு படுத்துகின்றார். ஆதியாகமம் முதல் மோசேயின் காலம் வரை ஓய்வு நாள் ஆசரிக்கப் பட்டதாக யாதொரு குறிப்பும் இல்லை. இஸ்ரவேலர் எகிப்திலிருந்து புறப்பட்ட (நாள் ஆபிப் மாதம் 15-ம் தேதி சனிக்கிழமை) நாளையே இஸ்ரவேல் ஆசரிக்கும்படியாக தேவன் கட்டளையிடுகிறார் (உபா 5 : 12 – 15).

யாத் 20 : 12 : பெற்றோர்களுக்கு விரோதமான செய்கையை மறுக்கும் கட்டளை. உன் தகப்பனையும், உன் தாயையும் கனம் பண்ணுவாயாக (யாத் 21 : 15, 17 ; லேவி 19 : 3 ; உபா 5 : 16).

யாத் 20 : 13 : கொலைக்கு எதிரான கட்டளை. கொலை செய்யாதிருப்பாயாக (ஆதி 9 : 6 ; யாத் 21 : 12 ; எண் 35 : 16, 30 ; உபா 5 : 17).

யாத் 20 : 14 : விபச்சாரம் செய்யாதிருப்பாயாக (யாத் 22 : 16 ; லேவி 18 : 20 ; உபா 5 : 18 ; 22 : 22).

யாத் 20 : 15 : களவு செய்யாதிருப்பாயாக (யாத் 22 : 1 ; லேவி 19 : 11 ; உபா 5 : 19).

யாத் 20 : 16 : பிறனுக்கு விரோதமாய் பொய்ச் சாட்சி சொல்லா திருப்பாயாக (யாத் 19 : 11 ; உபா 5 : 20 ; 19 : 15).

யாத் 20 : 17 : இச்சியாதிருப்பாயாக (யாத் 18 : 21 ; உபா 5 : 21).

யாத் 20 : 18 - 21 : கடவுளுடைய பிரசன்னம். ஜனங்கள் கண்டு பயந்தார்கள். மோசேயை நோக்கி தேவன் எங்களோடே பேச வேண்டாம். நீர் எங்களோடே பேசும் நாங்கள் கேட்போம் என்கிறார்கள். மோசே தேவன் இருந்த கார்மேகத்துக்குச் சமீபமாய்க் கிட்டிச் சேர்ந்தான்.

யாத் 20 : 22 - 26 : மத சம்பந்தமுள்ள இரண்டு கட்டளை. (1) தேவனுக்கு ஒப்பாக யாதொரு விக்கிரகத்தையும் செய்து வணங்கக் கூடாது. (2) மண்ணினாலே, வெட்டப்படாத கற்களினாலே பலிபீடம் கட்டி தேவனுக்கு ஆராதனை செய். படிகளினால் பலிபீடத்தின் மேல் ஏறிப் போகக் கூடாது என்பதே.

(தொடரும்)

"இப்படியிருக்க நியாயப் பிரமாணமானது
வரப்போகிற நன்மைகளின் பொருளாயிராமல்,
அவைகளின் நிழலாய் மாத்திரம் இருக்கிறது..." எபி 10 : 1

மாதர் பகுதி

# குடும்பம்

(அக்டோபர் மாத தொடர்ச்சி)

பொதுவாக உலகத்தில் ஒழுக்கம் குறைந்து கொண்டு வருகின்றது. இது மகா பெரிய ஆபத்தில் கொண்டு போய் விடும். ஒழுக்கமே உயர் பண்பாகும். உடல் தூய்மை, உடைத் தூய்மையை விட உளத் தூய்மையே மிக மிக அவசியம். எங்கே தூய்மையான மனம் உண்டோ அங்கே வலு உண்டு. தூய்மையின்றேல் வாய்மை இல்லை, வாழ்வில் உயர்வில்லை, உடலில் ஆரோக்கியமில்லை, மகிழ்ச்சியும் இல்லை. உண்மையான சந்தோஷம் பரிசுத்தத்தில் தான் இருக்கிறது. உலகில் மாசடைந்த உளமும், உடலுமுடையோரே மிகுதியாக இருக்கின்றனர். உண்மையில் மனிதனின் வலு வாய்மையும், தூய்மையும் தான். வாக்கில் வாய்மையும், வாழ்வில் தூய்மையும் இல்லாதிருப்பின் வாழ்க்கை சீக்கிரம் சீரழியும்.

உயர, வாய்மை, தூய்மையால் உண்டாகும் வலுவ் வாழ்க்கைக்கு மிக அவசியம். தூய்மையே வலிமை. தூய்மையற்ற வாழ்க்கை எளிதில் நாம் பெற்றுக் கொள்ளலாம். உள்ளத்தில் தூய்மையுடையவர்களாய் வாழ்வது அத்தனை எளிதல்ல. எளிதானதை ஆற்றுபவன் வலுவுள்ளவன் அல்லன். அதற்கு மாறாக கடினமானதை ஆற்று திறலனே ஆனை (யானை) பலமுடையவன் ஆவான். உள்ளத்தைக் கறைப் படுத்திக் கொண்ட ஒருவனையோ, ஒரு ஸ்திரீயையோ நாம் வலுவுள்ளவன் வலுவுள்ளவள் என்று கூற இயலாது. அவன் அகில உலகப் புகழ் பெற்ற காமா பயில்வானைப் போல் ஆற்றல் பெற்றவனாயிருந்தாலும் சரி தான். ஒழுக்க வரம்புகளை பின்பற்றி உளத் தூய்மையுடன் வாழ்பவனே வலுவுள்ளவன் வலுவுள்ளவள் ஆவான் (ள்). பெருக்கெடுத்து ஓடும் ஆற்

றோடு அடித்துச் செல்ல வலு வேண்டுமா? கட்டாற்று வெள்ளத்தைக் கையால் உதைத்து எதிர் நீச்சல் போடுவதற்கே வலு வேண்டும். தூய்மையுடன் வாழ்வதற்கே வலு வேண்டும் எனவே, தூய்மையே வலிமை என்று வழங்கப்பட்டு வருகிறது.

ஆனால் அந்த தூய்மையைப் பெறுவது எளிதல்ல. இக்கடின பாதையில் சென்று ஒருவன் தூய்மையை பெற்று விடின் அத்தூய்மை அவனுக்கு வலிமையை மட்டும் வழங்குவதில்லை. அது வாழ்விற்கு நலத்தையும், புகழையும் கொண்டு வருகிறது. தூய்மை தேய்ந்தால் வாழ்வு பிணியில் தோய்கிறது என்பதை திட்டமாய் அறிந்துள்ளோம். தூய்மையின்மையே ஒரு நோயாகும். எனவே, உளத் தூய்மையை அடைந்து மதங்களும் அறிவு நூல்களும் வலியுறுத்துகின்றன. அதைப் பெறுவது தான் மானிட நோக்கமாகும். இயேசு நாதர் இவ்வாறு இயம்பியுள்ளார், "இருதயத்தில் சுத்தமுள்ளவர்கள் பாக்கியவான்கள் அவர்கள் தேவனை (இறைவனை) தரிசிப்பார்கள்" (மத் 5 :8).

"பரிசுத்தமில்லாமல் ஒருவரும் கர்த்தரை தரிசிப்பதில்லையே" (எபி 12 : 14). கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் இரத்தம் உளத்தூய்மையை அளிக்கும் (I யோவா 1 : 7,9). ஆனபடியால் குடும்பத்தில் ஒவ்வொருவரும் ஒழுக்கத்தைக் கடைபிடிப்பீர்களாக. விசேஷமாக ஸ்திரீகள் சரியான ஆண் துணையின்றி வெளி ஆட்களோடு இடைபடுவது கூடாது. அது ஆபத்தைக் கொண்டு வரும்.

ஒழுக்கமே உயிரினும் ஓம்பப்படும். அதையிழந்து விடுகிறவர் தன்னிடமுள்ள விலையேறப் பெற்றதை இழந்து விடுகிறார். வேறு எது இருப்பினும் என்ன பயன். நமது உடல் இறைவனின் ஆலயம். குடும்பத்தில் உள்ள ஒவ்வொருவரும் உள்ளத்தையும், உடலையும் பரிசுத்தமாக காப்பார்களாக!

---

"...பரிசுத்தமில்லாமல் ஒருவனும் கர்த்தரைத் தரிசிப்பதில்லையே..." எபி 12 : 14.

---

# மரணம், மரணபயம்

கவிஞேசம் :

பயம் என்பது பல தரப்படும். அவைகளில் மரணபயமே எல்லாவற்றிலும் கொடியது (எபி 2:15). மரணம் என்றால் என்ன? அது இரண்டு வகைப்படும். ஒன்று ஆவிக்குரிய மரணம், இன்னொன்று சரீர மரணம். பொதுவாக மெய் தேவனை அறிந்து அவரால் உண்டாகும் இரட்சிப்பைப் பெற்று தேவனோடு ஐக்கியமாயிராதவர்கள் ஆவிக்குரிய மரணத்திலிருக்கிறார்கள் அவர்களை மரித்தோரென்று இயேசு கிறிஸ்து அறிவித்துள்ளார் (மத் 8:22; எபே 2:1; 5:14) நமது கர்த்தராகிய இயேசு கிறிஸ்து நமது சபையை சேர்த்துக் கொள்ள சீக்கிரம் வராவிட்டால் சீக்கிரத்திலோ, கொஞ்சகாலம் கழித்தோ நமக்கும் (இரட்சிக்கப்பட்டு தேவனோடு ஐக்கியமாயிருக்கிற நமக்கும்) சரீர மரணம் ஏற்படும்.

இவ்வுலக வாழ்க்கையை விட்டுப்பிரிக்கும் பிரிவே மரணமாகும். உயிருள்ள வாழ்க்கையினின்று உயிரற்ற சடலமாக மாறுவதே மரணம். இருதயத்தின் துடிப்பு நின்று, நாசியில் சுவாசம் அடங்கவே உயிர் அடங்கி விடும். அப்பொழுது உடலானது குளிர்ந்து விரைப்பான சடலமாகிறது. 9-10-1958 அன்று மணிலா டைம்ஸ் (Manila Times) என்ற தினசரி பத்திரிக்கையில் 12-வது பயஸ் அவர்களின் உயிர் ஊசலாடுகிறது என்ற செய்தி வெளியானது. அப்பொழுது இருந்த போப்பின் பெயர் 12-வது பயஸ் ஆகும். அவருக்கு வயது 82; அவர் மரித்தார். ஆத்துமா, ஆவி, சரீரம் தனித் தனியாய் பிரிக்கப்படுவதையே மரணம் என்று சொல்லுகிறோம்.

1. உடல் கல்லறைக்குப் போகிறது.

2. ஆவி தேவனிடம் செல்லுகிறது (பிர 12:7)

3. ஆத்துமா எடுத்துக் கொள்ளப்படுகிறது (லூக் 12:20).

இரண்டு வகையான மரணங்களும், மனிதனின் பாவத்தை தொடர்ந்து ஏதேனில் உண்டாயிற்று.

1. ஆவிக்குரிய மரணம் (ஆதி 2:17)

2. சரீர மரணம் (ஆதி 4:8) பாவத்தின் நேரடி விளைவே மரணம். மரணத்தின் காரணம் பாவமாகும். பொதுவாக டாக்டர்கள் மரண சான்றிதழில் (Death Certificate) மரணத்துக்கான பல காரணங்களை எழுதியிருப்பார்கள். ஆனால் மெய்யான காரணம் பாவமே (எசே 18:20; ரோம 6:23; எபி 9:27)

மரணத்தைப் பற்றி பல விளக்கங்கள் பல வார்த்தைகளினால் வேதாகமத்தில் விளக்கப்பட்டிருக்கின்றது.

1. சரீர மரணத்தை வேதாகமம் நித்திரை என்று சொல்லுகிறது (யோவா 11:11; I தெச 4:14).
2. ஆத்துமா எடுத்துக் கொள்ளப்படுதல் (லூக் 12:20).
3. பூமிக்குரிய கூடாரம் அழிதல் (II கொரி 5:1; II பேது 1:14).
4. கல்லறையில் சேர்தல் (யோபு 17:1; லூக் 16:31).
5. மௌனத்தில் இறங்குதல் (சங் 115:17).
6. ஜீவனை விடுதல் (அப் 5:5; லூக் 23:46).
7. தேவனுடைய சமூகத்தினின்று துரத்தப்படுதல் (II தெச 1:10).

பொதுவாக மரணம் என்பது தேவனுடைய சமூகத்தினின்று துரத்தப்பட்டு நித்திய அழிவாகிய தண்டனையை அடைவதேயாகும். இரட்சிக்கப்பட்ட ஜனங்கள், பரிசுத்தவான்கள் மரணத்தை விட்டு நீங்கி ஜீவனுக்குட்பட்டிருக்கிறார்கள். அவர்களுக்கு மரணத்தைப் பற்றிய பயமில்லை. இயேசு கிறிஸ்துவை விசுவாசித்த இரட்சிக்கப்படாதவர்கள் ஆவிக்குரிய மரணத்திலிருக்கிறார்கள். அவர்கள் சரீர மரணமடையும் போது தேவனால் நியாயந்தீர்க்கப்பட்டு நித்திய அழிவிய தண்டனையான அக்கினியும், கந்தகமும் எரிகிற நரகத்தில் தள்ளப்படுவார்கள் (வெளி 21:8).

இயேசு கிறிஸ்துவினுடைய இரண்டாவது வருகையின் போது கிறிஸ்துவுக்குள்ளிருக்கிற பரிசுத்தவான்கள் மரணத்தைக் காணாமல் மறுரூபமடைந்து பரலோகத்துக்கு எடுத்துக் கொள்ளப்படுதலும், (ஏனோக்கு, எலியாவைப் போல) கிறிஸ்துவுக்குள் மரித்திருக்கிற பரிசுத்தவான்கள் மகிமையாய் உயிர்த்தெழுந்து பரலோகத்துக்கு எழுந்தருளுதலுமாகிய (இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந்ததைப் போல) சம்பவம் நிகழும் (I தெச 4:13-17). மரணம் கொடியது. மரணம் என்று சொல்லும் போது சரீர மரணத்தையும், மரித்தபின் நியாயந்தீர்க்கப்பட்டு அக்கினியும் கந்தகமும் எரிகிற கடலாகிய நரகத்தில் தள்ளப்படுதலுமே மரணம் என்று வேதம் சொல்லுகிறது. மரணத்துக்கு தப்ப வழியுண்டா?

தவிர விஞ்ஞானம் மரண நாளை கொஞ்சம் தள்ளி வைக்கலாம். ஆனால் நிறுத்த முடியாது (எபி 9:27) மரணத்துக்குத் தப்ப கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினாலே ஒரே ஒரு பரிகாரம் காணப்படுகிறது. அவரை விசுவாசிப்பதன் மூலமாகவே மரணத்திலிருந்து விடுதலையுண்டு (I தெச 4:16,17; சங் 23:4). கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய மரணம் இறைவனால் திட்டமிடப்பட்டது. அவருடைய மரணம் தற்செயலாய் நிகழ்ந்ததல்ல. (எபி 2:9; எபே 5:2; லூக் 24:46). கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவினுடைய அடக்கம் பண்ணப்படுதல், உயிர்த்தெழுதல் மனித மீட்புக்காய் உலக சரித்திரத்தின் மத்தியில் நிகழ்ந்த மகா பெரிய சம்பவமாகும். இதுவே (நற்செய்தி) சுவிசேஷமாகும் (I கொரி 15:1-4).

நீதிமான்களுடைய மரணம் கர்த்தருடைய பார்வையில் மிகவும் அருமையாக இருக்கிறது. தன்னுடைய பிள்ளைகள் தன்னிடம் வந்து சேர்வதை தேவன் வாஞ்சையோடு எதிர்பார்க்கிறார் (சங் 116:15;72:14) துன்மார்க்கருடைய மரணமோ தேவனுக்கு விருப்பமில்லை; அவருக்கு துக்கமாகவே இருக்கிறது, ஏனென்றால் அவன் மரித்து நித்திய ஆக்கினைக்குப் போகின்றானே என்று தேவன் வருந்துகின்றார். "கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறது என்னவென்றால் நான் துன்மார்க்கருடைய மரணத்தை விரும்பாமல் துன்மார்க்கன் தன் வழியை விட்டு திரும்பி பிழைப்பதையே விரும்புகிறேன் என்று என் ஜீவனைக் கொண்டு சொல்கிறேன். உங்கள் பொல்லாத வழிகளை விட்டுத் திரும்புங்கள்; திரும்புங்கள், நீங்கள் ஏன் சாக வேண்டும் என்கிறார்" (எசே 33:11).

சகோதரனே! சகோதரியே! மரணம், நரகத்திலிருந்து தப்பித்துக் கொள்ள ஒரே பரிகாரமான பரிகாரியாகிய இயேசு கிறிஸ்துவை நீ விசுவாசித்து அவர் மூலமாய் பாவ மன்னிப்பாகிய இரட்சிப்பைப் பெற்றுக் கொண்டு அவரோடு ஐக்கியமாகு. இயேசுவை உங்கள் இரட்சகராக ஏற்றுக் கொள்ளுங்கள். மரணம், மரண பயத்திலிருந்து விடுதலையாவீர்கள் (எபி 2:14,15).

இறை ஆசீர் உங்கள் எல்லார் மேலும் இருப்பதாக!

"கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசி அப்பொழுது நீயும் உன் வீட்டாரும் இரட்சிக்கப்படுவீர்கள் அப் 16:31".

# கிறிஸ்துமஸ் பரிசு

## சிறுவர் பகுதி

பெத்தேல் என்ற ஊரில் உள்ள அரசு உயர் நிலைப் பள்ளிக்கு டேவிட் குடும்பத்தினர் மாற்றலாகி வந்திருந்தனர். அவர்களின் ஏக புதல்வன் கிறிஸ்டியான். கிறிஸ்டியான் அந்தப் பள்ளியில் எட்டாம் வகுப்பு படித்து வந்தான். தனது பெற்றோருக்கு அடங்கி நடந்து ஒழுக்கமுள்ளவனாய், தனது பெயருக்கு ஏற்ப ஒரு கிறிஸ்தவனாக நடந்து வந்தான். அவனது பெற்றோரும் கிறிஸ்டியானை மிகவும் அன்பாக நேசித்தனர்.

கிறிஸ்டியானின் குண நலன்களைக் கண்டு அநேகர் ஆச்சரியப்பட்டனர். பிறர் கண்டு கிறிஸ்டியானின் நன்னடத்தையின் நிமித்தம் அவனது பெற்றோர்களைப் புகழ்ந்தனர். கிறிஸ்டியான் தனது நடவடிக்கைகளில் மாத்திரம் இல்லாது அவனது பள்ளிப் படிப்பிலும் கூட பிறர் வியக்கத்தக்க விதமாகப் படித்து வந்தான். பிற மாணவர்களும் பெத்தேலில் உள்ள யாவரும் ஏன்! எல்லா ஆசிரியர்களும் போற்றத்தக்க பையனாக விளங்கி வந்தான். பள்ளியிலும் படிப்பு, எழுத்து, நன்னடக்கை இவைகளுக்காக யாவரும் கிறிஸ்டியானைப் பாருங்கள் என்று சொல்லக் கூடிய அளவிற்கு கிறிஸ்டியான் வாழ்ந்து வந்தான். கிறிஸ்டியானின் உற்ற நண்பன் செல்வன், ஆனால் செல்வமில்லை. வறுமை தான் மிஞ்சி இருந்தது. செல்வன் ஏழ்மையாக இருந்தாலும் மிகவும் நல்லவன். கிறிஸ்டியான் அவனை மிகவும் நேசித்து வந்தான். செல்வனுக்கு சரியாக படிப்பு வராதபடியால் அவனுக்குப் பாடங்களை சொல்லிக் கொடுப்பதும், தனக்காக கொண்டு வருகின்ற உணவில் அவனுக்குப் பங்கும் கொடுத்து வந்தான்.

கிறிஸ்டியான் தனது பெற்றோர்களிடம் செல்வனைப் பற்றி அடிக்கடி சொல்லதுண்டு. கிறிஸ்டியானின் தகப்பனும் தாயும் அவனது பள்ளியில் ஆசிரியராக வேலைப் பார்த்து வந்தபடியால் செல்வனை அவர்களுக்குத் தெரியும். செல்வன் வறுமைக் கோட்டில் உள்ள படியால் கிறிஸ்டியான், செல்வனுடன் பழகுவதை அவனது நட்பை விட்டு விட வேண்டும் எனக் கூறி வந்தனர். கிறிஸ்டியான் தனது பெற்றோர்களிடம், செல்வனிடம் என்ன மோசமான குணங்கள் உண்டு சொல்லுங்கள். நான் எனது நட்பை முறித்துக் கொள்கிறேன் என்றான், ஆனாலும் கிறிஸ்டியானின் பெற்றோர்கள் அதற்குப் பதில் அளிக்க முடியவில்லை. கிறிஸ்டியான் செல்வன் இவர்களின் நட்பு வளர்ந்தது.

கிறிஸ்துமஸ் நெருங்கிக் கொண்டிருந்தது. கிறிஸ்துமஸிற்காக கிறிஸ்டியானின் அம்மாவும், அப்பாவும் கிறிஸ்டியானுக்கு இரண்டு சட்டையும், கால் சட்டைகளும் வாங்கி வைத்திருந்தனர். கிறிஸ்துமஸ் காலை ஜெபத்திற்கென்று ஒரு Dress-ம், மாலை ஜெபத்திற்கு ஒரு Dress-ம் எடுத்திருந்தனர். கிறிஸ்துமஸ் தினத்தின் முந்தின நாள் டேவிட் தம்பதியார் கிறிஸ்டியானிடம் தாங்கள் துணிகளை காட்டி, ஒரு ஜோடி காலை ஜெபத்திற்கும், மறு ஜோடி மாலை ஜெபத்திற்கும் என்று விளக்கிக் கொண்டிருந்தனர். கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தான் கிறிஸ்டியான். செல்வனின் நட்பை தனது பெற்றோர் ஏற்றுக் கொள்ள வைப்பதற்கு இதுவே தருந்த தருணம் என நினைத்து தனது பெற்றோர்களிடம் கேட்டான். கிறிஸ

துமஸ் என்றால் என்ன? அதை ஏன் கொண்டாடுகின்றனர் என்று? அப்பொழுது கிறிஸ்டியானின் தகப்பனார், ஏழைகளையும், பாவிகளையும் இரட்சிப்பதற்காக ஏழைகள் மீதும், பாவிகள் மீதும் கர்த்தர் அன்பு செலுத்திய படியால் அவர்களைத் நான் நேசிக்கிறேன் எனக் காட்டும்படி கர்த்தராகிய இயேசு கிறிஸ்து உலகத்தில் பிறந்தார். டிசம்பர் 25ந் தேதி இயேசு கிறிஸ்துவின் பிறப்பின் பண்டிகையாக கொண்டாடப்படுகிறது. இது சந்தோஷமான நாள். இந்நாளில் வெகுமதிகளையும் கொடுக்கின்றனர் என்று விளக்கமளித்தார்.

கிறிஸ்டியான் மிகவும் அமைதியாக இயேசு கிறிஸ்து எல்லோர் மீதும் அன்பு வைத்த படியால், அவர் யாவருக்காகவும் மனிதனாக அவதரித்தார் என்று சொன்னீர்கள். ஆனால் நீங்கள் என் நண்பன் செல்வன் ஏழை என்ற காரணத்தால் அவன் எனக்கு நண்பனாக இருக்கத் தகுதியில்லை என நினைத்து அவனை நீங்கள் ஏற்க மறுக்கின்றீர்கள் என எண்ணுகிறேன். கிறிஸ்தவர்கள் ஒருவருக்கொருவர் வெகுமதிகள் வழங்குகின்றார்கள் என்று சொன்னீர்கள் நான் எனது நண்பனுக்கு வெகுமதி கொடுக்க என்னிடத்தில் ஒன்றுமில்லாதபடியால் நீங்கள் எனக்கு எடுத்திருக்கின்ற சட்டையில் ஒரு Dress-ஐ அவனுக்கு கொடுக்க விரும்புகிறேன் என்றான். மேலும் அவனின் அம்மா, அப்பா மூவருக்கும் நாளை மதியம் சாப்பாட்டிற்கு நம் வீட்டிற்கு அழைத்து வர நினைக்கிறேன் என்றான்.

கிறிஸ்டியனின் வார்த்தைகளைக் கேட்ட அவனது பெற்றோர்களுக்கு ஒன்றும் மறுத்து பேச இயலாத காரணத்தால் அமைதியாகி விட்டனர். உனது விருப்பத்தின் படியே செய் என்றும் அவனுக்கு அனுமதி அளித்தனர், கிறிஸ்டியான் இயேசு கிறிஸ்துவுக்கு நன்றி செலுத்தி குதூகலத்துடன் ஒரு Dress-ஐ எடுத்துக் கொண்டு செல்வனின் வீட்டிற்கு சென்றான். செல்வனிடம் கிறிஸ்டியான் தன்னிடம் உள்ள Dress-ஐ எனது 'கிறிஸ்துமஸ் பரிசு' நீ இதை வாங்கிக் கொள் என்றான். மேலும் நாளைக் காலையில் கிறிஸ்துமஸ் பண்டிகையின் ஆராதனைக்கு என்னுடன் கோவிலுக்கு வர வேண்டும் இயேசு கிறிஸ்து எல்லோரையும், எல்லாக் கஷ்டத்தினின்றும் மீட்கும் படியாகவே இந்தவுலகத்தில் அவதரித்தார். அவர் உனக்காகவும், பிறந்திருக்கின்றார் என்று கூறினான்.

இவைகளையெல்லாம் செல்வனின் அம்மா, அப்பாவும் கேட்டுக் கொண்டிருந்தனர். மாமா, மாமி நீங்களும் நாளை எங்களோடு கூட ஆலயத்திற்கு வாருங்கள் நாளை மதியம் நான் உங்களோடு கூட விருந்து சாப்பிட எங்களது வீட்டிற்கு நீங்கள் மூவரும் வர வேண்டும் எனக் கூறிவிட்டு சென்று விட்டான்.

மறுநாள் கிறிஸ்துமஸ். கிறிஸ்டியானும், செல்வனும் உற்சாகமாகக் காணப்பட்டனர். கிறிஸ்டியானின் வீட்டைப் போல் செல்வனின் வீட்டாரும் குழந்தையாய் பிறந்த கர்த்தரைத் தொழுது கொண்டனர். அது முதற்கொண்டு செல்வனின் வீட்டார் கிறிஸ்தவரானார்கள். அன்று மதியம் கிறிஸ்டியான் வீட்டில் விருந்திலும் கலந்து கொண்டனர். டேவிட்டின் குடும்பத்தினரும் அது முதற்கொண்டு யாவரையும் நேசிக்கப் பழகிக் கொண்டனர். எல்லோருக்கும் ஒரே சந்தோஷம்.

பிள்ளைகளே, கிறிஸ்டியானைப் போல, நாமும் ஏழைகளுக்கு உதவி செய்வோம். இயேசு கிறிஸ்து யாவரையும் நேசிக்கிறார் என்பதை காட்டும்படி உலகில் வந்தது போல, நாமும் பிறரை நேசித்து அவர்களுக்கு கிறிஸ்துமஸ் பண்டிகை நாளில் நம்மால் இயன்றதை செய்து, இயேசு கிறிஸ்து உங்களையும் நேசிக்கிறார் என்று யாவருக்கும் அறிவிப்போம்.

---

"...நீங்கள் எந்த அளவினால் அளக்கிறீர்களோ அந்த அளவினால் உங்களுக்கும் அளக்கப்படும்." I யோவா 5 : 20.

---

(தொடர்ச்சி)

# புதிய எருசலேம் சபையின் நடபடிகளில் சில

இந்த மலையடிப்பட்டி ஊழியத்தை மிகவும் பாரத்தோடு செய்து வந்தோம். ஞாயிறு காலை துரைசாமிபுரத்தில் பரிசுத்த ஆராதனை நடத்திவிட்டு மாலை சுமார் 5-மணியளவில் அங்கிருந்து சில வாலிபர்களோடு கரிவலம் வரையிலும் பஸ்ஸில் வருவோம். அங்கிருந்து வாடகை சைக்கிள் எடுத்துக் கொண்டு மலையடிப்பட்டிக்குப் போய் சேருவோம். இரவு 7 மணிக்கு ஆராதனை ஆரம்பித்து சுமார் 9.30 மணிக்கு கூட்டத்தை முடித்துக் கொண்டு இராத்திரியே ஊருக்குப் புறப்பட்டு விடுவோம். இரவில் அங்கே தங்கிப் போகச் சொல்லுவார்கள். புதிதாய்சந்திக்கப்பட்ட மக்கள் அவர்களுக்கு நாம் பாரமாய் இருந்துவிடக் கூடாதே என எண்ணி நாங்கள் புறப்பட்டு விடுவோம். அதற்குப் பின்பு கரிவலத்திலிருந்து துரைசாமி புரத்திற்கு பஸ் கிடையாது. கரிவலத்திலும் நாங்கள் தங்கிச் செல்வதற்குரிய இடமும் கிடையாது. இந்த மலையடிப்பட்டிக்கும் கரிவலத்திற்கும் இடையில் கரிவலம் ஊரின் இரயில் நிலையம் இருக்கிறது. நாங்கள் சகோதரர்களுடன் அங்கே வந்து இரயில் நிலையத்தில் எங்கள் சைக்கிள்களை வைத்துக்கொண்டு அங்கே திறந்த வெளியில் தங்கிவிட்டு அதிகாலையில் எழுந்து கரிவலத்தில் சைக்கிள்களைக் கொடுத்துவிட்டு அங்கிருந்து பஸ்ஸில் துரைசாமிபுரம் செல்வோம்.

அப்பொழுதெல்லாம் அந்த இரயில் நிலையத்தில் விடியும் வரையிலும் ஜெபித்துக் கொண்டேயிருப்போம். ஒரு ஸ்டேஷன் மாஸ்டர் மாத்திரமே அந்த ஸ்டேஷனில இருப்பார். வேறு யாரும் இரவில் அங்கே வர மாட்டார்கள். அப்பொழுது, 'ஆண்டவரே இந்த ஸ்டேஷன் மாஸ்டர் உம்முடைய பிள்ளையாக இருந்தால் எங்களை உள்ளே தங்க வைத்து அனுப்புவாரே" என்று நாங்கள் ஆண்டவரை நோக்கி ஜெபித்ததுண்டு. மெய்யாகவே தேவன் எங்கள் ஜெபத்திற்கு செவி கொடுத்தார் (சங் 66:19-29). அடுத்து சில மாதங்களுக்குள்ளாக நமது சகோதரர் ஒருவர் அதே ஸ்டேஷன் மாஸ்டராகப் பணியாற்ற வந்தார். கர்த்தருக்கே மகிமை செலுத்துகிறோம்.

நாங்கள் இவ்விதமாய் இரவில் இரயில் நிலையத்தில் தங்கி போகிறோம் என்பதை அறிந்த மலையடிப்பட்டிசபை விசுவாசிகள் நீங்கள் இரவில் ஆகாரம் அருந்திதான் போக வேண்டும். நீங்கள் இரவிலேயே ஊருக்குப் போய்விடுவீர்கள் என்று எண்ணியல்லவா நாங்கள் உங்களை உணவு அருந்த வற்புறுத்தாமல் விட்டுவிட்டோம். இனி அப்படிச் செல்ல வேண்டாம் என்று வேண்டிக் கொண்டார்கள். இவ்விதமாய் இந்த ஊழியம் பலப்பட ஆரம்பித்தது. ஆத்துமாக்கள் பலரைக் கர்த்தர் சபையிலே சேர்த்துக் கொண்டு வந்தார்.

ஊழியம் விரிவடைய ஆரம்பித்ததும் சாத்தானும் தன்னுடைய வேலையைச் செய்ய ஆரம்பித்து விட்டான். நாங்கள் ஆராதிக்கிற வீட்டின் அடுத்த காம்பவுண்டுக்குள் ஒருமனிதன் ஒருபெரிய தகர டப்பாவைப் போட்டு அடிப்பான். நாங்கள் பாட்டு பாடிமுடித்ததும் அவன் ஆரம்பித்துவிடுவான். ரொம்ப சத்தடியாக இருக்கும். ஊரிலுள்ள சில பெரியவர்கள் அவனைக் கடிந்திருக்கிறார்கள். அவர்கள் ஒரு தெய்வத்தைத் தொழுது கொள்கிறார்கள்; உனக்கு அது பிடிக்காது போனால் அமைதியாக இருக்க வேண்டியதுதானே, இப்படி ஏன் டப்பாவை அடித்து இடையூறு செய்கிறாய் என்று கேட்டிருக்கிறார்கள். நீங்கள் யாரும் என்னிடம் பேசாதிருங்கள். அவர்களுடைய தெய்வத்துக்கு வல்லமை உண்டென்று சொல்லுகிறார்களே, அந்த தெய்வம் வந்து என்னுடைய இரண்டு கைகளையும் பிடித்து நிறுத்தி அடிக்காதே என்று சொல்லட்டுமே. அப்படியானால் நான் அடிப்பதை நிறுத்துவேன் என்பதாக கேட்கிறவர்களிடம் கூறியிருக்கிறான். இவ்விதமான பதிலைக் கேட்ட பெரியவர்களில் ஒருவர் எங்களிடம் வந்து இவனைப் போலீசில் மனுக்கொடுத்து உள்ளே தள்ளுங்கள். அவர்கள் இவன் முதுகில் நாலு போட்டால்தான் இவன் சரி

படுவான் என்றும் கூறினார்கள். நாங்கள் போலீசிடம் போகமாட்டோம் ஆண்டவரிடமே சொல்லுவோம் என்றுகூறி ஆண்டவரிடம் ஜெபம் பண்ணினோம்

சில நாட்களுக்குப் பிறகு அந்த டப்பா அடிக்கும் சப்தம் கேட்கப்படவில்லை. வெளியூருக்குப் போயிருப்பார் ஆசாமி என்று நாங்கள் எண்ணியிருந்தோம். ஒருமாதம் கழித்து நாங்கள் அங்கே ஆராதனை முடித்துவிட்டு நோயாளிகளுக்காக ஜெபம் பண்ணிக் கொண்டிருக்கும்பொழுது ஒரு நடுத்தரமான வயதுடைய ஒருவர் ஒட்டிய வயிறுடன் நடக்க முடியாமலும், பேச முடியாமலும் வந்து முழங்கால் படியிட்டார். நீங்கள்யார்? உங்களுக்கு என்ன செய்கிறது? என்று கேட்டோம். விம்மி விம்மி அழுதார்.

ஐயா என்னை மன்னித்து விடுங்கள் உங்களுக்கு விரோதமாய் தீமை செய்த பாவி நான். உங்கள் ஆராதனைக்கு இடையூறு செய்யும்படி என்னுடைய இரு கரங்களினால் டப்பாவை அடித்தேன் இப்பொழுதோ என்னுடைய இரண்டு கைளும் விளங்காமல் போய் விட்டது. நீங்கள் ஆவியில் நிறைந்து சப்தம் போடுவது போல் நானும் குடித்துவிட்டு சப்தம் போடுவேன். இப்பொழுதோ பேச முடியாதபடி என் தொண்டை அடைத்துவிட்டது. நான் பிழைக்கும்படியாக எனக்காக ஜெபம் பண்ணுங்கள். நான் இனி ஒருக்காலும் ஆண்டவனுக்கு விரோதமாய் பாவம் செய்ய மாட்டேன் என்று மன்றாடினார். அந்த விசுவாசிகளுக்கே அவருடைய உருவத்தைக் கண்டு அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. அவ்வளவுப் பரிதாபமான நிலைமையில் காணப்பட்டார். தீமை செய்பவர்களுக்கோ கர்த்தருடைய முகம் விரோதமாய் இருக்கிறது. (I பேது 3:12) என்ற வேத வாக்கியத்தை எண்ணி கர்த்தரை ஸ்தோத்தரித்தோம். அந்த ஊரைவிட்டே வெளியேறி வேறு ஊருக்குச் சென்றுவிட்டார்.

இன்றைக்கு நீங்கள் காண்கிற எகிப்தியரை இனி என்றைக்கும் காணமாட்டீர்கள் (யாத் 14:13) என்ற வசனம் எங்களுக்கு ஞாபகம் வந்தது.

Pastor. S. Sundarraj
Vallioor.

(தொடரும்)

புதிய எருசலேம் செய்தி வாசகர்களுக்கு 1987-ஆம் ஆண்டு கிறிஸ்துமஸ் வாழ்த்துதலையும், 1988-ஆம் புத்தாண்டு புது வாழ்த்துதலையும் இயேசுவின் நாமத்தில் கூறிக்கொள்கிறோம். கர்த்தரே நீர் ஸ்தோத்திரிக்கப்படுவீர். கர்த்தருடைய ஆலயத்திலிருந்து உங்களை ஆசிர்வதிக்கிறோம்.